# முகவுரை

சங்க நூற்கள் மேற்கணக்கு, கீழ்க்கணக்கு என வகுக்கப் பெற்றுள்ளன. மேற்கணக்கு பத்துப்பாட்டு, எட்டுத்தொகை என்ற பதினெட்டு நூற்களாம். கீழ்க்கணக்கு நாலடியார் முதலிய பதினெட்டு நூற்களாம். அவற்றுள், நாலைந்திணை என்ற ஐந்திணை யைம்பது, ஐந்திணை யெழுபது, திணைமொழி யைம்பது, திணைமாலை நூற்றைம்பது என்னும் நான்கு நூற்களும் "அகனைந் திணை" எனச் சிறப்பிக்கப் பெற்ற அன்பின் விளைவாகிய ஒழுக்கங்களைப் பல படியான துறைகளைக் கொண்டு விளக்கிச் செல்வதாகும்.

இந்நாலைந்திணைப் பாக்களிற் பல தொல்காப்பிய வுரையாசிரியர்களாகிய நச்சினார்க்கினியர், இளம்பூரணர் முதலிய பலராற் பலவிடங்களில் எடுத்துக்காட்டுகளாகக் காட்டப்பட்டிருக்கின்றன. மேலும், இந்நான்கு நூற்கள் அக் காலப்பழக்க வழக்கங்களையும், பழமொழிகளையும் சுருங்கச் சொல்லி விளங்க வைக்குஞ் சொற்போக்குகளைக் கொண்டுள்ளன. அகப்பொருள்களிற் காணப்படும் துறைகளிற் பெரும்பான்மையன இந்நான்கு நூற்களால் விளக்கப்படு முறைமை தமிழர்கள் அனைவரும் கண்டுகளிக்கும் கவினுடையனவாம்.

இந்நான்கு நூற்களும் பழைய வுரைகளோடு வெளிவந்திருப்பினும், அவ்வெளியீடுகள் பலர்க்கும் பயன்படா

வாறு நன்கு விளக்கப்பட்டிராமையால், தமிழ்நாட்டில் அவை நன்கு பரவ இயலாது போயின. அவற்றை நன்கு பரப்பக் கருதித் தக்க விளக்கவுரையுடன் வெளியிட்டுள்ளோம். தொல்காப்பிய அகப்பொருளிலக்கணங்கள் பலவற்றிற்கு இலக்கியமாக விளங்கும் இந்நாலைந் திணை நூற்கள் தமிழ்மக்கட்கு இன்றியமையாக் கருவூலமே யாகும் என்பதற்கு எட்டுணையும் ஐயமேயில்லை. தமிழ் மக்கள் யாவரும் இவற்றை வாங்கிப் படித்துப் பயன்பெறுவார்களாக.

இங்ஙனம் :

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

கழக வெளியீடு—கஎஅ.

மாறன் பொறையனார்

இயற்றிய

# ஐந்திணையைம்பது

மூலமும், பழையவுரையும்,



சென்னை

அரசினர் மகமதிய உயர்தரப் பாடசாலைத்

தமிழாசிரியர்

திரு. அ. நடராசபிள்ளை யவர்கள்

எழுதிய

விளக்கவுரையும்.



திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்

திருநெல்வேலி & சென்னை

யுவ-ஆவணி

# முகவுரை

நம் பண்டைத் தமிழ் மக்கள் தாய்மொழியாகிய தமிழினை முச்சங்கத்திருத்தி முதன்மையுற வளர்த்தன ரென்பதும், கடல்கோள் சிலவான் அவர்தம் மொழிச் சிறப்பும் வழிச் சிறப்பும் முட்டின்றி யறிய வொண்ணுது ஆழ்கடலகத்தே யமிழ்ந்த வென்பதும், அவற்றுட் சில, நம்மனோரின் நற்றவப்பேற்றாற் கிடைத்துள்ள சங்கநூல்களிற் கண்டு களிக்குங் கவினுடன் காணப்படுகின்றன வென்பதும் அறிஞர்கள் பலர் அகமுறக் கண்டனவாம். முச்சங்கங்களிற் கண்ட பலநூல்களிற் கிடைத்த சிலவே, பிற்காலத்தில் வச்சிரநந்தி யென்பார் கண்ட நான்காஞ் சங்கத்தாரால் மேற்கணக்கு, கீழ்க்கணக்கு என்ற தொகை முறைப்படி வகுக்கப்பட்டு வழங்கி வரலாயின. மேற்கணக்கைச் சார்ந்த நூல்கள் பத்துப்பாட்டு, எட்டுத் தொகை என்ற உட்பிரிவுகளையுடைய பதினெட்டுமாம். மேற்கணக்கின் இலக்கணத்தினை,

> " ஐம்பது முதலா வைந்நூ றீறு
> வைவகைப் பாவும் பொருணெறி மரபிற்
> றொகுக்கப் படுவது மேற்கணக் காகும்,"

என்ற பன்னிரு பாட்டியற் சூத்திரத்தா லறியலாம்.

கீழ்க்கணக்கைச் சார்ந்த நூல்கள் (க) நாலடியார், (உ) நான்மணிக் கடிகை, (ங) இனியது நாற்பது, (ச) இன்னு நாற்பது, (ரு) களவழி நாற்பது, (சு) கார் நாற்பது, (எ) ஐந்திணை யைம்பது, (அ) ஐந்திணை யெழுபது, (கூ) திணைமொழி யைம்பது, (ய) திணைமாலை நூற்றைம்பது, (கக) திருக்குறள், (கஉ) திரிகடுகம், (கங) ஆசாரக் கோவை, (கச) பழமொழி, (கரு) சிறுபஞ்சமூலம், (கசு) முதுமொழிக் காஞ்சி, (கஎ) ஏலாதி, (கஅ) கைந்நிலை என்பனவாம். இக் கீழ்க்

கணக்கின் இலக்கணம் இரண்டடி முதல் ஆறடி யீறாகவுள்ள வெண்பாவினாலேனும், அதனினத்தாலேனும் நாற்பது செய்யுள் முதல் ஆயிரக்கணக்கா னியன்ற செய்யுள்வரை அறம், பொருள், இன்பம் என்ற முப்பொருள்களில் யாதானு மொன்றினை யெடுத்துக் கூறும் நூல்களின் தொகுதி யென்பதாம்.

ஐந்திணையைம்பது என்னு மிந்நூல் அம்முப்பொருள்களி லொன்றாகிய இன்பத்தினை எடுத்து விளக்கிச் சொல்வதாகும். முல்லை, குறிஞ்சி, மருதம், பாலை, நெய்தல் என்னும் ஐந்திணைக ளாகிய இருத்தல், புணர்தல், ஊடல், பிரிதல், இரங்கல் என்ற ஐந் தொழுக்கங்களும் இந்நூலிற் பப்பத்து வெண்பாக்களாக ஐம்பது வெண்பாக்களாற் கூறப்பெற்றுள்ளன. அதனானேயே இந்நூலிற்கு ஐந்திணையைம்பது என்ற பெயர் வரலாயிற்று. இந்நூல் அன்பின் அமைதியாகிய ஐந்திணையொழுக்கங்களைச் சுருங்கச் சொல்லி விளங்கவைக்கும் நேர்மை தமிழ் மக்கள் யாவரும் மனத்தகத்தே கொண்டு மகிழவேண்டிய தொன்றாம். இது கருதியே பாயிரத்தின் கண், “ஐந்திணையைம்பதும் ஆர்வத்தினோதாதார், செந்தமிழ் சேராதவர்,” என இந்நூல் சிறப்பித்துக் கூறப்பெற்றுள்ளது. அன்பின் அணிமுடியாகிய கற்பின் றிறனைச் செப்பும் முல்லை முதற் கட் கூறப்பட்டு, பின் அன்பின் விளைவாகிய புணர்தலும், அப் புணர்ச்சிக்குச் சிறப்பினை நல்கும் ஊடலும், அவ்வூடற்கு முதலாகிய பிரிதலும், அப்பிரிவின் மிகுதியான் வெளிப்படும் இரங்கலும் முறையே வைக்கப் பெற்றுள்ளன.

முல்லையை முதற்கட் டொடங்கிய ஆசிரியர் முல்லைத் திணைக் குரிய முதற் கருப்பொருளாகிய மாயோனையும், அவன் மருகனாகிய முருகனையும், செந்தமிழ்த் தெய்வமாகிய சிவபெருமானையும் முன்னர்க் கொண்டு முல்லையினைச் சிறப்பித்துச் செல்லல், ஓரம் பினு விருபுள்ளினை வீழ்த்திய வோவியச் செய்தியே யாகும். இனி, முல்லையுள் முதலைந்து செய்யுட்களில் முல்லையின் முதற்பொருளா கிய கார்காலத் தோற்றத்தினைக் கற்பார்தங் காட்சியிற் படம் பிடித் துக் காட்டுவார்போற் கூறுந்திறன் மிகுதியும் போற்றத் தக்கதாம்.

பின்னைந்து செய்யுட்களில், மாலைப் பொழுதின் மாண்பும், கார்ப் பெயலாற் செழிப்புற்ற முல்லை நிலக்கவினும், தலைவியின் அன்பு ததும்பிய கற்புத்திறனுங் கற்பார் நெஞ்சைக் கவருந் திறத்தவாயுள் ளன. குறிஞ்சியுள், களவுப் புணர்ச்சிக் குரிய பழங்காலப் பழக்கங் களும், சிறிது கூறிப் பெரிது விளக்குஞ் சிறப்பும், வரைவுகடாவு வழிகளும், குறிஞ்சி நில இரவுக் காட்சிகளும், பகற் பண்புகளும் நினைவகத் திருத்தவேண்டிய நிகரிலாப் பொருள்களாம். "வேங்கை நறுமலர்," எனத் தொடங்குகின்ற செய்யுளில், தோழிகூற்றாக, "யாம் பாய்ந்தருவி யாடினே மாகப் பணிமொழிக்குச் சேயரிக்கண் சேர்ந்தனவாம்," எனக் கூறும் படைத்துமொழி கிளவியில் தலைவி யின் கண்கள் மட்டுஞ் சிவந்து காண்பதற்குப் பொருத்தமாக, "சேயரிக்கண்," எனக் கூறுஞ் சிறப்பு மிகுதியும் வியந்துகொள்ளத் தக்கதாம்.

மருத முதற்கண், "கொல்லர் தெருவில் ஊசிவிற்றல்", என்ற பழமொழியினைக் கையாண்டு, தாம் எடுத்துக்கொண்ட பொருளைப் புகட்டப் புகுந்த ஆசிரியர் அப்பழமொழிக்குமுன், "கொண்டுழிப் பண்டம் விலையொரீஇ," என்ற அடைமொழிகளைச் சேர்த்துப் பழ மொழிப் பொருளைத் தெளிவு படுத்துந் திறன் மகிழ்ந்து கொண் டாடும் மரபினதாம். "கோலச் சிறுகுருகின் குத்தஞ்சியீர்வாளை, நீலத்துப் புக்கொளிக்கும்," என்ற மருதநில வளனைக் கூறும் அடிகள் நளவெண்பாவிற்கண்ட, "செங்கழுநீர் மொட்டை, அர வின் பசுந்தலை யென்றஞ்சி—இரவெல்லாம், பிள்ளைக் குருகிரங்கப் பேதைப்புட் டாலாட்டும்," என்ற அடிகளை நினைவிற் கொண்டுவரக் கூடியனவாய்க் காண்கின்றன. 'குளிருங் காலமாகிய ஐப்பசி, கார்த்திகைத் திங்கள்களில் வீசுந் தென்றல் மெய்யிற் கினிதாம்,' என்ற ஆராய்ச்சியுரை பொன்னேபோல் போற்ற வேண்டிய பொருண்மொழியாம்.

பாலையுட் பகர்ந்துள்ள இளவேனிலின் இயல்பும், தலைவன் பிரிந்து செல்லும் பாலை நில அருவழியின் பாடும், களிறு பிடியின் மாட்டுக் காட்டும் பேரருளின் பெற்றியும், கானலினைத் தொடர்ந்

தோடுங் கரியினைப் போக்கும், கலைமா பிணைமானிடத்திற் கொண்ட பேரன்புங் கொண்டாடிக்கொள்ள வேண்டுவனவாம்.

நெய்தலுள், "தெண்கடற் சேர்ப்பன்," எனத் தொடங்குகின்ற செய்யுளில் சிறிது கூறிப் பெரிது விளக்கும் பெற்றி சிறந்து காணுதல் கூர்ந்து தெளிக. மேலும், பல்லி முட்டையின் இயல்பினைப் பண்புறக்கூறிப் புன்னை யரும்பினோடு பொருந்துமாறு புகன்ற முறையும், படைத்து மொழிகிளவியான் வரைவு கடாவும் மாண்பும், தலைவி வரைவு வேட்கையைக் குறிப்பாகத் தெரிவிக்கும் கொள்கையும், தோழி தலைவியின் வரைவு வேட்கையைத் தலைவற்குச் சிலவாகிய அடைமொழிகளாற் றெரிவிக்குந் திறமும், கடற்கரைக் காட்சியும் அந்நெய்தற்றிணையை நெஞ்சகத்தே நிலையுறச் செய்ய வல்லவாய் வாய்த்துள்ளன.

இந்நூலுள், மலைநாட்டார் மலைச்சாரலை நெருப்பிட் டழித்து, அச்சாம்பரினையே எருவாக்கி உழுது பயிரிடும் ஒரு பெரும் வழக்கமும், குதிரைகளை, கழுத்தில் ஒலிக்கும் மணிகளிட்டு, தேரிற் பூட்டி யோட்டலாகிய மரபும், போரிற் பட்டார்க்கு அவரைப் புதைத்த விடத்தே அவர் பெயர் வரைந்த கல்லை நட்டுச் சிறப்புறச் செய்து போற்றுஞ் செயலும், புண்ணிற்குக் காரமென்ற ஒருவகை மருந்தினை யிட்டு ஆற்று முறையும், வெறியாடலாகிய முருகன் விழவும் காணக் கிடக்கின்றன. மகளிர் அருவி யாடலும், அதனாற் கண்சிவத்தலும், கூடல் இழைத்து எதிர்கால நிகழ்ச்சியைக் குறித்துணர்தலும், மலைநாட்டு மகளிர் வளர்தினை காத்தலும், வேங்கை மலர் கொய்தலும், நெய்தன் மகளிர் மீன் உணங்கல்களைக் கவர வரும் புட்களை ஒப்புதலும், கடற்கரையிற் சிறு மனை கட்டி விளையாடலும், அச்சிறுமனைக்கு முத்துக்களை விளக்காகக் கொள்ளலும், மகளிர் கவுளின்மீது கையூன்றி நிற்றலும் அக்கால வழக்கெனஇந்நூலால் அறியலாகும்.

இதன்கண் பெரும்பாலும் நேரிசை வெண்பாக்களும், சிறுபான்மை இன்னிசை வெண்பாக்களும் வந்துள்ளன. பாலைக்கண் முதற் செய்யுளில், இரண்டாமடி,

"வெண்டளை விரவியு மாசிரியம் விரவியும்
ஐஞ்சீ ரடியு முளவென மொழிப,"

என்ற தொல்காப்பிய விதிப்படி ஐஞ்சீர் கொண்டு வந்துள்ளது. இந்நூலினை இயற்றிய, 'மாறன்பொறையனார்' என்பார், பாயிரத்தின்கண், "வண் புள்ளிமாறன் பொறையன்," எனக் கூறப்படுதலான், 'பொறையன்,' என்ற இயற் பெயரோடு, 'மாறன்,' என்ற சிறப்புப் பெயரினைப் பெற்றுப் பாண்டிநாட்டு அரசியலிற் பெருநிலை யொன்றைப் பெற்றிருந்த பெரியார் எனக் கருதப்படுகின்றனர். இவரைப் பற்றிய செய்தி வேறொன்றும் விளக்கமாகக் காணுதற் கில்லை. இந்நூலிற்கு அருமையான பழைய பொழிப்புரையும், கருத்துரையும் காணப்படுகின்றன. அவற்றை இயற்றிய அறிஞரும் நம்மாலறிய வொண்ணாத அரும் பெரும் நிலையினையே கொண்டுள்ளார். அப் பழையவுரையினைச் சார்ந்த கருத்துரை சில விடங்களிற் பாட்டின் போக்குக்கு மாறுபட்டுக் காண்கின்றது. அப் பழைய பொழிப்புரையும் பல விடங்களிற் கற்போர்க்குக் கருத்தினை மயங்கச் செய்வனவாய்க் காணப்படுதலின், பதவுரையும் விரிவுரையும் சேர்த்து வெளியிட முன் வரலாயினன். பெரும் புலவர்கள் புகுந்து செய்யவேண்டிய இப்பணியினை முடிக்க யான் முன்வந்தது, பல அறிவாளிகளின் உள்ளத்தே கிளர்ச்சியைப் பெருக்கி, இந்நூலிலுள்ள பல அரும்பொருள்களை அவர்கள் வெளியீட்டாற் கண்டு மகிழ்வதற்கே யாமென்க.

ஆதலின், இதனைக் கண்ணுறும் பெரியோர்கள் யான் அறியாமையாற் கொண்டுள்ள பிழைகளை எடுத்துக் காட்டி என்னை மன்னிக்கவேண்டுவதோடு தமிழ் மகளைப் பல நல்லுரைகளான் மணமகளாக்க மன்றாடுகின்றனன். தோன்றாத்துணையாக முன்னின்று இதனை முடிப்பித்த எல்லாம் வல்ல இறைவற்கு எனது வணக்கம் உரியதாகுக! இதனை வெளியிட் டுதவிய தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்க்கும், இதனை வெளியிடுங்கால் அன்பு கூர்ந்து பார்வையிட்டுத் திருத்தங்கள் செய்து உதவிய

மேற்படி கழகவெளியீட்டுக் குழுவுறுப்பினரும், பாளையங்கோட்டை அர்ச் சவேரியார் கல்லூரித் தலைமைத் தமிழாசிரியரும் ஆகிய **உயர்திரு வித்வான் பு. சி. புன்னைவனநாத முதலியாரவர்கட்கும்** யான் என்றும் நன்றிபாராட்டுங் கடப்பாடுடையேன்.

இங்ஙனம்,

சென்னை,<br>9–9–'35

அ. நடராசபிள்ளை.

ஓம்

# ஐந்திணையைம்பது.

---

## விளக்கவுரை பழைய பொழிப்புரையுடன்.

### பாயிரம்.

பண்புள்ளி நின்ற பெரியார் பயன்றெரிய
வண்புள்ளி மாறன் பொறையன் புணர்த்தியாத்த
வைந்திணை யைம்பது மார்வத்தி னோதாதார்
செந்தமிழ் சேரா தவர்.

(பதவுரை) வண்மை - மெய்மையான, புள்ளி - இலக்கப்புள்ளியிடுவதாகிய கணக்கிற் றேர்ச்சியுள்ள, மாறன் பொறையன் - மாறன் பொறையன் என்ற சிறப்புப் பெயர் பெற்ற புலவர் பெருமான், பண்பு - மக்கட் பண்புகளை, உள்ளி நின்ற - ஆராய்ந்தறிய அவாவிக் கொண்டிருக்கும்படியான, பெரியார்-உயர்ந்தோராகிய உலகமக்கள், பயன் - நூற்பயனாகிய அகப் பொருள்களின் நுட்பங்களை, தெரிய-நன்குணரும்படியாக, புணர்த்து - அகப்பொருட் டுறைகள் பலவற்றைச் சேர்த்து, யாத்த-செய்யுள் வடிவமாக இயற்றிய, ஐந்திணை ஐம்பதும் - முல்லை, குறிஞ்சி, மருதம், பாலை, நெய்தல் என்ற ஐந் தொழுக்கங்களினையும் தம்முள் அமைத்துக் கொண்டுள்ள ஐம்பது செய்யுட்களையும், ஆர்வத்தின் - விருப்பத்துடன், ஓதாதார்-படித்து அறியாத மக்கள், செந்தமிழ் - செவ்வையான தமிழ் மொழியின் பெரும் பயனை, சேராதவர் - அடையப்பெறு தவர்களாவார்கள்.

(விரிவுரை) பாயிரம் - முகவுரை. "ஆயிரமுகத்தான் அகன்ற தாயினும், பாயிரமில்லது பனுவலன்றே," என்றாராகலின், முதற்கட் பாயிரங் கூறப்பட்டதென்க. "மாறன் பொறையன்," என்ற

தனால் ஆக்கியோன் பெயரும், "ஐந்திணை," என்றதனால் அகப் பொருணூலாகிய வழியும், அகமாகிய நுதலிய பொருளும், "செந் தமிழ்," என்றதனால் நூல் வழங்க வேண்டிய தமிழ் நாட்டெல்லை யும், "ஐந்திணை யைம்பது," என்றதனால் நூற் பெயரும், "யாத்த," என்றதனால் செய்யுள் வடிவமாகிய நூல் யாப்பும், "பண்புள்ளி நின்ற பெரியார்," என்றதனால் கேட்போரும், "பயன்," என்றத னால் நூற்பயனும் பெறப்பட்டமை காண்க. என்னை? "ஆக்கி யோன் பெயரே வழியே யெல்லை, நூற்பெயர் யாப்பே நுதலிய பொருளே, கேட்போர் பயனோ டாயெண் பொருளும், வாய்ப்பக் காட்டல் பாயிரத் தியல்பே," என்று ராகலினென்க. புள்ளியிடுதல்- ஐந்தொகை முதலிய பெருங் கணக்குகளிட்டுப் பார்த்தல். "மாறன் பொறையன்," என்பது இந் நூலாசிரியர்க்குப் பாண்டி மன்னனா லளிக்கப்பட்ட பட்டப் பெயராம். "வண் புள்ளி" என்ற அடை மொழிகளால் இவர் பாண்டி நாட்டு அரசியலிற் பண வரவு செல வுக்குரிய பெருநிலை யொன்றிற் பெரும் பெயர் பெற்ற பெரியா ராவரெனக் கருதக் கிடக்கின்றது. புள்ளி - பணத் தொகை. செந் தமிழ் + சேராதவர் = செந்தமிழ் சேராதவர்: இரண்டன் தொகை யாகலின், இயல்பாயிற்றென்க. புணர்த்து + யாத்த = புணர்த்தி யாத்த: யகரம் வரக் குறள் உகரம் இகரமாகத் திரியலாயிற்று. இப் பாயிரம் மற்றச் செய்யுட்களைப் போல், பழைய பொழிப்புரை யினைக் கொண்டிருக்கவில்லை.

## நூல்

### முதலாவது—முல்லை.

மல்லர்க் கடந்தா னிறம்போன் றிருண்டெழுந்து,
செல்வக் கடம்பமர்ந்தான் வேன்மின்னி—நல்லாய்!
இயங்கெயி லெய்தவன் றார்பூப்ப வீதோ
மயங்கி வலனேருங் கார்.

[தலைமகளைத் தோழி பருவங்காட்டி வற்புறுத்தியது.]

(பதவுரை) நல்லாய் - பெண்மக்களிற் சிறந்த தலைவியே, கார் - மேகங்கள், மயங்கி - நாற்புறமும் கலந்து சூழ்ந்து, இதோ - நாம் காணும் இக்காட்சியிற்பட்டு, மல்லர் - கஞ்சனாற் செலுத்தப் பட்ட மற்போர் வீரர்களை, கடந்தான் - வென்ற கண்ணபிரானது, நிறம் போன்று - நீலவண்ணத்தினை நிகர்த்து, இருண்டு - பகலவனை மறைத்தலால் இருள் பரவும்படி, எழுந்து - வெளிப்பட்டு, செல்வம் - வளப்பமிக்க, கடம்பு - கடப்ப மலர் மாலையினை, அமர்ந்தான் - விரும்பி மேற்கொண்ட முருகப்பிரானது, வேல் - வேற் படையினைப் போல, மின்னி - மின்னலைச் செய்து, இயங்கு - இடம் பெயர்ந்து செல்லக்கூடிய, எயில் - பொன், வெள்ளி, இரும்பு என்ற மூவித உலோகங்களாலாக்கப்பட்ட பொற் கோட்டை, வெள்ளிக் கோட்டை, இரும்புக் கோட்டை என்ற மதில்களை, எய்தவன் - தனது அம்பினாற் பொடியாக்கிய சிவபிரானது, தார் - மாலையாகிய கொன்றைப் பூக்கள், பூப்ப - மலரும்படியாக, வலன் - வலமாகச் சுழன்று, ஏரும் - எழா நிற்கின்றன. (என்று தலைவிக்குத் தோழி கூறினள்.)

(பழையவுரை) மல்லரை வென்றவன் நிறம்போல இருளைச் செய்தெழுந்து, செல்வக் கடப்பந்தாரினை விரும்பி

ஞன் வேல்போல மின்னி, விசும்பின் இயங்குகின்ற முப்புரங் களை யெய்தவன் கொன்றைத்தார் பூப்ப மிடைந்து எழா நின்றது நல்லாய்! இக்கார்.

(விரிவுரை) முல்லை - முல்லையாகிய ஒழுக்கம்: தலைவன் பிரிவாலுண்டாம் வருத்தத்தினைப் பொறுத்து, அவன் கற்பித்த வாறே அடக்கத்தினை மேற்கொண் டிருத்தல். அகப்பொருள் இல்லறம் பற்றிய அன்புடை யொழுக்கமாதலின், தலைவன் சொற் பிழையாது நடக்குங் கற்பொழுக்கமாகிய முல்லை முதற்கட் கூறப் பட்ட தென்க. இத்திணை மாயோன் மேய காட்டின்கண் நிகழ்வ தாகலின், "மல்லர்க் கடந்தான்," என அந் நிலத்துக் கருப் பொருள் களில் முதன்மையானதை முன்னர் வைத்து நூலினைத் தொடங்க லாயினர். கார் முந்துமுன் தன் தேர் முந்துமெனத் தேற்றிச் சென்ற தலைவன் வரவுக்குரிய கார்ப்பருவத்தின் தோற்றத்தைத் தோழி தலைவிக்கு எடுத்துக் காட்டி, தலைவன் வரவு அண்மியது எனத் தேற்றுதல் செய்தனள். "இயங்கெயில்," என்ற தொட ரினை, "தூங் கெயில்," (விழாவறை காதை அடி-௪) என்ற மணிமேக லைத் தொடரினோடு ஒப்பு நோக்குக. கார் - பால் பஃகா வஃ றிணைப் பெயர். வலன் - மேனோக்கி என்றுமாம். கார் மயங்கி, எழுந்து, மின்னி, பூப்ப வலனேரும், என முடிக்க. கொன்றை - முல்லையின் கருப்பொருள்களி லொன்று. (௧)

அணிநிற மஞ்ஞை யகவ விரங்கி
மணிநிற மாமலைமேற் றாழ்ந்து—பணிமொழி!
கார்நீர்மை கொண்ட கலிவானங் காண்டொறும்
பீர்நீர்மை கொண்டன தோள்.

[பருவங்கண்டழிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது.]

(பத.) பணிமொழி - மெல்லிய சொல்லையுடைய தோழியே, அணிநிறம் - அழகிய நிறங்களைக் கொண்ட, மஞ்ஞை -

மயில்கள், அகவ - அன்போடு கூவியழைக்கும்படி, இரங்கி - இடித்து முழங்கி, மணி நிறம் - நீலமணி போன்ற நிறத்தினைக் கொண்ட, மா - பெரிய, மலைமேல் - மலைகளினிடத்தே, தாழ்ந்து - படிந்து, கார் நீர்மை கொண்ட - மழை காலத்தில் பெய்யுந் தன்மை மிகுதியும் வாய்ந்து காணப்பட்ட, கலி வானம் - நீர் நிரம்பிய மேகத் திரட்சியை, காண்தொறும் - யான் காணுகின்ற வேளைகளிலெல்லாம், தோள் - என் தோள்கள், பீர் நீர்மை - பீர்க்கம் பூவின் தன்மையை, கொண்டன - கொண்டு பொன் போன்ற பசலை பெற்று விளங்கின. (என்று தலைவி தோழியி னிடங் கூறினள்.)

(ப-ரை.) அழகிய நிறத்தையுடைய மயில்க ளழைக்க முழங்கி, நீலமணி நிறத்தையுடைய மாமலைகளின்கட் படிந்து, மெல்லிய மொழியை யுடையாய்! கார்காலத்துத் தன்மையைக் கொண்ட மிக்க முகில்களைக் காணுந்தோறும் என்றோள்கள் பீரின் தன்மையைக் கொண்டன.

(விரி.) கலி - நீர். பீர் - பீர்க்கம்பூ: முதலாகு பெயர். இரங்கி, தாழ்ந்து, கொண்ட கலி வானம் என முடிக்க. வானம் - இடவாகு பெயர். பருவம் - கார் காலமாகிய பருவம். அழிதல் - மனம் வருந்தல். பசலை - ஒருவகை நிறம். இது காதன் மிகுதியாலுண்டாம் மேனி மாற்றம். (உ)

மின்னு முழக்கு மிடியுமற் றின்ன
கொலைப்படை சாலப் பரப்பிய முல்லை
முகைவென்ற பல்லினுய்! இல்லையோ? மற்று
நமர்சென்ற நாட்டுளிக் கார்.

[பருவங் கண்டழிந்த கிழத்திக்குத் தோழி சொல்லியது.]

(பத.) முல்லை முகை - முல்லை யரும்புகளை, வென்ற - தன்மையான் மேற்கொண்ட, பல்லினுய் - பல்லழகு மிக்க தலைவியே, நமர் - நம்மவராகிய தலைவர், சென்ற - பிரிந்து போயிருக்

கும், நாட்டுள் - நாட்டினிடத்திலே, இக்கார் - இங்குக் காணப்படும் மேகத் திரட்சி, மின்னும் - மின்னலும், முழக்கும் - ஆரவாரமும், இடியும் - இடி வீழ்ச்சியும், இன்ன - இவைபோன்ற பிறவுமாகிய, கொலைப் படை - பிரிந்தாரை வருத்துதற்குரிய ஆயுதங்களை, சால - மிகுதியும், பரப்பிய - பரப்புவதற்கு, இல்லையோ - இல்லாமற் போயிற்றோ? (என்று தோழி தலைவியினிடத்திற் கூறினாள்.)

(ப - ரை.) நமர் சென்ற நாட்டின்கண் மின்னும் முழக்கும் இடியும் என்று சொல்லப்பட்ட இக்கொலைப் படைகளை நிரம்பப் பரப்புதற்கு இக்காரில்லையோ முல்லை முகை வென்ற பல்லினாய்!

(விரி.) மற்று - அசை நிலைகள். பரப்பிய - செய்யிய என்னும் வாய்பாட்டு வினையெச்சம். ஓ - ஐய வினாப் பொரு ளுடையது. இக்கார் நமர் சென்ற நாட்டுள் பரப்பிய இல் லையோ? என முடிக்க. சால - மிகுதிப் பொருள்தரு முரிச் சொல். அன்றி, சால் என்னு முரி யடியாற் றோன்றிய, செய என் வாய்பாட்டு வினையெச்சமுமாம். கிழத்தி - தலைவி. இக் கார் அந்நாட்டுள் இருப்பின், தலைவன் வருத்த மிகுந்து வந்து சேர்ந்திருப்பன், என்பது கருத்து. (ந)

உள்ளார்கொல் காதல ரொண்டொடி நந்திறம்
வள்வார் முரசின் குரல்போ லிடித்துரறி
நல்லார் மனங்கவரத் தோன்றிப் பணிமொழியைக்
கொல்வாங்குக் கூர்ந்ததிக் கார்.

[இதுவு மது.]

(பத.) ஒண்டொடி - ஒளிமிக்க வளையணிந்த தலைவியே, இக்கார் - இந்த மேகக் கூட்டமானது, வள்வார் - தோல் வாரினாலே இழுத்துக் கட்டி யமைக்கப்பட்ட, முரசின் குரல்போல் - முரச வாத்திய வொலியினைப் போன்று, இடித்து - இடியினை வீழ்த்து,

உரறி - முழங்கி, நல்லார் - கொழுநரைப் பிரிந்த பெண்களின், மனம் கவர - மனமானது வேறுபடும்படி, தோன்றி - வெளிப்பட்டு, பணி மொழி - தலைவரால் நமக்குக் கூறப்பட்ட இன் சொற்களை, கொல்வு ஆங்கு - சிதைப்பது போல, கூர்ந்தது - மிகுந்து காணப் படுகின்றது, நம் திறம் - இவ்விதமான நமது நிலையினை, காதலர் - நமதன்புக்குரிய தலைவர், உள்ளார் கொல் - நினைத்துப் பார்க்கமாட் டாரோ? (என்று தோழி தலைவியை வினவினள்.)

(ப - ரை.) நந்திறத்தைக் காதலர் உள்ளார்கொல்லோ ஒண்டொடி ! தோலார்ந்த முரசின் குரலிறைசைபோல இடித்து முழங்கித் தங் கொழுநரைப் பிரிந்த நல்லார் மனங் கவரும்படி தோன்றி, நங் காதலர் சொன்ன இன் சொல்லைச் சிதைப்பது போல மிக்கது இக்கார்.

(விரி.) ஒண்டொடி - அண்மை விளி. உரற்றல் - ஒலித் தல். கவர்வு - வேறுபாடு. இக்கார் முரசின் குரல்போல் உரறி, தோன்றி, கூர்ந்தது, என முடிக்க. பணி மொழி - ஆற்றியிருக்கு மாறு பணித்த மொழிகளுமாம். இன்சொற்கள் - ஆறுதன் மொழி கள். திறம் - தன்மை, நிலை. கொல் - ஐயப் பொருள் கொண்டது. உள்ளியிருப்பரேல் திரும்பியிருப்பர், என்பது கருத்து. (ச)

கோடுயர் தோற்ற மலைமே லிருங்கொண்மூக்
கூடி நிரந்து தலைபிணங்கி—ஓடி
வளிகலந்து வந்துறைக்கும் வானங் காண்டோறுந்
துளிகலந்து வீழ்தருங் கண்.

[இதுவு மது.]

(பத.) (என்னருமைத்தலைவியே !) கண் - நின் கண்கள், கோடு - சிகரங்களால், உயர் தோற்றம் - சிறந்த காட்சியினைக் கொண்ட, மலைமேல் - மலைகளின்மீதே, இரும் கொண்மூ - பெரும் மேகக் கூட்டங்கள், கூடி - திரண்டு, நிரந்து - கலந்து, தலை

பிணங்கி - ஒன்றோடொன்று மாறுபட்டு, ஓடி - வான் வெளியே சென்று, வளிகலந்து - காற்றோடு கூடி, வந்து - கீழிறங்கி, உறைக்கும் - பெய்யும் படியான, வானம் - ஆகாயத்தினை, காண் தொறும்- காணும் வேளைகளி லெல்லாம், துளி கலந்து - கண்ணீர்த் துளிகளை மிகப் பெற்று, வீழ்தரும் - பெய்விக்கின்றன.

(ப - ரை.) குவடுகளுயர்ந்த தோற்றத்தையுடைய மலைகள்மேற் பெரு முகில்கள் திரண்டு மிடைந்து, ஒன்றோடொன்று பிணங்கி யோடிக் காற்றோடு கலந்து பெய்கின்ற விசும்பு காணுந்தோறும் துளி கலந்து பெய்யாநின்றன நின் கண்கள்.

(விசே.) இங்கு, 'விளிச் சொல்,' பொருள் விளங்கும் பொருட்டு வருவித்துக் கொள்ளப்பட்டது. கொண்மூ கூடி, நிரந்து, தலை பிணங்கி, ஓடி, கலந்து, வந்துறைக்கும் வானம், எனக் கூட்டுக. கண் வானங் காண்டோறுந் துளிகலந்து வீழ்தரும், என முடிக்க. (௫)

முல்லை நறுமல ரூதி யிருந்தும்பி
செல்சார் வுடையார்க் கினியவாய்,—நல்லாய்! மற்
றியாருமின் னெஞ்சினே மாகி யுறைவேமை
யீரு மிருண்மாலை வந்து.

[இதுவு மது.]

(பத.) நல்லாய் - நல்ல தலைவியே, இருள்மாலை - இருளோடு கூடிய மாலைக்காலமானது, வந்து - தோன்றி, இரும்தும்பி - பெரிய வண்டுகள், முல்லை நறுமலர் - முல்லைக் கொடியில் மலர்ந்து காணும் நல்ல மலர்களில், ஊதி - ரீங்காரஞ் செய்து, செல்சார்வு - செல்வாக்குக் காரணமான தலைவரை, உடையார்க்கு - உடைய பெண்டிர்க்கு, இனியவாய் - இன்பத்தைச் செய்வனவாக, யாரும் இல் - எவரையும் துணையாகக் கொண்டிராத, நெஞ்சினேம் ஆகி -

கவலைமிக்க மனத்தை உடையேமாகி, உறைவேமை - தங்கியிருக்கின்ற நம்மை, ஈரும் - வருத்தா நின்றது.

(ப - ரை.) நல்லாய்! இருந்தும்பி முல்லை நறுமலரை ஊதுதலாற் றமக்குச் செல் சார்வாகிய கொழுநரை யுடையார்க்கு இன்பத்தைச் செய்வனவாய், யாரும் துணையில்லாத நெஞ்சினேமாகி உறைவேமை இருண்மாலை வந்து ஈரா நின்றது.

(விரி.) செல்சார்வு - காரியவாகுபெயர். இனியவாய் - இனியவாக: எச்சத்திரிபு. மற்று - வினைமாற்றுப் பொருள். மாலை வந்து, தும்பி செல்சார்வுடையார்க்கு இனியவாக, உறைவேமை யீரும், எனமுடிக்க. (௬)

தேரோன் மலைமறைந்த செக்கர்கொள் புன்மாலை
யாரான்பி னுய னுவந்தூதுஞ்—சீர்சால்
சிறுகுழ லோசை செறிதொடி! வேல்கொண்
டெறிவது போலு மெனக்கு.

[இதுவு மது.]

(பத.) செறிதொடி - கைகளில் நிறைந்த வளைகளைக் கொண்ட பெண்ணே! தேரோன் - ஒற்றையாழித் தேரவனுகிய சூரியன், மலை - மேற்கு மலைத்தொடரில், மறைந்த - மறைதலா லுண்டாகிய, செக்கர்கொள் - செவ்வானத்தைக் கொண்டுள்ள, புன்மாலை - சிறுபொழுதாகிய மாலைக்காலத்தே, ஆர் ஆன் பின் - அருமையான பசுக்கூட்டங்களின் பின்னுக வரும், ஆயன் - இடையன், உவந்து - மகிழ்ச்சி மிக்கவனுய், ஊதும் - ஊதும்படியான, சீர்சால் - சிறப்புமிக்க, சிறுகுழல் - புல்லாங் குழலினது, ஓசை - இனிய வோசையானது, எனக்கு———, வேல்கொண்டு - படைகொண்டு, எறிவதுபோலும் - தாக்குவதுபோல வருத்தத்தைத் தாரா நின்றது.

(ப-ரை.) தேரினையுடைய பகலவன் மலையின்கண் மறைந்த செக்கர் கொண்ட புன்மாலையின் கண் அரிய ஆனிரையின் பின்னே ஆயன் விரும்பி ஊதுஞ் சீரமைந்த சிறுகுழல் இன்னிசை, வேல் கொண்டு எறிவது போலாநின்றது செறிதொடி! எனக்கு.

(விரி.) செறிதொடி - வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை. மறைந்த - காரணப் பொருளில் வந்த பெய ரெச்சம். புன்மாலை - முல்லைத் திணையின் முதற்பொருள். ஆயன் - கருப்பொருள். இச்செய்யுளின் துறை மேற் கண்டவாறு தோழி கூற்றாகப் பழைய வுரைப் பிரதிகளில் காணப்படினும், எனக்கு என்னும் தொடர்கொண்டு, "தலைவி கூற்று," எனக் கருதக் கிடக்கின்றது. ஆகவே, மாலை கண்டு மயங்கிய தலைவி தோழிக்குச் சொல்லியது, என்பது போதரும். (எ)

பிரிந்தவர் மேனிபோற் புல்லென்ற வள்ளி
பொருந்தினர் மேனிபோற் பொற்பத்-திருந்திழாய்!
வானம் பொழியவும் வாரார்கொ லின்னாத
கானங் கடந்து சென்றார்.

[இதுவு மது.]

(பத.) திருந்து இழாய் - செப்பமான அணிகலன்களை யணிந்துள்ள பெண்ணே!, பிரிந்தவர் - தலைவரைப் பிரிந்த தலைமகளிரின், மேனி போல் - வடிவம் போல, புல் என்ற - பொலிவின்றிக் காணப்பட்ட, வள்ளி - கொடிகள், பொருந்தினர் - தலைவரோடு கூடி வாழும் தலைமகளிரின், மேனிபோல் - வடிவம்போல, பொற்ப - பொலிவு பெறும்படி, வானம் பொழியவும் - மழை பெய்தலைச் செய்தும், இன்னாத - கொடிய, கானம் - காடுகளை, கடந்து - தாண்டி, சென்றார் - பிரிந்து சென்ற தலைவர், வாரார் கொல் - வரமாட்டாரா? (என்று தோழி தலைவியை வினவினள்.)

(ப-ரை.) துணைவரைப் பிரிந்தார் மேனிபோலப் புற்கென்ற வள்ளிகள், துணைவரோடு பொருந்தி யிருந்தார் மேனி போலப் பொலிவு தோன்றும் வகை வானம் பொழியவும் வாரார் கொல்லோ? திருந்திழாய்! இன்னுத கானங்களைக் கடந்து சென்றூர்.

(விரி.) திருந்திழை - வினைத் தொகை யன்மொழி. இச் செய்யுளின் பொருட் போக்கும், வினவும் நேர்மையும் தலைவியின் கூற்றுமோ என ஐயுறச் செய்கின்றன. கொல் - ஐய வினைப் பொருள் தரு மிடைச்சொல். (அ)

வருவர் வயங்கிழாய் வாளொண்க ணீர்கொண்
டுருகி யுடன்றழிய வேண்டா—தெரிதியேற்
பைங்கொடி முல்லை யவிழரும் பீன்றன
வம்ப மழையுறக் கேட்டு.

[பருவமென் றழிந்த கிழந்தியைத் தோழி பருவமன்றென்று வற்புறுத்தியது.]

(பத.) வயங்கு இழாய் - மின்னுகின்ற அணிகலன்களைப்பூண்ட பெண்ணே! தெரிதியேல் - ஆராய்ந்து பார்ப்பாயாயின், வம்ப - காலமல்லாக் காலத்திற் புதிதாகத் தோன்றி நிலைத்திராத, மழை உற - மேகங்கள் கூடி முழங்க, கேட்டு - தெரிந்து, பைங்கொடி - பசிய கொடிகளையுடைய, முல்லை - முல்லைச் செடிகள், அவிழ் அரும்பு - மலரும் பருவத்தையுடைய மொட்டுக்களை, ஈன்றன - தோற்றுவித்தன, (என்பது தெளியலாகும்; ஆகவே,) வருவர் - கார்ப்பருவம் மெய்யாகவே வருமாயின் நமது தலைவர் தவறாது வந்து சேர்வர், (ஆகலின்,) வாள் - வாளாயுதத்தினை யொத்த, ஒண்கண் - நின் ஒளியினையுடைய கண்கள், நீர்கொண்டு - கண்ணீர் பெருக, உருகி - நீ வருந்தி, உடன்று - நொந்து, அழிய வேண்டா- துன்புற வேண்டுவதின்று. (என்று தோழி தலைவிக்குக் கூறினள்.)

(ப-ரை.) விளங்கிய இழைகளையுடையாய்! நங்காதலர் பருவம் வந்தால் வருவர்; வாளினை யொக்கும் நின் கண்கள் நீர் கொள்ள நீயுருகி மாறுபட்டு அழியவேண்டா; ஆராய்வாயாயிற் றன்பருவ மல்லாமையின் நிலையில்லாத முழக்கங் கேட்டுப் பைங்கொடி முல்லைகள் அவிழரும்பு ஈன்றன காண்.

(விரி.) வயங்கிழை - வினைத் தொகையன் மொழி. அவிழரும்பு - வினைத் தொகை. கொண்டு - கொள்ள, எச்சத்திரிபு. பருவம் - கார் காலம். (க)

நூனவின்ற பாக! தேர் நொவ்விதாச் சென்றீக;
தேனவின்ற கானத் தெழினோக்கித்—தானவின்ற
கற்புத்தாள் வீழ்த்துக் கவுண்மிசைக் கையூன்றி
நிற்பா ணிலையுணர்கம் யாம்.

[வினைமுற்றிய தலைமகன் தேர்ப்பாகன் கேட்பச் சொல்லியது.]

(பத.) நூல்நவின்ற - கலைப்பயிற்சி மிக்க, பாக - தேர்ப் பாகனே! தேன் நவின்ற - தேன்கூடுகள் மிகுந்த, கானம் - காட்டினது, எழில் நோக்கி - கார்ப் பெயலான் மிகுந்த அழகினைப் பார்ப்பதுபோல் என் வரவினை நோக்கிக் கொண்டு, தான் நவின்ற - தான் சிறு பருவத்திருந்தே பழகி மேற்கொண்ட, கற்புத்தாள் - கற்பாகிய அடைப்புக் கருவியினை, வீழ்த்து - மனத்தகத்தே சேர்த்து உயிரினைக் காப்பாற்றி, கவுள்மிசை - மோவாய் மீதே, கையூன்றி - தனது இடக்கையினைச் சேர்த்து வைத்து, நிற்பாள் - நிற்பவளாகிய தலைவியினது, நிலை - நிலைமையை, யாம் - நாம், உணர்கம் - சென்று உணர்வாம், (அதற்குத் தகுதியாக,) தேர் - நமது தேர், நொவ்விதாஅ - விரைவாக, சென்றீக - செல்வதாக. (என்று தலைவன் தேர்ப்பாகனை நோக்கிக் கூறினன்).

(ப-ரை.) நூல் பயின்ற பாகனே! நின்றேர் கடிதாகச் செல்வதாக; தேன் பயின்ற காட்டினது அழகை நோக்கித்

தான் பயின்ற கற்பென்னுநின்ற தாளினைச் செறித்து உயிர் காத்துக் கவுளின்மிசைக் கையூன்றி நிற்பாளது நிலைமையை நாம் சென்று அறிவாம்.

(விரி.) வினைமுற்றல் - சென்ற காரியத்தைச் செய்து முடித்தல். கேட்ப - கேட்கும்படி. உணர்கம் - முன்னிலையினை யுளப்படுத்திய தன்மைப் பன்மை வினைமுற்று. ம

முல்லை முற்றும்.

## இரண்டாவது—குறிஞ்சி.

பொன்னிணர் வேங்கை கவினிய பூம்பொழிலு
ணன்மலை நாட னலம்புனைய—மென்முலையாய்!
போயின சின்னாள் புனத்து மறையினா
லேயினா ரின்றி யினிது.

[பகற்குறிக்கட் டலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி
தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் செறிப்பறிவுறீஇயது.]

(பத.) மென்முலையாய் - மிருதுவான முலைகளையுடைய தலைவியே! நல்மலை - வளமிக்க மலைகள் நிறைந்த, நாடன் - நாட்டிற் குரியவனாகிய தலைவன், புனத்து - நமது தினைப்புனத்திற்குப் பக்கத்திலுள்ள, பொன் இணர் - பொன்போன்ற பூங்கொத்துக்களையுடைய, வேங்கை - வேங்கை மரங்கள் நிறைந்து, கவினிய - அழகு மிகுந்த, பூம்பொழிலுள் - பொலிவுமிக்க சோலையினிடத்திலே, மறையினால் - நீ செய்யும் களவுப் புணர்ச்சியில், ஏயினார் - இடையூறுகக் குறுக்கிட்டார், இன்றி - இல்லாமல், இனிது - இன்பமாக, நலம் புனைய - புணர்ச்சியின் மகிழ்ந்து நினது நலத்தைப் பாராட்டும்படி, சின்னாள் - சிலநாட்கள், போயின - நன்கே கழிந்தன. (இனி, எப்படியாமோ? அறியேம்! என்று தலைவிக்குத் தோழி கூறினாள்.)

(ப-ரை.) பொன் போன்ற பூங்கொத்தையுடைய வேங்கைகள் அழகு பெற்ற பூம்பொழிலின்கண் வந்து நன்மலை நாடன் நினது நலத்தினைப் புனையக் கழிந்தன சிலநாள்; புனத்தின்கட் களவினான் எதிர்ப்பட்டோரின்றி இடையூறின்றியே யினிதாக.

(விரி.) பகற்குறியாவது தோழி தலைவிக்குக் குறை இரந்து நின்ற தலைவன் செய்தி கூறிக் கூட்டத்திற்குத் தலைவியை இணங்குவித்த பிறகு, தினைப்புனத்தை யடுத்த சோலையினுள்ளே ஓரிடத்தைத் தலைவனுக்குக் குறிப்பிட்டுக் கூறித் தலைவியைக் கொண்டு சேர்க்குமிடமாம். சிறைப்புறம் - வேலியின் வெளிப்புறம். செறிப்பு - தலைவியை மனையிற் கொண்டு சேர்த்தல். அறிவுறீஇயது - தெரிவித்தது. நலம் புனைதல் - தலைவியின் உயர்ந்த தன்மைகளை எடுத்துச் சொல்லல். இது புணர்ச்சியின் பின் நிகழ்வதாகும். நாடன் பொழிலுள் மறையில் எயிறுரின்றி, இனிது நலம் புனையச் சின்னாள் போயின. இற்செறிப்பால், இனி எப்படியாமோ? என முடிக்க. இது தலைவனுக்கு மறைமுகமாக இற்செறிப்பினைத் தோழி தெரிவித்ததாகும். குறிஞ்சி - குறிஞ்சியாகிய வொழுக்கம்: புணர்தலும், புணர்தனிமித்தமும். (கக)

மால்வரை வெற்ப! வணங்கு குரலேனல்
காவ லியற்கை யொழிந்தேம்யாம்—தூவருவி
பூக்கண் கழூஉம் புறவிற்றாய்ப் பொன்விளையும்
பாக்க மிதுவெம் மிடம்.

[பகற்குறி வந்து பெயர்கின்ற தலைமகனைக் கண்ணுற்றுத் தோழி செறிப்பறிவுறீஇயது.]

(பத.) மால் - பெரிய, வரை - சிகரங்களை யுடைய, வெற்ப - மலைநாட்டுத் தலைவனே, யாம் - நாங்கள், வணங்கு - முதிர்தலால் வளைந்த, குரல் - கதிர்களையுடைய, ஏனல் - தினைப்புனத்தை, காவல் - காத்துக்கொண் டிருக்கும்படியான, இயற்கை - இயல்பான வாழ்க்கையை, ஒழிந்தேம் - விட்டுச் செயற்கையான இல்லில் வாழும் வாழ்க்கையை மேற்கொண்டோம், தூஅருவி - நீர்த் துளிகளைத் தூவும்படியான நீர்வீழ்ச்சிகள், பூக்கண் - பூக்களின் உள்ளிடங்களை, கழூஉம் - கழுவிக் கொண்டு செல்லும் படியான, புறவிற்றாய் - காட்டினைச் சூழக் கொண்டதாய்,

பொன் விளையும் - பொருட் செல்வத்தான் மிகுந்த, பாக்கம் இது - இப்பாக்கம், எம்மிடம் - எமது இல்லம் அமைந்த இடமாகும். (எம்மைக் காண வேண்டுதியேல், நாளை முதல் அவ்விடம் வருவாயாக, என்று தோழி தலைவனுக்குச் சொன்னாள்.)

(ப-ரை.) பெரிய குவடுகளையுடைய வெற்பனே! விளைத்த கதிர்களையுடைய பசுந் தினையைக் காத்தல் யாம் ஒழிந்தேம்; தூவருவிகள் பூவின் கண்களைக் கழுவுகின்ற காட்டினை யுடைத்தாய்ப் பொன் விளையும் இப்பாக்கம் எம்முடைய இடமாதலான், நீ இங்கே வரக்கூடின், வருவாயாக.

(விரி.) கண்ணுறல் - காணல். பாக்கம் - ஊர். கழூஉம் - சொல்லிசை யளபெடை. தலைவனும், தலைவியுங் கூடிக் களித்துப் பிரியுங்கால், தோழி தலைவனையணுகித் தம திற்செறிப்பினை நேர் முகமாய்க் கூறியதாகு மிச்செய்யுள். "ஒழிவேம்," எனற் பாலது, "ஒழிந்தேம்," என வந்தது தெளிவு பற்றி வந்த காலவழுவமைதி. (கஉ)

கானக நாடன் கலவானென் றோளென்று
மானமர் கண்ணாய்! மயங்கனீ;—நானங்
கலந்திழியு நன்மலைமேல் வாலருவி யாடப்
புலம்பு மகன்றுநில் லா.

[சிறைப்புறத்தானாகத் தலைமகனை யியற்பழித்த தோழிக்குத்
தலைமகள் இயற்படமொழிந்தது.]

(பத.) மான் அமர் - மான் போன்று மருளும், கண்ணாய் - கண்களையுடைய தோழியே! கானகம் - குறிஞ்சி நிலம் நிறைந்த, நாடன் - நாட்டிற்குரியனாகிய தலைவன், என் தோள் - இற் செறிப்புறும் என் தோள்களில், கலவான் - சேருதலாகிய புணர்ச்சியைச் செய்யான், என்று - என நினைத்து, நீ மயங்கல் - நீ வருத்த முறாதிருப்பாயாக, நானம் - பலவகை வாசனைப் பொருள்கள், கலந்து - கலக்கப் பெற்று, இழியும் - நமதூர்க்குப் பக்கத்தே செல்

லும், நன்மலைமேல் - தலைவனது நாட்டைச் சார்ந்த நல்லமலையி லிருந்து வரும்படியான, வால் அருவி - வெள்ளிய நீர் வீழ்ச்சியில், ஆட - நாம் சென்று மூழ்கி வருவதால், புலம்பும் - தலைவனைச் சேராமையானுண்டாகும் வருத்தங்களும், அகன்று - நீங்கி, நில்லா-தும். (என்று தலைவி தோழிக்குச் சொன்னாள்.)

(ப-ரை.) கானக நாடன் என்றோனைப் 'புணரானென்று சொல்லி, மான் போன்ற மதர்த்த கண்ணிணை யுடையாய்! அறிவு கெடா தொழிவாயாக; பல நறு விரைகளையுங் கலந்து இழியாநின்ற நன் மலையின்கண் உள்ள வாலிய அருவியை யாட என்றோள்களின்கட் புலம்பும் நீங்கி நில்லாது.

(விரி.) தலைவனது நாட்டுமலை யென்பார் 'நன்மலை,' என்றார். புலம்பு - பால்பகாவஃறிணைப் பெயர். தலைவனுக்குத் தலைவியின் இற்செறிப்புணர்த்திக் தலைவிபால் சென்ற தோழி, தம்மைச் சிறைப்புறமாக நின்று நோக்குந் தலைவனுக்குக் கேட்கும்படியாக, "தலைவன், இனி வறும்பூத் துறக்கும் வண்டு போல்வனோ?" என்று தலைவியினிடங் கூற, தலைவி மறுமொழியாகக் கூறிய துறை யாகுமிது. இயற்பட மொழிதல் - உயர்வு படக் கூறல். இயற் பழித்தல் - குறைவுபடக் கூறல். இங்குத் தலைவி, தலைவனது புணர்ச்சி கிட்டாவிடினும், அவனுட் டருவியின் சேர்க்கை கிட் டுதல் சாலும் என இயற்பட மொழிந்து, தலைவனது பேருளுக் குரியளாமாறு தெளிக. (கஙு)

புனைபூந் தழையல்குற் பொன்னன்னாய்! சாரற்
றினைகாத் திருந்தேம்யா மாக—வினைவாய்த்து
மாவினவு வார்போல வந்தவர் நம்மாட்டுத்
தாம்வினவ லுற்றதொன் றுண்டு.

[தோழி தலைமகட்கு மெலிதாகச் சொல்லிக்
துறை நயப்புக் கூறியது.]

(பத.) புனை - தொடுக்கப்பட்ட, பூ - மலர்களோடு கூடிய, தழை - குழைகளால் அலங்கரிக்கப்பட்ட, அல்குல் - நிதம்பத்தினை யுடைய, பொன் அன்னாய் - இலக்குமியை யொத்த தலைவியே! சாரல் - இம்மலைப் பக்கத்திலுள்ள, தினை - நமது தினைப்புனத்தை, யாம் - நாங்கள், காத்து - (இன்று காலையில்) காவல் செய்து, இருந்தேம் ஆக - இருக்க, (அப்பொழுது,) வினை வாய்த்து - வேட்டமாடுதலை மேற்கொண்டு, மாவினவுவார் போல - தாம் தப்ப விட்ட விலங்கொன்றினைத் தேடி வருவார் போன்று, வந்தவர் - வருதலைச் செய்தவராகிய அவர், (இப்பொழுது - நண் பகல்) நம் மாட்டு - நம்மிடத்தில், வினவல் உற்றது - கேட்கத் தொடங்கிய தாகிய, ஒன்று - பிறிதொன்று, உண்டு - உளதாயிருக்கின்றது. (என்று தலைவிக்குத் தோழி கூறினாள்.)

(ப-ரை.) செய்யப்பட்ட பூந்தழைகளான் அணியப் பட்ட அல்குலினையுடைய பொன்னன்னாய்! மலைச்சாரலின் கட் டினையைக் காத்து நாம் இருந்தேமாக, வினையை வாய்க் கச் செய்து ஒருமா வினவுவார் போல வந்தாரொருவர் நம் மாட்டுத் தாம் வினவலுற்ற பிறிதொன்று உண்டு.

(விரி.) ஒன்று - பிறிதொன்று. அஃதாவது புணர்ச்சி விருப் பம். சாரல் - மலைப்பக்கம். தினை - தினைப்புனம்: தானியாகுபெயர். தாம் - அசைநிலை. குறை நயப்பு - தலைவன் தனது குறையாகிய வேண்டுகோளை நிறைவேற்றி வைக்கும்படி தோழியை வேண்டிக் கொள்வது. மெலிதாக - நயமாக. (கச)

வேங்கை நறுமலர் வெற்பிடை யாங்கொய்து
மாந்தளிர் மேனி வியர்ப்பமற்—றாங்கெனைத்தும்
பாய்ந்தருவி யாடினே மாகப் பணிமொழிக்குச்
சேந்தனவாஞ் சேயரிக்கண் டாம்.

[பகற்குறிக்கட் டலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி தாய் கேட்டதற்கு மறுமாற்றஞ் சொல்லுவாள் போலப் படைத்து மொழி கிளவியான் வரைவு கடாயது.]

(பத.) யாம் - நாங்கள், வெற்புஇடை - அம்மலையிடத்தேயுள்ள, வேங்கை - வேங்கைமரத்திற் பூத்துள்ள, நறுமலர் - மணமிக்க பூக்களை, கொய்து - பறித்தலாகிய காரியத்தைச் செய்தபடியினாலே, மாந்தளிர் - மாவினது தளிரை யொத்த, மேனி - எங்கள் உடல், வியர்ப்ப - வியர்வையைப் பொழிய, (அதனால்,) ஆங்கு - அம்மலையிடத்தே யுள்ள, எனைத்தும் அருவி - எல்லா நீர் வீழ்ச்சிகளிலும், பாய்ந்து ஆடினேம் - குதித்து விளையாடினோம், ஆக - ஆகவே, பணி மொழிக்கு - மெல்லிய சொற்களையுடைய தலைவிக்கு, சேயரி - சிவந்த ரேகைகள் படர்ந்த, கண் - கண்கள், சேந்தன - சிவப்பு நிறங் கொண்டன. (என்று தோழி செவிலித்தாய்க்குக் கூறினாள்.)

(ப-ரை.) வெற்பின்கண் வேங்கை மலரையுங் கொய்து நின்மகள் மாந்தளிர் மேனி வியர்த்தலான் அவ்விடத்து எல்லா வருவியும் பாய்ந்தாடினேமாகப் பணிமொழியை யுடையாட்குச் சேயரிக்கண் டாம் சிவந்தன காண்.

(விரி.) மறுமாற்றம் - விடை. தாய் - செவிலி. படைத்து மொழிகிளவி - புதிதாக வொன்றைக் கற்பித்துக் கூறுவது. வரைவு கடாதல் - மணம் புரிந்து கொள்ளும்படி தூண்டுதல். இடை - ஏழனுருபு. கொய்து - காரணப் பொருளில் வந்த வினையெச்சம். பணிமொழி - பண்புத் தொகை யன்மொழி. தலைவியை இல்லிற்கு அழைத்துச் செல்லத் தினைப்புனம் வந்திருந்த செவிலித்தாய் பகற்குறிக்கண் சென்று வந்த தலைவியைத் தழுவி நோக்கி, அவள் அதுவரை எங்குச் சென்றிருந்தாள் என்றும், அவள் கண்கள் அப்படிச் சிவந்திருக்கக் காரணம் யாதென்றும் தோழியை வினவினாள். அவ்வேளை தலைவியின் செலவினை நோக்கிக் கொண்டே பின் வந்த தலைமகன் புணர்ச்சி நிகழ்ந்த சோலைக்கும், தினைப்புனத்

திற்கு மிடையேயுள்ள வேலியின் புறமாக நின்று நோக்கிக் கொண் டிருந்தனன். தோழி, செவிலித்தாயின் வினக்களுக்கு மறு மொழி யாகவும், தலைவன், தலைவியின் நிலையினை யறிந்து வரைந்து கொள் ளும்படியாகவும் தலைவனுக்குக் கேட்கும்படியாகப் புணர்ச்சியான் நேர்ந்த கண் சிவப்புக்குப் புதிதாக மற்றொரு காரணங் கற்பித்துக் கூறலானாள். "சேயரிக்கண்," என்ற கருத்தினைக் கூர்ந்து நோக்குக. (கரு)

கொடுவரி வேங்கை பிழைத்துக் கோட்பட்டு
மடிசெவி வேழ மிரீஇ—அடியோசை
அஞ்சி யொதுங்கு மதருள்ளி யாரிருட்
டுஞ்சா சுடர்த்தொடி கண்.

[இரவுக்குறி வந்து பெயருந் தலைமகனைக் கண்ணுற்று நின்ற தோழி வரைவு கடாயது.]

(பத.) சுடர்த் தொடி - ஒளிமிக்கவளை யணிந்த தலைவியினது, கண் - கண்கள், கொடுவரி - வளைந்த வரிகளையுடைய, வேங்கை - பெரும் புலியினாலே, கோள்பட்டு - பிடிக்கப்பட்டு, பிழைத்து - அப் பிடியினின்றும் தப்பியோடி, மடி செவி - மடிந்த காதுகளை யுடைய, வேழம்-யானையானது, இரீஇ-பின்வாங்கி, அடியோசை - தன்னடையாலுண்டாகும் ஓசையானது, (புலிக்குக் கேட்குமோ என்று,) அஞ்சி - பயந்து, ஒதுங்கும் - மெதுவாக நடக்கும் படி யான, அதர் - வழியானது, உள்ளி - (நீ திரும்பிச் செல்லும் பாதையாகு மென்று) நினைத்து, (அதனால்,) ஆர் இருள் - நேற்றிரவு முழுவதும், துஞ்சா - உறக்கத்தை மேற் கொள்ளா வாயின. (ஆக லின், நீ விரைவில் தலைவியைக் கடி மணம் புரிந்து காப்பாற்றுவா யாக, என்று தோழி தலைவனிடத்திற் கூறினாள்.)

(ப-ரை.) கொடுவரி வேங்கையாற் கோட்பட்டுப் பிழைத்து மடிந்த செவியையுடைய வேழம் பிரிந்து, தன்

னடி யோசையைப் புலி கேட்குமென்று அஞ்சி, மெல்ல நடக்கும் வழியை நினைந்து, கங்குலின்கட் சுடர்த்தொடியை யுடையாள் கண் துயிலா.

(விரி.) இரவுக்குறி - தலைவனும் தலைவியும் இரவில் சந்தித்துக் கூடுமிடம். இது தலைவியின் வீட்டினை யடுத்திருப்பதாம். வேழம் இரீஇ, அஞ்சி, ஒதுங்கும் அதர், என முடிக்க. சுடர்த்தொடி கண், ஆரிருளில் அதருள்ளித்துஞ்சா, எனக் கொண்டு கூட்டுக. இரவுக் குறி வந்து பெயருங்கால் வரைவு கடாய தெற்றுக் கெனின், தலைவர்க்கு வழியிடை விழிப்பும், வரைதலில் நினைப்பும் வேண்டியென்க. புணர்ச்சிக்கு முற்கூறின், அம் மகிழ்வான் தலைவன் மறத்தலா மென்பது தோழி கருத்தாம். (கரு)

மஞ்சிவர் சோலை வளமலை நன்னாட!
எஞ்சாது நீவருதி யென்றெண்ணி—அஞ்சித்
திருவொடுங்கு மென்சாயற் றேங்கோதை மாத
ருருவொடுங்கு முள்ளுருகி நின்று.

[இதுவு மது.]

(பத.) மஞ்சு - மேகங்கள், இவர் - படர்ந்தேறிச் செல்லும்படியான, சோலை - பூஞ்சோலைகளையுடைய, வள மலை - வளப்ப மிக்க மலைகள் நிறைந்த, நல் நாட - நல்ல நாட்டிற்குரிய தலைவனே, திரு - இலக்குமியும், ஒடுங்கும் - பின்வாங்கும்படியான, மெல் சாயல் - நல்ல அழகினையுடைய, தேம்கோதை - வாசனை மிகுந்த மலர்மாலை யணிந்த தலைவியானவள், நீ எஞ்சாது - நீ நாடோறும் இரவின்கண் தவறுமல், வருதி - கொடுமை மிக்க வழியினைக் கடந்து வருகின்றாய், என்று எண்ணி - என்று நினைத்து, அஞ்சி - உனக்கு என்ன தீங்கு நேருமோ என்று பயந்து, உள் உருகி நின்று - மனவருத்த மிக்கு, மாதர் - அழகிய, உரு ஒடுங்கும் - மேனி வாட்ட

முறலாயினள். (ஆகலின், நீ நின் வரவினை நிறுத்தி, மணம் புரிவ தற்கு வேண்டிய வழியினை நாடுவாயாக, என்று தோழி தலைவ னிடத்திற் கூறினள்.)

(ப-ரை.) முகில் படரா நின்ற சோலையையுடைய வள மலை நாடனே! ஒருநாள் ஒழியாது இரவின்கண் நீ வாரா நின்றாய் என்று எண்ணித் திருவொடுங்கு மென்சாயற் றேங் கோதை மாதர் அஞ்சி யுள்ளுருகி நின்று தன் மேனி மெலியாநின்றாள்.

(விரி.) உருகி நிற்றல் - ஒருசொல்: வருந்தல். வருதி - முன் னிலை யொருமை நிகழ்கால வினைமுற்று. நன்றாட! தேங்கோதை எண்ணி, அஞ்சி, உள்ளுருகி நின்று, மாத ருருவொடுங்கும், என முடிக்க.

(கஎ)

எறிந்தெமர் தாமுழுத வீர்ங்குர லேனன்
மறந்துங் கிளியினமும் வாரா—கறங்கருவி
மாமலை நாட! மடமொழி தன்கேண்மை
நீமறவ னெஞ்சத்துக் கொண்டு.

[தோழி செறிப்பறிவுறீஇத் தலைமகனை வரைவு கடாயது.]

(பத.) கறங்கு - ஒலிக்கின்ற, அருவி - நீர்வீழ்ச்சிகளையுடைய, மா - பெரிய, மலைநாட - மலைநாட்டிற்குரிய தலைவனே! எமர் - எம் மவர்களாகிய குறவர்கள், எறிந்து - மரஞ்செடி கொடிகளை வெட்டி ஒழுங்கு படுத்தி, உழுத - உழவுத் தொழிலைச் செய்து பயிரிட்ட, ஈர்ம் குரல் - குளிர்ந்த கதிர்களையுடைய, ஏனல் - தினைப்புனத்திற்கு, (இனிமேல்,) கிளியினமும் - கிளிக்கூட்டங்களும் நாங்களும், மறந் தும் - நினைவின்றியும், வாரா - வருதலைச் செய்யோம், மடமொழி - மடப்பக்குணம் பொருந்திய சொற்களையுடைய தலைவியினது, கேண்மை - நட்பினை, நீ நெஞ்சத்துக் கொண்டு-நீ மனத்திடையே

வைத்து, மறவல் - மறவாது வாழ்வாயாக. (என்று தோழி தலைவ னிடத்திற் சொன்னாள்.)

(ப-ரை.) காடெறிந்து எமர்தாமுழுத ஈர்ங்குரல் ஏன லின்கண் மறந்தாயினுங் கிளியினமும் நாங்களும் வாரோம்; கறங் கருவியினையுடைய மாமலை நாடனே! மடமொழியோடு நீ கொண்ட கேண்மையை நின்னெஞ்சத்துக் கொண்டு மற வாயாக.

(விரி.) மறந்தும் - உம்மை இழிவு சிறப்புப் பொருளது. கிளி யினமும் - உம்மை சொல்லெச்சப் பொருளது. செவிலியுடன் தலைமகள் வீட்டிற்குச் செல்ல, தோழி சிறைப்புறத்தே நின்ற தலை மகன்பால் வந்து தமது இற்செறிப்பினைத் தெரிவித்துத் தலைவியை மணந்து வாழவேண்டுமென அறிவுறுத்தியதாகு மிச் செய்யுள். குறவர் மரங்களடர்ந்த மலைச்சாரலினைத் தீமூட்டி யழித்துப் பின், அச்சாம்பரினையே எருவாக்கி உழுது தினைப்பயிர் செய்தல் மரபாத லின், "எறிந்தெமர்தாமுழுத ஈர்ங்குரலேனல்," என்றார். தாம், தன் - அசைநிலைகள். (கஅ)

நெடுமலை நன்னாட ! நீள்வே றுணையாக்
கடுவிசை வாலருவி நீந்தி—நடுவிரு
ளின்னா வதர்வர வீர்ங்கோதை மாதரா
ளென்னாவா ளென்னுமென் னெஞ்சு.

[தோழி இரவுக் குறியின்கண் நெறிவிலக்கி வரைவு கடாயது.]

(பத.) நெடுமலை - நீண்டுயர்ந்த மலைகள் மிகுந்த, நல்நாட - நல்ல நாட்டிற்குரிய தலைவனே, நீள் வேல் - நீண்ட வேலாயுதத்தை. துணையா - உதவியாகக் கொண்டு, கடுவிசை - மிக்க விரைவாக ஓடும்படியான, வால் அருவி - வெள்ளிய நீர்வீழ்ச்சிகளை, நடுஇருள் -

பாதி இரவிலே, நீந்தி - கடந்து, இன்னு - இடையூறுகள் பல வற்றைக் கொண்டு துன்பஞ் செய்யும்படியான, அதர் வரவு - வழியிலே நீ வருதலைக் கண்டால், ஈர்ங்கோதை - குளிர்ந்த பூமாலையணிந்த, மாதராள் - பெண்ணாகிய தலைவி, என் ஆவாள் - எவ்விதமாகப் பொறுப்பள், என்னும் - என்று வருந்தா நிற்கின்றது, என் நெஞ்சு - எனது மனம். (என்று தோழி தலைவனை நோக்கிக் கூறினள்.)

(ப-ரை.) நெடுமலை நன்னாடனே! நீள்வேலே துணையாகக் கடிய விசையையுடைய, வாலருவியை நீந்தி, நடுவிருளின்கண் இன்னாத வழியின்கண் நீவர, ஈர்ங் கோதை மாதராள் எப் பெற்றி யாவாளோ என்று தடுமாறுநிற்கும் என்னெஞ்சு.

(விரி.) இரவுக்குறி - தலைவனும் தலைவியும் இராக்காலத்தே தம்முள் எதிர்ப்பட்டுக் கூடுமிடமாம். இது தலைவியின் இல்லினையடுத்த தோப்பின்கண் உள்ளதாம். நெறிவிலக்கல் - வழியினது அருமை கூறி அவ்வழி வாராதிருக்க வேண்டல். (கக)

வெறிகமழ் வெற்பனென் மெய்ந்நீர்மை கொண்ட
தறியாண்மற் றன்னோ! அணங்கணங்கிற் றென்று
மறியீர்த் துதிரந்தூய், வேலற் றரீஇ
வெறியோ டலம்வரும் யாய்.

[தலைமகள் தோழிக்கு அறத்தோடு நின்று வெறிவிலக்க வேண்டும் உள்ளத்தளாய்ச் சொல்லியது.]

(பத.) யாய் - நமது அன்னையாகிய செவிலி, வெறி - வாசனை, கமழ் - மணக்கின்ற, வெற்பன் - மலைநாட்டுத் தலைவன், என் - எனது, மெய் நீர்மை - உடலின் இயல்பாந்தன்மையை, கொண்டது - (களவுப்புணர்ச்சியால்) பற்றிக்கொண்டதாகிய நிலையினை,

அறியாள் - தெரியாதவளாய், அன்னோ - ஐயோ, அணங்கு - தெய்வமானது, அணங்கிற்று - என்னைத் துன்புறுத்தியது, என்று - என நினைத்து, வேலன் - வேலாயுதத்தைக் கையிற் கொண்டு மருளாடுபவனாகிய பூசாரியை, தரீஇ - வரவழைத்து, மறி ஈர்த்து - ஆட்டுக் குட்டியினைப் பலி கொடுத்து, உதிரம் - அதனது குருதியை, தூய் - நாற்புறமுந்தெளித்து, வெறி ஒடு - முருகனுக்குப் பூசையிடுதலாகிய வெறியாடுதலில் ஈடுபட்டு, அலம்வரும் - வருந்தாநிற்கின்றாள். (நீ அதனைத் தடுத்து, உண்மையைச் செவிலிக்கு உணர்த்துவாயாக, என்று தலைவி தோழியினிடம் கூறினாள்.)

(ப-ரை.) விரைகமழாநின்ற வெற்பன் எனது மெய்யின்கண் உள்ள நீர்மையைக்கொண்டது அறியாளாய், அந்தோ! தெய்வம் என்னை வருத்திற்று என்று வேலனைத் தந்து மறியை யறுத்து உதிரத்தைத் தூவி வெறியோடே வருந்தாநின்றாள் அன்னை.

(விரி.) ஆய் - தாய். ஆய் எனற்பாலது, 'யாய்,' என மருவியது. அறியாள் - முற்றெச்சம். அன்னோ - இரக்கக் குறிப்பிடைச் சொல். மற்று - அசைநிலை. தரீஇ - சொல்லிசை யளபெடை. வெறியோடு - உருபுமயக்கம். செவிலி, தலைவிக்கு வளர்ப்புத் தாயாகவும், பெற்ற தாய்க்குத் தோழியாகவும், தன் தோழிக்குப் பெற்ற தாயாகவும், அமைவது மரபாகலான், 'யாய்,' எனப்பட்டாள். அறத்தொடு நிற்றல் - தவறுதலான கருத்தொடு காரியங்களை நடத்த விடாமல் உண்மையினை எடுத்துக் கூறி விடுவது. வெறி விலக்கல் - முருகனுக்குப் பூசை யிடுதல் தேவையில்லாத தொன்றெனத் தோழி முதலியோர் உண்மை கூறித் தடுத்தல். (உம)

குறிஞ்சி முற்றும்.

## மூன்ருவது—மருதம்.

கொண்டுழிப் பண்டம் விலையொரீஇக் கொற்சேரி
நுண்டுளைத் துன்னூசி விற்பாரி—னொன்ருனும்
வேறல்லை பாண! வியலூரன் வாய்மொழியைத்
தேற வெமக்குரைப்பாய் நீ.

[பாணற்குத் தலைமகள் வாயின் மறுத்தது.]

(பத.) பாண - பாணனே! வியல் ஊரன் - பெரிய மருதநிலத்தூர்த் தலைவன், வாய் மொழியை - சொல்லி அனுப்பிய மொழிகளை, தேற - தெளிவாக, எமக்கு - எங்களுக்கு, உரைப்பாய் நீ - உரைக்கின்ற நீ, பண்டம் - பொருளை, கொண்டு உழி - கொள் முதல் செய்தவிடத்து, விலை ஒரீஇ - ஏற்பட்ட விலையை வேறுபடுத்து மிகுத்தி, கொல் சேரி - கொல்லர்கள் தெருவின்கண், நுண் துளை - நுட்பமான துளையினையுடைய, துன் ஊசி - ஆடை தைக்கும் ஊசியினை, விற்பாரின் - விற்கின்ற வணிகரைக் காட்டிலும், ஒன்ருனும் - ஒரு விதத்திலும், வேறு அல்லை - வேறுபாடு கொண்டுள்ளாயல்லை. (என்று தலைவி பாணனிடத்திற் கூறினுள்.)

(ப-ரை.) பண்டங் கொண்ட விலையை வேறுபடுத்துக் கொற்சேரியின்கண் நுண்ணிய துளையையுடைய ஊசியை விற்றுத் திரிவாரின் யாதானும் வேறல்ல; பாண! வியலூரன் வாய்மொழியைத் தெளிய எமக்கு உரைக்கின்ற நீ.

(விரி.) பாணன் - யாழ்கொண்டு பாட்டுப் பாடித் தலைவனை மகிழ்விக்கும் தலைவனின் ஏவலன். வாயில் - தூது. மருதம் - ஊடுதலும், ஊடுதனிமித்தமுமாகிய ஒழுக்கம். கொல்லர் தெருவில்

ஊசி விற்பதுபோல், என்ற பழமொழி இங்குக் கையாளப்பட்டுளது. துன்னல் - தைத்தல். (உக)

போதார்வண் டூதும் புனல்வய லூரற்குத்
தூதாய்த் திரிதரும் பாண்மகனே!—நீதா
னறிவயர்ந் தெம்மில்லு ளென்செய்ய வந்தாய்
நெறியதுகா ணெங்கைய ரிற்கு.

[இதுவு மது.]

(பத.) போது - மலர்களில், ஆர் - மொய்க்கின்ற, வண்டு - வண்டுகள், ஊதும் - ரீங்காரஞ் செய்கின்ற, புனல் வயல் - நீர்வளமிக்க நன்செய் நிலங்களையுடைய, ஊரற்கு - மருதநிலத்தூர்த் தலைவனுக்கு, தூது ஆய் - தூதுவனாக, திரிதரும் - அலைகின்ற, பாண்மகனே - பாணனே! நீதான் - நீ, அறிவு - அறிவானது, அயர்ந்து - கெட்டுப் போய், எம் இல்லுள் - எங்களுடைய மனைக்கு, என் செய்ய வந்தாய்-எதற்காக வந்தாய், எங்கையர்-எமது தங்கைமாராகிய (தலைவனால் விரும்பப்பட்ட) மங்கைமாரினது, இற்கு - மனைக்கு, நெறி - வழி, அது காண் - அது என்று தெரிந்து அங்குச் செல்வாயாக. (என்று தலைவி பாணனிடங் கூறினாள்.)

(ப-ரை.) மலர்களை நுகராநின்ற வண்டுகள் ஊதும் புனல் வயலூரற்குத் தூதாய் உழல்கின்ற பாண் மகனே! நீதான் அறிவு கலங்கி எங்கள் மனையுள் என்செய்ய வந்தாய்? எங்கையர் மனைக்கு வழி அதுகாண்.

(விரி.) தான் - அசைநிலை. எங்கையர் - எமது தங்கையர். தலைவி, தன் தலைவனின் விருப்பிற்குரிய மங்கையர் தன் உடன் பிறப்பினராவர் என்ற முறை பற்றி, 'எங்கையர்,' என்றாள். இம் முறைமை இக்காலத்து சக்களத்தி (=சகக்களத்தி) என வழக்கிலுளது. காண் - முன்னிலை யசை யெனினுமாம். (உஉ)

யாண ரகல்வய லூர னருளுதல்
பாண ! பரிந்துரைக்க வேண்டுமோ—மாண
வறிவ தறியு மறிவினார் கேண்மை
நெறியே யுரையாதோ மற்று.

[இதுவு மது.]

(பத.) பாண - பாணனே! யாணர் - புதுவருவாயினையுடைய, அகல்-விசாலமான, வயல்ஊரன்-மருதநிலத்தூர்த் தலைவன், அருளுதல் - எம்மிடத்து மிகுந்த அன்புடையனா யிருத்தலை, பரிந்து - மிகுந்த உரிமை பாராட்டி, உரைக்கவேண்டுமோ - நீ சொல்ல வேண்டிய இன்றியமையா நிலை ஏதேனுமுண்டோ, (யாதுமின்று,) மாண - நன்றாக, அறிவது - தெரியவேண்டியதனை, அறியும் - தெரிந்துகொண்டிருக்கும், அறிவினார் - அறிவாளிகள், கேண்மை - கைக்கொள்ளும் நட்பினது, நெறியே - போக்கே, உரையாதோ - அவர்தம் மிகுந்த அன்புடைமையினைத் தெரிவிக்காதோ? (நன்கு தெரிவிக்கும், என்று தலைவி பாணனிடம் கூறினாள்.)

(ப-ரை.) வளமையுடைய அகல்வயலூரன் எமக்கு அருளுடையன் என்பதனைப் பாணனே! நீ காதலித்து உரைக்க வேண்டுமோ? மாட்சிப்பட அறியக் கடவதனை அறியும் அறிவினையுடையார் செய்யும் நட்பு நெறியை அவர் அருளுடைமையே உரையாதோ?

(விரி.) மற்று - அசைநிலை. ஓகாரங்கள் எதிர்மறை வினாப் பொருளன.

(உரு)

கோலச் சிறுகுருகின் குத்தஞ்சி யிர்வாளை
நீலத்துப் புக்கொளிக்கு மூரற்கு—மேலெலாஞ்
சார்தற்குச் சந்தனச்சாந் தாயினே மிப்பருவங்
காரத்தின் வெய்யவென் றேன்.

[இதுவு மது.]

(பத.) (பாணனே!) கோலம் - அழகிய, சிறு குருகின் - சிறிய நாரையினது, குத்து அஞ்சி - கொத்துதலுக்குப் பயந்து, ஈர்வாளை - குளிர்ந்த வாளை மீனானது, நீலத்து - நீலோற்பல மலர்க் கூட்டத்தினிடத்தே, புக்கு - புகுந்து, ஒளிக்கும் - மறைந்து கொள்ளும், ஊரற்கு - மருத நிலத்தூர்த் தலைவனுக்கு, மேல் எலாம் - முன்பெல்லாம், சார்தற்கு - புணர்தற்கண், சந்தனச் சாந்து - சந்தனக் குழம்பினைப்போன்று, ஆயினேம் - யாம் இருந்தோம், இப் பருவம் - இவ் வேளை, என் தோள் - எனது தோள்கள், காரத்தின் - புண்ணிற்கு இடும் காரத்தினைப் போல, வெய்ய - கொடியவாயின. (என்று தலைவி பாணனிடம் பகர்ந்தாள்.)

(ப-ரை.) அழகிய சிறுகுருகின் குத்தினை யஞ்சிக் குளிர்ந்த வாளை நீல மலரின்கட் புக்கு ஒளிக்கும் ஊரினையுடையாற்குப் பண்டெல்லாம் புணர்தற்குச் சந்தனக் குழம்பாயினேம்; இக்காலம் புண்ணிற்கு இடும் காரம்போல வெய்யவாம் எம்முடைய தோள்.

(விரி.) பழைய வுரையின் கருத்தினை மேற்கொண்டு, "பாணனே!" என்ற விளி வரவழைக்கப் பட்டது. ஆயினும், மேல், "அழலவிழ்," எனத் தொடங்குஞ் செய்யுள்போல், இதுவும் விளியொன்று மின்றி வருதலின், அதற்குக் கூறிய கருத்தினையே இதற்குங் காணல் பொருந்தும். இங்கு மருத நிலத்தின் நீர்வளனைச் சிறப்பித்துக் கூறிய நேர்மை நெஞ்சகத்திருத்த வேண்டியவொன்றாம். (உச).

அழலவிழ் தாமரை யாய்வய லூரன்
விழைதகு மார்ப முறுநோய்—விழையிற்
குழலுங் குடுமியென் பாலகன் கூறு
மழலைவாய்க் கட்டுரை யால்.

[வாயில் வேண்டிச் சென்றார்க்குத் தலைமகள் வாயின் மறுத்தது.]

(பத.) அழல் - தழலினைப்போல, அவிழ் - மலரும்படியான, தாமரை - செந்தாமரை மலர்கள் நிரம்பிய, ஆய் - மருத (நிலவளங் களை) ஆராய்ந்தறிதற்கிடமான, வயல் ஊரன் - நன்செய் நிலங்கள் மிக்க ஊர்க்குத் தலைவனது, விழைதகு - கண்டாரால் விரும்பப்படும், மார்பம் - மார்பானது, குழலும் - (மென்மையினாலே) குழன்று விழும் படியான, குடுமி - சிகையினையுடைய, என் பாலகன் - என் சேய், கூறும் - பேசும்படியான, மழலைவாய் - குதலைவாயினின்றும் வெளிப்படும், கட்டுரையால் - சிறு மொழிகளால், விழையின் - என்னை விரும்பித் தலைவன் புணருமாயின், நோய் உறும் - துன் புறும். (என்று தலைவி கூறினாள்.)

(ப-ரை.) அழல் போல அவிழுந் தாமரைகளையுடைய ஆய் வயலூரனுடைய கண்டார் விழையப்பட்ட மார்பம் துன்புறுகிற்கும்; குழலும் குடுமி யென் பாலகன் கூறும் மழலைவாய்க் கட்டுரையான் எம்மை விரும்பிப் புணருமாயின்.

(விரி.) மார்பம், கட்டுரையால், விழையின், நோய் உறும், எனக் கொண்டு கூட்டுக. நினது மகன் கூறும் மழலைச் சொற் களால் தலைவன் மகிழ்ந்து நின்னைக் கூட விரும்புகின்றனன், என்ற வாயில்கட்கு விடையாகத் தலைவி கூறியதாகு மிச் செய்யுள். வாயில் வேண்டல் - தூதாகச் செல்ல விரும்பல். (உ௫)

பெய்வளைக் கையாய்! பெருநகை யாகின்றே
செய்வய லூரன் வதுவை விழவியம்பக்
கைபுனை தேரேறிச் செல்வானைச் சென்றிவ
னெய்தி யிடருற்ற வாறு.

[புதல்வனை முனிந்து தலைமகன் மறுத்தாளைப் போலத் தோழிக்கு வாயில் நேர்ந்தது.]

(பத.) பெய் - அணியப் பெற்ற, வளைக்கையாய் - வளையல் களைக் கொண்ட கைகளையுடைய தோழியே! செய் - திருத்தப்

பெற்ற, வயல் ஊரன் - மருத நிலத்து நன்செய்கள் சூழ்ந்த ஊர்க்குத் தலைவன், வதுவை விழவு - பரத்தையர் புதுமண விழாக் கொண் டாடும் பொருட்டு, இயம்ப - முழவினை ஒலிக்க, (அதனைக் கேட்டு,) கைபுனை - அணி செய்யப்பட்ட, தேர் ஏறி - தேரின்மீது அமர்ந்து, (பரத்தையர்பாற் செல்ல,) செல்வானை - அங்ஙனஞ் செல்கின்ற தலைவனை, இவன் - இந்த எனது புதல்வன், சென்று - எதிர் சென்று, எய்தி - காணுதலால், இடர் உற்ற ஆறு-தலைவன் பரத்தை யரின் புதுமணம் பொருந்தப் பெறாது துன்புற்ற நிலை, பெருநகை யாகின்று - எனக்கு மிகுந்த நகைப்பினை யுண்டாக்குகின்றது. (என்று தலைவி தோழிக்குக் கூறித் தலைவனை யேற்றுக் கொள்ள லாயினள்.)

(ப-ரை.) பெய்வளையினையுடைய கையாய்! எனக்குப் பெரிய நகையாகாநின்றது; செய்த வயல்களையுடைய ஊரன், பரத்தையர் புதுமணங்களின் உள்ள முழவு ஒலித் தலாற் கைபுனை தேரேறிச் செல்வானை இப்புதல்வன் கண்டு சென்று எய்த, அவ்வூரன் புதுமணம் புணரப் பெறாது இடருற்றவாறு.

(விரி.) எய்தி - எய்த: எச்சத்திரிபு. பெருநகையாகின்று, என்பது வெளிக்கு எள்ளி மறுத்தல்போற் காணப்படினும் உள்ளூ றும் விருப்பினைக் குறிப்பாகத் தெரிவித்தலால், 'மறுத்தாளைப் போல வாயினேர்ந்தது,' என்றார். முனிதல் - சினத்தல். (உ௯)

தண்வய லூரற் புலக்குந் தகையமோ
நுண்ணறல் போல நுணங்கிய வைங்கூந்தல்
வெண்மரற் போல நிறந்திரிந்து வேறாய
வண்ண முடையேமற் றியாம்.

[வாயில் வேண்டிச் சென்றார்க்குத் தலைமகள் வாயின் மறுத்தது.]

(பத.) யாம் - நாம், நுண் அறல் - நுட்பமான கருமணலினை, போல - போன்று, நுணங்கிய - நுட்பமாகிய, ஐங் கூந்தல் - எமது ஐவகைப்பட்ட கூந்தலானது, வெண் மரல் போல - வெள்ளை மரலைப் போன்று, நிறம் திரிந்து - நிறம் வேறு படுதலால், வேறு ஆய - மாறுபட்ட, வண்ணம் உடையேம் - தன்மையைப் பெற்றிருக்கின்றோம், (ஆதலால்,) தண்வயல் - குளிர்ந்த நன்செய் நிலங்கள் சூழ்ந்த, ஊரன் - மருதநிலத்தூர்த் தலைவனோடு, புலக்கும் - ஊடுதலைச் செய்யும்படியான, தகையமோ - தகுதியினைப் பெற்றுளோமோ? (எனத் தலைவி வாயிலாக வந்தார்மாட்டு வினவினள்.)

(ப-ரை.) தண்வயலூரனை ஊடுந்தகையமோ? நுண்ணிய அறல் மணற் போலும் நுணுகிய ஐவகைப்பட்ட கூந்தல் வெள்ளை மரற்போலத் தன்னிறந்திரிந்து வேறுபட்ட நிறத்தை யுடையேம் ஆதலான்.

(விரி.) கூந்தல் ஐவகையாமாறு:—குழல், கொண்டை, சுருள், பனிச்சை, முடி. மற்று - அசை நிலை. ஓகாரம் - எதிர்மறை வினைப் பொருள். இச் செய்யுளின் கருத்தாகிய, 'வாயின் மறுத்தற்கும்,' 'ஊடுந்தகைய மன்று,' என்ற பொருட் போக்கிற்கும் மாறுபாடு காணுதலின், "தண்வயலூரற் கலக்குந் தகையமோ?" என்று பாடத்தினை மாற்றி யோதுவது நன்றெனத் தோன்றுகின்றது. தலைவன் பிரிவால் தலைவி வாடி மாறுபட்டாளாதலின், "கூந்தல், திரிந்து, வேறாய வண்ண முடையேம்," எனக் கூறலுற்றாளென்க.

(உ௭)

ஒல்லென் றொலிக்கு மொலிபுன லூரற்கு [லென்று
வல்லென்ற தென்னெஞ்சம் வாட்கண்ணாய்!—நில்
தேக்கற்றாங் கென்மகன் றனிற்ப வென்னானு
நோக்கான்றே றூர்ந்தது கண்டு.

[தலைமகள் தோழிக்கு வாயின் மறுத்தது.]

(பத.) வாள் கண்ணாய் - வாள் போன்ற கண்ணையுடைய தோழியே! (முன்னொருகால்) என் மகன் - என்னுடைய புதல்வன், ஆங்கு - தெருவிலே (தேர்மீது சென்ற தன் தந்தையாகிய தலைவனைக் கண்டு,) ஏக்கற்று - விரும்பி, நிற்ப - பார்த்துக் கொண்டு நிற்க, (அந்நிலையினைக் கண்டும்,) நில் என்றது-(பாகனைத் தேரோட்டுதலினின்றும் சற்று) நிற்பாயாக என்று சொல்லாதே, என்றோனும்-சிறிதும், நோக்கான்-(என் புதல்வனைத் திரும்பியும்) பாராதே, தேர் ஊர்ந்தது-தேரினைச் செலுத்திப் பரத்தையர் மனைக்குப் போயதனை, கண்டு-(யான்) அறிந்ததனால், என் நெஞ்சம்-என் மனம், ஒல் என்று-ஒல் என்ற ஒலியினைக் கொண்டு, ஒலிக்கும் - ஆரவாரிக்கும், ஒலி புனல் - ஒலி மிக்க நீர்வளம் பொருந்திய, ஊரற்கு-மருத நிலத்தூர்த் தலைவன்மாட்டு, வல் என்றது-(இரக்கங் காட்டாத) வன்கண்மையைக் கொள்ளலாயிற்று. (என்று தலைவி தோழியினிடங் கூறினள்.)

(ப-ரை.) ஒலி புனலையுடைத்தாய்ப் பிறவோசையானும் ஒல்லென்றொலிக்கும் ஊரற்கு என்னெஞ்சம் நெகிழாது வலிதாயிற்று; வாட் கண்ணாய்! புதல்வன் தன்னை விரும்பி நிற்கக் கண்டு வைத்துப் பாகனை நில்லென்று சொல்லாதே என் புதல்வனையும் பின் பாராதே தேரூர்ந்து பரத்தையர் மனைக்குச் சென்றது கண்டு.

(விரி.) நோக்கான் - முற்றெச்சம். கண்டு - காரணப் பொருளில் வந்த வினையெச்சம். ஊர்ந்தது கண்டு, என்னெஞ்சம் வல்லென்றது, என முடிக்க. தான் - அசைநிலை. (உஅ)

ஒல்லென் றொலிபுன லூரன் வியன்மார்பம்
புல்லேன்யா னென்பேன் புனையிழையாய்!—புல்லே
னெனக்கோர் குறிப்பு முடையனோ வூரன்
றனக்கேவல் செய்தொழுகு வேன்.

[ஆற்றாமையே வாயிலாகப் புக்க தலைமகன் புணர்ந்து நீங்கிய பின்பு சென்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது.]

(பத.) புனை இழையாய்-அழகிய அணிகலன்களைப் பூண்டுள்ள தோழியே! ஒல் என் - ஒல் என்று ஒலிக்கும்படியான, ஒலி புனல் ஊரன் - ஆரவாரமிக்க நீர் சூழ்ந்த மருத நிலத்தூர்த் தலைவனது, வியல் மார்பம் - அகன்ற மார்பினை, யான் - நான், புல்லேன் என்பேன் - (அவனைக் காணுவதற்கு முன்) தழுவேன் என்று நினைத்திருப்பேன், (ஆயினும் யான், ) ஊரன் தனக்கு - அவ்வூரனாகிய தலைவனுக்கு, ஏவல் செய்து - ஊழியம் புரிந்து, ஒழுகுவேன்-நடக்கக் கூடிய தன்மை யுடையேனாதலால், புல்லேன் - (அவனைக் கண்ட பின்பு) தழுவேனாதற்கு, எனக்கு - எனக்கெனப் பெற்ற, ஓர் குறிப்பும் - ஒரு கருமத்தையும், உடையனோ - பெற்றுள்ளேனோ? (அவனைக் காணுங்காலே காதல் வலைப்பட்டுச் செயலிழப்பேன், என்று தோழியிடந் தலைவி கூறினாள்.)

(ப-ரை.) ஒலி புனலை யுடைத்தாய்ப் பிறவோசையான் ஒல்லென்னும் ஊரனுடைய அகன்ற மார்பத்தினை யான் முயங்கேன் என்று சொல்லி அவனைக் காணுதமுன் நினைத்திருப்பேன்; புனையிழையாய்! அவனைக் கண்டபின் முயங்கேனாதற்கு எனக்கெனப் பெற்ற கருமம் உடையேனோ? ஊரன்றனக்கு ஏவல் செய்து ஒழுகுவேன் ஆதலான்.

(விரி.) சென்ற-தலைவி பக்கலிற் போன. ஆற்றாமை - காதன் மிகுதி. (௨௪)

குளிரும் பருவத்தே யாயினுந் தென்றல்
வளியெறியின் மெய்யிற் கினிதாம்—ஒளியிழாய்!
ஊடி யிருப்பினு மூர னறுமேனி
கூட லினிதா மெனக்கு.

[இதுவு மது.]

(பத.) ஒளி இழாய் - அழகுமிக்க அணிகலன்களை யணிந்துள்ள தோழியே! குளிரும் பருவத்தே ஆயினும் - குளிர்காற்று

வீசும் மாரிகாலமானாலும், தென்றல் வளி - தென்றற் காற்று, எறியின் - வீசினால், மெய்யிற்கு - நமது உடலுக்கு, இனிதாம் - இன்பமாகும், (அதுபோல,) ஊடி இருப்பினும் - நான் தலைவனோடு மாறுபட்டிருந்தாலும், ஊரன் - அம்மருதநிலத்தூர்த் தலைவனது, நறுமேனி - நல்லவடிவத்துடன், கூடல் - புணர்தலானது, எனக்கு இனிதாம் - எனக்கு இன்பத்தைத் தாராநின்றது. (என்று தலைவி தோழியினிடங் கூறினாள்.)

(ப - ரை.) குளிருங் காலத்தே யாயினும் தென்றற் காற்று எறியின் உடம்பிற்கு இனிதாம்; அதுபோல, ஒளியிழாய்! யான் அவனைப் புலந்திருந்தேன் ஆயினும், அவ்வூரன் அழகிய நாற்றத்தினையுடைய மேனியைக் கூடுதல் இனிதாம் எனக்கு.

(விரி.) குளிரும் பருவம் - கூதிர்காலம். தென்றல்வளி - தெற்குப்புறத்தே யிருந்து வீசுங்காற்று. (௩0)

மருதம் முற்றும்.

## நான்காவது—பாலை.

உதிரந் துவரிய வேங்கை யுகிர்போ
லெதிரி முருக்கரும்ப வீர்ந்தண்கார் நீங்க-எதிருநர்க்
கின்பம் பயந்த விளவேனில் காண்டொறுந்
துன்பங் கலந்தழியு நெஞ்சு.

[பருவங் கண்டழிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது.]

(பத.) உதிரம் - குருதியானது, துவரிய - சார்ந்து பிடித்த, வேங்கை - பெரும்புலியின், உகிர்போல் - நகங்களைப் போல, எதிரி - பருவத்தோடு பொருந்தி, முருக்கு - முருக்கமரங்கள், அரும்ப - செவ்விய மொட்டுகளை வெளிவிட, ஈர்ம் தண் கார் - மிகவும் குளிர்ந்த மேகங்கள், நீங்க - விலகிவிட, எதிருநர்க்கு - (தலைவனும் தலைவியுமாய்) எதிர்ப்பட்டுக் கூடினோர்க்கு, இன்பம் பயந்த - நன்மையைச் செய்த, இளவேனில் - சித்திரையும் வைகாசியுமாகிய இளவேனிற் காலத்தை, காண்தொறும் - என் கண்கள் காணும் வேளைகளிலெல்லாம், நெஞ்சு - என் மனம், துன்பம் கலந்து - துன்பப்பட்டு, அழியும் - வருந்தாநிற்கும். (என்று தலைவி தோழியிடங் கூறினள்.)

(ப-ரை.) உதிரத்தை யளைந்து துவரிய புலியினது உகிர்போலப் பருவத்தை யெதிர்ந்து முருக்குக்கள் அரும்ப, ஈர்ந்தண்முகில் நீங்க, காதலர் தம்முட் டலைப்பட்டார்க்கு இன்பத்தைக் கொடுத்த இளவேனிலைக் காணுந்தொறும் துன்பத்தோடு புணர்ந்து அழியாநின்றது என்னெஞ்சு.

(விரி.) அரும்ப, நீங்க, பயந்த இளவேனில், எனக் கூட்டுக. இளவேனில் காண்டொறும் நெஞ்சு அழியும், என முடிக்க. பருவம் இளவேனிற் பருவம். பாலை - பிரிதலும், பிரிதனிமித்தமுமாகிய ஒழுக்கம்.

(௩௧)

விலங்கல் விளங்கிழாய்! செல்வாரோ வல்ல
ரழற்பட் டசைந்த பிடியை — யெழிற்களிறு
கற்சுனைச் சேற்றிடைச் சின்னீரைக் கையாற்கொண்
டுச்சி யொழுக்குஞ் சுரம்.

[தலைமகனது பிரிவுக்குறிப்பறிந் தாற்றளாய தலைமகளைத் தோழி ஆற்றுவித்தது.]

(பத.) விளங்கு இழாய் - விளக்கமான அணிகலன்களை யணிந்த தலைவியே! அழல் பட்டு - காட்டுத் தீயினிடத்திலே அகப்பட்டு, அசைந்த - வருந்திய, பிடியை - பெண்யானையை, எழில் களிறு - அதனது அழகிய ஆண்யானையானது, கல் சுனை - மலைச் சுனையினது, சேறு இடை - சேற்றோடு கூடிய, சில் நீரை - சிறிதாகிய நீரினை, கையால் கொண்டு - தன் கையினாலே வாரி யெடுத்து, உச்சி - (அப்பெண் யானையினது) தலை உச்சியிலே, ஒழுக்கும் - பெய்தற்கிடமான, சுரம் - பாலை நிலவழியிலே, செல்வாரோ - (தலைவர்) செல்ல வல்லரோ, அல்லர் - செல்லமாட்டார், விலங்கல் - (ஆகலின், அவர் செலவினைத்) தடுக்காதிருப்பாயாக.

(ப-ரை.) அவர் செலவினை விலங்கா தொழிக; விளங்கிய இழையினை யுடையாய்! செல்ல மாட்டார்; காட்டழற் பட்டு வருந்திய பிடியினை அதனது எழிற்களிறு கற்சுனைச் சேற்றிடையுள்ள சின்னீரைத் தன் கையாலே கொண்டு அப் பிடியின் உச்சியின்கண் ஒழுக்குஞ் சுரத்தை.

(விரி.) ஆற்றுதல் - பொறுத்தல். சுரம் - பாலைநிலவழி. களிறு சின்னீரைக் கொண்டு, அசைந்த பிடியின் உச்சி யொழுக்குஞ் சுரம் செல்வாரோ, அல்லர், விலங்கல், என முடிக்க. (௩உ)

பாவையும் பந்தும் பவளவாய்ப் பைங்கிளியு
மாயமு மொன்று மிவைநினையாள்—பால்போலு

மாய்ந்த மொழியினுள் செல்லுங்கொல் காதலன்பின்
காய்ந்து கதிர்தெறூஉங் காடு.

[மகட் போக்கிய நற்றாய் கவன்று சொல்லியது.]

(பத.) பால் போலும் - பாலினைப் போன்ற, ஆய்ந்த மொழியினுள் - ஆராய்ந்தமைந்த மொழிகளையுடைய என் மகள், காதலன் பின் - தன் தலைவன் பின்னாலே, கதிர் - ஞாயிறு, காய்ந்து - வெப்பத்தை மிகுத்து, தெறூஉம் - சுடுகின்ற, காடு - காட்டு வழியிலே, பாவையும் - விளையாட்டுக்குரிய பொம்மையும், பந்தும் - பந்தும், பவளவாய் - பவளம் போன்ற வாயினைக் கொண்ட, பைங்கிளியும் - பச்சைக் கிளியும், ஆயமும் - தோழிகள் கூட்டமும், இவை - ஆகிய இவைகளில், ஒன்றும் - ஒன்றினையுங் கூட, நினையாள் - நினைக்காதவளாய், செல்லும் கொல் - செல்வாளோ! (என்று நற்றாய் தனக்குள்ளே கவலைப்பட்டவளாய்ச் சொல்லிக் கொண்டாள்.)

(ப-ரை.) பாவையையும், பந்தையும், பவளம்போன்ற வாயையுடைய பசுங்கிளியையும், ஆயத்தையும் இவற்றை ஒன்றும் நினையாளாய், பால்போலும் சின்மொழியை யுடையாள், தன் காதலன் பின் செல்லுங் கொல்லோ! கனன்று பகலோன் சுடுகின்ற காட்டினை.

(விரி.) நற்றாய் - தலைவியின் பெற்ற தாய். கவலல் - வருந்தல். கொல் - ஐயப் பொருள் கொண்ட விடைச் சொல். மொழியினுள் காதலன் பின், காட்டிலே, நினையாள், செல்லுங் கொல்! என முடிக்க. நற்றாய் மகளின்முதுக்குறைவினை அறியாளாய் இங்ஙனங் கூறினளென்க. தெறூஉம்-இன்னிசை யளபெடை.(௩௩)

கோட்டமை வல்விற் கொலைபிரியா வன்கண்ண
ராட்டிவிட் டாறலைக்கு மத்தம் பலநீந்தி

வேட்ட முனைவயிற் சேறிரோ வைய! நீர்
வாட்டடங்கண் மாதரை நீத்து.

[தோழி தலைமகனைச் செலவழுங்கியது.]

(பத.) ஐய-தலைவனே! நீர்-தாம், கோடு - வளைகின்ற, அமை-மூங்கிலாலாகிய, வல் - வலிமையான, வில் - வில்லினாலே, கொலை-கொல்லுதலை, பிரியா - விட்டுநீங்காத, வன்கண்ணார் - வன்கண்மை மிக்க மறவர்கள், ஆட்டிவிட்டு - கொள்ளையடித்து ஓட்டி, ஆறு - வழியின்கண், அலைக்கும் - மக்களை வருத்தும்படியான, அத்தம் - கடத்தற்கரியவழிகள், பல-பலவற்றையும், நீந்தி-கடந்து, வாள்-வாளினைப் போன்ற, தடம் கண் - பெரிய கண்களையுடைய, மாதரை-தலைவியினை, நீத்து-விட்டுப்பிரிந்து, வேட்டம்-வேட்டையாடுதற்குரிய, முனைவயில் - (கொடுமை மிக்க) காட்டினிடத்திலே, சேறிரோ - செல்லமாட்டுவிரோ? (என்று தோழி தலைவனை வினவினள்.)

(ப-ரை.) கோட்டுகின்ற மூங்கில்விற்கொலையை இடையறாத வன்கண்மையையுடையார் ஆறலைத்து ஓட்டி வழியின் கண்நின்று அலைக்குங் கடறுகள் பலவற்றையு நீந்தி, வேட்டினை யுடைய வெம்முனையின்கட் செல்வீரோ? ஐய! நீர் வாட்டடங்கண் மாதரைத் துறந்து.

(விரி.) செலவு அழுங்கல் - செல்லுதலினின்றும் தவிர்ந்து நின்று வருந்தல். ஆட்டிவிடல் - ஓட்டல்; திசைச்சொல்: மலைநாட்டது. நீர் மாதரை நீத்து, பலநீந்தி, முனைவயிற் சேறிரோ? என முடிக்க. (௩௪)

கொடுவி லெயினர்தங் கொல்படையால் வீழ்ந்த
தடிநிண மாந்திய பேஎய் - நடுகல்
விரிநிழற் கண்படுக்கும் வெங்கான மென்பர்
பொருள்புரிந்தார் போய சுரம்.

[தலைமகன் பொருள்வயிற் பிரிந்தகாலத்து ஆற்றளெனக் கவன்ற தோழிக்குத் தலைமகள் ஆற்றுவலென்பது பட மொழிந்தது.]

(பத.) பொருள் புரிந்தார் - பொருள் தேடுதலை விரும்பியவராகிய தலைவர், போய - சென்ற, சுரம் - பாலைநிலத்து அருவழியானது, கொடு - வளைந்த, வில் - வில்லினையுடைய, எயினர் - வேட்டுவர், தம் - தமது, கொல்படையான் - கொல்லுதற்குரிய படையினாலே, வீழ்ந்த - மடிந்த, தடி - தசையையும், நிணம் - கொழுப்பையும், மாந்திய - தின்ற, பேய் - பேய்கள், நடுகல் - (போரிலே மடிந்தாரின் பெயர் வரைந்து) நடப்பட்ட கல்லினாலே, விரி - தோன்றுகின்ற, நிழல் - அரு நிழலில், கண்படுக்கும் - உறங்குதற்குரிய, வெம் கானம் - கொடிய காட்டின் கண்ணது, என்பர் - என்று சொல்வர். (என்று தலைவி தோழியினிடங் கூறினாள்.)

(ப-ரை.) கோட்டிய வில்லினையுடைய வேட்டுவர் தங் கொல்படையானே வீழ்ந்த தசையையும் நிணத்தையுந் தின்ற பேய்கள், போரின்கட் பட்டார் பெயர் பொறித்து நட்ட கல்லின் விரிநிழற்றுயிலும் வெய்ய காடென்று சொல்லுவர் ; தோழி! பொருள் விரும்பினார் போகிய கடறு.

(விரி.) பேஎய் - இசைநிறையளபெடை. ஆற்றாளென - தலைவி பொறுக்கமாட்டாள் என்று. ஆற்றுவல் - பொறுப்பேன். பொருள் புரிந்தார் போய சுரம் வெங்கான மென்பர், என முடிக்க. தலைவர் போய சுரம் வெங்கானம் ஆதலின், செல்லாது மீள்வர், என்பது தலைவி கருத்து. (௩௫)

கடிதோடும் வெண்டேரை நீராமென் றெண்ணிப்
பிடியோ டொருங்கோடித் தாள்பிணங்கி வீழும்
வெடியோடும் வெங்கானஞ் சேர்வார்கொ னல்லாய்!
தொடியோடி வீழத் துறந்து.

[பிரிவுணர்த்திய தோழிக்குத் தலைமகள்
உடன்படாது சொல்லியது.]

(பத.) நல்லாய் - நல்ல தோழியே! தொடி - (எனது கையி லணிந்துள்ள) வளையல், ஓடி - கழன்று சென்று, வீழ - விழும்படி, துறந்து - (என் காதலர் என்னைவிட்டு) நீங்கி, கடிது ஓடும் - விரைந்து செல்லும், வெண்தேரை - கானல் நீரை, நீர்ஆம் - தண்ணீராகும், என்று எண்ணி - என நினைத்து, பிடி ஓடு - (ஆண் யானைகள்) பெண்யானைகளுடனே, ஒருங்கு - ஒன்றாகச் சேர்ந்து, ஓடி - சென்று, தாள் - அடியானது, பிணங்கி - ஓய்ந்து, வீழும் - விழும்படியான, வெடி - வெடிப்பு, ஓடும் - மிகுந்த, வெம் கானம் - கொடிய காட்டு வழியிலே, சேர்வார் கொல் - சேர்வாரோ? (சேரமாட்டார், என்று தலைவி தோழியிடங் கூறினாள்.)

(ப-ரை.) விரைந்தோடும் பேய்த்தேரை நீராமென்று கருதிக் களிறுகள் பிடியோடே கூட ஓடித் தாள் ஓய்ந்து பிணங்கி வீழும் பிளவோடிய வெங்கானத்தைச் சென்று நங்காதலர் சேர்வார்கொல்லோ? நல்லாய்! நங் கையிற்றொடி யோடிவீழத் துறந்து.

(விரி.) உடன்படல் - மேற்கொளல். கொல் - வினாப்பொருள். பிரிவுணர்த்தல் - தலைவன் பிரிவினைத் தலைவிக்குத் தோழி தெரிவித்தல். பேய்த்தேர் - கானல்நீர். (௩௬)

தோழியர் சூழத் துறைமுன்றி லாடுங்கால்
வீழ்பவள் போலத் தளருங்கா—ளுழாது
கல்லத ரத்தத்தைக் காதலன் பின்போதல்
வல்லவோ மாதர் நடை.

[உடன்போய தலைமகட்கு நற்றாய் கவன்றுரைத்தது.]

(பத.) தோழியர் - பாங்கிமார்கள், சூழ-நாற்புறமுஞ் சூழும்படி, துறைமுன்றில் - முற்றமாகிய துறையினிடத்திலே, ஆடுங்கால் -

விளையாடும் பொழுதிலும், வீழ்பவள்போல - விழுந்துவிடுவாள் போன்று, தளரும் கால் - தளர்ச்சியுறும் கால்களையுடைய, மாதர் - காதலையுடைய என் மகளது, நடை - நடையானது, கல் அதர் - கற்கள் நிரம்பிய வழியாகிய, அத்தத்தை - அருஞ்சுரத்தில், காதலன் பின் - தன் தலைவன் பின்னாலே, தாழாது - ஓய்ந்து போகாமல், போதல் - செல்லுதலை, வல்லவோ - மாட்டுமோ? (என்று நற்றாய் கவன்று உரைத்தாள்.)

(ப-ரை.) தோழியர் சுற்ற முற்றத்திற்றுறையின் விளையாடும்பொழுதும் வீழ்பவளேபோலத் தளருங்கால்கள் ஓய்ந்து தாழாதே கல்வழியையுடைய அத்தத்துத் தன் கொழுநன்பின் போதலை வல்லவோ? காதலையுடையாள் நடை.

(விரி.) அத்தத்தை - உருபு மயக்கம். (௩௭)

சுனைவாய்ச் சிறுநீரை யெய்தாதென் றெண்ணிப்
பிணைமா னினிதுண்ண வேண்டிக்—கலைமாத்தன்
கள்ளத்தி னூச்சுஞ் சுரமென்பர் காதல
ருள்ளம் படர்ந்த நெறி.

[பிரிவின்கண் ஆற்றளாயின தலைமகளைத் தோழி ஆற்றுவித்தது.]

(பத.) காதலர் - நமது தலைவர், உள்ளம் - தமது மனத்திலே, படர்ந்த - விரும்பிச் சென்ற, நெறி - வழியானது, கலைமா - ஆண்மான், சுனைவாய் - ஆங்குள்ள சுனையினது, சிறு நீரை - சிறிதாகிய தண்ணீரை, எய்தாது - (பெண்மான்) குடிக்கப் போதாது, என்று எண்ணி - என நினைத்தும், தன் பிணைமான் - தன்னுடைய பெண்மான், இனிது - நன்றாக, உண்ண - குடிக்க, வேண்டி - விரும்பியும், கள்ளத்தின் - பொய்யாக, ஊச்சும் - (குடிப்பதுபோல்) உறிஞ்சும், சுரம் என்பர் - பாலை நிலவழியாகுமென்று சொல்லுவர். (ஆகலின், தலைவன் அச் செயலைக் கண்டு திரும்புவன் என்று தலைவியைத் தோழி ஆற்றுவித்தாள்.)

(ப-ரை.) சுனையின்கண் உள்ள சிறிய நீரைப் பிணைக்கு உண்ண நிரம்பாது என்று எண்ணிப் பிணைமான் இனிதாக உண்ண வேண்டி, கலையாகிய மாத் தனது கள்ளத்தினானே பொய்யே உறிஞ்சும் சுரமென்று சொல்லுவர்; நங்காதலர் தம் அகத்தினாற் போயின நெறி.

(விரி.) நெறி(யினை) ஊச்சும் சுரமென்பர், என முடிக்க. சிறு நீரை, கலைமா, எண்ணி, வேண்டி, ஊச்சும் சுரம், எனக்கொண்டு கூட்டுக. (கூஅ)

மடவைகா ணன்னெஞ்சே! மாண்பொருண்மாட் டோடப்
புடைபெயர் போழ்தத்து மாற்றாள்—படர்கூர்ந்து
விம்மி யுயிர்க்கும் விளங்கிழையா ளாற்றுமோ
நம்மிற் பிரிந்த விடத்து.

[தலைமகன் பொருள்வலித்த நெஞ்சிற்குச் சொல்லிச்
செலவழுங்கியது.]

(பத.) நல் நெஞ்சே - நல்ல மனமே! புடை பெயர் - (நாம் தழுவிச்) சிறிது விலகுகின்ற, போழ்தத்தும் - காலத்திலும், ஆற்றாள் - பொறுக்க மாட்டாதவளாய், படர் கூர்ந்து-துன்பம் மிகுந்து, விம்மி - எங்கி, உயிர்க்கும் - பெருமூச்சு விடும்படியான, விளங்கிழையாள் - ஒளிமிக்க அணிகலன்களை யணிந்த தலைவி, மாண் பொருள் மாட்டு - சிறந்த பொருள் தேடுதலின்கண், ஓட - நீ (நெஞ்சு) செல்ல, (அதனால்,) நம்மில் - நம்மினின்றும், பிரிந்த இடத்து - நீங்கியக்கால், ஆற்றுமோ - பொறுப்பாளோ? (பொறுக்காள்,) மடவைகாண்-நீ (அதனைச் சிறிதும்) அறிந்தாயல்லை. (என்று தலைவன் தன்னெஞ்சினோடு சொல்லிக் கொண்டான்.)

(ப-ரை.) அறியாய்காண், மிக்க நெஞ்சே! மாட்சிமைப் பட்ட பொருளின்மாட்டுச் சேறலான், முயங்கி நாம் புடை பெயருங் காலத்தும் ஆற்றமாட்டாளாய்த் துன்பமிக்கு

விம்மி உயிராநின்ற விளங்கிழையாள் ஆற்ற வல்லளோ? நம்மை நீங்கிய விடத்து.

(விரி.) விளங்கிழையாள் நெஞ்சு ஓட, நம்மிற் பிரிந்த விடத்து ஆற்றுமோ? என முடிக்க. ஆற்றாள், கூர்ந்து, விம்மி, உயிர்க்கும் விளங்கிழையாள் எனக் கூட்டுக. காண்-முன்னிலையசை. வலிந்தல் - இன்றியமையாதென நினைத்தல். அழுங்கல் - வருந்தல்.

இன்றல்க லீர்ம்படையு ளீர்ங்கோதை தோடுணையா
நன்கு வதிந்தனை நன்னெஞ்சே! நாளைநாங்
குன்றத ரத்த மிறந்து தமியமா
யென்கொலோ சேக்கு மிடம்.

[இதுவு மது.]

(பத.) நல் நெஞ்சே - நல்ல மனமே! இன்று - இற்றை நாளினது, அல்கல் - இரவிலே, ஈர்ம் - குளிர்ந்த, படையுள் - படுக்கையினிடத்தே, ஈர்ம் கோதை - குளிர்ந்த மாலையை யுடையாள், தோள் - தோள்கள், துணையா - உதவியாக இருக்க, நன்கு - நன்றாக, வதிந்தனை - தங்கி யுள்ளாய், நாளை - அடுத்த நாள், நாம் - யாம், குன்று - சிறு மலைகளுக்கூடே செல்லும், அதர் - அத்தமாகிய, அத்தம்-அருநெறிவழியே, தமியமாய்-துணையாதுமின்றி, இறந்து-சென்று, சேக்கும் இடம் - தங்குமிடம், என் கொலோ - யாதாகுமோ? (என்று தலைவன் தனக்குத்தானே வினவி வருந்தினான்.)

(ப-ரை.) இன்று இரவின்கட் குளிர்ந்த சேர்க்கையுள் ஈர்ங்கோதையை யுடையாள் தோள் நமக்குத் துணையாக மிகவுந் தங்கினை; நன்னெஞ்சே! இவ் வின்பத்தைவிட்டு நாளை யிரவின்கண் யாம் மலைவழியே யிறந்து தமியேமாய் எவ்விடந் தங்குமிடம்?

(விரி.) கொல், ஓ - அசைநிலைப் பொருள். அல்கல் - இராக்காலம்.

பாலை முற்றும். (சய)

## ஐந்தாவது—நெய்தல்.

தெண்கடற் சேர்ப்பன் பிரியப் புலம்படைந்
தொண்டடங்கண் டுஞ்சற்க வொள்ளிழாய்!—நண்படைந்த
சேவலுந் தன்னருகிற் சேக்குமா லென்கொலோ
பூந்தலை யன்றில் புலம்பு.

[அல்ல குறிப்பட்ட தலைமகற்குச் சொல்லுவாளாய்த் தோழி தலைமகட்குச் சொல்லியது.]

(பத.) ஒள் இழாய் - ஒளியினைக் கொண்ட அணிகலன்களை யணிந்த தலைவியே! தெள்கடல் - தெளிந்த கடலினை யடுத்த, சேர்ப்பன் - துறைமுகத்தையுடைய தலைவன், பிரிய - (அல்ல குறியால் இரவுக் குறியிடை நின்னை) நெருங்காது செல்ல (அதனால்,) புலம்பு அடைந்து - நீ தனிமை யடைந்ததனால், ஒள் தடம் கண் - நின் ஒளிகொண்ட பெரிய கண்கள், துஞ்சற்க - உறங்கா தொழியி னும் ஒழியட்டும், (ஆனால்,) நண்பு அடைந்த - காதல் மிகக் கொண் டுள்ள, சேவலும் - ஆண் அன்றிற் பறவையும், தன் அருகில் - தனக்குப் பக்கத்தே, சேக்கும் - தங்கி யிருக்கின்றது, (அப்படி யிருக்க,) பூந்தலை - சிவந்த பூவினைப்போன்ற சூட்டினைக்கொண்ட, அன்றில் - பெட்டை யன்றிற் பறவை, புலம்பு - வருந்துதல், என்கொலோ - என்ன காரணமோ? (என்று தோழி தலைமகளை வினவினள்.)

(ப-ரை.) தெண்கடற் சேர்ப்பன் பிரிதலாற் றனிமையை யடைந்து நின்னுடைய ஒள்ளியகண் துயிலாதொழிக; ஒள்ளிய இழைகளை யுடையாய்! நண்பினை அடைந்த சேவ லும் தன் னருகே உறையாநின்ற தாதலான், என்னை கொல்லோ? செம்பூப் போலுஞ் சூட்டினையுடைய பெடை யன்றில் புலம்புதல்.

(விரி.) தலைவன் இரவுக் குறியின்கண் வந்தவுடன் தன் வரவினைத் தலைவிக்கும் தோழிக்கும் தெரிவிப்பான் வேண்டிப் பூஞ்சோலைமரங்களில் கூடித் தங்கியிருக்கும் பறவைக் கூட்டங்களை யெழுப்பிவிட்டாவது, குளக்கரையிலுள்ள தென்னை முதலியவற்றின் காய்களைப் பறித்து நீரிலிட்டாவது ஒலியுண்டாக்குவன். அவ்வொலியின் குறிப்பினைக்கொண்டு தோழி தலைவியை அழைத்துச் சென்று தலைவன்பால் சேர்ப்பள். சில நாட்களில், தலைவன் வருவதற்கு முன்னரே வேறு வகையில் இவ்வொலி எழும்பல் கூடும். அவ்வேளை தோழி தலைவியுடன் வந்து தலைவனைக் காணாது தலைவியுடன் திரும்புவள். அவ்வொலிக் குறியே அல்லகுறி எனப்படும். தலைவியும் தோழியும் திரும்பியபின் தலைவன் தோன்றி, தலைவி வந்து சென்ற குறிகளைக் கண்டு மயங்கி நிற்பன். அப்பொழுது வேறு வகையி லெழுப்பப்பட்ட பறவை யொலியால் மருண்ட பெடையன்றில் கூவுதலைத் தொடர்ந்து செய்துகொண்டிருக்கும். தலைவியின் மனையிலோ பறவைக் கூக்குர லாலும், அன்றிற் கூவுதலாலும் பலர் உறக்கமின்றி யிருப்பர். அவ்வமயமே தோழி இத்துறைச் செய்யுளைக் கூற முன்வருவள். அல்லகுறியால் 'தலைவன் கூட்டுறவின்மையும், தலைவியின் உறக்கங் கெட்டமையும் ஒருபுறமிருக்கட்டும், சேவலோடு சேர்ந்து வதியும் அன்றிற் பெடை எதற்காக இவ்வண்ணங் கூவுகிறது ? என்பதும், இக்கூவலால், மனைவயினுள்ளோர் உறக்கங்கெட, அதனால், தலைவனை மறுமுறைசென்று காண வழியிலதே என்பதும் தோழி கருத்து. நெய்தல் - இரங்கலும், இரங்கனிமித்தமுமாகிய வொழுக்கம். இங்கு அல்லகுறிப்பட்ட தலைவன் தலைவியர் இரங்குதற்குரிய நிமித்தங்களும், இரங்கலும், வருகின்றமை காண்க. (சக)

கொடுந்தா ளலவ ! குறையா மிரப்பே
மொடுங்கா வொலிகடற் சேர்ப்ப—னெடுந்தேர்
கடந்த வழியையெங் கண்ணாரக் காண
நடந்து சிதையாதி நீ.

[காமமிக்க கழிபடர் கிளவி.]

(பத.) கொடும் தாள் - வளைந்த கால்களையுடைய, அலவ - நண்டே! ஒடுங்கா - அடங்காத, ஒலி - இரைச்சலையுடைய, கடல் சேர்ப்பன் - கடற்றுறைமுகத்தையுடைய தலைவனது, நெடுந்தேர் - பெரியதேரானது, கடந்த - (என்னைப் பிரிந்து சென்றகாலத்து) ஊர்ந்துபோயின, வழியை-(தேர்க்கால் பதிந்த)பாதையினை, எம்கண் ஆர - எம்முடைய கண்கள் நன்முக, காண - காணும்படி, நடந்து - (அதன்மேல்) சென்று, நீ சிதையாதி - நீ அழிக்காமல் இருப்பாயாக, (என்ற) குறை - வேண்டுகோளை, யாம் - நாம், இரப்பேம்-உன்னிடத்திலே கேட்டுக்கொள்கின்றோம். (என்று தலைவி கடற்கரையிற் கண்ட நண்டினிடம் கூறினாள்.)

(ப - ரை.) கோடியிருந்த தாளினையுடைய அலவனே! ஒரு காரியம் நின்னை யிரப்பேம்; ஒலியாநின்ற அடங்காத கடற்சேர்ப்பன் நெடுந்தேர் போயின வழியை எம்முடைய கண் நிரம்பக் காணும் வகை அதன்மேல் நடந்து அழியாதொழிவாயாக.

(விரி.) காமம் - காதல். கழிபடர் - மிகுந்த துன்பம். கிளவி - சொல். தலைவன் பிரிந்து சென்று குறிப்பிட்ட காலத்திற் றிரும்பாமையான் தலைவி காதன் மிகுந்து துன்ப மேலிட்டமை காரணமாகத் தன்னை மறந்து நண்டினிடம் இங்ஙனங் கூறலாயினள். (சஉ)

பொரிப்புறப் பல்லிச் சினையீன்ற புன்னை
வரிப்புற வார்மணன்மே லேறித்—தெரிப்புறத்
தாழ்கடற் றண்சேர்ப்பன் றூரகல நல்குமே
லாழியாற் காணுமோ யாம்.

[இதுவு மது.]

(பத.) (ஆழி) - கடல் இமைப்பானது, தெரிப்பு உற - (அடிப்பாகத்தே யுள்ள பொருள்) தெரியும்படியாகத் தெளிவுடன்

கூடி, தாழ் - தாழ்ந்து ஆழமாகவுள்ள, கடல் தண் சேர்ப்பன் - கடலோடு கூடிய குளிர்ந்த துறை முகத்தையுடைய தலைவனது, தார் அகலம் - மாலைகளணிந்த மார்பினை, நல்குமேல் - நமக்குக் கொடுப்பது உறுதியானால், பொரிப் புறம் - பொரிந்த வெளிப் பக்கத்தினையுடைய, பல்லி சினை - பல்லியின் முட்டையினைப் போன்ற அரும்புகளை, ஈன்ற - தோற்றுவித்த, புன்னை - புன்னை மரத்தினது பூந்துகள், வரி - வரியாகக் கிடக்கும், புறம் - மேற் பாகத்தினையுடைய, வார் மணல்மேல் - உயர்ந்த மணற்குன்றின் மேலே, ஏறி - சென்றிருந்து, ஆழியால் - அக் கூடல் விழைப்பால், யாம் காணும் - நாம் அதனை அறிவோம். (என்று தலைவி தனக்குத் தானே கூறிக்கொண்டாள்.)

(ப - ரை.) பொரிந்த புறத்தையுடைய பல்லி முட்டை போல அரும்பினை யீன்ற புன்னைப் பூக்களையுடைய வரிப் பட்ட புறத்தினையுடைய உயர்ந்த மணற் குன்றின்மேல் ஏறி யிருந்து, தெளிவுறத் தாழ்கடற் றண்சேர்ப்பனுடைய தார் அகலத்தை நமக்கு நல்குமாயிற் கூடல் இழைப்பாற் காண்பேம் யாம்.

(விரி.) கூடல் இழைப்பாவது பெரும் வட்டமாக ஒரு கோட் டைக் கீறி, அதற்குள்ளே சிறு சுழிகள் பலவற்றை நிறையச் சுழித்து முடித்து, பின் அச் சுழிகளை இவ்விரண்டாக எண்ணி, ஒன்று மிஞ்சினால் தலைவன் விரைவிற் கூடானென்றும், மிஞ்சாது இரட்டையாக அமைந்தால், விரைவிற் றலைவன் வந்து கூடுவ னென்றும் கருதலாகிய பழைய வழக்கமாம். சினை - உவமை யாகு பெயர். புன்னை - முதலாகு பெயர். ஓ - அசைநிலை. (சரு)

கொண்கன் பிரிந்த குளிர்பூம் பொழினோக்கி
யுண்கண் சிவப்ப வழுதே னெளிமுகங்
கண்டன்னை யெவ்வம்யா தென்னக் கடல்வந்தென்
வண்டல் சிதைத்ததென் றேன்.

[பகற்குறிக்கட் டலைமகன் சிறைப்புறத்தானாகப் படைத்து மொழி கிளவியாற் றோழி தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் செறிப்பறிவுறீஇ வரைவுகடாயது.]

(பத.) கொண்கன் - நின் தலைவன், பிரிந்த - (இற்செறிப்பால் நினைக் கூடவியலாது) பிரிந்து போன, குளிர் - குளிர்ச்சியான, பூ - பூக்கள் நிறைந்த, பொழில் நோக்கி - சோலையைப் பார்த்து, உண்கண் - மையுண்ட கண்கள், சிவப்ப - சிவப்பாகும்படி, அழுதேன் - (ஒருநாள் வருத்த மிகுதியால்) கண்ணீர்விட்டு நின்றேன், ஒளிமுகம் - ஒளியினையுடைய எனது முகத்தை, அன்னை - செவிலித்தாய், கண்டு - பார்த்து, எவ்வம் (உனக்கு வந்த) துன்பம், யாது என்ன - எப்படிப்பட்டது என்று கேட்க, (அதற்கு யான்,) கடல் - கடலின் அலையானது, வந்து - (கரைமீது) மோதிவந்து, என் வண்டல் - எனது விளையாட்டுச் சிறுமனையை, சிதைத்தது என்றேன் - அழித்தது (அதற்காக வருந்துகிறேன்) என்று சொன்னேன். (என்று தோழி தலைவியினிடங் கூறினாள்.)

(ப-ரை.) நம்மை இற்செறிக்கையாற் கொண்கன் பிரிந்த குளிர்பூம்பொழிலை நோக்கி உண்கண் சிவப்ப அழுத என்னுடைய ஒளி முகத்தைக் கண்டு அன்னை நினக்கு வந்த இடும்பை யாது என்னக் கடல் வந்து என்னுடைய விளையாட்டுச் சிற்றிலைச் சிதைத்தது என்று சொன்னேன்; எம் பெருமாட்டி!

(விரி.) "அழுதேன்," என்றமையாலும், "கடல் வந்தென் வண்டல் சிதைத்தது," என்றமையாலும் இச் செய்யுள் நெய்தற்றிணையாய தென்க. (சச)

ஈர்ந்தண் பொழிலு ளிருங்கழித் தண்சேர்ப்பன்
சேர்ந்தென் செறிவளைத்தோள் பற்றித் தெளித்தமை
மாந்தளிர் மேனியாய்! மன்ற விடுவனவோ
பூந்தண் பொழிலுட் குருகு.

[தலைமகனைத் தோழி வரைவுகடாதற் பொருட்டுத்
தலைமகள் வரைவுவேட்டுச் சொல்லியது.]

(பத.) மா தளிர் - மாவினது தளிர் போன்ற, மேனியாய் - வடிவினையுடைய மங்காய்! இரும் - பெரிய, கழி - உப்பங்கழிகளையுடைய, தண் - குளிர்ந்த, சேர்ப்பன் - கடற்கரைத் தலைவன், ஈர்ம் தண் - மிகவுங் குளிர்ந்த, பொழிலுள் - சோலையினிடத்திலே, சேர்ந்து - என்னைக் கலந்து, (அதன் பின்னர்,) என் - எனது, செறி வளைத்தோள் - வளை யணிந்த தோளினை, பற்றி - பிடித்து, தெளித்தமை - (என் மனவருத்தத்தை மாற்றித்) தெளிவிப்பதற்காகக் கூறிய உறுதிமொழிகளை, பூந்தண் - பொலிவுமிக்க குளிர்ந்த, பொழிலுள் - அச்சோலையில் வாழும், குருகு - பறவைகள், மன்ற - உண்மையாக, விடுவனவோ-மறந்து விட வல்லனவோ? (அவை ஒருகாலும் மறக்க மாட்டா என்று தலைவி தோழியினிடங் கூறித் தனது வரைவு வேட்கையினைக் குறிப்பாகத் தெரிவித்தாள்.)

(ப-ரை.) குளிர்ந்த தண் பொழிலின்கண் இருந்து பெரிய கழியையுடைய தண்சேர்ப்பன் புணர்ந்து என் செறி வளைத் தோள் பற்றி என்னைத் தெளிவித்த வஞ்சினத்தை, மாந்தளிர் மேனியாய்! மெய்யாக மறந்து விட வல்லவோ? அப்பூந்தண் பொழிலுள் வாழுங் குருகுகள்.

(விரி.) வேட்டல் - விரும்பல். புணர்ச்சிக்கண் நிகழ்ந்த உறுதி மொழிகளைத் தலைவி கூறியது வரைவு வேட்கையினை மனத்திற் கொண்டதா லென்க. (சரு)

ஓதந் தொகுத்த வொலிகடற் றண்முத்தம்
பேதை மடவார்தம் வண்டல் விளக்கயருங்
கானலஞ் சேர்ப்ப! தகுவதோ வென்றோழி
தோணலந் தோற்பித்த னீ.

[பகற்குறி வந்து புணர்ந்து நீங்குந் தலைமகனைக் கண்ணுற்று
நின்று தோழி வரைவுக்டாயது.]

(பத.) ஓதம் - அலைகள்வீசி, தொகுத்த - (கரையோரங்களில்) சேர்த்துவைத்த, ஒலி - முழங்குகின்ற, கடல் - கடலில் விளைந்த, தண்முத்தம் - குளிர்ந்த முத்துக்களை, பேதை - பேதைப்பருவ முடைய, மடவார் - சிறுபெண்கள், தம் - தமது, வண்டல் - விளையாட்டு மனைக்கு, விளக்கு-விளக்குகளாகக் கொண்டு, அயரும்- விளையாடுதற்கிடமான, கானல் - கடற்கரைச் சோலையினையுடைய, அம் சேர்ப்ப-அழகிய துறைமுகத்துக்குத் தலைவனே! நீ என்தோழி- நீ என் தோழியாகிய தலைவியின், தோள்நலம் - தோள்களின் நலத்தை, தோற்பித்தல் - (வரைவு வேட்கை மிகுதியால்) மெலிவித் தல், தகுவதோ - தக்கதாமோ? (என்று தோழி தலைவனை வினவினள்.)

(ப-ரை.) ஓதம் எறிந்திரட்டிய ஒலிகடற் றண்முத்தங் களைப் பேதைமையுடைய மடவார் தம் வண்டற் சிறுமனைக்கு விளக்காக விருப்புச் செய்யும் கானலஞ் சேர்ப்பனே! நினக்குத் தகுவதொன்றோ? என்னுடைய தோழியுடைய தோள்களின் நலத்தை நீ தொலைவித்தல்.

(விரி.) பேதைமடவார் - ஏழு வயதுப் பெண்கள். தலைவி மணம் புரிந்து செய்யும் மனையற வாழ்க்கையை வேண்டினுள் என்பார், "பேதை மடவார்தம் வண்டலில் தண்முத்தம் விளக் கயரும் கானலஞ் சேர்ப்ப!" என்றார். (௬௧)

பெருங்கட லுள்கலங்க நுண்வலை வீசி
யொருங்குடன் றன்னைமார் தந்த கொழுமீ
னுணங்கல்புள் ளோப்பு மொளியிழை மாத
ரணங்காகு மாற்ற வெமக்கு.

[தோழிக்குத் தலைமகன் சொல்லியது; அல்லது, தோழற்குச் சொல்லியதூஉமாம்.]

(பத.) பெரும் கடல் - பெரிய கடலானது, உள் கலங்க - உள்ளிடமெல்லாம் கலக்கங்கொள்ளும்படியாக, நுண்வலை - நுட்ப

மான வலையினை, வீசி-எறிந்து, ஒருங்குடன்-ஒன்றாக, தன்னைமார்-தமையன்மார்கள், தந்த - கொண்டுவந்த, கொழு மீன் - கொழுத்த மீன்களை, உணங்கல் - (வெயிலிற் காயவைத்து) வற்றலாக்குங்கால், புள் - (அவற்றைக் கவரவரும்) பறவைகளை, ஓப்பும் - கவரவிடாமற் பாதுகாக்கும், ஒளி இழை - மின்னுகின்ற அணிகலன்களை யணிந்த, மாதர் - அப் பெண்மணி, எமக்கு - எனக்கு, ஆற்ற - மிகுதியும், அணங்கு ஆகும் - வருத்தும் தெய்வம் போலாவள். (என்று தலைவன் கூறினான்.)

(ப - ரை.) பெரிய கடல் உள்ளெல்லாங் கலங்க நுண்ணிய வலைகளாலே வீசி ஒருங்குடனே தமையன்மார் கொண்டுவந்த கொழுத்த மீன் உணங்கல்களைக் கவரும் புட்களை ஓப்புகின்ற ஒளியிழை மாதர் மிகவும் எமக்கு வருத்துந் தெய்வமாம்.

(விரி.) மீன் உணங்கல் - கருவாடு. இச் செய்யுள் பாங்கியிற் கூட்டத்துத் தலைமகன் தோழியின்மாட்டுக் குறையுயர்ந்த காலத்துக் கூறியதாம். அன்றி, பாங்கற் கூட்டத்துத் தலைவன் பாங்கனிடத்துத் தலைவியின் இயல்பு கூறியதாம். தோழன் - பாங்கன், தோழி - பாங்கி. (சஎ)

எக்க ரிடுமணன்மே லோதந் தரவந்த
நித்தில நின்றிமைக்கு நீள்கழித் தண்சேர்ப்ப !
மிக்க மிகுபுகழ் தாங்குபவோ தற்சேர்ந்தா
ரொற்கங் கடைப்பிடியா தார்.

[தலைமகனைத் தோழி வரைவுகடாயது.]

(பத.) ஓதம் - அலையானது, எக்கர் - கரைமேல் ஏறும்படியாக, இடு மணல்மேல் - இட்ட மணலின்பேரிலே, தரவந்த - அவ்வலைவீச வந்து சேர்ந்த, நித்திலம் - முத்துக்கள், நின்று - நிலைபெற்று, இமைக்கும் - ஒளி விடாநின்ற, நீள் கழி - நீண்ட உப்பங்

கழிகளையுடைய, தண் சேர்ப்ப - குளிர்ந்த துறைமுகத்தையுடைய தலைவனே! தன் சேர்ந்தார் - தன்னை நெருங்கிய நட்பினருடைய, ஒற்கம் - குறைவுகளை, கடைப்பிடியாதார் - மேற்கொண்டு விலக்க முன்வராத மக்கள், மிக்க - (உலகத்தாரால்) கொண்டாடப்படும், மிகுபுகழ் - சிறந்த புகழை, தாங்குபவோ - மேற்கொள்ள வல்லவ ராவரோ? (ஆகார், என்று தலைவியினது குறைவாகிய வரைவு வேட்கையை முடிக்குமாறு தோழி தலைவனிடத்திற் குறிப்பாகக் கூறலாயினள்.)

(ப-ரை.) திரை வந்து இட்ட இளமணல்மேல் ஓதம் தரவந்த முத்தங்கள் நின்று விளங்காநின்ற நீண்ட கழியினையுடைய தண்சேர்ப்பனே! உலகத்தின்கண் விளங்கிய மிகுபுகழைத் தாங்கவல்லரோ? தம்மைச் சேர்ந்தாருடைய தளர்ச்சியைக் கடைப்பிடித்துத் தீராதார்.

(விரி.) எக்கர் - மேலுக்கேறப் பண்ணல். கடைப்பிடித்தல் - மேற்கொண்டு முடித்தல். ஓ - எதிர்மறைப் பொருள் கொண்டுள்ளது. (சஅ)

கொடுமுண் மடற்றாழைக் கூம்பவிழ்ந்த வொண்பூ
விடையு ளிழுதொப்பத் தோன்றிப்—புடையெலாந்
தெய்வங் கமழுந் தெளிகடற் றண்சேர்ப்பன்
செய்தான் றெளியாக் குறி.

[அல்ல குறிப்பட்டுப் பெயர்ந்தமை அறியத் தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி சொல்லியது.]

(பத.) கொடுமுள் - கொடிய முள்ளையுடைய, மடல் தாழை - பெரிய ஏடுகளையுடைய தாழை மரத்தினது, கூம்பு அவிழ்ந்த - குவிதல் நீங்கி மலர்ந்த, ஒள்பூ - ஒளியையுடைய பூவானது, இடை உள் - நடுவேயுள்ள சோற்றினுலே, இழுது ஒப்ப - வெண்ணெயினைப் போன்று, தோன்றி - வெளிப்பட்டு, புடை எலாம் - நாற் புறங்களிலும், தெய்வம் - தெய்வமணத்தைப் போல, கமழும் -

மணக்கும்படியான, தெளி - தெளிந்த, கடல் - கடலினையுடைய, தண் சேர்ப்பன் - குளிர்ந்த துறைமுகத்தையுடைய தலைவன், தெளியா குறி - நம்மால் தெளிந்துகொள்ள முடியாத குறியினை, செய்தான் - செய்துவிட்டான். (ஆதலால், நாம் இன்று அல்ல குறிப் பட்டோம் என்று தோழி கூறினாள்.)

(ப-ரை.) கொடிய முள்ளையுடைய மடற்றாழையினது மொட்டவிழ்ந்த ஒள்ளிய பூக்கள் நடுவுள்ள சோற்றின் வெண்மையைப்போலத் தோன்றி மருங்கெல்லாம் தெய்வ மணம் போலக் கமழாநின்ற தெளிந்த கடற்றண்சேர்ப்பன் நம்மாற் றெளிக்கப்படாத குறியைச் செய்தான்; ஆதலால் அல்லகுறிப் பட்டேம்.

(வி-ரை.) அல்லகுறி - தவறுதலான குறி. தலைவியும், தோழியும் அல்ல குறிப்பட்டுப் பெயர்ந்தபின் தலைவன் வழக்கம்போல் வந்து தலைவியைக் காணாது சிறைப்புறத்து மயங்கி நின்றானாக, அதனை யறிந்த தோழி தலைவனுக்குக் கேட்கும்படியாக, இல்லின் பக்கலிலிருந்து கூறியதாகு மிச்செய்யுள். அன்றி, தோழி தலைவனின் தீங்கெடுத்தியம்பியதுமாம். இஃது அகப்பொருள் விளக்க உரையாசிரியர் கருத்தாம். (௨௬)

அணிகடற் றண்சேர்ப்பன் றேர்ப்பரிமாப் பூண்ட
மணியரவ மென்றெழுந்து போந்தேன்—கனிவிரும்பும்
புள்ளரவங் கேட்டுப் பெயர்ந்தே னொளியிழாய்!
உள்ளுருகு நெஞ்சினே னாய்.

[இதுவு மது.]

(பத.) ஒளி இழாய் - மின்னுகின்ற அணிகலன்களை யணிந்த பெண்ணே! அணி - அழகிய, கடல் - கடலோடுகூடிய, தண்சேர்ப்பன் - குளிர்ந்த துறைமுகத்தையுடைய தலைவனின், தேர் - தேரினுள்ள, பரிமா - குதிரைகள், பூண்ட - அணிந்துள்ள, மணிஅரவம்

என்று - மணியோசை கேட்கிறதென்று நினைத்து, போந்தேன் - இல்லினைவிட்டு வெளிவந்து பார்த்தேன், கனிவிரும்பும் - பழங்களை விரும்பி வந்த, புள் அரவம் - பறவைகளின் ஒலியினை, கேட்டு - கேட்கப்பெற்று, உள் உருகும் - வருந்துகின்ற, நெஞ்சினேன் ஆய் - மனத்தோடு, பெயர்ந்தேன் - (மணி அரவம் அன்றென்று) திரும்பினேன். (என்று தோழி தலைவியினிடங் கூறினாள்.)

(ப-ரை.) நிலத்தைச் சூழ்ந்த கடற்றண்சேர்ப்பன் தேர்பூண்ட பரிமா அணிந்த மணியரவம் என்று கருதிச் சென்றேன்; கனிகளை விரும்புகின்ற புள்ளரவங்களைக் கேட்டு மணியரவம் அன்று என்று போந்தேன்; ஒளியிழாய்! உள்ளுருகும் நெஞ்சினேனாகி.

(விரி.) மணியரவம் - இரவுக்குறி. புள் அரவம் - அல்லகுறி. இச் செய்யுளின்கண், "ஒளியிழாய்," என்ற விளி காணப்படுகின்றமையின், இதன் கருத்தினை, "அல்ல குறிப்பட்டுப் பெயர்ந்தமை அறியத் தலைமகன் சிறைப்புறத் தானாகத் தோழி தலைமகட்குச் சொல்லியது," எனச் சிறிது மாற்றிக்கொள்வது பொருத்தமாமெனக் காண்க. அன்றி, தலைவி குறி மருண்டமையினைத் தோழிக்குச் சொல்லிய துறையுமாம். அணிகடல் - பூதேவியின் அரையினை அணிகலன்போல் சூழ்ந்த கடல் என்றுமாம். (ருய)

நெய்தல் முற்றும்.

ஐந்திணையைம்பது

முற்றியது.

# செய்யுண் முதற்குறிப்பு அகராதி.

[எண்—பக்கம்]

# ஐந்திணை யைம்பது

## துறை, சொற்றொடர் விளக்கம்.

---

எண்—பக்கவெண்.

புள்ளி யிடுதல்-ஐந்தொகை முதலிய பெருங் கணக்குக ளிட்டுப்பார்த்தல். ... உ

முல்லை—முல்லையாகிய ஒழுக்கம்: தலைவன் பிரிவாலுண்டாம் வருத்தத்தினைத் தலைவி பொறுத்து, அவன் கற்பித்தவாறே அடக்கத்தினை மேற்கொண்டிருத்தல். ௬

மல்லர்க்கடந்தான்—முல்லைநிலக் கருப்பொருள். ... ௬

பணிமொழி—இன்சொற்கள், அன்றி, ஆற்றியிருக்குமாறு பணித்த சொற்கள். ... எ

புன்மாலை—முல்லைத்திணையின் முதற்பொருள். ... ய

வினைமுற்றல்—சென்ற காரியத்தைச் செய்துமுடித்தல். கஉ

பகற்குறி—தோழி தலைவிக்குக் குறையிரந்து நின்ற தலைவன் செய்திகூறிக் கூட்டத்திற்குத் தலைவியை இணங்குவித்தபிறகு, தினைப்புனத்தை யடுத்த சோலையினுள்ளே ஓரிடத்தைத் தலைவனுக்குக் குறிப்பிட்டுக் கூறித் தலைவியைக் கொண்டு சேர்க்குமிடம். ... கரு

சிறைப்புறம்—வேலியின் வெளிப்புறம். ... கரு

நலம்புனைதல்—தலைவியின் உயர்ந்த தன்மைகளை யெடுத்துச் சொல்லல். இது புணர்ச்சியின் பின் நிகழ்வதாகும். ... கரு

குறிஞ்சி—குறிஞ்சியாகிய வொழுக்கம்: புணர்தலும் புணர்த னிமித்தமும். ... கரு

நன்மலை—தலைவனது நாட்டுமலை. ... ௧எ

இயற்பட மொழிதல்—உயர்வுபடக்கூறல். ... ௧எ

இயற்பழித்தல்—குறைவுபடக்கூறல். ... ௧எ

துறைநயப்பு—தலைவன் தனது குறையாகிய வேண்டு கோளை நிறைவேற்றிவைக்கும்படி தோழியை வேண்டிக்கொள்வது. ... ௧அ

மெலிதாக—நயமாக. ... ௧அ

மறுமாற்றம்—விடை. ... ௧௯

படைத்துமொழி கிளவி—புதிதாக வொன்றைக் கற்பித்துக் கூறுவது. ... ௧௯

வரைவு கடாதல்—மணம்புரிந்துகொள்ளும்படி தூண்டுதல். ... ௧௯

இரவுக்குறி—தலைவனும் தலைவியும் இரவில் சந்தித்துக் கூடுமிடம். இது தலைவியின் வீட்டினை யடுத்திருப்பதாம். ... ௨௧

நெறிவிலக்கல்—வழியின தருமைகூறி அவ்வழி வாராதிருக்க வேண்டல். ... ௨௪

அறத்தொடு நிற்றல்—தவறுதலான கருத்தோடு காரியங்களை நடத்தவிடாமல் உண்மையினை எடுத்துக் கூறிவிடுவது. ... ௨௫

வெறிவிலக்கல்—முருகனுக்குப் பூசையிடுதல் தேவையில்லாத வொன்றெனத் தோழி முதலியோர் உண்மைகூறித் தடுத்தல். ... ௨௫

பாணன்—யாழ்கொண்டு பாட்டுப்பாடித் தலைவனை மகிழ்விக்கும் தலைவனின் ஏவலன். ... ௨௬

மருதம்—ஊடுதலும், ஊடுத னிமித்தமுமாகிய வொழுக்கம். ... ௨௬

வாயில் வேண்டல்—தூதாகச் செல்ல விரும்பல். ... ௩௰

கூந்தல் ஐவகை—குழல், கொண்டை, சுருள், பனிச்சை, முடி. ... ௩௨

பாலை—பிரிதலும், பிரித னிமித்தமுமாகிய வொழுக்கம். ௩௬

செலவு அழுங்கல்—செல்லுதனின்றும் தவிர்ந்து வருந்தல். ... ௩௯

ஆட்டிவிடல்—ஓட்டல்; திசைச்சொல்; மலைநாட்டது. ௩௬

பிரிவுணர்த்தல்—தலைவன் பிரிவினைத் தலைவிக்குத் தோழி தெரிவித்தல். ... ௪௧

வலித்தல்—இன்றியமையாதெனநினைத்தல். ... ௪௪

அல்லகுறி—(தலைவன் இரவுக்குறியின்கண் வந்தவுடன் தன் வரவினைத் தலைவிக்குந் தோழிக்குந் தெரிவிப்பான் வேண்டிப் பூஞ்சோலை மரங்களில் கூடித் தங்கியிருக்கும் பறவைக் கூட்டங்களை யெழுப்பி விட்டாவது, குளக்கரையிலுள்ள தென்னை முதலியவற்றின் காய்களைப் பறித்து நீரிலிட்டாவது ஒலி யுண்டாக்குவன்.) சில நாட்களில், தலைவன் வருவதற்கு முன்னரே வேறுவகையில் இவ்வொலி எழும்பல் கூடும். அவ்வேளை தோழி தலைவியுடன் வந்து தலைவனைக் காணாது தலைவியுடன் திரும்புவது. அதாவது தவறுதலான குறி. ... ௪௬

நெய்தல்—இரங்கலும், இரங்கனிமித்தமுமாகிய வொழுக்கம். ... ௪௬

கூடலிழைப்பு—பெரும் வட்டமாக ஒரு கோட்டைக் கீறி, அதற்குள்ளே சிறுசுழிகள் பலவற்றை நிறையச் சுழித்து முடித்து, பின் அச்சுழிகளை இவ்விரண்டாக எண்ணி, ஒன்று மிஞ்சினால் தலைவன் விரைவிற் கூடானென்றும், மிஞ்சாது இரட்டையாக அமைந்தால், விரைவிற் றலைவன் வந்து கூடுவனென்றுங் கருதலாகிய பழைய வழக்கம். ௪௮

மணியரவம்—இரவுக்குறி. ... ௫௫

புள் அரவம்—அல்ல குறி. ... ௫௫

# ஐந்திணையைம்பது

## அருஞ்சொற்பொருளகராதி.

---

எண்கள்—பாட்டெண்கள்.

அகவல் - அழைத்தல், ௨
அசைதல் - வருந்துதல், ௩௨
அணங்கிற்று - வருத்திற்று, ௨௰
அணங்கு - தெய்வம், ௨௰
வருத்துந் தெய்வம், ௪௭
அணி - அழகு, ௨
அதர் - வழி, ௧௬, ௩௭
அத்தம் - கடறு, ௩௪. வழி, ௩௭
அமர்தல் - விரும்புதல், ௧.
போலுதல், ௧௩
அமை - மூங்கில், ௩௪
அயர்தல் - கலங்குதல், ௨௨
விளையாடுதல், ௪௬
அலம் வருதல் - வருந்தா
நிற்றல், ௨௰
அலவன் - நண்டு, ௪௨
அலைத்தல் - வருத்துதல், ௩௪
அல்கல் - இரவு, ௪௰
அழல் - நெருப்பு, ௨௫
அழிதல் - துன்புறல், ௯
அறல் - நுண்கரு மணல், ௨௭
அன்றோ - அஃதோ, ௨௰
ஆடுதல் - விளையாடுதல், ௩௪
ஆயம் - தோழிகள்கூட்டம், ௩௩
ஆர - நிரம்ப, ௭௨

ஆரான் - அரிய ஆனிரை, ௭
ஆரிருள் - கங்குல், ௰௬
ஆர்தல் - நுகருதல், ௨௨
ஆழி - கடலிழைப்பு, ௪௩
ஆற்றுதல் - பொறுத்தல், ௩௯
இணர் - பூங்கொத்து, ௰௧
இமைத்தல் - ஒளிவிடல், ௪௮
இயம்புதல் - ஒலித்தல், ௨௬
இரங்குதல் - முழங்குதல், ௨
இரீஇ - இரிந்து, ௰௬
இருங்கழி - பெரிய உப்பங்கழி, ௪௫
இருந்தும்பி - பெரிய வண்
டுகள், ௬
இருமை -பெருமை, ௫
இல் - மனை, ௨௨
இவர்தல் - படர்ந்தேறுதல், ௰௭
இழியும் - செல்லும், ௰௩
இழுது - வெண்ணெய், ௪௯
ஈர்தல் - வருத்துதல், ௬
ஈர்த்தல் - அறுத்தல், ௨௰
ஈர்ம்பலை - குளிர்ந்த சேக்கை, ௪௰
உகிர் - நகம், ௩௧
உடன்று - மாறுபட்டு, ௯

உணங்கல் - வற்றல், ௪௭
உணர்கம் - அறிவாம், ൰
உண்கண் - மையுண்டகண், ௪௪
உதிரம் - குருதி, ௩௧
உரறி - முழங்கி, ௪
உருகி - வருந்தி, ௧
உருவொடுங்குதல் - மேனி வாட்டமுறல், ௧௭
உவத்தல் - விரும்புதல், ௭
உள்ளுதல் - நினைத்தல், ൰௬
உள்ளுருகுதல் - வருந்துதல், ௫൰
உறைக்கும் - பெய்கின்ற, ௫
ஊச்சுதல் - உறிஞ்சுதல், ௩௮
எக்கரிடு மணல் - திரைவந் திட்ட இளமணல், ௪௮
எங்கையர் - எம்தங்கையர், ௨௨
எஞ்சாமை - ஒழியாமை, ൰௭
எதிரி - எதிர்ந்து, பொருந்தி, ௩௧
எதிருதல் - தம்முட் டலைப் படுதல், ௩௧
எயில் - மதில், ௧
எயினர் - வேட்டுவர், ௩௫
எய்தாது - நிரம்பாது, ௩௮
எவ்வம் - இடும்பை, ௪௪
எழில் - அழகு, ൰
எறிந்து - வெட்டி, ൰௮
ஏக்கற்று - விரும்பி, ௨௮
ஏயினோர் - எதிர்ப்பட்டோர், ௧௧
ஏவல் - ஊழியம், ௨௧
ஏனல் - பசுந்தினை, ௧௨
ஐங்கூந்தல் - ஐவகைப்பட்ட கூந்தல், ௨௭
ஒடுங்குதல் - அடங்குதல், ௪௨
ஒண்கண் - ஒளியினையுடைய கண், ௧

ஒதுங்குதல்-மெல்ல நடத்தல், ௧௬
ஒற்கம் - தளர்ச்சி, ௪௮
ஒன்றானும் - யாதானும், ௨௧
ஓதம் - அலை, ௪௬
ஓப்பும் - பாதுகாக்கும், ௪௭
கடத்தல் - வெல்லுதல், ௧
கடம்பு - கடப்பந்தார், ௧
கடிது - விரைந்து, ௩௬
கடுவிசை - மிகுவிரைவு, ௧௧
கடைப்பிடித்தல் - மேற் கொள்ளுதல், ௪௮
கட்டுரை - சிறுமொழி, ௨௫
கண்படுத்தல் - துயிலுதல், ௩௫
கலி - மிக்க, ௨
கலிவானம் - நீர்நிரம்பிய மேகம், ௨
கலைமா - ஆண்மான், ௩௮
கல்லதர் - கல்வழி, ௩௭
கவினுதல் - அழகுபெறுதல், ௧௧
கவுள் - மோவாய், ൰
கழி - உப்பங்கழி, ௪௮
கழூஉம் - கழுவுகின்ற, ௧௨
களிறு - ஆண்யானை, ௩௨
கறங்குதல் - ஒலித்தல், ௧௮
காண்டொறும் - காணுந் தோறும், ௨,௩௧
காய்ந்து - கனன்று, ௩௩
காரம் - புண்ணிற் கிடுங் காரம், ௨௪
கார் - கார்காலம், ௨. முகில், ௩௧
கானம் - காடு, ௩௫
குடுமி - சிகை, ௨௫
குரல் - கதிர், ௨൰
குருகு - நாரை, ௨௪
குளிரும் பருவம் - கூதிர் காலம், ௩௰

நகையாகின்று - நகையாகாநின்றது, ௨௬
நடுகல் - போரின்கண் இறந்தார் பெயர்பொறித்து நட்டகல், ௩௫
நண்பு - காதல், ௪௧
நவிலுதல் - பயிலுதல், ௰
நன்கு - மிகவும், ௪௰
நன்னெஞ்சு - மிக்கநெஞ்சு, ௩௧
நானம் - நறுவிரைகள், ௧௩
நித்திலம் - முத்தங்கள், ௪௮
நிரந்து - மிடைந்து, ௫
நீத்தல் - துறத்தல், ௩௪
நீர்மை - தன்மை, ௨
நீலம் - நீலமலர், ௨௪
நுணங்குதல் - நுணுகுதல் ௨௭
நெறி - வழி, ௨௨
நொவ்விதா - கடிதாக, ௰
படர்கூர்தல் - துன்பமிகுதல், ௩௧
படர்தல் - போதல், ௩௮
பணிமொழி - மெல்லிய மொழி, உ. இன்சொல், ௪
பரிதல் - காதலித்தல், ௨௩
பரிமா - குதிரைகள், ௫௰
பருவம் - காலம், ௨௪
பாவை - விளையாட்டுக்குரிய பொம்மை, ௩௩
பிடி - பெண்யானை, ௩௨
பிரியா - இடையறாத, ௩௪
பிழைத்து - தப்பியோடி, ௧௬
பீர்நீர்மை - பீர்க்கம்பூவின் றன்மை, ௨
புடை - மருங்கு, ௪௧
புரிதல் - விரும்புதல், ௩௫
புலத்தல் - ஊடுதல், ௨௭
புலம்படைதல் - தனிமையையடைதல், ௪௧
புலம்பு - வருத்தம், ௧௩
புல்லுதல் - முயங்குதல், ௨௧
புல்லெனல் - புற்கென்றல், ௮
புள்ளரவம் - பறவையொலி, ௫௰
புறவு - காடு, ௧௨
புனைதல் - செய்தல், ௧௪
புன்மாலை - சிறுபொழுதாகிய மாலை, ௭
பூந்தலை அன்றில் - செம்பூப்போலுஞ் சூட்டினையுடைய அன்றில், ௪௧
பொருந்தினர் - கூடினர், ௮
பொற்ப - பொலிவுதோன்றும் வகை. ௮
போதல் - கழிதல், ௧௧
போது - மலர், ௨௨
மஞ்சு - முகில், ௧௭
மஞ்ஞை - மயில், ௨
மடவைகாண் - அறியாய்காண், ௨௧
மடிசெவிவேழம் - மடிந்த காதுகளையுடைய யானை ௧௬
மணி - நீலமணி, ௨
மயங்குதல் - மிடைதல், க. வருத்த முறுதல், ௧௩
மறவல் - மறவாயாக, ௧௮
மறி - ஆட்டுக்குட்டி, ௨௰
மறை - களவு, ௧௧
மன்ற - மெய்யாக, ௪௫
மா - விலங்கு, ௧௪
மாண - மாட்சிப்பட, ௨௩
மாதர் - காதலையுடையாள், ௩௭
மாந்துதல் - தின்னுதல், ௩௫

கழக வெளியீடு—கஅ௪

மூவாதியார்

இயற்றிய

# ஐந்திணை யெழுபது

மூலமும், பழைய வுரையும்



தமிழ்ப் புலவர்

திரு. அ. நடராச பிள்ளையவர்கள்

எழுதிய

விளக்க வுரையும்



திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்

திருநெல்வேலி & சென்னை

தாது—சித்திரை

# முகவுரை.

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள், ஐந்திணை நூற்கள் நான்கில், ஐந்திணை யெழுபது ஒன்றாகும். இஃது அகப்பொருட்டுறைகளைப் பல்லாற்றான் விளக்குமுறையில் முதன்மை பெற்ற திணைமாலை நூற்றைம்பது என்ற நூற்கு அடுத்தபடியில் வைத்து எண்ணத்தகுந்த ஏற்றத்தினைக் கொண்டுளது. இதன்கண்ணும் தொல்காப்பியர் கண்ட பல அரியதுறைகள் அழகுற்று விளங்குகின்றன. குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் என்ற திணைமுறை வைப்பு இங்குக் காணப்படுகின்றது. ஒவ்வொரு திணையின்கண்ணும் பதினான்கு பாக்களாக ஐந்து திணைக்கும் எழுபது பாக்களை இந் நூல் கொண்டிருந்தமை கருதி ஐந்திணை யெழுபது என்ற காரணக் குறி இதற்கு வழங்கலாயிற்று. ஆயினும், பின்னர் நேர்ந்த ஏட்டுப் பிரதிகளின் சிதைவான் முல்லைக்கண் இருசெய்யுட்களும், நெய்தற்கண் இருசெய்யுட்களும் மறைய மிகுந்த அறுபத்தாறு செய்யுட்களும் கடவுள் வாழ்த்துச் செய்யுளுமே வெளிவரலாயின. அவற்றுள் இருபத்தேழு செய்யுட்கள் நேரிசை வெண்பாக்களாகவும், நாற்பது செய்யுட்கள் இன்னிசை வெண்பாக்களாகவும் இயலுகின்றன. கடவுள் வாழ்த்தாகக் காணப்படும் வெண்பா, சொற்போக்காலும் பொருட்போக்காலும் பிற்காலத்தே புகுந்த தொன்றெனப் புலப்படுகின்றது.

திணைமாலை நூற்றைம்பதின் தெளிவாகிய இந்நூல் மக்களின் இன்பத்திற் குயிர்நிலையாகிய அன்பினை எழிலும் இனிமையுமுற எடுத்தியம்பிச்செல்லுஞ் சிறப்பினைத் தமிழ்மகனுயுள்ள ஒவ்வொருவனும் படித்தின்புறுவது அவனுக்கேற்பட்ட பலகடமைகளிலொன்றாம். இன்பத்தின் தொடக்கமாகிய புணர்ச்சியினையும் அதற்குரிய நிமித்தங்களையும் குறிஞ்சி எனக்கூறி, அப்புணர்ச்சியாற் பெற்ற அன்பினை நெகிழவிடாது அகத்திருத்தி அமைதலாகிய முல்லையினை அடுத்துரைத்து, அவ்வன்பின் நிலைபேற்றினைக் கண்டறிதற்குரிய

பிரிவாகிய பாலையினைப் பின்வைத்து, அவற்றின் பயனாகிய ஊடலுங் கூடலுமென்ற மருதத்தினை விளக்கி, இவை பேரின்பத்தினை யண்முதற்குரிய பெருவழியேயன்றிப் பேறாகா எனத் தெளிய, இரங்கலாகிய நெய்தலினை யிறுதியிற் கூறிய வெழில் என்று மறக்கொணாமாட்சியதாகும்.

குறிஞ்சிக்கண் தலைமகள் தலைமகனை இயற்படமொழியும் எழிலும், அதற்கேற்ப இறைச்சிப் பொருளைக் கையாளும் ஏற்றமும், சான்றவர் கேண்மையின் தன்மையும் ஆன்றவரும் கண்டு அகமகிழற்குரியனவாம். தோழி செவிலிக்குப் படைத்துமொழி கிளவியாக, தலைமகள் புணர்ச்சி காரணமாகக் கண்சிவக்கப் பெற்றமையினை, "செங்கேழிதருங் கான்யாற்றுட் டேங்கலந்து வந்த அருவி குடைந் தாடத் தாஞ்சிவப்புற்றன கண்," எனக் கூறுவதும், தலைமகனைத் தோழி வரைவு கடாவுங்கால், "நாட! ஒன்றுண்டோ வறிவின்கணின்ற மடம்," எனப் பகரும் நாகரிகமும் நெஞ்சகத்தே நீளநினைக்கற்பாலவாம். மேலும், குறிஞ்சிநிலப் பண்புகள் பல்லாற்றான் விரிக்கப்படு முறைகளும் பார்த்து மகிழற்குரியவாம்.

முல்லைக்கண் எவருஞ் செல்லா முறையாகப் பன்னிரண்டு பாக்களிலும் பருவங்கண்டழிந்த தலைமகள் கூற்றாகக் கார்கால வியல்பினையும், மாலைக்காட்சியினையும் படிப்போர் மனத்தே படக்காட்சி போற் படியுமாறு கூறுவது பலருங் கொண்டாடிக் கொள்ளவேண்டியதாகும். இருபத்திரண்டாவது செய்யுட்கண் கார்காலமாலை வேளையில் காணப்பெறுங் காட்சியும், இருபத்தெட்டாவது செய்யுட்கண், மாலை வேளையில் ஆயன் பசுநிரைகளோடு மலர்மாலை சூடி வந்துகொண்டிருக்க அவன் பின்னே மேல காலூன்றிப் பெய்து கொண்டே மழை தொடர்ந்து வருவதாகக் கூறிய செய்தியும் இத்திணைக்கண் மிகச் சிறப்புற்றுக் காணப்பெறுகின்றன. குதிரைகட்குத் தவளைகளைப் போன்று ஒலிக்கும் மணிமாலைகளிட்டிருந்த வழக்கும் இங்குக் காணப்படுகின்றது.

பாலைக்கண் போரிற்பட்ட மறவர்க்குக் கல்நடுதலும், அக்கல்லில் அம்மறவரின் செய்திகளை வரைந்து வைத்தலும், ஆந்தையொலி, தும்மல், பல்லிசொல், இடக்கண்ணாடலாகிய நிமித்த மறித

லும் பகரப்பெற்றுள்ளன. பாலைநிலவழி பலபடியாகக் கூறப்பெற்று, பாலைக்கு நிலமின்மை தோன்ற முல்லைக்கட்பாலையும் மொழியப் பட்டுளது.

மருதத்தின்கண் தலைமகன் புதல்வன்முகங் காண்டல், புதல்வற்குப் பெயரிடுதல், பரத்தையர் தலைமகனை மாலையாற் பிணித்துக் கொண்டு போதல், எருமையின் கழுத்தில் தொண்டுக் கட்டையிடல், உறுதி மொழிகளை எழுதுவித்துக் கொள்ளல், பாணற்குத் தலைமகள் வாயின்மறுக்கும் வகை, தோழி தலைமகனை வணங்கிய மொழியான் இணங்குவிக்கும் வாய்மை, தோழி தலைமகள் மாட்டுக் கொண்டுள்ள பேரன்பு முதலியன பெரிதும் நெஞ்சினைப்பற்றி யிழுக்கும் நேர்மையனவாயுள்ளன. நாற்பத்தேழாவது செய்யுட்கண் காதலனுங் காதலியும் மாறின்றி வாழுங் காட்சியைக் கண்டு செவிலி நற்றாயிடங் கூறுங் கூற்று, பிற்காலத்தே எள்ளப்படும் சில செய்திகளும் அக்காலத்தே பெரியோர் பலராற் போற்றப்பட்டன எனப் புலனாக்குகின்றது. ஐம்பத்திரண்டாவது செய்யுட்கண் நிகழுந் தலைவிகூற்றானது தொல்காப்பியர் கண்ட பல அரிய துறைகளில் சில இந்நூலிற் காணப்படுகின்றன என்பதற்கு எடுத்துக் காட்டாகும்.

நெய்தற்கண் தலைமகள் தலைமகனை இயற்பட மொழியும் எழிலும், அல்லகுறிபட்ட வழக்கும், தோழி அன்றிலோடு கூறியாறும் அமைதியும், குருகினைச் சான்றாகக் கொள்ளுமாறும், அவ்வவ்விடங் கட்கேற்ற இறைச்சிப் பொருளும் பொலிந்துள்ளன.

இந்நூலினை இயற்றிய பூவாதியர் என்ற பெரியாரைப்பற்றிய செய்தி யொன்றும் அறியுமாறில்லை. பெயர் கொண்டு இவர் சமணசமயி என ஐயுறற்கிடமுண்டாகின்றது. இந்நூலின் முதலிருபத்து நான்கு செய்யுட்கட்குமட்டும் பழைய பொழிப்புரை யொன்று காணப்படுகின்றது. அதனைச் செய்தார் செய்தியும் தெரிந்திலது. இருபத்து நான்காவது செய்யுளின் பழையவுரையின் பிற்பகுதி ஏடுகளின் சிதைவாற் காணப்பெறாது புதிதாகச் சேர்க்கப்பட்டது. இருபத்தைந்தாவது செய்யுண்முதல் முப்பத்தாறு செய்யுட்கட்குப் புதிதாகப் பதவுரை மட்டும் எழுதிச் சேர்க்கப்

பட்டது. இருபத்தெட்டாவது செய்யுட்கண், "பெயரும்," என்பதும், முப்பத்தெட்டாவது செய்யுட்கண், "கொடுவரிநல்," என்பதும் ஏடுகளின் சிதைவாற் காணப் பெறாது போயினவற்றிற்குரிய வாக, முன்பின் வருமொழிகளின் துணைகொண்டு புதியனவாகச் சேர்க்கப்பட்டனவாம்.

இந்நூல் எளிய முறையில் எல்லோர்க்கும் பயன்பட வேண்டுமென்ற நல்லெண்ணத்தினுலே ஊக்குவிக்கப்பட்டுப் பதவுரை விரிவுரைகளுடன் இங்ஙனம் வெளியிட முன் வந்தமையின், இதனைக் கண்ணுறும் அறிஞர்கள் யான் அறியாமையான் மேற்கொண்டுள்ள பிழைகளை யெடுத்துக்காட்டி மன்னிக்க வேண்டுகின்றனன். தோன்றாத்துணையாக முன்னின்று இதனை முடிப்பித்த எல்லாம் வல்ல இறைவற்கு எனது வணக்கம் உரித்தாகுக. இதனை வெளியிட்டுதவிய தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்க்கும், இதனை வெளியிடுங்கால் அன்பு கூர்ந்து பார்வையிட்டுத் திருத்தங்கள் செய்து உதவிய மேற்படி கழக வெளியீட்டுக் குழுவுறுப்பினரும், பாளையங் கோட்டை அர்ச் சவேரியார் கல்லூரித் தலைமைத் தமிழாசிரியரும் ஆகிய திருவாளர் வித்வான் பு. சி. புன்னைவனநாத முதலியாரவர்கட்கும் யான் என்றும் நன்றி பாராட்டுங் கடப்பாடுடையேன்.

இங்ஙனம்,

திருச்சி,
2-5-'36

அ. நடராச பிள்ளை.

ஓம்

# ஐந்திணை யெழுபது

## விளக்கவுரை பழைய பொழிப்புரையுடன்.

### கடவுள் வாழ்த்து.

*எண்ணும் பொருளினிதே யெல்லா முடித்தெமக்கு*
*நண்ணுங் கலையனைத்து நல்குமால்—கண்ணுதலின்*
*முண்டத்தா னண்டத்தான் மூலத்தா னாலஞ்சேர்*
*கண்டத்தா னீன்ற களிறு.*

(பதவுரை) *கண் நுதலின்* - *கண்ணை நெற்றியிலுடைய*, *முண்டத்தான்* - *தலையினையுடையவனும்*, *அண்டத்தான்* - இவ்வுலகமாகிய அண்டத்தினைத் தனது வடிவமாகக் கொண்டவனும், *மூலத்தான்* - எல்லாவற்றிற்கும் முதற் காரணனாய் உள்ளவனும், *ஆலம் சேர்* - ஆலகால விஷமாகிய நஞ்சு பொருந்தியிருக்கும்படியான, *கண்டத்தான்* - கழுத்தையுடையவனுமான சிவபெருமான், *ஈன்ற* - பெற்றெடுத்த, *களிறு* - யானைமுகக் கடவுள், *எண்ணும்* - யாம் விரும்பும், *பொருள்* - பொருள்கள், *எல்லாம்* - எல்லாவற்றையும், *இனிது* - நன்றாக, *முடித்து* - முடிவுபெறச் செய்து, *எமக்கு* - எங்களுக்கு, *நண்ணும்* - (இவ்வுலகத்தே) பொருந்தியுள்ள, *கலை* - கல்விப் பொருள்கள், *அனைத்தும்* - எல்லாவற்றையும், *நல்கும்* - கொடுக்கும்.

(விரிவுரை) *ஏ* - இசைநிறை. *ஆல்* - அசைநிலை. "*களிறு எல்லாம் முடித்து, அனைத்தும் நல்கும்*," என முடிக்க. "*நல்குவான்*," எனவும் பாடம். இச் செய்யுளின் போக்கும் பொருளும் இதனைப் புதிதாய் இடைச்செருகலென எண்ண இடமளிக்கின்

றன. "தெய்வ வணக்கமும் செயப்படுபொருளும் எய்தவுரைப்பது தற்சிறப்பு," என்றாங்கு இது செயப்படு பொருளைக் கொண்டிராமை யின், இது பழைய போக்காகிய பாயிரமாகாமை காண்க. அன்றி யும், இவ்வாழ்த்து இந்நூலுக்குரியதெனக் கூறற்குச் சான்று ஒன்றும் இதன்கட் காணப்பட்டிலது. மேலும், இதற்குப் பழைய வுரையுங் கிடைத்திலது.

## நூல்.

## முதலாவது—குறிஞ்சி.

அவரை பொருந்திய பைங்குர லேனல்
கவரி மடமா கதூஉம் படர்சாரற்
கானக நாட! மறவல் வயங்கிழைக்
கியானிடை நின்ற புணை.

[தோழி தலைமகனை வரைவுகடாயது.]

(பத.) அவரை - அவரைக் கொடிகள், பொருந்திய - படர்ந்து நின்ற, பைங்குரல் - பசிய கதிர்களையுடைய, ஏனல் - தினைப் பயிர் களை, கவரி மடமா - இளமையான கவரி மான்கள், கதூஉம் - பற்றி மேயும்படியான, படர் - பரந்த, சாரல் - மலைப் பக்கத்தையுடைய, கானக நாட - மலைநாட்டுத் தலைவனே! வயங்கு இழைக்கு - விளங்குகின்ற அணிகலங்களை யணிந்த தலைவிக்கும் (உனக்கும்,) இடை - நடுவே, யான் - நான், நின்ற புணை - (தெய்வம் போன்று) புணையாக நின்று உங்கட்குக் கூட்டுறவு செய்வித்த நன்றியினை, மறவல் - மறவாது (தலைமகளை மணந்து என்னை) மகிழ்விப்பாயாக. (என்று தோழி தலைவனிடங் கூறினாள்.)

(பழைய வுரை) அவரை பொருந்திய கதிரையுடைய பசுந்தினையைக் கவரிமடமா கதுவாநின்ற படர்ந்த சாரலினை யுடைய கானகநாடனே! மறவாது நினைப்பாயாக; வயங்கா நின்ற அணியினையுடையாட்கு யான் நடுவுநின்ற புணையினை.

(விரி.) கவரிமான் - ஒருவகை மான். வயங்கிழைக் கியான் - குற்றியலிகரம் அலகு பெறுமை காண்க. இச் செய்யுளினை இளம்பூரணர் வரைவு நீட்டித்தவழி தோழி தலைவற்குக் கூறிய தென்பர், (தொல். பொருள். களவு. க.) நம்பியகப்பொருளில் இது பாங்கியிற் கூட்டத்தின் பின் பாங்கி தலைவியை நீங்கித் தலைவற்கு ஓம்படை சாற்றல் எனப்படும், (அகப். களவு. ௬௬.) வரைவு கடாதல் - மணம் புரிந்து கொள்ளும்படி தூண்டுதல். கழூஉம் - சொல்லிசை யளபெடை. (க)

கொல்லைப் புனத்த வகில்சுமந்து கல்பாய்ந்து
வானி னருவி ததும்பக் கவினிய
நாட னயமுடைய னென்பதனு னீப்பினும்
வாடன் மறந்தன தோள்.

[வரைவு தலைவந்தமை கண்டு மகிழ்ந்த தலைமகள் தோழிக்குக் கூறியது.]

(பத.) வானின் - மழையினாலே (பெருக்கெடுத்த,) அருவி - நீர் வீழ்ச்சியானது, கல் பாய்ந்து - மலைகளிலிருந்து இறங்கிச் சென்று, கொல்லை புனத்த - தோட்டமாகிய தினைப்புனத்தின்கண்ணேயுள்ள, அகில் சுமந்து - அகிற்கட்டைகளை மேற்கொண்டு, ததும்ப - எங்கும் நிரம்ப (அதனாலே,) கவினிய - அழகு மிகுந்த, நாடன் - மலை நாட்டிற்குரிய தலைமகன், நயம் உடையன் - வாய்மை முதலிய நற் பண்புகள் வாய்ந்துள்ளான், என்பதனால் - என்ற இதனாலே, நீப்பினும் - (அவன் பொருள் தேடல் காரணமாக என்னை இந் நெடு நாளாய்ப்) பிரிந்து சென்றிருந்தும், தோள் - என்தோள்கள், வாடல் - (வருத்தத்தால்) மெலிதலை, மறந்தன - மேற்கொள்ளாவாயின. (என்று தலைவி தோழியினிடங் கூறினள்.)

(ப-ரை.) கொல்லைப்புனத்த அகிலைச் சுமந்து கற்களைப் பாய்ந்து மழையானுளதாய அருவி முழங்குதலான் அழகு பெற்ற நாடன் தன்னை யடைந்தார்க்கு ஈரமுடையன் என்பது

ஞன் அவன் பிரிந்தானாயினும் வாடுதலை மறந்தன என்றோள்கள்.

(விரி.) கல் - மலை. ததும்பல் - நிறைதல். நயம் - வாய்மை இரக்க முதலிய நற்பண்புகள். வரைவு தலைவரல் - தலைமகனைச் சார்ந்தார் மணம் பேசி வரல். தலைமகனைத் தலைமகள் நயமுடையன் என்றதனால் வரைவு தலைவந்தமை பெறலாயிற்று. தலைவனின் வாய்மை முதலிய நற்பண்புகள் தலைவிக்கு அவன் வரைவுகாரணமாகப் பொருள்வயிற் பிரிந்த காலத்தும் மனக்கலக்கத்தை விலக்கிய வென்பார் "நீப்பினும் வாடன் மறந்தன தோள்," என்றார். இச்செய்யுளை இளம்பூரணர், வரைவு தலைவந்தவழித் தலைமகள் கூறியதற்கு மேற்கோளாகக் கூறுவர் (தொல். பொருள். களவு. உக.) நச்சினார்க்கினியர், 'நீப்பினும்,' என்றதனால் தலைமகன் மாட்டுப் பரத்தமை கூறினாள் என்பர். வரைவுக்குப் பின்னர் கற்பில் பரத்தமை கூறல் சிறப்பாமன்றிக் களவின்கட் பரத்தமை கூறலும் செயலுங் காதற் புணர்ச்சிக்கு மாறுமாகலான், 'நீப்பினும்,' என்றதற்கு வரைவுகாரணமான முலைவிலைக்குப் பொருள் தேடப் பிரிந்தமை கூறப்பட்டது. இது தோழி முதலாயினார் அறத்தொடு நின்று தலைமகளின் வரைவினை எதிர் நோக்கிய காலத்து வரைவு தலைவந்தமை கூறியதாகும். (உ)

இலையடர் தண்குளவி யேய்ந்த பொதும்பிற்
குலையுடைக் காந்த ளினவண் டிமிரும்
வரையக நாடனும் வந்தான்மற் றன்னை
அலையு மலைபோயிற் றின்று.

[தோழி தலைமகன் வரைவு மலிந்தமை
தலைமகட்குச் சொல்லியது.]

(பத.) இலை - தழைகள், அடர் - நிறைந்துள்ள, தண் - குளிர்ந்த, குளவி-காட்டு மல்லிகைக் கொடிகள், எய்ந்த-பொருந்திப் படர்ந்துள்ள, பொதும்பில்-சோலைகளினிடத்தேயுள்ள, குலையுடை-

கொத்துக்களாகவுள்ள, காந்தள் - காந்தள் பூவினிடத்தே, இனம் வண்டு - கூட்டமாகிய வண்டுகள், இமிரும் - ஒலித்து மொய்க்கும் படியான, வரையகம் - மலையிடத்தையுடைய, நாடனும் - நாட்டிற் குரியனாகிய தலைமகனும், வந்தான் - மணம் பேசி வருதலை மேற் கொண்டான், (அதனால்,) அன்னை - நம் செவிலித்தாய், அலையும் - (வரைதலை வேண்டி) வருந்துகின்ற, அலை - வருத்தமானது, இன்று - இப்பொழுதே, போயிற்று - நீங்கியது. (என்று தோழி தலைவியிடங் கூறினாள்.)

(ப-ரை.) இலை பயின்ற தண்குளவிக் கொடிகள் படர்ந்து மூடிய பொதும்பின்கட் பூங்கொத்தையுடைய காந் தளில் இனவண்டுகள் ஒலிக்கும் வரையகநாடனும் வரை வொடு வந்தான்; ஆதலான், இன்று நமக்கு அன்னை யலைக் கும் அலையும் போயிற்று.

(விரி.) "வேய்ந்த," எனவும் பாடம். மற்று - அசைநிலை. வரைவு மலிதல் - மணப் பேச்சினை மேற்கொண்டுவரல். 'இதனைத் தலைவி கூற்றாக வரைவு மலிந்தமை கண்டு மகிழ்ந்தது எனக் கூறுவாருமுளர். (க)

மன்றப் பலவின் சுளைவிளை தீம்பழ
முண்டுவந்து மந்தி முலைவருடக்—கன்றமர்ந்
தாமா சுரக்கு மணிமலை நாடனை
யாமாப் பிரிவ திலம்.

[தலைமகன் சிறைப்புறத்தானாக இயற்பழித்த தோழிக்குத் தலைமகள் இயற்பட மொழிந்தது.]

(பத.) மந்தி - குரங்கானது, மன்ற - மன்றின்கண் நின்றுள்ள, பலவின் - பலாமரத்திலே, சுளை - பலாச் சுளைகள், விளை - முதிர்ந் துள்ள, தீம்பழம் - தித்திப்பான பலாப் பழத்தை, உண்டு - தின்று, வந்து - (நீர் வேட்கையோடு) கீழிறங்கிவந்து, ஆமா - (அம்

மரத்தடியிற் றங்கியிருந்த) காட்டுப் பசுக்களின், முலை - பால் மடியை, வருட - தடவிக் கொடுக்க, கன்று அமர்ந்து - கன்றினிடத்துப்போல அன்பு பட்டு, சுரக்கும் - (அப் பசுக்கள் பால்) சுரந்து கொடுக்கும்படியான, அணி - இயற்கையழகுக் காட்சிகள் மிக்க, மலைநாடனை - மலைநாட்டிற்குரிய தலைமகனை, யாம் ஆ-யாம் இப்பிறப்பில் உயிரோடு உள்ளேமாகும் வரைக்கும், பிரிவது - (அவனைப்) பிரிந்து வாழ்வது, இலம் - மேற்கொள மாட்டேம். (என்று தலைமகள் தோழியிடங் கூறினள்.)

(ப-ரை.) மன்றின்கண் நின்ற பலவின் சுளைமுதிர்ந்த இனிய பழத்தைத் தின்றின்புற்று வந்து ஆமாவின் முலையை மந்தி வருட அவ்வாமாத் தன் கன்றிற்குப்போல அன்பு பட்டுப் பாலைச்சுரக்கும் அணிமலைநாடனை யாமுளேமாகப் பிரிவதிலம்.

(விரி.) மன்று - மக்கள் முதலோர் சென்று தங்குமிடம். 'அமரந்து' என்றும் பாடம். அமர்தல் - அன்பு படல்: பழங்கால வழக்கு. தலைமகன் சிறைப் புறத்தானாக - பாங்கியிற் கூட்டத்தினின்றும் பிரிந்த தலைமகன் திணைப்புனஞ் செல்லும் தோழியினையும் தலைவியையும் சோலையின் வேலிப்புறத்து நின்று நோக்கினனாக. இயற்பழித்தல் - தலைவனின் அன்பாகிய இயல்பினைக் குறைத்துக் கூறல். இயற்பட மொழிதல்—அன்பாகிய இயல்பு பொருந்துமாறு கூறல். தலைமகன் அன்பிற்குறையா னென்பது மந்தி முலைவருட ஆமா சுரக்கும் அணிமலை நாடன் என்றதனாற் பெறப்படும். இதனை அளிசிறந்தவழித் தலைவி கூறிய தென்பர் இளம்பூரணர், (தொல். பொருள். களா. உக.) (ச)

சான்றவர் கேண்மை சிதைவின்றா யூன்றி
வலியாகிப் பின்னும் பயக்கு மெலிவில்
கயந்திகழ் சோலை மலைநாடன் கேண்மை
நயந்திகழு மென்னுமென் னெஞ்சு.

[இதுவு மது.]

(பத.) என் நெஞ்சு - எனது மனமானது, சான்றவர் - நற்பண்புகள் நிறைந்த பெரியோர்களுடைய, கேண்மை - நட்பானது, சிதைவின்றாய் - கேடுறுதலின்றி, ஊன்றி - நிலை பெற்று, வலியாகி - (அடைந்தவர்க்கு) வன்மைமிக்க துணையாகி, பின்னும் - மேலும், பயக்கும் - பலவித நன்மைகளை யுண்டாக்கும், (அது போல,) கயம் - நீர்நிலைகளானே, திகழ் - வளத்துடன் காணப்படும், சோலை - பூஞ்சோலைகளையுடைய, மலை நாடன் - மலை நாட்டிற்குரிய தலைமகனது, கேண்மை - நட்பானது, மெலிவு இல் - குறைதலின்றி, நயம் திகழும் - இன்பமிகுந்து விளங்கும், என்னும் - என்று கருதாநின்றது. (என்று தலைவி தோழியிடங் கூறினாள்.)

(ப-ரை.) அமைந்தாருடைய நட்புச் சிதைதலின்றி நிலைபெற்று அடைந்தார்க்கு வலியாகி மறுமையின்கண்ணும் பயனைச் செய்யும்; அதுபோல, நீராற்றிகழாநின்ற சோலையையுடைய மலைநாடனுடைய நட்பு மெலிவின்றி இன்பத்தைத் திகழ்விக்கும் என்னாநின்றது என்னெஞ்சு.

(விரி.) கயம் - நீர், நீர்நிலை (குளம்). மெலிவு - வருத்தமுமாம். மெலிவில் நயம் - துன்பங்கலவாத இன்பம். (ரு)

பொன்னிணர் வேங்கை கமழு நளிசோலை
நன்மலை நாட! மறவல் வயங்கிழைக்கு
கின்னல தில்லையா லீயாயோ கண்ணோட்டத்
தின்னுயிர் தாங்கு மருந்து.

[புணர்ந்து நீங்குந் தலைமகனைக் கண்டு
தோழி வரைவுகடாயது.]

(பத.) பொன் - பொன் போன்ற, இணர் - பூங்கொத்துக்களையுடைய, வேங்கை - வேங்கைமரங்கள், கமழும் - மணக்கும்படியான, நளி - குளிர்ந்த, சோலை - பூஞ்சோலைகள் மிகுந்த, நல் மலை

நாட - நல்ல மலைநாட்டிற்குரிய தலைமகனே! மறவல் - (தலைமகளை) மறவாது காப்பாயாக. வயங்கு இழைக்கு - விளங்குகின்ற அணி கலங்களை யணிந்த தலைமகளுக்கு, நின் அலது - நின்னையல்லாமல், இல்லை - (உதவும் உறவினர் எவரும்) கிடையாது, ஆல் - ஆகலின், கண் ஓட்டத்து - நின் அருட் பார்வையால், இன் உயிர் - இனிய உயிரை, தாங்கு - நிலை பெறுவிக்கும், மருந்து - மருந்து போன்ற மணவினையை, ஈயாய் - (நீ அவளுக்குக்) கொடுத்து அவளைக் காப்பாற்றுவாயாக. (என்று தோழி தலைமகனிடங் கூறினள்.)

(ப-ரை.) பொன்போன்ற பூங்கொத்தையுடைய வேங்கை கமழாநின்ற குளிர்ந்த சோலையையுடைய நன்மலை நாடனே! மறவாதொழிவாயாக; வயங்கிழைக்கு நின்னல்லது ஓரரணில்லையாதலால், நின்கண்ணோட்டத்தான் இன்னுயிரைத் தாங்கு மருந்து நல்காயோ?

(விரி.) புணர்ந்து நீங்கும் - பாங்கியிற் கூட்டத்தாற் றலைவியைக் கூடிப் பிரியும். ஓ - இசை நிறை: வினாவுமாம். (கூ)

காய்ந்தீய லன்னை! இவளோ தவறில
ளோங்கிய செந்நீ ரிழிதருங் கான்யாற்றுட்
டேங்கலந்து வந்த வருவி குடைந்தாடத்
தாஞ்சிவப் புற்றன கண்.

[பகற்குறிக்கட் டலைமகன் சிறைப்புறத்தானாகப் படைத்துமொழி கிளவியாற் றோழி வரைவுகடாயது.]

(பத.) அன்னை - அன்னாய்! ஓங்கிய - சிறப்பு மிக்க, செந்நீர் - சிவந்த நீரானது, இழிதரும் - வழிந்தோடும்படியான, கான்யாற்றுள் - (மலையூடே செல்லும்) காட்டாற்றினிடத்தே, தேம் - தேனானது, கலந்து வந்த - கலக்கப்பெற்று ஓடிய, அருவி - நீர்வீழ்ச்சியில், குடைந்து ஆட - (தலைமகள்) மூழ்கி விளையாடியபடியால், கண் - (அவளுடைய) கண்கள், சிவப்புற்றன - சிவக்கலாயின, (ஆதலால்,) இவளோ - இத்தலைமகளோ, தவறிலள் - யாதுந் தவறிய நிலையில்

உள்ளவளல்லள், காய்ந்தீயல் - (வீணே எங்களைச்) சினந்து மொழி யல் வேண்டா. (என்று தோழி செவிலித்தாயிடங் கூறினாள்.)

(ப-ரை.) வெகுள வேண்டா அன்னாய்! குற்றமிலள் இவள்; மிக்க சிவந்தநீர் தாழ்ந்தோடுங் கான்யாற்றுள் தேனோடுங் கலந்து வந்த அருவிநீரைக் குடைந்தாடுதலான் இவள் கண்கள் தாஞ் சிவப்புற்றன: ஆதலான்.

(விரி.) அன்னை - அண்மைவிளி. தாம் - அசைநிலை. பகற் குறி - தோழியினுதவியால் பகற்கண்ணே தலைமகனைத் தலைமகள் கண்டு கூடுமிடம். இது தினைப்புனத்தின் அருகிலுள்ள சோலை யாகும். அங்குச் சென்று திரும்பிய தலைமகள் தினைப்புனத்தின் கண்ணே தன்னைக் காணவந்த செவிலித்தாயினைக் கண்டு திகைத்து நின்றாள். செவிலி தலைமகளைக் கண்டு அவள் கண்கள் சிவப்புற்ற மைக்குக் காரணம் யாதென வினவினள். இந்நிலையினைத் தலை மகன் தினைப்புன வேலியின் வெளிப்புறமாக நின்று நோக்கிக் கொண்டிருந்தனன். அப்பொழுது தோழி தலைமகட்குப் புணர்ச் சியாலுண்டாகிய கட்சிவப்பினை அருவியாட்டத்தாலுண்டாய தெனச் செவிலிக்குக் கூறி, தலைமகனுக்கும் தலைமகளை விரைவில் வரைந்துகொள்வது நன்றெனப் புலப்படக் கூறிய செய்யுளாகு மிது. படைத்து மொழி கிளவி-புதிதாக வொன்றை அமைத்துக் கூறும் சொற்றொடர். காய்ந்தீயல் - வியங்கோள் வினை முற்று. (எ)

வெறிகமழ் தண்சுனைத் தெண்ணீர் துளும்பக்
கறிவளர் தேமா நறுங்கனி வீழும்
வெறிகமழ் தண்சோலை நாட! ஒன் றுண்டோ
வறிவின்க ணின்ற மடம்.

[புணர்ந்து நீங்குந் தலைமகனைக் கண்டு தோழி வரைவுகடாயது.]

(பத.) கறிவளர் - மிளகுக் கொடிகள் வளர்ந்து படர்ந்துள்ள, தேமா - தித்திப்பான மாவினது, நறும் - நல்ல, கனி - பழமானது,

வெறிகமழ் - மண நாறும்படியான, தண் - குளிர்ந்த, சுனை - சுனையின் கணுள்ள, தெள் நீர் - தெளிந்த நீரானது, துளும்ப - அலையும்படி, வீழும் - விழும்படியான, வெறி கமழ் - நறு நாற்ற மிக்க, தண் - குளிர்ந்த, சோலை - சோலைகள் சூழ்ந்த, நாட - நாட்டிற்குரிய தலைமகனே! அறிவின்கண் - (சிறந்தோனாகிய நினது) நல்லறிவினிடத்தே, நின்ற - (பிறர் எடுத்துக் கூறும்படி) தங்கியுள்ள, மடம் - அறியாமையாகிய, ஒன்று - ஒரு பொருள், உண்டோ - காணப் படுமோ? (காணப்படமாட்டாது. ஆகலின், அறிவாளியாகிய நினக்குத் தலைமகளை நீ விரைந்து மணம்புரிய வேண்டுமென்பதை விளக்க வேண்டுவதின்று, என்று தோழி தலைமகனிடங் கூறினாள்.)

(ப-ரை.) விரை கமழாநின்ற குளிர்ந்த சுனையின்கண் தெளிந்த நீர் துளும்ப மிளகு படர்ந்து வளராநின்ற இனிய மாவினது நறுவிய கனிவீழும் வெறிகமழ் தண்சோலை நாடனே! நின் அறிவின்கண் நின்றதொரு பேதைமை யுண்டோ?

(விரி.) தன்னேரில்லாத் தலைமகனாதலின், தோழி, "நாட! ஒன்றுண்டோ வறிவின்கணின்ற மடம்," எனக் குறிப்பாக வரைவு கடாயினள். சுனை - மலையின்கண்ணுள்ள நீர்நிலை. கறி - குறிஞ்சி நிலக் கருப்பொருள். (அ)

மன்றத் துறுகற் கருங்கண் முசுவுகளுங்
குன்றக நாடன் றெளித்த தெளிவினை
நன்றென்று தேறித் தெளிந்தேன் றலையளி
யொன்றுமற் றென்று மனைத்து.

[தலைமகன் சிறைப்புறத்தானாக இயற்பழித்த தோழிக்குத் தலைமகள் இயற்பட மொழிந்தது.]

(பத.) மன்றத்து - பலர் கூடும் வெளியில், உறுகல் - பொருந்தியுள்ள கற்களில், கரும் கண் - கரிய கண்களையுடைய, முசு - முசு என்னும் ஒருவகைக் குரங்குகள், உகளும் - குதித்து

விளையாடும், குன்று அக நாடன் - மலைகளைத் தன்னிடத்தே கொண்ட நாட்டுக்குரிய தலைமகன், தெளித்த - (இயற்கைப் புணர்ச்சிக் காலத்தே யான் தெளிவுறும்படி என்னை) தெளிவித்த, தெளிவினை - தெளிவாகிய தலைமகனுக்கும் எனக்கு மேற்பட்ட கூட்டப் பெருமையினை, நன்று என்று - (எதிர்கால வாழ்க்கையிற் பெரிய) நன்மையினைத் தரக்கூடிய ஒன்றென்று, தேறி - அறிந்து, தெளிந்தேன் - தீர்மானித்தேன், (அப்படித் தீர்மானித்த எனக்கு) தலை அளி-(அன்று அவன் காட்டியது) மிகுந்த அன்பாகிய, ஒன்று - ஒன்றாக வுளது, ஒன்றும் - அவ் வொன்றும், அனைத்து - எக்காலும் அத்தன்மையினின்றும் மாறாது என்னைக் காக்கும். (ஆகலின், நீ வீணே தலைமகனின் தன்மையினைப் பழித்துக் கூறவேண்டா எனத் தலைமகள் தோழியிடங் கூறினாள்.)

(ப-ரை.) மன்றங்களிலே நெருங்கிய கல்லின்கண் கருங்கண் முசுக்கள் குதிபாயுங் குன்றகநாடன் என் மனத்தைத் தெளிவித்த தெளிவினைப் பிழையாதென்று தேறினேற்கு அவன் செய்த தலையளி யொன்று; அவ் வொன்றும் அப்பெற்றித்தாய்ப் பழுதாகாது.

(விரி.) மன்றத்துறுகல் - பலர்கூடும் வெளியில் பலரும் அமர்தற்குரியதாகப் பொருந்திய கற்கள் எனலுமாம். உறுகல் - மிகுந்த கற்கள் எனும் பொருளில் உரிச் சொற்றொடருமாம். மற்று - அசைநிலை. (க)

பிரைசங் கொளவீழ்ந்த தீந்தே னிறாஅன்
மரையான் குழவி குளம்பிற் றுகைக்கும்
வரையக நாட! வரையாய் வரினெந்
நிரைதொடி வாழ்த லிலள்.

[தோழி தலைமகனைக் கண்டு வரைவுகடாயது.]

(பத.) பிரைசம் - தேனினை, கொள - வேடுவர் கைக் கொண்டு செல்ல, வீழ்ந்த - வீழ்ந்து கிடக்கும்படியான, தீம்

தேன் இறால் - தித்திப்பான தேனிறால்களை, மரையான் - மான் களின், குழவி - கன்றுகள், குளம்பின் - தம் காற் குளம்புகளினாலே, துவைக்கும் - மிதித்து உழக்கும்படியான, வரை அக நாட - மலைகளைத் தன்னிடத்தே கொண்ட நாட்டிற்குரிய தலைமகனே! வரையாய் - (நீ தலைமகளை விரைந்து) மணந்து கொள்வாயாக, வரின் - (அங்ஙனம் வரையாது களவுப் புணர்ச்சியினையே விரும்பி) வந்து கொண்டிருப்பாயாயின், எம் நிரைதொடி - எங்கள் நிரை தொடியாகிய தலைமகள், வாழ்தல் இலள் - (வருத்த மிகுதியால்) உயிர்வாழ்தலின்றி மடிவள். (என்று தோழி தலைமகனிடங் கூறினாள்.)

(ப-ரை.) தேறலைப் பிறர்கொள்ள வீழ்ந்த தீந்தேன் இறால்களை மரையான்கன்று குளம்பால் உழக்கும் வரையக நாடனே! நீ வரையாது வருவாயாயின், எங்கள் நிரை தொடி உயிர்வாழாள்.

(விரி.) பிரைசம்=பிரசம் - தேன்; அகர ஐகார இடைப் போலி. இறாஅல் - இசைநிறை யளபெடை. வரையாய் - ஏவ லொருமை வினைமுற்று: அன்றி, எதிர்மறை முற்றெச்சமுமாம். நிரை தொடி - கூடி நெருங்கிய வளையல்களை யணிந்த தலைமகள்: வினைத்தொகையன்மொழி. (ய)

கேழ லுழுத கரிபுனக் கொல்லையுள்
வாழை முதுகாய் கடுவன் புதைத்தயருந்
தாழருவி நாடன் றெளிகொடுத்தா னென்றோழி
நேர்வளை நெஞ்சூன்று கோல்.

[தலைமகன் சிறைப்புறத் தானாகத் தலைமகள்
கேட்பத் தோழி தலைமகனை இயற்பழித்தது.]

(பத.) கேழல் - பன்றிகள், உழுத - கொம்பினாலே கிளறி விட்டுள்ளதும், கரி - (வேடுவர்களாலே சுட்டுக்) கரியப் பெற்றது மான, புனக் கொல்லையுள் - தினைப்புனமாகிய நிலத்தினிடத்தே,

கடுவன் - ஆண் குரங்குகள், வாழை முதுகாய் - வாழையின் முதிர்ந்த காய்களை (ப் பழுப்பிக்கவேண்டி,) புதைத்து - புதைத்து வைத்து, அயரும் - (புதைத்த விடந் தெரியாமல்) வருத்தமுறும்படியாக, தாழ் அருவி - (அத்தினைப்புன வழியாகப் பெருக்கெடுத்துத்) தாழ்ந்து செல்லும்படியான நீர்வீழ்ச்சிகளையுடைய, நாடன் - நாட்டிற்குரிய தலைமகன், என் தோழி - என்னுடைய உயிர்ப்பாங்கியாகிய, நேர்வளை - நல்ல வளையலணிந்த தலைமகளின், நெஞ்சு - மார்பினிடத்தே, ஊன்று - தைத்த, கோல் - அம்பு போன்ற, தெளி - தெளிவாகிய உறுதி மொழிகளை, கொடுத்தான் - கொடுத்து விட்டான். (என்று தோழி கூறினாள்.)

(ப-ரை.) பன்றிகள் கொம்பினால் உழுத சுட்டுக்கரிந்த புனக்கொல்லையுள் வாழையின் முதிர்ந்தகாயைக் குரங்கினுட் கடுவன்கள் அப்புழுதியிற் புதைத்தயருந் தாழ்ந்த அருவிகளையுடைய நாடன் என்றோழியாகிய நேர்வளைக்கு அக்காலத்து நெஞ்சூன்று கோலாகத் தெள்ளிய வஞ்சினங் கூறினான்.

(விரி.) தலைமகன் வரைவு நீட்டித்தவழி அது பொறாத தோழி வருத்த மிகுதியாற் கூறியதாகு மிது. நேர்வளை - வினைத்தொகை யன்மொழி. "நேர்வளை நெஞ்சூன்று கோல்," என்றமையான், இயற்பழித்ததாயிற்று. (கக)

பெருங்கை யிருங்களி றைவன மாந்திக்
கருங்கான் மராம்பொழிற் பாசடைத் துஞ்சுஞ்
சுரும்பிமிர் சோலை மலைநாடன் கேண்மை
பொருந்தினர்க் கேமாப் புடைத்து.

[தலைமகன் சிறைப்புறத்தானாக இயற்பழித்த தோழிக்குத் தலைமகள் இயற்படமொழிந்தது.]

(பத.) பெரும் கை - பெரிய துதிக்கையினையுடைய, இரும் - பெரிய, களிறு - ஆண் யானையானது, ஐவனம் - மலை நெற்பயிரை,

மாந்தி - தின்றுவிட்டு, கரும் கால் - கரிய அடிப்பாகத்தையுடைய, மராம் - மராமரங்கள் நிறைந்த, பொழில் - சோலையினிடத்தே யுள்ள, பாசு அடை - பசிய இலைகளாலுண்டாகிய நிழலினிடத்தே, துஞ்சும் - உறங்க இடமாயதும், சுரும்பு - வண்டினங்கள், இமிர் - ஒலிக்கின்ற, சோலை - பூங்காக்கள் நிறைந்துள்ளதுமாகிய, மலை - மலைகளாற் சூழப்பட்ட, நாடன் - நாட்டிற்குரிய தலைமகனின், கேண்மை - நட்பானது, பொருந்தினார்க்கு - அவனை நெருங்கி வாழ்வார்களுக்கு, ஏமாப்பு உடைத்து - பாதுகாவலாகப் பொருந்தும் பண்பினைக் கொண்டதாம். (என்று தலைமகள் தோழியிடங் கூறினாள்.)

(ப-ரை.) பெருங்கையையுடைய இருங்களிறு ஐவன நெல்லைத் தின்று, கருங்காலையுடைய மராம்பொழிலிற் பச்சிலைநிழலிற் றுயிலும் வண்டுகள் ஒலிக்கும் சோலைமலை நாடன் கேண்மை பொருந்தினார்க்கு ஏமாப்புடைத்து.

(விரி.) பொருந்தினார் - காதலிமார்கள். "களிறு துஞ்சும் மலை, சுரும்பிமிர் சோலைமலை," எனக் கூட்டுக. "கேண்மை பொருந்தினார்க்கு ஏமாப்பாகப் பொருந்துதலையுடைத்து," என முடிக்க. (கஉ)

வார்குர லேனல் வளைவாய்க் கிளைகவரு
நீராற் றெளிதிகழ் காநாடன் கேண்மையே
யார்வத்தி னார முயங்கினேன் வேலனு
மீர வலித்தான் மறி.

[வெறியாட் டெடுத்துக் கொண்டவிடத்துத் தோழிக்குத் தலைமகள் அறத்தொடு நின்றது.]

(பத.) (தோழியே) வார் - நீண்ட, குரல் - கதிரினையுடைய, ஏனல் - தினையினை, வளை - வளைந்த, வாய் - வாயினையுடைய, கி(ள்)ளை - கிளிகள், கவரும் - பற்றிக்கொண்டு செல்லும், நீரால் - தன்மையினாலே (என்னையன்மார் என்னைத் தினைப்புனக் காவலின்

கண் நிறுத்த அதனாலே,) தெளி - விளக்கமாக, திகழ் - விளங்கா நின்ற, கா - சோலைகளையுடைய, நாடன் - நாட்டிற்குரிய தலைமகனது, கேண்மையே - நட்பொன்றினையே, ஆர்வத்தின் - காதலுடனே, ஆர - மிகுதியும், முயங்கினேன் - மேற்கொண்டனன், (அதனால், என் மேனியிற் சிறிது மாற்ற முண்டாயது; உண்டாகவே, அது தெய்வத்தாலாயது என்று கருதி,) வேலனும் - (வெறி யாடுபவனாகிய) வேல் கைக்கொண்ட தேவராளனும், மறி - ஆட்டுக் குட்டியினை, ஈர - (முருகற்குப்) பலியாகக் கொடுத்து வெறியாட, வலித்தான் - துணிந்துவிட்டான். (ஆகலின், நீ சென்று உண்மையை யுரைத்து அதனை விலக்குவாயாக, என்று தலைமகள் தோழியிடங் கூறினாள்.)

(ப-ரை.) நீண்ட கதிரினையுடைய பசுந்தினையை வளைவாய்க் கிளியினம் கவரும் நீரானே தெளிந்து திகழாநின்ற சோலைகளையுடைய மலைநாடன் கேண்மையைக் காதலினாலே நிரம்ப மேவினேன்; பிரிதலாற் றேறுபினேன்; அவ்வாற்றாமை தெய்வத்தினாயது என்று முருகற்கு மறியையறுக்கத் துணிந்தான் வேலோன்; தோழி! இதனை விலக்குவாயாக.

(விரி.) வெறியாட் டெடுத்தல் - வேலற்கு பூசையிடல். அறத்தொடு நிற்றல் - உண்மையினை எடுத்துச் சொல்லித் தவறாகக் காரியங்களை நிகழ வொட்டாது நடத்தல். கிளை = கிள்ளை - கிளி: இடைக்குறை விகாரம். ஏகாரம் - பிரிநிலை. வேலனும் - உம்மை உயர்வு சிறப்புப் பொருளது. (கஅ)

குறையொன் றுடையேன்மற் றோழி! நிறையில்லா
மன்னுயிர்க் கேமஞ் செயல்வேண்டு மின்னே
யராவழங்கு நீள்சோலை நாடனை நம்மி
லிராவார லென்ப துரை.

[தலைமகன் வரும்வழியின் ஏதத்திற்குக் கவன்ற தலைமகள் வரைவு வேட்டுத் தோழிக்குச் சொல்லியது.]

(பத.) தோழி - தோழியே! குறை ஒன்று - நின்னால் முடிக்கப் பெற வேண்டிய காரிய மொன்று, உடையேன் - என்பாலுளது, (அது யாதென்றால்,) நிறை இல்லா - (மனக்கவற்சியால்) ஒருவழி நிற்றலைச் செய்யாத, மன் உயிர்க்கு - என்பாலுள்ள எனதுயிர்க்கு, ஏமம் - பாது காவலை, செயல் வேண்டும் - நீ செய்து என்னைப் பாதுகாக்கவேண்டும் என்பதாம் (அஃதெங்ஙனமெனின்,) நீள் சோலை - நீண்டு வளர்ந்த மரங்களையுடைய சோலைகள் சூழ்ந்த, நாடனை - நாட்டிற்குரிய தலைமகனை, இன்னே - இப்பொழுதிருந்தே, அரா வழங்கு - பாம்புகள் நடமாடுகின்ற (சுற்றுப்புறத்தினையுடைய,) நம் இல் - (இரவுக் குறியாகிய) நம் வீட்டுப்புறத்தே, இராவாரல் - இராக்காலத்து வருதல் வேண்டா (வரைவினைக் கைக்கொண்டு பகற்போதே வருதல் வேண்டும்,) என்பது - என்ற செய்தியை, உரை - சொல்வாயாக என்பதாம். (என்று தலைமகள் தோழியிடங் கூறினள்.)

(ப-ரை.) நின்னன் ஒரு காரியமுடையேன், தோழி! நிலையில்லாத என் மன்னுயிர்க்கு அரணஞ் செய்யவேண்டும்; இப்பொழுதே பாம்புகளான் வழங்கப்படுகின்ற நீண்ட சோலையையுடைய நாடனை நம்மனையின்கண் இரா வர வேண்டா என்பதனைச் சொல்.

(விரி.) மற்று - அசைநிலை. ஏ - பிரிநிலை. ஏதம் - துன்பம். வேட்டல் - விரும்பல். தலைவன் அராவழங்கு இற்புறம் வந்து செல்வது தலைவிக்குப் பெருந்துயர் விளைக்கின்ற தென்பார், "நிறையில்லா மன்னுயிர்க் கேமஞ் செயல் வேண்டும்," என்றார். (கஉ)

குறிஞ்சி முற்றும்.

---

## இரண்டாவது—முல்லை.

செங்கதிர்ச் செல்வன் சினங்கரந்த போழ்திற்
பைங்கொடி முல்லை மணங்கமழ—வண்டிமிரக்
காரோ டலமருங் கார்வானங் காண்டொறு
நீரோ டலமருங் கண்.

[பருவங் கண்டழிந்த தலைமகள்
தோழிக்குச் சொல்லியது.]

(பத.) செம் கதிர் - செம்மையாகிய கதிர்களையே, செல்வன் - செல்வமாகக் கொண்ட கதிரவன், சினம் - தனது சீற்றமாகிய வெப்பத்தை, கரந்த போழ்தினல் - மறைத்துக் கொண்ட மாலைப் பொழுதின்கண், பை கொடி - பசிய கொடிகளையுடைய, முல்லை - முல்லைச் செடிகள், மணம் கமழ - (பூத்து) மணத்தை வீசுதலானே, வண்டு இமிர - வண்டுகள் சூழ்ந்து ஒலிக்க, (வந்த,) கார் ஓடு - கார் காலத்துடனே, அலமரும் - சுழன்று காணும்படியான, கார் - முகில்களையுடைய, வானம் - விசும்பினை, காண் தொறும் - காணுகின்ற வேளைகளிலெல்லாம், கண் - என் கண்கள், நீர் ஓடு - நீரினேடுங்கூட, அலமரும் - தடுமாறி வருந்தாநின்றன. (என்று தலைமகள் தோழியிடங் கூறினள்.)

(ப-ரை.) செய்ய கதிரினையுடைய செல்வன் சீற்றமடங்கிய காலத்தின்கண் பசுங்கொடியையுடைய முல்லைகள் பூத்து மணங்கமழ்தலான் வண்டுகள் ஒலிக்கக் கார்ப்பருவத்தோடு தடுமாறுகின்ற முகில்களையுடைய வானங் காணுந்தோறும் நீரோடுங்கூடத் தடுமாறுகின்றன கண்கள்.

(விரி.) பருவம் - கார் காலம். முல்லைக்கு மாலையாகிய சிறு பொழுது சிறந்து, முல்லை பூக்க வருதலின், "செல்வன் சினங் கரந்த " போழ்து," என்பதனை மாலையெனக் கொள்ளலாயிற்

றென்க. போழ்தினால் - வேற்றுமை மயக்கம். கார் - முல்லைக்குரிய பெரும் பொழுது. அலமரும் - அலமா முதனிலை. (கரு)

தடமென் பணைத்தோளி! நீத்தாரோ வாரார்
மடநடை மஞ்ஞை யகவக்—கடன்முகந்து
மின்னோடு வந்த தெழில்வானம் வந்தென்னை
யென்னாதி யென்பாரு மில்.

[இதுவு மது.]

(பத.) தடம் - பெரிய, மெல் - மெல்லியவாகிய, பணை - மூங்கிலினை யொத்த, தோளி - தோள்களையுடைய தோழியே! நீத்தாரோ - (நம்மைப்) பிரிந்து சென்றவராகிய தலைவரோ, வாரார் - (இப்பொழுது) வருகின்றவராகத் தோன்றவில்லை, (ஆனால்) எழில் வானம் - அழகிய முகிலோ, மடம் நடை - மெதுவான நடையினையுடைய, மஞ்ஞை - மயில்கள், அகவ - களித்துக் கூப்பிட, கடல் முகந்து - கடனீரைக் குடித்து, மின் ஓடு-மின்னல்களுடனே, வந்தது - வந்துவிட்டது, வந்து என்னை - என் பக்கலிற் சேர்ந்து என்னை நோக்கி, என் ஆதி - நீ எங்ஙனம் வாழ்கின்றனை? உன்னிலை யாது? என்பாரும் - என்று என்பால் இரங்கி என் செழுமையை வினவுகின்றவரும், இல் - இல்லாது தனியே வருந்துகின்றனன். (என்று தலைமகள் தோழியிடங் கூறினாள்.)

(ப-ரை.) பெரியவாய் மெல்லியவாகிய மூங்கில்போன்றிருந்த தோளினையுடையாய்! நம்மைத் துறந்தார் இக்காலத்து வருகின்றிலர்; மெல்லிய நடையினையுடைய மயில்கள் அழைக்கக் கடன் முகந்து மின்னுடனே வந்தது, எழிலினையுடைய வானம்; ஆதலால், பின்னையும் என்னை வந்து, "நீ என் செய்யக் கடவாய்!" என்றிரங்கி ஒன்றைச் சொல்லுவாருமில்லை.

(விரி.) வானம் - இடவாகுபெயர். என்பாரும் - உம்மை இறந்தது தழுவியது. பணைத்தோளி - உவமைத்தொகையன் மொழி; அண்மைவிளி கொண்டுள்ளது. (கசு)

தண்ணறுங் கோட றுடுப்பெடுப்பக் காரெதிரி
விண்ணுயர் வானத் துருமுரற்றத்—திண்ணிதிற்
புல்லுந ரில்லார் நடுங்கச் சிறுமாலை
கொல்லுநர் போல வரும்.

[இதுவு மது.]

(பத.) சிறுமாலை - சிறு பொழுதாகிய அந்திவேளை, தண் - குளிர்ந்த, நறும் - மணத்தினையுடைய, கோடல் - வெண்காந்தளானது, துடுப்பு - துடுப்பினைப் போன்ற அரும்புக்குலைகளை, எடுப்ப - ஏந்திக்கொண்டு நிற்க, கார் - கார்காலத்தை, எதிரி - எதிர்கொண்டு, விண் உயர் - விண் வெளியிலே உயர்ந்து திரியும்படியான, வானத்து - முகில்களிடத்திலேயுள்ள, உரும் - இடிகள், உரற்ற - இடித் தொலிக்க, திண்ணிதின் - நன்றாக, புல்லுநர் - தழுவிக் கொள்பவர்களாகிய காதலரை, இல்லார் - பிரிந்தவர்களாகிய காதலிமார்கள், நடுங்க - (துன்பமிகுதியாற் றுயருற்று) நடுங்கும்படியாக, கொல்லுநர் போல - கொலையாளிகளைப் போன்று, வரும் - வாராநின்றது. (என்று தலைமகள் தோழியிடங் கூறினாள்.)

(ப-ரை.) குளிர்ந்த நறுங்கோடல் துடுப்புப்போலப் பூங்குலைகளை யேந்த, கார்காலத்தை ஏன்றுகொண்டு முகில்கள் மிக்க வானத்தின்கண் உருமேறு ஒலிப்ப, திண்ணிதாக முயங்குவாரை யில்லாதார் நடுங்கும் வகை துன்பத்தைச் செய்யுமாலை கொல்வாரைப் போல வாராநின்றது.

(விரி.) துடுப்பு - உவமையாகுபெயர். தலைமகள் தலைமகனைச் சார்ந்து தழுவலிற் பெரிதுங் கருத்துடையாள் என்பார், "திண்ணிதிற் புல்லுநரில்லார்," என்றார். (கஎ)

கதழுறை வானஞ் சிதற விதழகத்துத்
தாதிணர்க் கொன்றை யெரிவளர்ப்பப் பாஅ
யிடிப்பது போலு மெழில்வான நோக்கித்
துடிப்பது போலு முயிர்.

[இதுவு மது.]

(பத.) வானம் - முகில்கள், கதழ் - விரைவாக, உறை - மழைத்துளிகளை, சிதற - சிதறிப் பெய்ய, அகத்து - உள்ளிடத்தே, இதழ் - இதழ்களையும், தாது - பூந்தாதுகளையுமுடைய (மொட்டுக்கள் நிறைந்த,) இணர் - பூங்கொத்துக்களையுடைய, கொன்றை - கொன்றை மரங்கள், எரி வளர்ப்ப - நெருப்பினைப் போன்று மலர்ந்து காண, பாய் - பரந்து, இடிப்பது போலும் - இடித்துரைப் பதுபோல முழங்கும், எழில் - அழகினையுடைய, வானம் - வான் வெளியினை, நோக்கி - யான் பார்ப்பதால், உயிர் - எனதுயிரானது, துடிப்பது போலும் - வருந்தித் துயருறுவதுபோலாகின்றது. (என்று தலைமகள் தோழியிடங் கூறினள்.)

(ப-ரை.) விரைந்து துளிகளை முகில்கள் இதழகத்தே சிதற, தாதினையுடைய பூங்கொத்துக்களையுடைய கொன்றைகள் எரிநிறத்தை மிகுப்ப, பரந்து கழறுவது போலும் எழில் விசும்பைக் காணுந்தோறும் வருந்தித் துடிப்பது போலாகின்றது என் உடலம்.

(விரி.) பாஅய் - இசைநிறை யளபெடை. நோக்கி - காரணப் பொருளில் வந்த வினையெச்சம். போலும் - முன்னது உவம வுருபு, பின்னது ஒப்பில் போலி. உயிர் தானியாகுபெயராய் உடலினையு முணர்த்தும். (கஅ)

ஆலி விருப்புற் றகவிப் புறவெல்லாம்
பீலி பரப்பி மயிலாலச்—சூலி

விரிகுவது போலுமிக் காரதிர வாவி
யுருகுவது போலு மெனக்கு.

[இதுவு மது.]

(பத.) மயில் - மயிலினங்கள், ஆலி - மழைத்துளிகளை, விருப்புற்று - காதலுடனே, அகவி - கூவியழைத்துக் கொண்டு, புறவு எல்லாம் - முல்லை நிலமாகிய எல்லாப் பாகங்களிலும், பீலி - தோகைகளை, பரப்பி - விரித்து, ஆல - ஆடும்படி, சூலி - கருக்கொண்டு, விரிகுவது போலும் - (அக்கருவினை வெளிவிட) விரித்து கொடுப்பது போல மின்னுகின்ற, இக்கார் - இந்த முகிலானது, அதிர - முழங்க, (அதனால்,) எனக்கு - எனது, ஆவி - உயிரானது, உருகுவது போலும் - உலையிலிட்டு உருகப் பெற்றது போல வருந்தாநிற்கும். (என்று தோழியிடத் தலைமகள் கூறினாள்.)

(ப-ரை.) மழைத்துளிகளைக் காதலித்தழைத்துக் காடெலாந் தோகைகளைப் பரப்பி மயிலினங்கள் ஆட, கருக்கொண்டு விரிகுவது போலும் இக்கார் முழங்க எனக்கு என் உயிர் உருகுவது போலாகின்றது.

(விரி.) எனக்கு - உருபு மயக்கம். போலும் - முன்னது பெயரெச்சம், பின்னது உவம வுருபு. (கக)

இனத்த வருங்கலை பொங்கப் புனத்த
கொடிமயங்கு முல்லை தளிர்ப்ப விடிமயங்கி
யானு மவரும் வருந்தச் சிறுமாலை
தானும் புயலும் வரும்.

[இதுவு மது.]

(பத.) இனத்த - கூட்டமான, அரும் - அரிய, கலை - ஆண் மான்கள், பொங்க - களித்துத் திரியவும், புனத்த - கொல்லைகளி

லுள்ள, கொடி மயங்கு - கொடிகள் கலந்து படர்ந்துள்ள, முல்லை - முல்லைச் செடிகள், தளிர்ப்ப - தழைக்கவும், யானும் - நானும், அவரும் - (என்னைப் பிரிந்து தங்கியுள்ள) என் காதலரும், வருந்த - துன்புறும்படியாகவும், சிறு மாலை - சிறு பொழுதாகிய மாலைவேளை யானது, இடி மயங்கி - இடித்தலோடு கூடி, தானும் புயலும் - தானும் முகிலுமாக, வரும் - வாராநிற்கும். (என்று தலைமகள் தோழியிடங் கூறினள்.)

(ப-ரை.) இனங்களையுடைய கலைகள் களித்து மிக, புனங்களிலுள்ள கொடிமிடைந்த முல்லை தளிர்ப்ப, இடியோடே கூட மிடைந்து, யானும் என் காதலரும் வருந்த, துன்பத்தைச் செய்யும்மாலை தானும் மழைப்பெயலும் எம் மேல் வாராநின்றன.

(விரி.) கலை பொங்க, முல்லை தளிர்ப்ப, யானும் அவரும் வருந்த, சிறுமாலை மயங்கி, வரும் என முடிக்க. இனத்த புனத்த - குறிப்புப் பெயரெச்சங்கள். (உ0)

காரிகை வாடத் துறந்தாரும் வாராமுன்
கார்கொடி முல்லை யெயிறீனக்—காரோ
டுடன்பட்டு வந்தலைக்கு மாலைக்கோ வெம்மின்
மடம்பட்டு வாழ்கிற்பா ரில்.

[இதுவு மது.]

(பத.) துறந்தாரும் - நம்மைப் பிரிந்துசென்ற தலைவரும், வாராமுன் - வருவதற்கு முன்பே, கார் - மழையினாலே செழித்த, கொடி - கொடிகளையுடைய, முல்லை - முல்லைச் செடியானது, எயிறு - நம் பற்கள் போன்ற முல்லை முகைகளை, ஈன-தோற்றுவிக்க (அதனாலே,) காரிகை - நமது அழகு, வாட - குறைந்து போகும்படி, கார் ஒடு - கார்காலத்துடனே, உடன்பட்டு - ஒன்று கூடி, வந்து -

தோன்றி, அலைக்கும் - நம்மை வருத்தும், மாலைக்கு - மாலையின் பொருட்டாக, எம் இன் - நம்மைப் போல, மடம்பட்டு - அறியாமையால் துன்புற்று, வாழ்கிற்பார் - உயிர்வாழ் ஊறுள்ளவர்கள், இல் - இல்லை (என்று தலைமகள் தோழியிடங் கூறினாள்.)

(ப-ரை.) எம்மழகு சுருங்க எம்மை நீங்கினாரும் வருவதற்கு முன்னே கருங்கொடியையுடையமுல்லைகள் நல்லார் எயிறு போல அரும்பக் காரோடு உடனே யுளதாய் வந்து எம்மை நலிகின்ற மாலைக்கு எம்மைப்போல வலியிழந்து மெலிவாற்றி யிருந்து உயிர்வாழ்வார் இல்லை.

(விரி.) ஓ - அசைநிலை. கில் - ஆற்றலிடைநிலை. எம்மின் - இன் ஒப்புப் பொருளது. (உக)

கொன்றைக் குழலூதிக் கோவலர் பின்னிரைத்துக்
கன்றமர் ராயம் புகுதர—வின்று
வழங்கிய வந்தன்று மாலையாங் காண
முழங்கிவிற் கோலிற்று வான்.

[இதுவு மது.]

(பத.) கோவலர் - இடையர்கள், கொன்றை குழல் - கொன்றைப்பழத்தைத் துருவித் துளைத்துச் செய்த குழலினை, ஊதி - ஒலித்துக்கொண்டு, பின் - பின்னாக, நிரைத்து - வரிசையாக நின்று செல்ல, கன்று - தங்கன்றுகளை, அமர் - விரும்பிய, ஆயம் - பசுக் கூட்டங்கள், புகுதர - ஊர்க்கண்ணே புகுந்து செல்ல, மாலை - அந்தி வேளையானது, இன்று - இப்பொழுது, வழங்கிய - (தன்னரசினைச்) செலுத்தும்பொருட்டு, வந்தன்று - வந்தது, வான் - முகிலும், யாம் - நாம், காண - கண்டு வருந்தும்படி, முழங்கி - ஆரவாரித்து, வில் - வானவில்லினாலே, கோலிற்று - (பெய்யவேண்டிய இடத்தை) வளைத்துக்கொண்டு பெய்யத் தொடங்கிற்று. (என்று தலைமகள் தோழியிடங் கூறினாள்.)

(ப-ரை.) கொன்றை யென்னுநின்ற குழலூதிக் கோவலர் பின்னே நிரைத்து நிற்க, கன்றை விரும்பிய நிரையாயங்கள் ஊர்தோறும் புக, இவ்விடத்தின்கண் வழங்கவேண்டி வந்தது மாலை; யாம் இறந்துபடாதிருந்து காணும்படி முழங்கி வில்லைக் கோலிற்று மழை.

(வி-ரி.) நிரைத்து - நிரைக்க: எச்சத்திரிபு. வந்தன்று - அன் சாரியை பெற்று வந்த இறந்த கால வினைமுற்று. இன்று - காலப் பொருள்தருமிடைச்சொல்; அன்றி இடப்பொருள் கருதியதுமாம். பழையவுரையில், "நிற்க," என்ற மொழி ஏட்டுப் பிரதியின் சிதைவாற் காணப் பெறாது போகப் புதிதாய்க் கருதிக் கொண்டதாம்.

தேரைத் தழங்குகுரற் றார்மணி வாயதிர்ப்ப
வார்கலி வானம் பெயறொடங்கிக்—கார்கொள
வின்றாற்ற வாரா விடுவார்கொல் காதல
ரொன்றானு நில்லா வளை.

[இதுவு மது.]

(பத.) (தோழியே!) ஆர்கலி - மிக்க வொலியினையுடைய, வானம் - முகிலானது, பெயல் தொடங்கி - பெய்தலை மேற்கொண்டு, கார் கொள - கார்ப்பருவத்தைக் கொள்ளுதலினாலே, வளை - என் கைகளிலுள்ள வளையல்களில், ஒன்று ஆனும் - ஒன்றாயினும், நில்லா - நிற்காது கழன்று வீழாநின்றது, காதலர் - நம் தலைவர், தேரை - தவளைகளைப்போன்று, தழங்கு - ஒலிக்கின்ற, குரல் - ஒலியினையுடைய, தார்மணி - குதிரைகளின் கழுத்தில் மாலையாக விடப்பட்டுள்ள மணிகள், வாய் அதிர்ப்ப - ஒலிக்கும்படி (தேரிலமர்ந்து,) இன்று - இற்றை நாளில், ஆற்ற - நாம் பொறுத்துக் கொள்ளும்படியாக, வாரா - வருதலைச் செய்யாது, விடுவார்கொல் - (நம்மை வருந்தும்படி) விட்டுவிடுவாரோ? (என்று தலைமகள் தோழியை வினவினள்.)

(ப-ரை.) ஓசையையுடைய முகில்கள் பெயலைக் கொட்டிக் கார்ப்பருவத்தைக் கொள்ள, நட்காதலர் தேரை போன்ற தழங்கு குரலையுடைய குதிரைத் தார்மணிகள் வாயதிர்ப்ப, இன்று நாம் ஆற்றியுளமாம் வகை வாராது விடுவார்கொல்லோ? தோழி! நம் வளை யாதும் நிற்கின்றது இல்லையால்.

(விரி.) கொல் - ஐயப் பொருள் கொண்டுளது. ஒன்றானும் எனற்பாலது ஒன்றாலும் எனலாயது. இல்லா - ஈறுகெட்ட எதிர் மறை யொன்றன்பாற் குறிப்பு வினைமுற்று. (௨௫)

கல்லேர் புறவிற் கவினிப் புதன்மிசை
முல்லை தளவொடு போதவிழ—வெல்லி
யலைவற்று விட்டன்று வானமு முண்கண்
முலைவற்று விட்டன்று நீர்.

[இதுவு மது.]

(பத.) கல் - கற்கள், ஏர் - எழுந்து காணும்படியான, புறவில் - முல்லை நிலத்தின்கண்ணே, கவினி - அழகுடன் கூடி, புதல் மிசை - புதர்களிடத்தே, முல்லை - முல்லைச் செடிகள், தளவு ஒடு - செம்முல்லைச் செடிகளுடனே, போது அவிழ - மலரும்படியாக, வானமும் - முகிலும், எல்லி - இரவு முழுவதும், அலைவு அற்று - பின் வாங்கலின்றி, நீர் - மழைத்துளிகளை, விட்டன்று - பெய்தது, உண் கண் - மையுண்ட என் கண்ணும், (நீர்) - கண்ணீர்த்துளிகளை, முலை - முலைகளின்மீதே, வற்றுவிட்டன்று - வடித்துக்கொண்டிராநின்றது. (என்று தலைமகள் தோழியிடங் கூறி வருந்தினள்.)

(ப-ரை.) கல்லெழுந்து கிடந்த கானத்தின்கண் அழகு பெற்றுப் புதல்கண்மிசை முல்லைகளும் செம்முல்லைகளும் பூக் கண் மலர, இரவின்கண் முகிலும் அலைவற்று விட்டன நீரினை; மையுண் கண்களும் முலைகண்மிசை வடித்தன நீரினை.

(விரி.) ஏர் - ஏர்ப்பு - எழுதல்: முதனிலைத் தொழிற்பெயர். அலைவு - வருந்தல்: சளைத்துப் பின்வாங்குதல். 'நீர்' என்பதனை யீரிடத்துங் கூட்டுக. பழையவுரையினிடத்தே பெரிய எழுத்துக்களிற் காண்பன எட்டுப் பிரதிகளின் சிதைவாற் காணப் பெறாமற் போகப் பின்பு புதியனவாய்க் கருதிக்கொண்டனவாம். வற்றுவிடல்-வடிதல். (உச)

(இருபத்தைந்து, இருபத்தாறாவது செய்யுட்கள் பழம் பிரதிகளிற் காணப்பெறாவாய் மறைந்தன.)

கார்ப்புடைப் பாண்டில் கமழப் புறவெல்லா
மார்ப்போ டினவண் டிமிர்ந்தாட—நீர்த்தின்றி
யொன்றா தலைக்குஞ் சிறுமாலை மாறுழந்து
நின்றாக நின்றது நீர்.

[இதுவு மது.]

(பத.) கார்ப்பு - மழையினை, உடை - உடைய, பாண்டில் - வாகைமரங்கள், கமழ - பூத்து மணக்கவும், புறவு எல்லாம் - முல்லை நிலங்களின் எல்லாப் பாகங்களிலும், இனம் வண்டு - வண்டுக் கூட்டங்கள், ஆர்ப்பு ஓடு - ஆரவாரிப்புடனே, இமிர்ந்து - ஒலித்துக் கொண்டு, ஆட - திரியவும், நீர்த்து இன்றி - பெருந்தன்மை முதலிய நற்குணங்களில்லாமல், ஒன்றாது - பகைத்து, அலைக்கும் - என்னை வருத்தும், சிறு மாலை - சிறு பொழுதாகிய மாலைக்காலம், மாறு - (எனக்கு) மாறாக, உழந்து - முயன்று, நின்று ஆக - நிற்க, (அதனாலே,) நீர் - கண்ணீரானது, நின்றது - கண்களில் நிலையாகத் தங்கலாயிற்று. (என் செய்வேன்! என்று தலைமகள் தோழியிடங் கூறினாள்.)

(விரி.) இச்செய்யுண்முதல் பின்வருஞ் செய்யுட்கள் நாற்பத்திரண்டுக்கும் பழையவுரை கிடைக்கவில்லை. தலைமகள், மாலையானது தனிமைப்பட்ட பெண்பாலாகிய தன்னை வருத்துகின்றதென்பாள், "நீர்த்தின்றி யொன்றாது அலைக்குஞ் சிறுமாலை" எனலாயினள்.

குருந்தலை வான்படலை சூடிச் சுரும்பார்ப்ப
வாயன் புகுதரும் போழ்திஞனுயிழாய் !
பின்ஞெடு நின்று பெயரும் படுமழைகொ
லென்ஞெடு பட்ட வகை.

[இதுவு மது.]

(பத.) ஆய் இழாய் - ஆராய்ந்து செய்யப்பட்ட அணிகலன்களை யணிந்த தோழியே ! ஆயன் - இடையன், குருந்தலை - மிகச் சிறந்த, வான் - பெரிய, படலை - பூமாலையினை, சூடி - அணிந்து, சுரும்பு - வண்டினங்கள், ஆர்ப்ப - (சூழ்ந்து) ஆரவாரிக்க, புகுதரும் - (ஆனிரையோடு மனைக்கண்ணே) சேருகின்ற, போழ்து இன் ஆன் - வேளையாகிய மாலைக்காலத்திலே, என் ஒடு - என் பால், பட்ட - தோன்றிய, வகை - (வருத்தமிக்க) இப்போக்கானது, பின் ஒடு - அவ் வாயன் பின்னுக, நின்று - (தோன்றி) நிலைபெற்று, பெயரும் - ஊர்ந்து வரும்படியான, படு மழை கொல் - பெய்யும் மழையினுலே தோன்றியதோ? (என்று தலைமகள் தோழியினிடம் வினவினள்.)

(விரி.) ஆயிழை - வினைத் தொகையன்மொழி. போழ்திஞன், என்ஞெடு - வேற்றுமை மயக்கங்கள். படுமழை - வினைத் தொகை. கொல் - ஐயப்பொருள் தருமிடைச் சொல். "பெயரும்," என்ற சொல் ஏட்டுப்பிரதியின் சிதைவாற் காணப்பெருது போகப் புதிதாய்க் கருதிக்கொண்டதாகும். (உ௮)

முல்லை முற்றும்.

---

## மூன்ருவது—பாலை.

எழுத்துடைக் கன்னிரைக்க வாயில் விழுத்தொடை
யம்மா றலைக்குஞ் சுரநிரைத்தம்மா
பெருந்தகு தாளாண்மைக் கேற்க வரும்பொரு
ளாகுமவர் காத லவா.

[தலைமகன் செலவினைத் தலைமகட்குத் தோழி உணர்த்தியது.]

(பத.) பெரும் தகு - பெருமையினையும் தகுதியினையுமுடைய, தாளாண்மைக்கு - ஊக்கத்தினுக்கு, ஏற்க - பொருத்தமாக, அரும் பொருள் - அருமையான பொருளாக, ஆகும் அவர் - (விருப்ப மிகுதியால்) மாறிடுந் தலைவரின், காதல் அவா - மிக்க விருப்ப மானது, எழுத்து உடை - பெயர்கள் முதலிய குறிக்கப்பெற்ற, கல் - நடு கற்கள், நிரைக்க - வரிசையாக நடுவதற்கு, வாயில் - காரணமாகிய, விழு தொடை - சிறப்பாக அம்பு தொடுக்குந்தொடை யாலே, அ மாறு - பழைமையாகிய தம் பகைவர்களை, அலைக்கும் - (மறவர்கள்) வருத்தற்கு இடமாகிய, சுரம் நிரைத்து - பாலை நிலவழி யிலே ஒழுங்காகச் செல்லுதலையுடையது. (என்று தோழி தலைமக ளிடங் கூறினள்.)

(விரி.) செலவு - பொருள் வயிற் பிரிந்து செல்லுஞ் செலவு. காதல் அவா - ஒரு பொருட் பன்மொழி. விற்போர் முதலியவற்றில் வல்ல வீரர்கட்கு மட்டுமே அக்காலத்து கல்நட்டுச் சிறப்புச் செய் தல் மரபாகலான், "எழுத்துடைக்கன்னிரைக்க வாயில் விழுத் தொடை," எனப்பட்டது. அம்மா - வியப்பிடைச் சொல். அ - பண் டறிசுட்டு. (உகூ)

வில்லுழு துண்பார் கடுகி யதரலைக்குங்
கல்சூழ் பதுக்கையா ரத்தத்திற் பாரார்கொன்
மெல்லியல் கண்ணோட்ட மின்றிப் பொருட்கிவர்ந்து
நில்லாத வுள்ளத் தவர்.

[தலைமகனின் செலவுடன்படாத தலைமகள் தோழிக்குச் சொல்லியது.]

(பத.) மெல் இயல் - மெல்லிய தன்மையாகிய, கண்ணோட் டம் - இரக்கமாகிய பண்பு, இன்றி - இல்லாமல், பொருட்கு - பொருள் தேடுதற்கண், இவர்ந்து - விருப்புற்று, நில்லாத - நம்மிடத் திலே நிலை பெறாத, உள்ளத்தவர் - நெஞ்சினைக்கொண்ட தலைவர்,

வில் - வில்லினாலே, உழுது - முயன்று போர் புரிந்து, உண்பார் - (அதனால் வரும் பொருளைக் கொண்டு) உண்டு பிழைக்கும் மறவர்கள், கடுகி - விரைந்து, அசர் அலைக்கும் - வழிச் செல்வாரை வருத்திக் கொள்ளையடிக்கும்படியான, கல் சூழ் - சுற்கள் சூழ்ந்துள்ள, பதுக்கை - சிறு தூறுகள், ஆர் - நிறைந்த, அத்தத்தின் - பாலை நிலவழியின் கொடுமையினை, பாரார் கொல் - நினைத்துப் பார்க்க மாட்டாரா? (என்று தலைமகள் தோழியை வினவினள்.)

(விரி.) கொல் - ஐயப்பொருள் தருமிடைச் சொல். பதுக்கை - சிறு பாறை யெனலுமாம். (கூ0)

பேழ்வா யிரும்புலி குஞ்சரங் கோட்பிழைத்துப்
பாழூர்ப் பொதியிற் புகாப்பார்க்கு மாரிடைச்
சூழாப் பொருணசைக்கட் சென்றோ ரருணினைந்து
வாழ்தியோ மற்றோ வுயிர்!

[பொருள்வயிற் பிரிந்து போய தலைமகனைக் காமுற்று தலைமகள் தானே கூறிக் கொண்டது.]

(பத.) உயிர் - எனது ஆருயிரே! பேழ்வாய் - பிளந்த வாயினையுடைய, இரும்புலி - பெரிய புலியானது, குஞ்சரம் - யானையினை, கோள் - கொள்ளுதலினின்றும், பிழைத்து - தவறிப்போய், பாழ் ஊர் - (மறவர்தம் கொள்ளையால்) பாழ்பட்ட ஊரினது, பொதியில் - மன்றத்தின்கண், புகா - புகுந்து, பார்க்கும் - (உணவினை) நாடி நிற்கும்படியான, ஆர் இடை - அரிய பாலைநில வழியே,சூழா - நெருங்கி, பொருள் நசை கண்-பொருள் தேடவேண்டுதலினாலே, சென்றோர் - பிரிந்து சென்ற தலைவரது, அருள் - தண்ணளியினை, நினைந்து - இன்னும் எதிர் பார்த்து, வாழ்தியோ - (மடியாது) வாழ விரும்புகின்றனையோ? (என்று தலைமகள் தன்னுயிருடன் வினவினள்.)

(விரி.) புகா, சூழா - 'செய்யா', என்னும் வாய்பாட்டு வினையெச்சங்கள். நசைக்கண் - வேற்றுமை மயக்கம். மற்று, ஓ - அசைநிலைகள். உயிர் - அண்மைவிளி கொண்டது. (கூக)

நீரி லருஞ்சுரத் தாமா னினம்வழங்கு
மாரிடை யத்த மிறப்பர்கொ லாயிழாய்!
நாணினை நீக்கி யுயிரோ டுடன்சென்று
காணப் புணர்ப்பதுகொ னெஞ்சு.

[பிரிவுணர்த்திய தோழிக்குத் தலைமகள்
உடன்படாது சொல்லியது.]

(பத.) ஆய் இழாய் - ஆராய்ந்து செய்யப்பட்ட அணிகலன்களை யணிந்த தோழியே! நெஞ்சு - என் மனமானது, நாணினை - வெட்கத்தினை, நீக்கி - துறந்து, உயிரோடு - (சாதலில்லா) உயிரினோடு, உடன் சென்று - கூடிப் போய், காண - தலைவரினைப் பார்க்க, புணர்ப்பது - விரும்புவதாயுளது, (அங்ஙனமிருக்க,) நீர்இல் - உண்ணுதற்கும் நீர் கிடைக்காத, அரும் சுரத்து - அரிய பாலைநிலத்தின்கண்ணே, ஆமான் - காட்டுப் பசுக்களின், இனம் - கூட்டமானது, வழங்கும் - (நீரின்றித் தியங்கித்) திரியும், ஆர்இடை - அரிய இடத்தையுடைய, அத்தம் - வழியின்கண்ணே, இறப்பர் கொல் - கடந்து செல்வாரோ? (என்று தலைமகள் தோழியை வினவினள்.)

(விரி.) கொல் - முன்னது ஐயவினைப் பொருளது, பின்னது அசைநிலைப் பொருளது. புணர்ப்பது—குறிப்புவினை முற்று. (௬௨)

பொறிகிளர் சேவல் வரிமரற் குத்த
நெறிதூ ரருஞ்சுரநா முன்னி—யறிவிட்
டலர்மொழி சென்ற கொடியக நாட்ட
வலனுயர்ந்து தோன்று மலை.

[வரைவிடைப் பிரிவில் ஏதிலார் கூறு மலர்கண்டு
தலைமகள் ஆற்றது தோழி கேட்பக் கூறியது.]

(பத.) பொறிகிளர் - தலைச் சூட்டான் விளங்காநின்ற, சேவல் - காட்டுக் கோழியானது, வரி - வரிகளையுடைய, மரல் - மருள் செடியினை, குத்த - கொத்துதலினாலே, நெறி - வழியானது, தூர் - தூர்ந்து

போகும்படியான, அரும் சுரம் - அரிய பாலைநில வழியின் கொடுமையினை, நாம் உன்னி - நாம் நினைந்து வருந்துதலால், அறிவு இட்டு - (எதிலார் நம்களவினை) அறிந்து கூறும்படியான, அலர் மொழி - பழிச்சொற்கள், மலை அகம் - மலையினிடத்தே, நாட்ட - நாட்டப் பெற்ற, அ கொடி - அக்கொடிச்சீலையினைப் போன்று, சென்று - பரவி, வலன் உயர்ந்து - வலமாகச் சுழன்று எழுந்து, தோன்றும் - தோன்றுநிற்கும். (என்று தலைமகள் தோழியிடங் கூறினள்.)

(விரி.) வரை விடைப் பிரிவு - தலைமகளை மணத்தல் வேண்டி முலைவிலைக்காகப் பொருள் தேடுவான் தலைமகன் மேற்கொண்ட பிரிவு. அலர் - பழி மொழிகள். (௩௩)

பீரிவர் கூரை மறுமனைச் சேர்ந்தல்கிக்
கூருகி ரெண்கி னிருங்கிளை கண்படுக்கு
நீரி லருஞ்சுர முன்னி யறியார் கொ
லீரமி னெஞ்சி னவர்.

[பிரிவுணர்த்திய தோழிக்குத் தலைமகள்
உடன்படாது சொல்லியது.]

(பத.) ஈரம் இல் - நம்மீது இரக்கமென்பதைக் கொள்ளாத, நெஞ்சினவர் - மனத்தைக் கொண்டவராகிய நந்தலைவர், பீர் - பீர்க்கங் கொடிகள், இவர் - மேலேறிப் படர்ந்துள்ள, கூரை - மேற்பாகத்தினையுடைய, மறு மனை - பாழ் வீடுகளில், கூர் உகிர் - கூர்மையான நகங்களையுடைய, எண்கு இன் - கரடியினது, இரும் கிளை - பெரிய கூட்டம், சேர்ந்து - கூடி, அல்கி - ஒருங்கி, கண்படுக்கும் - உறங்கும்படியான, நீர் இல் - வறண்ட, அரும் சுரம் - அரிய பாலை நிலத்தின் கொடுமையினை, உன்னி - நினைத்துப்பார்த்து, அறியார் கொல் - (தன் செலவு வேண்டாவொன்றென) தெரியமாட்டாரா? (என்று தலைமகள் தோழியிடம் வினவினள்.)

(விரி.) மறு - குற்றம்: பாழ். கொல் - ஐயவினைப் பொருள்.

சூரற் புறவி னணில்பிளிற்றுஞ் சூழ்படப்பை
யூர்கெழு சேவ லிதலொடு—போர்திளைக்குந்
தேரொடு கானந் தெருளிலார் செல்வார்கொ
லூரிடு கவ்வை யொழித்து.

[இதுவு மது.]

(பத.) தெருள் இலார் - (பொருளினும் அருளே போற்றும் பண்பினது என்னும்) தெளிவினை மேற்கொண்டிராத நங்காதலர், சூரல் - பிரப்பம்புதர்கள் மிகுந்த, புறவின் - காட்டினிடத்தே, அணில் - அணிற்பிள்ளைகள், பிளிற்றும் - ஒலிக்கும்படியான, படப்பைசூழ் - கொல்லைகளாற் சூழப்பெற்ற, ஊர் - பாலைநிலத்தூர்களில், கெழு - பொருந்தியுள்ள, சேவல் - ஆண் கோழியானது, இதல் ஒடு - காடைப்பறவையுடனே, போர்திளைக்கும் - சண்டை செய்யும்படியான, கானம் - பாலைநிலவழியே, தேர் ஒடு - தேரின் மீதே, ஊர் இடு - இவ்வூரில் நமக்கு இட்டுச் செய்யவேண்டிய, கவ்வை - காரியத்தை, ஒழித்து - விட்டுவிட்டு, செல்வார்கொல் - நம்மைப் பிரிந்து போவாரோ? (என்று தலைமகள் தோழியை வினவினள்.)

(விரி.) படப்பை - கொல்லை: தோட்டம். "புறவினணில் பிளிற்றுஞ் சூழ்படப்பையூர்," என்றமையின் இது முல்லைக்கண் வந்த பாலை யென்க. கொல் - ஐய வினைப் பொருள். தேரொடு - உருபுமயக்கம். (௩௫)

முள்ளுடை மூங்கில் பிணங்கிய சூழ்படப்பை
புள்ளி வெருகுதன் குட்டிக் கிரைபார்க்குங்
கள்ளர் வழங்குஞ் சுரமென்பர் காதல
ருள்ளம் படர்ந்த நெறி.

[தலைமகன் பொருள்வயிற் பிரிந்த காலத்து ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குத் தலைமகள் ஆற்றுவலென்பது பட மொழிந்தது.]

(பத.) காதலர் - நந்தலைவரின், உள்ளம் - மனமானது, படர்ந்த - (பொருள் தேடுதலை மேற்கொண்டு) சென்ற, நெறி - வழியானது, முள் உடை - முட்களையுடைய, மூங்கில் - மூங்கிற் புதர்கள், சூழ் - சூழ்ந்து, பிணங்கிய - பின்னிக்கொண்டு கிடக்கும்படியான, படப்பை - தோட்டத்தினிடத்தே, புள்ளி - புள்ளிகளையுடைய, வெருகு - காட்டுப்பூனையானது, தன் குட்டிக்கு - தனது குட்டிக்கு, இரை பார்க்கும் - உணவினைத் தேடித் திரிசோலோடு, கள்ளர் - ஆறலைப்போர், வழங்கும் - சஞ்சரிக்கும், சுரம் என்பர் - கொடிய பாலைவனம் என்று சொல்லுவர் பலர். (என்று தலைமகள் தோழியிடங் கூறினள்.)

(விரி.) காதலர் உள்ளம் படர்ந்த நெறியானது வெருகு தன் குட்டிக் கிரைபார்க்கும் கள்ளர் வழங்குஞ் சுரமாதலின், அவர் செல்லாது மீள்வர் என்பது தலைவி கருத்து. (௩௬)

பொரிபுற வோமைப் புகர்படு நீழல்
வரிநுதல் யானை பிடியோ டுறங்கு
மெரிமயங்கு கானஞ் செலவுரைப்ப நில்லா
வரிமயங் குண்கண்ணு ணீர்.

[பிரிவுணர்த்திய தலைமகற்குத் தோழி உடன்படாது
தலைமகட்குப் பின்னர் நேரும் இன்னலினை
எடுத்தியம்பியது.]

(பத.) (எம்பெருமானே!) பொரி - பொரிந்த, புறம் - மேற்பாகத்தைக் கொண்ட, ஓமை - மாமரத்தினது, புகர் படு அழகு பொருந்திய, நீழல் - நிழலினிடத்தே, வரி - நீளமான, நுதல் - நெற்றியினையுடைய, யானை - களிறானது, பிடி ஓடு - பெண்யானையுடனே, உறங்கும் - தூங்குதற்கு இடமாயதும், எரி - காட்டுத் தீயானது, மயங்கும் - கலந்து காண்பதற்கு இடமாயதுமாகிய, கானம் - காட்டினிடத்தே, செலவு - (நீர் பொருள்வயிற் பிரிந்து)

செல்லுதலை, உரைப்ப - (தலைமகண்மாட்டு யான்) சொல்லுதலான், வரி - கரிய ரேகைகள், மயங்கு - கலக்கப்பெற்று, உண் கண் உள் - மைதீட்டப்பெற்ற (தலைமகளின்) கண்களில், நீர் - கண்ணீரானது, நில்லா - தங்காது வடியா நிற்கும். (என்று தலைமகனிடத்தில் தோழி கூறினாள்.)

(வி௱.) இன்னல் - துயரம். நில்லா - ஈறு கெட்ட எதிர்மறை ஒன்றன்பாற் குறிப்பு வினைமுற்று. நீழல் - நீட்டல் விகாரம். (௯௭)

கோள்வல் கொடுவரி நல்வய மாக்குழுமுந்
தாள்வீ பதுக்கைய கான மிறந்தார்கொ
லாள்வினையி னாற்ற வகன்றவா நன்றுணரா
மீளிகொண் மொய்ம்பி னவர்.

[பிரிவுணர்த்திய தோழிக்குத் தலைமகள் உடன்படாது சொல்லியது.]

(பத.) கோள் வல் - (மான் முதலியவற்றைக்) கொள்ளுதலில் வல்ல, கொடு வரி - வளைந்த வரிகளையும், நல் - நல்ல, வயம் - வெற்றியினையுமுடைய, மா - விலங்காகிய புலிகள், குழுமும் - கூடித் திரியும், வீ - பூக்கள் நிறைந்த, தாள் - அடிப்பாகத்தினை யுடைய, பதுக்கைய - புதரினையுடைய, கானம் - காடாகிய பாலை நிலவழியின்கண்ணே, மீளி கொள் - வீரத்தினைக் கொண்ட, மொய்ம்பினவர் - வலிமை மிக்க காதலர், ஆள்வினையின் - முயற்சியினிடத்தே, ஆற்ற - மிகுதியுங் கொண்ட, அவா - விருப்பத்தினாலே, நன்று உணரா - (இங்குத் தங்குதலாலேற்படும்) நன்மையினை அறியாமல், அகன்று - (நம்மைப்) பிரிந்து, இறந்தார்கொல் - சென்றனரோ? (எனத் தலைமகள் ஐயுற்றுத் தோழியை வினவினள்.)

(வி௱.) "கொடுவரிநல்,"-என்பது ஏட்டுப் பிரதியின் சிதைவாற் காணப்பெறாது புதிதாய்க் கருதிக் கொண்டதாகும். கொல் -

ஐயப் பொருள்தரு மிடைச்சொல், உணரா - ஈறு கெட்ட எதிர் மறை வினையெச்சம். (௯௮)

கொடுவரி பாயத் துணையிழந் தஞ்சி
கடுவுணங்கு பாறைக் கடவு தெவுட்டு
நெடுவரை யத்த மிறப்பர்கொல் கோண்மாப்
படுபகை பார்க்குஞ் சுரம்.

[இதுவு மது.]

(பத.) கொடுவரி - புலியானது, பாய - பாய்தலினாலே, துணை இழந்து - தனது துணையாகிய பிடியினைப் பறிகொடுத்து, அஞ்சி - அச்சமிகுந்து, (அப்பாற் சென்று,) கடு - மாவிலங்குமரம், உணங்கு - வாடி நிற்கும், பாறை - பாறைகளுக்கு இடையேயுள்ள, கடவு - வழியினிடத்தே, தெவுட்டு - நிறைந்து நிற்கும்படியான, கோண்மா - களிறானது, படு பகை - (தனது துணையினைப்) படுத்த புலியாகிய பகையின் வரவினை, பார்க்கும் - எதிர்பார்த்திருக்கும்படியான, சுரம் - பாலை நிலத்தின்கண்ணுள்ள, நெடு வரை - நீண்ட மலைத் தொடர்களையுடைய, அத்தம் - அருநெறிக்கண்ணே, இறப்பர் கொல் - (காதலர்) கடந்து செல்வரோ? (என்று தலைமகள் ஐயுற்றுத் தோழியிடங் கூறினள்.)

(விரி.) கொல் - ஐயப் பொருள் கொண்டது. படுபகை - வினைத்தொகை. (௯௯)

மன்ற முதுமரத் தாந்தை குரலியம்பக்
குன்றக நண்ணிக் குறும்பிறந்து—சென்றவர்
கள்ளிய தன்மையர் போலு மடுத்தடுத்
தொள்ளிய தும்மல் வரும்.

[தலைமகனின் வருகையினை எதிர்நோக்கிக் கலங்கிய தலைமகட்குத் தோழி நிமித்தங் காட்டிக் கூறியது.]

(பத.) குன்று அகம் - மலையிடத்தினை, நண்ணி - நெருங்கிச் சென்று, குறும்பு இறந்து - பாலைநிலத்தூர் பலவற்றைக் கடந்து, சென்றவர் - (பொருள்வயிற்) பிரிந்த நந்தலைவர், மன்ற - மன்றின் கண்ணுள்ள, முதுமரத்து - ஆலமரத்தில் வாழும், ஆந்தை - ஆந்தை யானது, குரல் இயம்ப - ஒலிக்க, அடுத்து அடுத்து - அடிக்கடி, ஒள்ளிய - நலமிகுந்த, தும்மல்-தும்மலானது, வரும் - (நம்மிடத்துத்) தோன்றாநின்றதாதலின், கள்ளிய தன்மையர் போலும் - களவின் கண் நம்மாட்டு அவர் கொண்ட கடுங்காதல் போன்று இஞ்ஞான்றுங் கொண்டு மீள்வர்போற் காண்கின்றது. (என்று தோழி தலைமக ளிடங் கூறினள்.)

(விரி.) சென்றவர், ஆந்தை இயம்ப, தும்மல் வருதலின், கள் ளிய தன்மையர் போலும், என முடிக்க. "ஒள்ளிய தும்மல்," என்றமையின் நன்னிமித்தம் எனலாயிற்று. அடுத்து அடுத்து - அடுக்குத் தொடர்: மிகுதிப்பொருள் பற்றியது. (௩௰)

பூங்கணிட மாடுங் கனவுந் திருந்தின
வோங்கிய குன்ற மிறந்தாரை யாநினைப்ப
வீங்கிய மென்றோள் கவினிப் பிணிதீரப்
பாங்கத்துப் பல்லி படும்.

[இதுவு மது.]

(பத.) ஓங்கிய - வானளாவிய, குன்றம் - குன்றுகளாகிய பாலை நில வழியே, இறந்தாரை - கடந்து சென்ற நங்காதலரை, யாம் நினைப்ப - நாம் நினைத்த வளவிலே, பூம் கண் - நம் அழகிய கண் களிலே, இடம் ஆடும் - இடக்கண்ணனது துடித்தாடாநின்றது, கனவும் - நாம் காண்கின்ற கனவுகளும், திருந்தின - நற்பொரு ளுடையனவாயுள்ளன, வீங்கிய - அவற்றால் பூரித்த, மென் தோள் - நம் மெல்லிய தோள்கள், கவினி- அழகுற்று, பிணிதீர - நோய் நீங்கும் வண்ணம், பல்லி - பல்லியானது, பாங்கு - இணக்க

மாக, படும் - நிமித்தஞ் சொல்லாநின்றது. (என்று தோழி தலைமகளிடங் கூறினள்.)

(விரி.) பெண்மக்களுக்கு இடக்கண்ணாடல் நன்னிமித்தம் என்பது பழைய நூல்வழக்கு. அத்து - சாரியை. (௯௪)

ஒல்லோமென் றேங்கி யுயங்கி யிருப்பளோ
கல்லிவ ரத்த மரிபெய் சிலம்பொலிப்பக்
கொல்களி றன்னான்பின் செல்லுங்கொ லென்பேதை
மெல்விரல் சேப்ப நடந்து.

[உடன்போய தலைமகட்கு நற்றாய் கவன்றுரைத்தது.]

(பத.) என்பேதை - என்மகள், கொல்களிறு அன்னான் - கொல்கின்ற ஆண்யானையை யொத்தவனாகிய தலைமகனின், பின் - பின்னாக, அரி - சிறுகற்கள், பெய் - பெய்யப் பெற்றுள்ள, சிலம்பு - காற்சிலம்புகள், ஒலிப்ப - ஓசையிடவும், மெல்விரல் - மெல்லிய கால்விரல்கள், சேப்ப - சிவக்கும்படியாகவும், கல் - கற்கள், இவர் - மேலெழுந்து நிற்கும்படியான, அத்தம் - பாலை நிலவழியே, நடந்து - நடத்தலைச் செய்து, செல்லும் கொல் - செல்வாளோ? (அன்றி,) ஒல்லோம் என்று - (இப்பாலை நிலவழியே) செல்லுதல் நம்மால் முடியாத காரியமென்று நினைத்து, ஏங்கி - வருந்தி, உயங்கி - வாடி, இருப்பளோ - துன்புற்றுத் தங்குவளோ? (யாதோ அறியேன் என்று, நற்றாய் தனக்குட்டானே கூறிவருந்தினள்.)

(விரி.) அரி - சிலம்பினுட் பெய்யும் சிறு கற்கள். உடன் போதல் :- தலைவனுடன் பாலை நிலவழியாகப் புறப்பட்டுப் போகுதல். (௯௫)

பாலை முற்றும்.

---

*ஆற்ற லுடைய னரும்பொறி நல்லூரன்*
*மேற்றுச் சிறுதாய காய்வஞ்சி—போற்றருவிக்*
*கட்டக முத்திற் புதல்வனை மார்பின்மேற்*
*பட்டஞ் சிதைப்ப வரும்.*

[மகற்பெற்ற தலைமகளினைச் செய்பெருஞ் சிறப்போடு சேர்தற்கண் தலைமகன் மகற்கண்டு மகிழ்ந்த வகையினைத் தோழி கண்டு மகிழ்ந்து கூறியது.]

(பத.) *ஆற்றல் - போர்வன்மையினை, உடையன் - கொண்ட வனாகிய, அரும்பொறி - அரிய செல்வத்தினையுடைய, நல் ஊரன் - நல்ல மருதநிலத்தூர்த்தலைவன், மேற்று - மேற்பாகத்தினிடத்தே, சிறு காய் - சிறிய காயானது, தாய - பொருந்தியுள்ள, வஞ்சிபோல் - வஞ்சிச் செடியினைப் போன்று, கண் தக - கணுக்கள் சிதறுதலால் (தோன்றும்படியான,) முத்தின் - முத்தினைப் போன்ற, புதல்வனை - தன் மகனை, மார்பின் மேல் - மார்பின்மீதே, அருவி - நெருக்கித் தழுவிப் பிடித்து, பட்டம் - மேலாடை, சிதைப்ப - சிதையும்படி யாக, வரும் - (செய்பெருஞ் சிறப்பின்கண்ணே) காணப்பெறுகின் றனன். (என்று தோழி கூறி மகிழ்ந்தாள்.)*

(விரி.) *தலைமகள் பெற்றெடுத்த மகற்கு ஐம்படைபூட்டிப் பெயரிடுதலாகிய சிறப்பின்கண் தலைமகன் புதல்வனை மேற்கொண்டு வந்தமையினைக் கண்டு மகிழ்ந்த தோழி கூறியதாகு மிச்செய்யுள். இது, "காரணத்தினமைந்து முடிந்த காலை," (தொல். பொருள். கற்பு, ௫) என்ற சூத்திரத்தின் கண், "புதல்வற் பயந்த புனிறு சேர் பொழுதின்...............செய்பெருஞ் சிறப்பொடு சேர்தற்கண்," என்பதனாற் பெறப்படும். செய்பெருஞ் சிறப்பு - பிறந்த புதல்வன் முகங்காண்டல், ஐம்படை பூட்டல், பெயரிடுதல் முதலியன. ஐம்படை - திருமாலின் ஐவகைப்படைபோன்றமைந்த கழுத்தணி கலம்.*

(௩௫)

அகன்பணை யூரனைத் தாமம் பிணித்த
திகன்மை கருதி யிருப்பன்—முகனமரா
வேதின் மகளிரை நோவ தெவன்கொலோ
பேதமை கண்டொழுகு வார்.

[பரத்தையிற் பிரிந்த தலைமகனைத் தலைமகள் காய்ந்து கூறியது.]

(பத.) அகன் பணை-பரந்த மருதநிலத்துள்ள, ஊரனை - ஊர்க்குத் தலைவனான என் காதலனை, தாமம் - மலர்மாலையினாலே, பிணித்தது - (பரத்தையர்) கட்டிக் கொண்டு போயதனால், இகன்மை - (அவர் மாட்டு) மாறுபாட்டினை, கருதி - எண்ணி, இருப்பன் - இருத்தலைச் செய்கின்றனன், பேதமை - அறியாமையினை, கண்டு ஒழுகுவார் - செய்து நடப்பவராகிய, ஏதில் மகளிரை - பிறமகளிராகிய பரத்தையரை, முகன் அமரா - மனம் பொருந்தி, நோவது - (தலைமகன் பிரிவுக்காக) நொந்து கொள்வது, எவன் - எற்றுக்கு? (அன்பும் உறவுமுடைய தலைமகனை நோவதே நெறியாம், என்று தலைமகள் கூறிக் கொண்டனள்.)

(விரி.) பரத்தையர் தலைமகனைப் பொழிலாட்டு முதலியவற்றுட் படுத்தி அழைத்துச் சென்றமையினைத் தெரிந்த தலைமகள் முதற்கண் அப்பரத்தையரை வெறுத்துப் பின்னர், பிறராகிய அவரை வெறுத்தல் நெறியன்று எனத் தெளிந்து, தலைமகனைக் காய்ந்து (புலந்து) கூறியதாகு மிச்செய்யுள். கொல், ஓ - அசை நிலைகள். (௪௪)

போத்தில் கழுத்திற் புதல்வ னுணச்சான்றான்
மூத்தே மினியாம் வருமுலையார் சேரியு
ணீத்துநீ றுனவாய்ப் பாண! நீ போய்மொழி
கூத்தாடி யுண்ணினு முண்.

[பாணற்குத் தலைமகள் வாயின் மறுத்தது.]

(பத.) பாண - பாணனே! கழுத்தில் - (தலைமகன் முன்பு தழுவியமைந்த) எமது கழுத்தினிடத்தே, போத்து இல் - இனித் தழுவதற்கு நேரமின்றி, புதல்வன் - என் மகன், உண - முலையுண் ணும்படி, சான்றான் - அமைந்துளான், இனி - மேலும், யாம் - நாம், மூத்தேம் - தலைமகற்குத் தகுதியின்றி மூப்பினையடைந்தோம், (ஆகலின்,) நீ நீத்து - நீ இவ்விடத்தினின்று நீங்கி, வருமுலையார் - முன்னோக்கி வளருகின்ற முலைகளையுடைய பரத்தையரது, சேரி யுள் - சேரியினிடத்தே, போய் - சென்று, மொழி - (அங்குள்ள தலைமகனுக்கு எமது மூப்பு முதலிய செய்திகளை) இயம்புவாயாக, (அன்றி) நீர்—கள் முதலிய குடிநீர்வகைகளையும், ஊன் - இறைச்சி களையும், அவாய்-விரும்பி, கூத்து ஆடி-பரத்தையர் முன்பாக நாடக முதலியனவற்றை நடத்தி, உண்ணினும் - உண்ணுதலைச் செய்யி னும், உண் - செய். (என்று தலைமகள் பாணனிடங் கூறினாள்.)

(விரி.) போது=போத்து - பொழுது; விரித்தல் விகாரம். வருமுலை - வினைத்தொகை. (சரு)

உழலை முருக்கிய செந்நோக் கெருமை
பழனம் படிந்துசெய் மாந்தி—நிழல்வதியுந்
தண்டுறை யூரன் மலரன்ன மாற்புறப்
பெண்டிர்க் குரைபாண! உய்த்து.

[இதுவு மது.]

(பத.) பாண - பாணனே! உழலை - உழலை மரத்தினை, முருக்கிய - நாசப்படுத்திய, செந்நோக்கு - சிவந்த கண்களையுடைய, எருமை - எருமையானது, பழனம் படிந்து - மருத நிலத்தூடே தவழ்ந்து சென்று, செய் - கழனியிலே, மாந்தி - மேய்ந்து, நிழல் - (மருதமர) நிழலின் கண்ணே, வதியும் - தங்கியிருக்கும்படியான, தண்-குளிர்ந்த, துறை-இடத்தினையுடைய, ஊரன்-ஊர்க்குத் தலைவ னாகிய தலைமகனது, மலர் அன்ன-(வண்டுகள் பல படியும் வண்ணம் மலர்ந்து கிடக்கும்) மலர்போன்ற, மால் - காதலினை, உய்த்து -

கொண்டு சேர்த்து, புறபெண்டிர்க்கு - ஊர்க்குப் புறத்தேயுள்ள சேரியில் வாழும் பரத்தையர்க்கு, உரை - சொல்வாயாக. (என்று தலைமகள் பாணனிடங் கூறினாள்.)

(விரி.) "மலரன்ன மார்புற," எனவும் பாடம். தலைமகன் காதல் பரத்தையர் பலர்க்கும் உரியதன்றித் தனக்குரியதல்ல என்பாள், "மலரன்ன மால்," எனலாயினள். உழலை மரம் - தொண்டுக் கட்டை: அன்றி, தொழுவ மரமெனலுமாம். (௬௯)

தேங்கமழ் பொய்கை யகவய லூரனைப்
பூங்கட் புதல்வன் மிதித்துழக்க—வீங்குத்
தளர்முலை பாராட்டி யென்னுடைய பாவை
வளர்முலைக் கண்ஞெமுக்கு வார்.

[தலைமகரின் இல்லற வியல்பினைக் கண்டு மகிழ்ந்த
செவிலி நற்றாய்க் குரைத்தது.]

(பத.) தேம் கமழ் - நறு மணமிக்க, பொய்கை - மலர்த் தடங்களையுடைய, அகம் - மருத நிலத்தேயுள்ள, வயல் ஊரனை - கழனி சூழ்ந்த ஊர்க்குத் தலைவனாகிய தலைமகனை, பூம் கண் - அழ கிய கண்களையுடைய, புதல்வன் - மகன், மிதித்து - கால்களால் துவைத்து, உழக்க - சிதைத்துக் கொண்டிருக்க, (தலைமகனார்,) ஈங்கு - இந் நிலையிலே, என்னுடைய பாவை - என் பாவை போல்ப வளாகிய தலைமகளின், தளர்முலை - (மகப் பெற்றமையால்) நெகிழ்ந் துள்ள முலைகளை, பாராட்டி - விரும்பி, வளர் முலை கண் - முன் னேக்கி வளர்ந்து காணும்படியான அம் முலைகளின் நுனியினை, ஞெமுக்குவார் - கைகளால் நெருடி மகிழ்ச்சி யுறுவார். (என்று செவிலி நற்றாயிடங் கூறினாள்.)

(விரி.) அகம் - மருதம். பாவை - உவமையாகுபெயர். ஞெமுக்குதல்=நமுக்குதல் - நெருடுதல்; ஞகர நகரப் போலி: நமை - முதனிலை. தளர்முலை, வளர்முலை - வினைத் தொகைகள்.

தலைமகளின் இல்வாழ்க்கைச் சிறப்பினை நேரிற் கண்ட செவிலி நற்றாய்க்குக் கூறியதாகு மிச் செய்யுள். (சுஎ)

பேதை புகலை புதல்வன் றுணைச்சான்றோ
ரோதை மலிமகிழ்நற் கியாஅ மெவன்செய்தும்
பூவார் குழற்கூந்தற் பொன்னன்னார் சேரியு
ளோவாது செல்பாண ! நீ.

[தலைமகள் பாணற்கு வாயின் மறுத்தது.]

(பத.) பாண - பாணனே! ஓதை - பல்வகை யொலிகள், மலி - மிகுந்த, மகிழ்நற்கு - மருதநிலத் தலைவனாகிய தலைமகனுக்கு, புதல்வன் - மகனையே, துணை சான்றோன் - (பிரிவின் கண்) துணை வனாகிய சான்றோனெனும், புகல் - அடைக்கலமாகக் கொண்ட, பேதை - பெண்பாலாகிய, யாம் - நாம், எவன் செய்தும் - என் செய்து பயன்படப் போகின்றோம்? (அவற்கு எம்மால் ஆவது யாது மின்று,) பூ ஆர் - பூக்கள் நிறைந்த, குழல் கூந்தல் - சுருட்டி முடித்த மயிரினையுடைய, பொன் அன்னார் - திருமகளை யொத்தவராகிய (அவற்கு வேண்டிய) பரத்தையரின், சேரியுள் - சேரியினிடத்தே, ஓவாது - ஒழியாது, நீ செல் - நீ போவாயாக. (என்று தலைமகள் பாணனிடங் கூறினள்.)

(விரி.) புகலை - 'ஐ,'சாரியை. மகிழ்நன் - மருதநிலத்தலைவன். எவன் - அஃறிணை வினாவினைக்குறிப்புமுற்று. மகிழ்நற்கியாஅம் - குற்றியலிகரம் அலகு பெற்றிலது; இசைநிறையளபெடை கொண் டுளது. பரத்தையரைப் பொன்னன்னார் என்றது இழித்தலோடு கூடிய குறிப்பு மொழியாம். (சுஅ)

யாணர்நல் லூரன் றிறங்கிளப்ப லென்னுடைய
பாண ! இருக்க வதுகளை—நாணுடையான்
றன்னுற்ற வெல்லா மிருக்க விரும்பாண !
நின்னுற்ற துண்டே லுரை.

[இதுவு மது.]

(பத.) என்னுடைய பாண - என்னருமைப் பாணனே! இருக்க - இவ்விடத்தே இருப்பாயாக, யாணர் - புது வருவாயினை யுடைய, நல் ஊரன் - நல்ல மருதநிலத்தூர்த்தலைவனது, திறம் - மேன்மையினை, கிளப்பல் - (பலபடியாக எடுத்துச்) சொல்லுதலாகிய, அது - அப்போக்கினை, களை - ஒழித்து விடுவாயாக, இரும் பாண - பெருமைமிக்கபாணனே! நாண் உடையான் - (பிறபெண்டிரைக் காணுதலில்) வெட்கமுற்றுப் பின்வாங்கும் பெருமையினையுடைய தலைமகனுக்கு, உற்ற எல்லாம் - சேர்ந்த குறைகளெல்லாம், இருக்க - இருக்கட்டும், நின் - உனது வாழ்க்கையில், உற்றது - பொருந்திய குறை யாதேனும், உண்டேல் - உளதாயின், உரை - எடுத்துச் சொல்வாயாக. (என்று தலைமகள் பாணனிடங் கூறினள்.)

(விரி.) "நாணுடையான்," என்றது இழித்தல் கருதிய குறிப்பு மொழி. கிளப்பல் - கிளத்தல்; சொல்லல். (சக)

ஒள்ளிதழ்த் தாமரைப் போதுறழு மூரனை
யுள்ளங்கொண் டுள்ளானென் றியார்க்குரைக்கோ
—வொள்ளிழாய்!
அச்சுப் பணிமொழி யுண்டேனோ மேனாளோர்
பொய்ச்சூ ளெனவறியா தேன்.

[தலைமகன் பரத்தையிற் பிரியத் தலைமகள் புலந்து சொல்லியது.]

(பத.) ஒள் இழாய் - ஒளியினையுடைய அணிகலன்களை யணிந்த தோழியே! மேல் நாள் - (களவுப்புணர்ச்சி நிகழ்ந்த) அக் காலத்திலே (கூறிய உறுதி மொழிகள்,) ஓர் பொய் சூள் - பலரும் நினைவிலிருத்தக் கூடிய வஞ்சக மொழிகள், என - என்று, அறி யாதேன் - தெரிந்து கொள்ள முடியாத யான், பணிமொழி - அக் காலத்தே (தலைமகன்) பணிவுடன் கூறிய அவ்வுறுதி மொழிகளை,

அச்சு - எழுத்து வடிவமாக, உண்டேனோ - (எழுதித்தரப் பெற்றுக்) கொண்டேனுமில்லை, (அங்ஙனமிருக்க, இப்பொழுது) ஒள் இதழ் - நிறமிக்க இதழ்களையுடைய, தாமரை போது - தாமரைப்பூக்கள், உறழும் - இடையிட்டுக் கிடக்கும், ஊரனை-ஊர்க்குத் தலைவனாகிய தலைமகனைப்பற்றி, உள்ளங் கொண்டு - மனமுழுவதையு மொன்று சேர்த்து, உள்ளான் - (என்னை) எண்ணுவதில்லை, என்று - என்பதாக, யார்க்கு - எவரிடத்தில், உரைக்கோ - (குறை) கூறிக் கொள்ளட்டும்? (என்று தலைமகள் தோழியை வினவினள்.)

(விரி.) உரைக்கு - தன்மை யொருமை வினைமுற்று. ஓ - இரக்கப்பொருள் கருதியது. ஓர் - நினைவு; முதனிலைத் தொழிற்பெயர். உண்டேனோ - ஓ எதிர்மறைப் பொருளது. புலத்தல் - ஊடல். என்றியார்க்கு - குற்றியலிகரம் அலகு பெற்றிலது. (௫௰)

பேதைய ரென்று தமரைச் செறுபவோர்
போதுறழ் தாமரைக்கண் ணூரனை நேர்நோக்கி
வாய்மூடி யிட்டு மிருப்பவேர் மாணிழாய்!
நோவதென் மார்பறியு மின்று.

[இதுவு மது.]

(பத.) ஏர் - அழகிய, மாண் - மாட்சிமைப்பட்ட, இழாய் - அணிகலன்களை யணிந்த தோழியே! தமரை - தம்மவராகிய தலைமகனைக் (காணுமிடத்து அவராற் காதலிக்கப்படும் பரத்தையர்,) பேதையர் என்று - அறிவிலாரென்று திட்டி, செறுப - சினத்தை மேற்கொள்வர், ஓர் - ஒப்பற்ற, தாமரை போது - தாமரைப் பூக்கள், உறழ் - இடையிட்டுக் கிடக்கும்படியான, கண் - இடத்தினையுடைய, ஊரனை - மருத நிலத்தூர்த் தலைவனாகிய தலைமகனை, நேர் நோக்கி - எதிரே பார்த்தவளவில், வாய் மூடி யிட்டும் - அடங்கியும், இருப்ப - இருப்பார்கள், (அங்ஙனம் வஞ்சகர்களாகிய அவர்களை நாடித் தலைமகனார் பிரிந்து சென்றது) இன்று - இப்பொழுது, நோவது - மிகுதியும் மன நோயினைச் செய்யா நின்றது

(அந்நோயின் கொடுமை வாய் விட்டுக் கூறுந்தரத்ததன்று,) என் மார்பு - என்னெஞ்சமே, அறியும் - (அதனைத்) தெரியுந் தரத்தது. (என்று தலைமகள் தோழியிடம் கூறினாள்.)

(வி.) செறப, இருப்ப - பலர்பால் படர்க்கை வினைமுற்றுக் கள். மாணிழை - பண்புத்தொகையன்மொழி. (௫௧)

காதலிற் றீரக் கழிய முயங்கன்மின்
ளோதந் துவன்று மொலிபுன லூரனைப்
பேதைப்பட் டேங்கன்மி னீயிரு மெண்ணிலா
வாசை யொழிய வுரைத்து.

[பரத்தையரும் ஏனைத்தலைவியரும் நம்முறுவிழுமம் கூறிய பொழுது தலைமகள் அவர்கண்மாட்டுப் பரிந்து கூறியது.]

(பத.) நீயிரும்-யானே யன்றி நீங்களும், ஓதம்-வெள்ளமானது, துவன்றும் - நெருங்கி மிகுதலானுண்டாகிய, ஒலி - ஒலிக்கின்ற, புனல் ஊரனை - நீர்வளமிக்க மருதநிலத் தலைவனாகிய நம் தலைமகனை, காதலின் - உள்ளன்பின் மிகுதியினின்று, தீர - முழுவதும், கழிய - நீங்கும்படியாக, முயங்கன்மின் - இனித் தழுவாதிருப்பீர்களாக, பேதை பட்டு - அறியாமையிலே அகப்பட்டு, எண் இலா - அளவில்லாத, ஆசை - தலைமகனது விருப்பம், ஒழிய - நீங்கும்படி, உரைத்து - (காதன் மொழிகள் பல) கூறி, ஏங்கன்மின் - (தலைமகன்மாட்டுக்) குறையிரக்கா திருப்பீர்களாக. (இங்ஙனம் சில காலம் நாம் ஒற்றுமையாக இருப்போமாயின், தலைமகன் முன்போல் நம்மாட்டுக் காதல் கொண்டு ஒழுகுவன், என்று தலைமகள் தன் மாட்டு வந்து, தலைமகனின் அன்பின்மையினை எடுத்துச் சொன்ன பரத்தையரிடத்தும், ஏனைத் தலைவியரிடத்தும் கூறினாள்.)

(வி.) தம்முறு விழுமம் - தாமுற்ற துன்பம். தலைமகன் தன் வினைமிகுதியாற் சிற்றின்பங் கருதானாக, அக்காலத்துப் பரத்தையர் முதலோர் தலைமகள்மாட்டு முறையிட்டுக் கொள்ளத்

தலைமகள் கூறியதாகுமிச் செய்யுள். இதனை, "தம்முறுவிழுமம் பரத்தையர் கூறினும்," (தொல். பொருள். பொருளிய. சக) என்றதனாற் கொள்க. நீயிரும் - உம்மை எச்சப் பொருளது. எங்கண்மின், முயங்கன்மின் - எதிர்மறை ஏவற் பன்மை வினைமுற்றுக்கள். (ருஉ)

உண்ணாட்டஞ் சான்றவர் தந்த நசையிற்றென்
றெண்ணார்க்குக் கண்ணோட்டந் தீர்க்குதுமென்—றெண்ணி
வழிபாடு கொள்ளும் வளவய லூரன்
பழிபாடு நின்மே லது.

[தோழி, தலைமகளின் ஊடல் தீர்த்தலை விரும்பிய தலைவன் வயத்தளாய் நின்று தலைவியைக் கழறியது.]

(பத.) உள் நாட்டம் - ஆழ்ந்த ஆராய்ச்சிமுறைகள், சான்றவர் - நிறைந்த பெரியோர்கள், தந்த - ஏற்படுத்தியது (இல்லறம்,) நசையிற்று - அன்போடு கூடியது, என்று எண்ணார்க்கு - என நினையாது கலவியொன்றினையே கருதும் பரத்தையரிடத்தில், (காட்டிய) கண்ணோட்டம் - அருளினை, தீர்க்குதும் - இனி விட்டொழிப்போம், என்று எண்ணி - எனக் கருதி, வழிபாடு கொள்ளும் - நின்பால் வணக்கத்தினை மேற்கொண்டுள்ள, வள வயல் - வளப்ப மிக்க கழனிகள் சூழ்ந்துள்ள, ஊரன் - ஊர்க்குத் தலைவனாகிய தலைமகனது, பழிபாடு - (நீ அவனை ஏற்றுக் கொள்ளாமையாலுண்டாங்) குற்றப்பாடு, நின் மேலது - நின்னையே சாரும். (ஆகலின், அவனை ஏற்றுக் கொள்வாயாக, என்று தோழி தலைமகளிடங் கூறினாள்.)

(விரி.) கழறுதல் - வற்புறுத்திக் கூறல். எண்ணார்க்கு - உருபு மயக்கம். நசையிற்று, மேலது - ஒன்றன்பாற் குறிப்பு வினைமுற்றுக்கள். தந்த - தந்தது: ஈறுகெட்ட ஒன்றன்பால் வினைமுற்று. (ருங)

உண்டுறைப் பொய்கை வராஅ லினமிரியுந்
தண்டுறை யூர! தகுவதோ—வொண்டொடியைப்
பாராய் மனைதுறந் தச்சேரிச் செல்வதனை
யூராண்மை யாக்கிக் கொளல்.

[பரத்தையர்பாற் சென்று வந்த தலைமகனைத் தோழி வணங்கிய மொழியான் இணங்குவித்தது.]

(பத.) பொய்கை - தடாகத்தினிடத்தே, உண்டு - மேய்ந்து, உறை - வாழும், வரால் இனம் - வரால்மீன் கூட்டம், இரியும் - திரியும்படியான, தண் - குளிர்ந்த, துறை - இடத்தினையுடைய, ஊர - மருதநிலத்திற்குரிய தலைவனே! ஒண் தொடியை - ஒள்ளிய வளையினையணிந்த தலைமகளை, பாராய் - கடைக்கணிக்காதவனாய், மனை துறந்து - எமது மனையினைவிட்டு நீங்கி, அ சேரி - அப்பரத்தையர் சேர்ந்து வசிக்கும் சிற்றூர்க்கு, செல்வதனை - போகின்ற போக்கினை, ஊர் ஆண்மை - பெரிய காரியமாக, ஆக்கி கொளல் - ஏற்படுத்திக் கொள்வது, தகுவதோ - (பெருந்தன்மை மிக்க நினக்குத்) தக்கதாமோ? (என்று தோழி தலைமகனை வினவினள்.)

(விரி.) வராஅல் - இசைநிறை யளபெடை. பாராய் - முற்றெச்சம். ஒண்டொடி - பண்புத்தொகை யன்மொழி. (ருச)

பொய்கைநல் லூரன் றிறங்கிளத்த லென்னுடைய
வெவ்வ மெனினு மெழுந்தீக—வைகன்
மறுவில் பொலந்தொடி வீசு மலற்றுஞ்
சிறுவ னுடையேன் றுணை.

[பாணற்கு வாயின் மறுத்தது.]

(பத.) (பாணனே!) வைகல் - நாடோறும், மறு இல் - குற்றமில்லாத, பொலம் தொடி - பொன்னாற் செய்த வளையணிந்த கைகளை, வீசும் - வீசியும், அலற்றும் - விரித்தும் விளையாடும்,

சிறுவன் - என் புதல்வனாகிய சிறுவனை, துணை - பாது காவலாக, உடையேன் - கொண்டுளேன், (ஆகலின்,) பொய்கை - நல்ல நீர் நிலைகளையுடைய, நல் ஊரன் - நல்ல மருத நிலத்தலைவனாகிய தலைமகனின், திறம் - ஒழுக்க முறைகளை, கிளத்தல் - எடுத்தியம்ப வேண்டா, என்னுடைய எவ்வம் எனினும் - (தலைமகன் பிரிய நேரிட்டது) எனது தவறேயாயினும், (ஆகட்டும்,) எழுந்தீக - (இவ் விடத்தை விட்டு) எழுந்து நடப்பாயாக. (என்று தலைமகள் பாண னிடங் கூறினாள்.)

(விரி.) கிளத்தல் - எதிர்மறை வியங்கோள். எழுந்தீக - வியங்கோள் வினைமுற்று. தொடி - தானியாகு பெயர். அன்றி, 'பொலந்தொடி', எனத் தொடுத்து மொழிந்து பண்புத்தொகை யன்மொழியாக்கினுமாம். (ருரு)

வளவய லூரன் மருளுரைக்கு மாதர்
வளைஇய சக்கரத் தாழி—கொளைபிழையா
வென்றிடை யிட்டு வருமேனின் வாழ்நாட்க
ளொன்றி யனைத்து முளேன்.

[பரத்தையிற் பிரிந்த தலைமகனின் வரவினை வேட்டுத் தோழி தலைமகட்குக் கூறியது.]

(பத.) (எம் பெருமாட்டி!) வளம் வயல்-பல்விதவளத்தாற் சிறந்த வயல்களாற் சூழப்பட்ட, ஊரன் - மருத நிலத்தூர்த் தலைவனாகிய தலைமகன், மருள் உரைக்கும் - மாயமொழிகளைக் கூறி மயக்கும், மாதர் - பரத்தையரது, வளைஇய - வளைந்த, சக்கரத்து ஆழி - சக்கரம் போன்ற மோதிரமணிந்த கைகளால், கொளை - கொள்ளப் படுதலினின்றும், பிழையா - தப்பி, என்று - என்றைக்காவது, இடை இட்டு - நடுவிலே தோன்றி, வருமேல் - நம்மிடத்து வரு வானாயின், நின் - உன்னுடைய, வாழ் நாட்கள் - வாழுங் காலத்திலே, ஒன்றி - அவனைச் சாருவித்து, அனைத்தும் - வேண்டிய வெல்லாம்,

உளேன் - பெற்றவள்போல மகிழ்வேன். (என்று தோழி தலைமக ளிடங் கூறினள்.)

(விரி.) வ ளை இ ய - சொல்லிசையளபெடை. கொளை - கொள்ளை: இடைக்குறை விகாரம். பிழையா - செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். ஆழி - தானியாகு பெயர். (நிசு)

---

## ஐந்தாவது—நெய்தல்

ஒழுகு திரைக்கரை வான்குருகின் றூவி
யுழிதரு மூதை யெடுக்குந் துறைவனைப்
பேதையா னென்றுணரு நெஞ்சு மினிதுண்மை
யூதிய மன்றோ வுயிர்க்கு.

[தலைமகன் சிறைப்புறத்தானாக இயற்பழித்த
தோழிக்குத் தலைமகள் இயற்பட மொழிந்தது.]

(பத.) (தோழியே!) ஒழுகு - (ஏறிவந்து பாய்ந்து) இறங்கிச் செல்லும்படியான, திரை - அலைகளையுடைய, கரை - கடற்கரையி னிடத்தே (வாழும்படியான), வான் - பெரிய, குருகின் - கடற் பறவைகளின், தூவி - இறகுகளினின்றும், உழிதரும் - சுழன்று வெளிப்படும், ஊதை - காற்றானது, எடுக்கும் - எடுப்பாக வீசும்படி யான, துறைவனை - துறைமுகத்துக்குரிய தலைவனாகிய தலைமகனை, பேதையான் - (வஞ்சகமின்றி) அறியாமை யொன்றனையே யுடை யான், என்று - என, உணரும் - தெரியும்படியான, நெஞ்சும் - மனத்தையும், இனிது உண்மை - நன்றாக நாம் கொண்டிருத்தல், உயிர்க்கு - நம் வாழ்க்கைக்கு, ஊதியம் அன்றோ - நன்மையையுண் டாக்கும் நற்போக்கன்றோ? (என்று தலைமகள் தோழியை வின வினள்.)

(விசே.) நெஞ்சும் - உம்மை உயர்வு சிறப்புப் பொருள். அன்று, ஓ - தேற்றப் பொருள்தரு மிடைச் சொற்கள். பகற்குறிக்கண் பன்முறை வரைவு கடாவிச் சென்ற தோழி, ஒரு நாள் தம்மைச் சிறைப்புறமாக நின்று நோக்கும் தலைவனுக்குக் கேட்கும்படியாகத் தலைமகளிடத்து, "தலைமகன் பெரிதும் பேதமையுடையான்," என இயற்பழித்தனள். அதனைக் கேட்ட தலைமகள் அதற்கு மறு மொழியாகக் கூறியதாகுமிது. "தலைமகன் நம்மை ஏமாற்றும் வஞ்சகனல்லன்; அவனது பேதையானுயது பெரிதும் கொண்டாடற் பாலதாம்," என்பது தலைமகளின் கருத்து. இயற்பழித்தல் - குறை கூறல். இயற்பட மொழிதல் - நிறைவு கூறல். (௫எ)

என்னைகொ றோழி! அவர்கண்ணு நன்கில்லை
யன்னை முகனு மதுவாகும்—பொன்னலர்
புன்னையம் பூங்கானற் சேர்ப்பனைத் தக்கதோ
நின்னல்ல தில்லென் றுரை.

[வரையா தொழுகுந் தலைமகன் ஒருஞான்று தோழியைக் கதுமென எதிர்ப்படத் தலைமகள் தன்னிலை யினைத் தலைமகற்குக் கூறெனத் தோழிக்குச் சொல்லியது.]

(பத.) தோழி - தோழியே! என்னை கொல் - யாது காரணம்? அவர்கண்ணும் - நம்தலைமகனார் மாட்டும், நன்கு இல்லை - விரைந்து வரைதலை மேற்கொள்ளுமாறு காணப்பட்டிலது, அன்னை முகனும் - செவிலி நம்மாட்டு நடந்துகொள்ளும் மனப் போக்கும் (களவு வெளிப் பட்டமையினாலே,) அதுவாகும் - அம்முறையிற் கொடுமையினைக் கொண்டுள்ளது, பொன் அலர் - அழகிய மலர்களையுடைய, புன்னை - புன்னைமரங்கள் நிரம்பிய, பூம் கானல் - அழகிய கடற்கரைச் சோலைகளையுடைய, சேர்ப்பனை - துறைமுகத்துக்குரிய தலைவனாகிய தலைமகனுக்கு, தக்கதோ - (இம்முறையாக வரைவு நீட்டித்தல்) பொருத்தமாகுமோ? (பொருந்ாது, ஆகலின்,) நின் அல்லது -

நின்னையல்லாமல் வேறு துணை (எனக்கு), இல் என்று - இல்லையென்று, உரை - (தலைமகனுக்குச்) சொல்வாயாக. (என்று தலைமகள் தோழியிடங் கூறினாள்.)

(விரி.) கொல் - ஐயப் பொருள்தரு மிடைச்சொல். அவர் கண்ணும் என்பதனால் தலைமகளின் பெற்றோர் மாட்டும் எனக் கொள்க. செவிலி மனப் போக்கு - காவலிற் கடுகுதல். சேர்ப்பனை - சேர்ப்பனுக்கு: உருபுமயக்கம். கதுமென - திடீரென்று. தக்கதோ - ஓ எதிர்மறைப்பொருள். (ருஅ)

இடுமணை லெக்க ரகன்கானற் சேர்ப்பன்
கடுமான் மணியரவ மென்று—கொடுங்குழை
புள்ளரவங் கேட்டுப் பெயர்ந்தாள் சிறுகுடிய
ருள்ளரவ நாணுவ ரென்று.

[இரவுக்குறி வேண்டிவந்த தலைமகன் தலைமகளைக் காணாது சிறைப்புறத்தானாக, தோழி தலைமகள் அல்லகுறிப்பட்டமையினைத் தலைமகற்குக் கூறியது.]

(பத.) கொடும் குழை - வளைந்த காதணிகளையுடைய தலைமகள், புள் அரவம் - பறவைகளின் ஒலிகளை, கேட்டு - அறிந்து, இடு - (அலைகளாலும் காற்றினாலும்) இடப்பட்ட, மணல் எக்கர் - மணல் மேடுகளையுடைய, அகன் கானல் - இருப்பிடமாகிய கடற்கரைச் சோலைகளையுடைய, சேர்ப்பன் - துறைமுகத்திற்குரிய தலைமகனது, கடுமான் - விரைந்து செல்லுங் குதிரையின் (கழுத்திலணியப்பெற்ற,) மணி - மணிகளின், அரவம் என்று - ஒலியென்று (நினைத்து,) சிறுகுடியர் - தன் சுற்றத்தாராகிய பரதவர்கள், உள் - தனது மனத்தினிடத்தே உண்டாகுகின்ற, அரவம் - மனக்கலக்கத்திற்கு (இவ்வொலி காரணமாகுமோ என,) நாணுவர் - மதித்தறிவர், என்று - என நினைத்து, பெயர்ந்தாள் - இரவுக்குறி யிடம்வரை

சென்று தலைமகனுகிய நின்னைக் காணுது திரும்பினுள். (என்று தோழி தலைமகற்குக் கூறினுள்.)

(விரி.) இடுமணல் - வினைத்தொகை. மான் - னகரவொற்றுச் சாரியை. கொடுங்குழை - பண்புத் தொகையன்மொழி. சிறுகுடி-நெய்தனிலத்தூர். (௫௧)

மணிநிற நெய்த லிருங்கழிச் சேர்ப்ப
னணிநல முண்டகன்ற னென்றுகொ லெம்போற்
றிணிமண லெக்கர்மே லோதம் பெயரத்
துணிமுந்நீர் துஞ்சா தது.

[தலைமகள் இரவுக்குறிக்கண் தலைமகன் தன்னைச்
சார்ந்து பிரிந்தவழி உறக்கம் வாராமைகண்டு
புலம்பித் தோழி கேட்ப வுரைத்தது.]

(பத.) எம் போல் - (தலைமகனை இரவுக்குறிக்கண் சார்ந்து திரும்பிவந்து உறக்கங் கொள்ளாத) எம்மைப்போல, திணி - செறிந்த, மணல் எக்கர் - மணன்மேடுகளின், மேல் - மீது, ஓதம் - அலைகள், பெயர - மோதி நடக்கும்படி, துணி - (பெரியோர்களால்) துணிந்து வரையறுக்கப்பட்ட, முந்நீர் - மூன்று தன்மைகளையுடைய கடல், துஞ்சாதது - உறங்காமையை மேற்கொண்டது, மணிநிற நெய்தல் - நீலமணிபோன்ற நிறத்தையுடைய நெய்தற்பூக்கள் (மலர்ந்த,) இரும் கழி - பெரிய உப்பங்கழிகளையுடைய, சேர்ப்பன் - கடற்கரைத்தலைவன், அணி நலம் - தனது அழகிய நலமாகிய இன்பத்தை, உண்டு - மேற்கொண்டு, அகன்றன் - நீங்கிவிட்டான், என்று கொல் - என்று நினைத்துத்தானே? (என்று தலைமகள் தோழியை வினவினள்.)

(விரி.) கொல் - ஐயவினுப்பொருள். முத்தன்மை - படைத்தல், காத்தல், அழித்தல். இச் செய்யுளை, நச்சினுர்க்கினியர் அல்ல குறிப்பட்ட தோழி இல்லுளிருந்து சிறைப்புறமாகக் கூறியதென்பர். (தொல். கள. ௪௨) (௫௰)

கண்டிரண் முத்தம் பயக்கு மிருமுந்நீர்ப்
பண்டங்கொ ணாவாய் வழங்குந் துறைவனை
முண்டகக் கானலுட் கண்டே னெனத்தெளிந்தே
னின்ற வுணர்விலா தேன்.

[தலைமகள், பெரிதாகிய இடையீட்டினுள் அரிதாகத்
தலைமகன் வந்த ஞான்றும், பெறாத ஞான்றைத்
துன்ப மிகுதியாற் பெற்றதனையுங் கனவு
போன்று கொண்டு இகழ்ந்து கூறியது.]

(பத.) கண் - கண்களிலுள்ள விழிகளைப்போல், திரள் - திரட்சியுற்றிருக்கும்படியான, முத்தம் - முத்துக்களை, பயக்கும் - கொடுக்கும்படியான, இரு - பெரிய, முந்நீர் - கடலினிடத்தே, பண்டம் கொள் - பொருள்களை ஏற்றுமதி செய்யும்படியான, நாவாய் - மரக்கலங்கள், வழங்கும் - வந்து போகும்படியான, துறைவனை - துறைமுகத் தலைவனை, முண்டகம் கானலுள் - தாழைகள் சூழ்ந்த கடற்கரைச் சோலையினிடத்தே, கண்டேன் - (இன்று அரிதாகக்) காணப்பெற்றேன், (ஆயினும்) நின்ற - (இவனைக் காணுதல் முன்பு இன்பந்தருமென உணர்ந்து) நிலைபெற்றிருந்த, உணர்வு - உணர்ச்சியானது, இலாதேன் - (இப்பொழுது) இல்லாத யான், என - (புணர்ச்சி துன்பம் தரும்) என்று, தெளிந்தேன் - தெரியலானேன். (என்று தலைமகள் கூறினாள்.)

(விரி.) இடையீடு - தொடர்ச்சியற்ற நிலை. ஞான்று - நாள். இதனை, "மறைந்தவற் காண்டல்," (தொல். களா. உ௰.) என்ற சூத்திரத்துள், "வந்தவழி யெள்ளினும்," என்பதனாற் கொள்க. (கூக)

அடும்பிவ ரெக்க ரலவன் வழங்குங்
கொடுங்கழிச் சேர்ப்ப னருளா னெனத்தெளிந்து
கள்ள மனத்தா னயனெறிச் செல்லுங்கொ
னல்வளை சோர நடந்து.

[அறத்தோடு நின்றபின் வரைவு நீட மற்றொரு குலமகளைத் தலைமகன் வரையுங்கொலென் றையுற்ற செவிலியின் குறிப்பறிந்து தோழி அவட்குக் கூறியது.]

(பத.) அடும்பு - அடப்பங்கொடிகள், இவர் - மேலேறிப் படரும்படியான, எக்கர் - மணன் மேடுகளில், அலவன் - நண்டுகள், உழங்கும் - நடமாடும்படியான, கொடும் கழி - வளைந்து செல்லும் உப்பங் கழிகள் (சூழ்ந்த,) சேர்ப்பன் - கடற்கரைத் தலைவன், அருளான் என - (வரைவு நீடுதலின்) அன்புள்ளவனல்லான் என்று, தெளிந்து - அறிதலால், நல்வளை - நல்ல வளையல்களையணிந்த நந் தலைமகள், சோர - துன்புறும்படியாக, கள்ளமனத்தான் - வஞ்சகனாகி, அயல்நெறி - மற்றொரு குலமகளையடையும் வழியிலே, நடந்து - ஒழுகி, செல்லும் கொல் - தலைமகன் செல்வானோ? (ஒருகாலுஞ் செல்லான், என்று தோழி செவிலியிடங் கூறினாள்.)

(விரி.) எக்கல் - எக்கர்; இறுதிப்போலி. கொல் - ஐயவினாப் பொருளோடு எதிர்மறைக்கண்ணது. தெளிந்து - காரணப்பொருளில் வந்த வினையெச்சம். மனத்தான் - முற்றெச்சம். (௬௨)

கண்ணுறு நெய்தல் கமழுங் கொடுங்கழித்
தண்ணந் துறைவனோ தன்னில னாயிழாய்!
வண்ணகைப் பட்டதனை யாண்மை யெனக்கருதிப்
பண்ணமைத் தேர்மேல் வரும்.

[சிறைப்புறமாக நின்ற தலைமகன் கேட்பத் தோழி தலைமகட்குக் கூறி வரைவுகடாயது.]

(பத.) ஆய் இழாய் - ஆராய்ந்து செய்யப்பட்ட அணிகலன்களை யணிந்த தலைவியே! கண் உறு - கண்களின் தன்மையினைக் கொண்ட, நெய்தல் - நெய்தற்பூக்கள், கமழும் - மணக்கும்படியான, கொடும் - வளைந்து செல்லும்படியான, கழி - கடற் கால்வாய்களையுடைய, தண் - குளிர்ந்த, அம் - அழகிய, துறைவனோ - துறைமுகத்துக்குரிய தலைமகனோ, தன் இலன் - தனது பழைய போக்

கினை மேற்கொண்டாராகவும், வண்ணம் - அழகினையுடைய, கைபட்டதனை - அவன் கைகளில் நாம் அகப்பட்டுக் கொண்டதனை, ஆண்மை என - தனது ஆண்மையின்பாற்பட்ட செய்தி என்று, கருதி - எண்ணி இறுமாப்புற்று, பண் அமை - ஒழுங்காக அமைக்கப்பட்ட, தேர்மேல் - தேரின்கண்ணே அமர்ந்து, வரும் - (வரைதலை எண்ணாது) வாராநின்றனன். (என்று தோழி தலைமகளிடங் கூறினாள்.)

(வி-ரை.) இரவுக்குறியினை வேண்டிவந்த தலைமகன் தலைமகளின் வீட்டு வேலிப்புறமாக நிற்பதைக் கண்ட தோழி தலைமகனுக்குக் கேட்கும்படியாகத் தலைமகளை நோக்கிக் கூறியதாகுமிது. ஓ - சிறப்புப் பொருள். ஆயிழை - வினைத்தொகையன்மொழி. (௯௨)

தெண்ணீ ரிருங்கழி வேண்டு மிரைமாந்திப்
பெண்ணைமேற் சேக்கும் வணர்வாய்ப் புணரன்றில்!
தண்ணந் துறைவற் குரையாய் மடமொழி
வண்ணந்தா வென்று தொடுத்து.

[வரைவிடைப் பொருட்பிரிவில் தலைமகன் நீட்டித்தவழித் தோழி அன்றிலோடு கூறியது.]

(பத.) தெள் நீர் - தெளிந்த நீரினைக் கொண்ட, இரும் - பெரிய, கழி - கடற் கால்வாயிடத்திலே, வேண்டும் - விரும்பிய அளவு, இரை - மீன் முதலிய உணவுகளை, மாந்தி - உண்டு, பெண்ணைமேல் - அருகிலுள்ள பனைமரத்தின் மீதே, சேக்கும் - தங்கும்படியான, வணர்வாய் - வளைந்த வாயினையுடைய, புணர் - இணை பிரியாத, அன்றில் - அன்றிற் பறவையே! மடமொழி - இளமையான மழலைச்சொற்களையுடைய தலைமகளின், வண்ணம் - (களவுப் புணர்ச்சியிற் கைக்கொண்ட) கன்னித் தன்மையாகிய அழகினை, தா என்று - திருப்பிக் கொடுத்துவிடுவாய் என்று, தொடுத்து - வேண்டிய மொழிகளையடுக்கி, தண் - குளிர்ந்த, அம் - அழகிய, துறைவற்கு - துறைமுகத்திற்குரிய தலைமகற்கு, உரையாய் - (சென்று) சொல்வாயாக. (என்று தோழி அன்றிற்பறவையிடம் கூறினாள்.)

(விரி.) வரைதற்கு வேண்டிப் பொருள் தேடச் சென்ற தலைமகன் கால நீட்டிக்க, தலைமகள் பொறாது வருந்த, அதனைக் கண்ட தோழி மனமுடைந்து கூறியதாகுமிது. அன்றில் - ஒருவகைப்புள். இஃது எக்காலும் இணைபிரியாது வாழுமியற்கையதாகலின், "புணரன்றில்," எனப்பட்டது. (௬௪)

எறிசுறாக் குப்பை யினங்கலக்கத் தாக்கு
மெறிதிரைச் சேர்ப்பன் கொடுமை—யறியாகொல்
கானக நண்ணி யருளற் றிடக்கண்டும்
கானலுள் வாழுங் குருகு.

[தலைமகன் வரைவிடை வைத்துப் பொருள் வயிற் பிரிந்த
காலத்துப் பிரிவு நீட்டித்துழித் தலைமகள்
வருந்திக் கூறியது.]

(பத.) கானல் உள் - (யாங் களவுப் புணர்ச்சியிற் கண்டு கூடிய) கடற்கரைச் சோலையினிடத்தே, வாழும் - தங்கியிருக்கும், குருகு - நாரைகள், எறி - துள்ளி விளையாடும், சுறா குப்பை - சுறாமீன் தொகுதியாகிய, இனம் - கூட்டமானது, கலக்க - கலந்து சிதறும் படியாக, தாக்கும் - மோதும்படியான, எறி - வீசுகின்ற, திரை - அலைகளையுடைய, சேர்ப்பன் - கடற்கரைத் தலைமகனின், கொடுமை - (பிரியேன் என்று கூறிப் பிரிந்த) தீமையினை, கானகம் - காட்டு வழியிடத்தே, நண்ணி - பொருள் வேண்டிச் சென்று, அருள் - (என் மேலுள்ள மிகுந்த) அன்பானது, அற்றிட - இல்லாமல் காலநீட்டித்திட, கண்டும் - தெரிந்தும், அறியா கொல் - தெரிந்துகொள்ளமாட்டாவோ? (என்று தலைமகள் தனக்குட்டானே வினவி வருந்தினள்.)

(விரி.) தலைமகள் தான் அறிந்த தலைமகன் கொடுமையினைக் களவின் தொடக்க முதல் அருகிருந்த குருகுகளும் அறியும் என வருத்த மிகுதியாற் கூறினள். (௬௫)

நுண்ஞாண் வலையிற் பரதவர் போத்தந்த
பன்மீ னுணங்கல் கவருந் துறைவனைக்

கண்ணினற் காண வமையுங்கொ லென்றோழி!
வண்ணந்தா வென்கந் தொடுத்து.

[வரைவிடைப் பொருட் பிரிவில் தலைமகன் நீட்டித்தவழித் தோழி தலைமகளோடு கூறியது.]

(பத.) என் தோழி - என்னுடைய தோழியாகிய தலைமகளே! நுண் - நுட்பமாகிய, ஞாண் - கயிறுகளாலே பின்னப்பட்ட, வலையில் - வலையினலே, பரதவர் - நெய்தல் நிலமக்கள், போதந்த - பிடித்துக் கொண்டுவந்த, பல் மீன் - பலவித மீன்களாகிய, உணங்கல் - கருவாட்டினை, கவரும் - (புட்கள் சென்று) பற்றிச் செல்லுதற் கிடமாகிய, துறைவனை - கடற்றுறைமுகத்துக்குரிய தலைமகனை, கண்ணினல் - நம் கண்களால், காண - காணும்படியாக, அமையும் கொல் - நேருமோ? (அங்ஙனங் காண நேருமாயின்,) தொடுத்து - (அவனை விடாது) பின்தொடர்ந்து, வண்ணம் - (களவுப் புணர்ச்சியிற் கைக்கொண்ட) கன்னித் தன்மையாகிய அழகினை, தா - கொடுப்பாய், என்கம் - என்று நாம் கேட்போம். (என்று தோழி தலைமகளிடங் கூறினள்.)

(விரி.) கொல் - ஐயவினைப்பொருள். போத்தருதல் - கொணர்தல். (௬௬)

இவர்திரை நீக்கியிட் டெக்கர் மணன்மேல்
கவர்கா லலவன் றனபெடை யோடு
நிகரி லிருங்கழிச் சேர்ப்ப! என் றோழி
படர்ப்சலை யாயின்று தோள்.

[தலைமகன் தன்னை யருமை செய்து தலைமகளை மறந்த காலை, தோழி அவனை எதிர்ப்பட்டுக் கூறியது.]

(பத.) இவர் - கரைமேலேறி வருகின்ற, திரை - அலைகளினலே, நீக்கி இட்ட - கடலினின்றுங் கொண்டுவந்து போடப்பட்ட, எக்கர் - மேடாகிய, மணல் மேல் - மணலிடத்தே, கவர் - இரு

பிரிவாக அமைந்துள்ள, கால் - கால்களையுடைய, அலவன் - ஆண் நண்டானது, தன - தன்னுடைய, பெடை - பெட்டை நண்டுக ளுடனே, ஒடும் - ஓடிவிளையாடும்படியான, நிகர் இல் - ஒப்பற்ற, இரும் - பெரிய, கழி - கடற்கால்வாய்களையுடைய, சேர்ப்ப - கடற் கரைத் தலைவனே ! என் தோழி தோள் - என் தோழியாகிய தலை மகளின் தோள், (நின் பிரிவாலே,) படர் - படரப்பெற்ற, பசலை யாயின்று - பசலைபூக்கப்பெற்று வருந்தாநின்றது. (நீ வந்து அப் பசலை நோயை நீக்குவாயாக, என்று தோழி தலைமகனை வேண்டிக் கொண்டாள்.)

(விரி.) நீக்கியிட்ட + எக்கர் = நீக்கியிட்டெக்கர்-அகரந்தொகுத் தல் விகாரம். "மணன்மேல் கவர்காலலவன் தன பெடையோடும்," என்றது இறைச்சிப்பொருள். ஆயின்று - ஆயிற்று. (சுள)

சிறுமீன் கவுட்கொண்ட செந்தூவி நாராய் !
இறுமென் குரலநின் பிள்ளைகட்கே யாகி
நெறிநீ ரிருங்கழிச் சேர்ப்ப னகன்ற
நெறியறிதி மீன்றபு நீ.

[தலைமகன் வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிந்த காலத்துப் பிரிவு நீட்டித்துழித் தலைமகள் வருந்திக் கூறியது.]

(பத.) சிறுமீன் - சிறிய மீன்களை, கவுள் - அலகிடையே, கொண்ட - வைத்துள்ள, செம் தூவி - சிவந்த இறகுகளையுடைய, நாராய் - நாரையே ! இறும் - வருந்துதலையுடைய, மெல் - மெல் லிய, குரல - ஒலியினையுடைய, நின் - உன்னுடைய, பிள்ளை கட்கு ஏ - குஞ்சுகளையே, ஆகி - கருதி, மீன் தபு - மீன்களைக் கொல்கின்ற, நீ - (களவுக்காலத்திருந்து எம்மைக் கண்டு கொண்டுள்ள) நீ, நெறி நீர் - அலைந்து செல்லும் நீரினையுடைய, இரும் - பெரிய, கழி - கடற்கால்வாய்களையுடைய, சேர்ப்பன் - கடற்கரைத்தலைவன், அகன்ற - என்னைவிட்டுப் பிரிந்த, நெறி - முறையினை, அறிதி - நன்கு தெரிவாய். (ஆகலின், நீயே எனக்

குற்ற சான்றாகுவை, என்று தலைமகள் நாரையினை நோக்கி நலிந்து கூறினாள்.)

(விரி.) எ - பிரிநிலைப் பொருளது. (௬௮)

அறுபத்தொன்பதாவது, எழுபதாவது செய்யுட்கள் பழைய எட்டுப் பிரதிகளின் சிதைவாற் காணப் பெறவில்லை.

நெய்தல் முற்றும்.

---

ஐந்திணை யெழுபது

முற்றியது.

# ஐந்திணை யெழுபது

## செய்யுள் முதற்குறிப்பு அகராதி.

---

[எண்—பக்கம்.]

| | | | |
|---|---|---|---|
| பீரிவர் | ௩௧ | மணிநிறநெய்த | ௫௨ |
| பூங்கணிட | ௩௬ | மன்றத்துறுக | ௰ |
| பெருங்கை | ௧௩ | மன்றப்பலவின் | ௫ |
| பேதைபுகலே | ௪௨ | மன்றமுதுமரத் | ௩௫ |
| பேதையரென்று | ௪௪ | முள்ளுடை | ௩௨ |
| பேழ்வாய் | ௨௯ | யாணர் | ௬௨ |
| பொய்கைநல் | ௬௭ | வளவயலூரன் | ௪௮ |
| பொரிபுற | ௩௩ | வார்குரலேன | ௧௪ |
| பொறிகிளர் | ௩௰ | வில்லுழுது | ௨௮ |
| பொன்னிணர் | ௭ | வெறிகமழ் | ௯ |
| போத்தில் | ௩௯ | | |

---

# ஐந்திணை யெழுபது

## துறை, சொற்றொடர் விளக்கம்.

---

பக்கம்

வரைவு கடாதல்—மணம் புரிந்துகொள்ளும்படி தூண்டுதல். ... ௩

வரைவு தலைவரல்—தலைமகனைச் சார்ந்தார் மணம் பேசி வரல். ... ௪

வரைவு மலிதல்—மணப் பேச்சினை மேற்கொண்டு வரல். ... ௫

தலைமகன் சிறைப்புறத்தானாக—பாங்கியிற் கூட்டத்தினின்றும் பிரிந்த தலைமகன் தினைப்புனஞ் செல்லுந் தோழியினையும், தலைவியையும் சோலையின் வேலிப்புறமாக நின்று நோக்கினனாக. ... ௬

இயற்பழித்தல்—தலைவனின் அன்பாகிய இயல்பினைக் குறைத்துக் கூறல். ... ௬

இயற்பட மொழிதல்—அன்பாகிய இயல்பு பொருந்துமாறு கூறல். ... ௬

மெலிவில் நயம்—துன்பங் கலவாத இன்பம். ... ௭

புணர்ந்து நீங்கும்—பாங்கியிற் கூட்டத்தாற் றலைவியைக் கூடிப் பிரியும். ... ௮

பகற்குறி—தோழியினுதவியால் பகற்கண்ணே தலைமகனைத் தலைமகள் கண்டு கூடுமிடம். இது தினைப்புனத்தின் அருகிலுள்ள சோலைக்கண்ணதாகும். ... ௯

படைத்து மொழி கிளவி—புதிதாக வொன்றை அமைத்துக் கூறுஞ் சொற்றொடர். ... ௯

மன்றத் துறுகல்—பலர் கூடும் வெளியில் பலரும் அமர்தற் குரியதாகப் பொருந்திய கற்கள். ... ௧௧

பக்கம்

நிரைதொடி—கூடி நெருங்கிய வளையல்களை யணிந்த தலைமகள். ... ௧௨

வெறியாட்டெடுத்தல்—வேலற்குப் பூசையிடல். ... ௧௫

அறத்தோடு நிற்றல்—உண்மையினை எடுத்துச் சொல்லித் தவறாகக் காரியங்களை நிகழவொட்டாது நடத்தல். ... ௧௫

செங்கதிர்ச் செல்வன்—சூரியன். ... ௧௭

கொன்றைக் குழல்—கொன்றைப் பழத்தைத் துருவித் துளைத்துச் செய்த குழல். ... ௨௩

செலவு—பொருள்வயிற் பிரிந்து செல்லுஞ் செலவு. ... ௨௮

வரைவிடைப் பிரிவு—தலைமகளை மணத்தல் வேண்டி முலைவிலைக்காகப் பொருள் தேடுவான் தலைமகன்மேற் கொண்ட பிரிவு. ... ௩௧

உடன்போதல்—தலைவனுடன் பாலைநில வழியாகப் புறப்பட்டுப் போகுதல். ... ௩௭

செய் பேருஞ் சிறப்பு—பிறந்த புதல்வன் முகங் காண்டல், ஐம்படை பூட்டல், பெயரிடுதன் முதலியன. ... ௩௮

உழலை மரம்—தொண்டுக்கட்டை; அன்றி, தொழுவமா மெனலுமாம். ... ௪௧

தம்முறு விழுமம்—தாமுற்ற துன்பம். ... ௪௫

செவிலி மனப்போக்கு—காவலிற் கடுகுதல். ... ௫௧

முத்தன்மை—படைத்தல், காத்தல், அழித்தல். ... ௫௨

இடையீடு—தொடர்ச்சியற்ற நிலை. ... ௫௩

அன்றில்—ஒருவகைப் புள்; இஃது எக்காலும் இணைபிரியாது வாழு மியற்கையது. ... ௫௯

---

# ஐந்திணையெழுபது

## அருஞ்சொற்பொருளகராதி.

[எண்—செய்யுளெண்]

அகம் - மருதநிலம் சஎ

அகலல் - பிரிதல் ஙஅ

அகல்தல் - பரத்தல் சச

அகவல் - அழைத்தல் கசு, ககூ

அச்சு - எழுத்து ருய

அடும்பு - அடப்பங்கொடி சுஉ

அடை - இலை கஉ

அணி - அழகு ச

அதர் - வழி ஙய

அதிர்தல் - முழங்கல் ககூ

அத்தம் - பாலைநிலவழி ஙய

அமர்தல் - விரும்பல் உஉ

அமர்ந்து - அன்பு பட்டு ச

அமாத்தல் - அன்பு படல் ச

அம்மா - வியப்பு உகூ

அயர்தல் - வருத்தமுறல் கக

அரவம்-ஒலி, மனக்கலக்கம் ருகூ

அரா - பாம்பு கச

அரி - சிலம்பினுட்பெய்யுஞ் சிறுகற்கள் சஉ

அருவி - நீர்வீழ்ச்சி உ, எ, கக

அலமரல் - தடுமாறல் கரு

அலர் - மலர் ருஅ

அலர்மொழி - பழிச்சொல் ஙங

அலவன் - நண்டு சுஉ

அலற்றுதல் - விரித்தல் ருரு

அலைத்தல் - வருத்தல் ங, உக

அலைவு - சளைத்துப்பின்வாங்கல் உச

அல்குதல் - ஒருங்குதல் ஙச

அவா - விருப்பம் ஙஅ

அளி - அன்பு கூ

ஆசை - விருப்பம் ருஉ

ஆடுதல் - திரிதல் உரு

ஆமா - காட்டுப்பசு ச

ஆமான் - காட்டுப்பசு ஙஉ

ஆயம் - பசுக்கூட்டம் உஉ

ஆயன் - இடையன் உஅ

ஆரிடை - அரியபாலைவழி ஙக

ஆர்தல் - நிறைதல் ஙய

ஆர்ப்பு - ஆரவாரிப்பு உரு

ஆர்வம் - காதல் கங

ஆலி - மழைத்துளி ககூ

ஆலுதல் - ஆடுதல் ககூ

ஆவி - உயிர் ககூ

ஆழி - மோதிரம் ருசு

ஆள்வினை - முயற்சி ஙஅ

இகன்மை - மாறுபாடு சச

இடம் - இடப்பக்கம் சக

இணர் - பூங்கொத்து சு, கஅ

இதல் - காடைப்பறவை ஙரு

இமிர்தல்-ஒலித்தல் ங, கஉ, கரு

இரா - இரவு கச

இரிதல் - திரிதல் ருச

இவர்தல் - விரும்பல் ஙய
மேலெழுந்து நிற்றல் சஉ

இழை - அணிகலன் உஅ

இறால் - தேன்கூடு ய

இனம் - கூட்டம் ௨௰
இனிது - நன்று க, [கடவுள் வாழ்த்து.]
இன்னல் - துயரம் ௩௭
இன்னே - இப்பொழுதே ௧௪
ஈதல் - கொடுத்தல் ௬
ஈரம் - இரக்கம் ௩௪
உகளல் - குதித்து விளையாடல் ௯
உகிர் - நகம் ௩௪
உணங்கல் - வாடல் ௩௯
கருவாடு ௬௬
உணர்தல் - தெரிதல் ௫௭
உண்ணுட்டம் - ஆழ்ந்த ஆராய்ச்சி ௫௩
உயங்கல் - வாடல் ௪௨
உயிர் - உடலம் ௧௮
உய்த்தல் - கொண்டுசேர்த்தல் ௪௬
உரற்றல் - இடித்தொலித்தல் ௧௭
உரும் - இடி ௧௭
உரை - சொல் ௧௪
உழக்கல் - சிதைத்தல் ௪௭
உழத்தல் - முயலல் ௨௫
உழிதரல் - சுழலல் ௫௭
உழுதல் - முயல்தல் ௩௰
உள்ளம் - மனம் ௩௬
உள்ளுதல் - எண்ணுதல் ௫௰
உறழுதல் - இடையிட்டுக் கிடத்தல் ௫௰
உறை - மழைத்துளி ௧௮
உறைதல் - வாழ்தல் ௫௪
உற்றது - பொருந்தியது ௪௯
உன்னல் - நினைத்தல் ௩௩
ஊதியம் - நன்மை ௫௭
ஊதை - காற்று ௫௭
ஊராண்மை - பெரியகாரியம் ௫௪
ஊன் - இறைச்சி ௪௫
எக்கர் - மேடு ௫௯
எண் - அளவு ௫௨
எண்கு - கரடி ௩௪
எயிறு - பல் ௨௧
எரி - நெருப்பு ௧௮
காட்டுத்தீ ௩௭
எல்லி - இரவு ௨௪
எவ்வம் - தவறு ௫௫
எழில் - அழகு ௧௬, ௧௮
ஏங்கல் - குறை இரந்து நிற்றல் ௫௨
ஏதம் - துன்பம் ௧௪
ஏதில்மகளிர் - பிறமகளிர் ௪௪
ஏமம் - அரணம், பாதுகாவல் ௧௪
ஏர் - ஏர்பு, எழுதல் ௨௪
ஏர் - அழகு ௫௧
ஏனல் - தினை ௧, ௧௩
ஐம்படை - திருமாலின் ஐவகைப்படை போன்றமைந்த கழுத்தணிகலம் ௪௩
ஐவனம் - மலைநெல் ௧௨
ஒண்மை - நன்மை ௪௰
நிறம் ௫௰
ஒல்லுதல் - முடிதல் ௪௨
ஓதம் - வெள்ளம் ௫௨; அலை ௬௰
ஓதை - ஒலி ௪௮
ஓமை - மாமரம் ௩௭
ஓர் - ஒப்பற்ற ௫௧
ஓர்தல் - நினைத்தல் ௫௰
கடவு - வழி ௩௯
கடு - மாவிலங்குமரம் ௩௯
கடுகல் - விரைதல் ௩௰
கடுமான் - விரைந்து செல்லுங் குதிரை ௫௯

கடுவன் - ஆண்குரங்கு ௪௧
கண் - சுற்றம்; இடம் ௫௧
கண்ணோட்டம் - அருட்பார்
௬௨, ௯
கண்படுதல் - உறங்கல் ௩௪
கதழ்வு - விரைவு ௪௮
கதுவுதல் - பற்றுதல் ௧
கமழ்தல் - மணத்தல் ௯, ௨௭
கயம் - நீர், குளம் ௫
கரத்தல் - மறைத்தல் ௧௫
கலி - ஒலி ௨௩
கலை - கல்விப்பொருள் [கடவுள்வாழ்த்து.]
கல் - மலை ௨; நடுகல் ௨௯
கவரி - ஒருவகைமான் ௧
கவினல் - அழகுறல் ௨௪
கவினுதல் - அழகு பெறுதல் ௨
கவுள் - அலகு ௯௮
கவ்வை - காரியம் ௩௬
கழறுதல் - வற்புறுத்திக் கூறல் ௫௩
கழி - கடற் கால்வாய் ௯௩
களிறு - ஆண்யானை ௧௨
களைதல் - ஒழித்தல் ௪௯
கள்ளமனம் - வஞ்சகம் ௯௨
கள்ளர் - ஆறலைப்போர் ௩௯
கறி - மிளகுக்கொடி ௮
கா - சோலை ௧௩
காணல் - செய்தல் ௪௪
காதல் - அன்பு ௫௨
காய்தல் - சினத்தல் ௭
காரிகை - அழகு ௨௧
கார் - கார்காலம் ௧௫, ௧௭
முகில் ௧௯
கார்ப்பு - மழை ௨௭
கால் - அடிப்பாகம் ௧௨
கானகம் - குறிஞ்சி நிலம் ௧
கானம் - பாலைநிலவழி ௩௫
கானல் - கடற்கரைச்சோலை ௫௯
கான்யாறு - காட்டாறு ௭
கிளப்பல் - சொல்லல் ௪௯
கிளை = கிள்ளை - கிளி ௧௩
கிளை - கூட்டம் ௩௪
குஞ்சரம் - யானை ௩௧
குற்றல் - கொய்தல் ௩௩
குரல் - கதிர் ௧, ௧௩; ஒலி ௨௩
குருகு - பறவை ௫௭
நாரை ௯௫
குழல் - சுருட்டிமுடிக்கப்படுவது ௪௮
குழுமல் - கூடித்திரிதல் ௩௮
குழை - காதணி ௫௯
குளவி - காட்டு மல்லிகை ௩
குறும்பு - பாலைநிலத்தூர் ௪௰
குன்று - மலை ௯
கூத்து - நாடகம் ௪௫
கூந்தல் - பெண்மயிர் ௪௮
கேண்மை - நட்பு ௫, ௧௨, ௧௩
கேழல் - பன்றி ௧௧
கைப்படல் - அகப்படல் ௯௩
கோடுமை - வளைவு ௯௨
கொடுவரி - புலி ௩௯
கொல்லுநர் - கொல்வார் ௧௭
கொல்லை - தோட்டம் ௨
கொளை - கொள்ளப்படுதல் ௫௯
கோடல் - வெண்காந்தள் ௧௭
கோண்மா - களிறு ௩௯
கோல் - அம்பு ௧௧
கோவலர் - இடையர் ௨௨
சாலுதல் - அமைதல் ௪௫
சான்றவர் - அமைந்தார் ௫
சிறுகுடி - நெய்தனிலத்தார் ௫௯
சிறுகுடியர் - பாதவர் ௫௯

சினம் - சீற்றம் கரு
சுரம் - பாலைநிலம் ருஉ
சுரும்பு - வண்டு கஉ, உஅ
சுறு - சுறுமீன் கூரு
சுனை - மலையின்கண் நீர்நிலை அ
சூரல் - பிரப்பம் புதர் ருரு
சூலுதல்-கருக்கொள்ளுதல் கசு
சூழ்தல் - நெருங்கல் ருக
செய் - கழனி சகூ
செறுதல் - சினத்தல் ருக
சேரி - சிற்றூர் ருச
சேவல் - ஆண்கோழி ருரு
சோர்தல் - துன்புறுதல் கூஉ
ஞமுக்குதல் - நெருடுதல் சஎ
ஞாண் - கயிறு கூகூ
ஞான்று - நாள் கூக
தடம் - பெருமை ககூ
தண் - குளிர்ச்சி அ
தபுதல் - கொல்லல் கூஅ
தமர் - தம்மவர் ருக
தழங்கல் - ஒலித்தல் உரு
தளர்தல் - நெகிழ்தல் சஎ
தளவு - செம்முல்லை உச
தளிர்த்தல் - தழைத்தல் உ௰
தாது - பூந்துகள் கஅ
தாமம் - மலர்மாலை சஅ
தாளாண்மை - ஊக்கம் உசு
தாள் - அடிப்பாகம் ருஅ
திகழ்தல் - காணுதல் ரு
விளங்கல் கரு
திணிதல் - செறிதல் கூ௰
திண்ணிதின் - நன்றாக கஎ
திரள் - திரட்சி கூக
திரை - அலை ருஎ
திறம் - மேன்மை சசு
ஒழுக்க முறை ருரு
தீர்த்தல் - விட்டொழித்தல் ருரு
துகைத்தல் - மிதித்தழக்கல் ௰
துஞ்சல் - துயிலுதல்,
உறங்கல் கஉ, கூ௰
துடித்தல் - துயருறல் கஅ
துணை - காவல் ருரு
துருவல் - நெருக்கிப்
பிடித்தல் சரு
துவன்றுதல் - நெருங்குதல் ருஉ
துளும்பல் - அசைதல் அ
துறத்தல்-பிரிந்துசெல்லல் உக
தூவி - இறகு ருஎ
தெருள் - தெளிவு ருரு
தெவுட்டல் - நிறைதல் ருசு
தெளிவு - விளக்கம் கரு
தேமா - தித்திப்பு மாமரம் அ
தேம்-தேன் எ; நறுமணம் சஎ
தேரை - தவளை உரு
தொடி - வளையல் ௰, ருரு
தொடை - தொடுத்தல் உசு
நசை - விருப்பம் ருக
நண்ணல் - நெருங்கல் ச௰
நயம் - ஈரம் உ; இன்பம் ரு
நல்குதல் - கொடுத்தல், [கடவுள்
வாழ்த்து]
நளி - குளிர்ச்சி கூ
நறும் - மணத்தினையுடைய கஎ
நாணுதல் - மதித்தறிதல் ருசு
நாண் - வெட்கம் ருஉ
நாவாய் - மரக்கலம் கூக
நீத்தல் - துறத்தல், பிரிந்து
செல்லல் ககூ
நீயிர் - நீங்கள் ருஉ
நீர் - தன்மை கரு
நுதல் - நெற்றி ருஎ
நெஞ்சு - மனம் ரு, ருச, ருஎ
மார்பு கக
நெறி - வழி ருகூ

நெறிதல் - அலைதல் ௬௮
பசலை-காதலாலுண்டாம் மேனிமாற்றம் ௯௭
படப்பை - தோட்டம் ௩௫
படர்தல் - செல்லல் ௩௬
படலை - பூமாலை ௨௮
பட்டம் - மேலாடை ௪௩
பணை - மூங்கில், ௧௬
மருதநிலம் ௪௪
பண் - ஒழுங்கு ௬௩
பண்டம் - பொருள் ௬௧
பதுக்கை - சிறுதூறு, சிறுபாறை ௩௰; புதர் ௪௮
பரதவர் - நெய்தனில மக்கள் ௬௬
பருவம் - கார்காலம் ௧௫
பழனம் - மருதநிலம் ௪௬
பழிபாடு - குற்றப்பாடு ௫௩
பாங்கு - இணக்கம் ௪௧
பிடி - பெண்யானை ௩௭
பிணங்கல் - பின்னல் ௩௬
பிணி - நோய் ௪௧
பிணித்தல் - கட்டல் ௪௪
பிரசம் - தேன் ௰
பிழைத்தல் - தவறல் ௩௧
பிளிற்றல் - ஒலித்தல் ௩௫
பிள்ளை - குஞ்சு ௬௮
பின் - மறுமை ௫
பீர் - பீர்க்கஞ்செடி ௩௪
பீலி - தோகை ௧௯
புகர் - அழகு ௩௭
புகல் - அடைக்கலம் ௪௮
புணர் - இணை ௬௪
புதல் - புதர் ௨௪
புதல்வன் - மகன் ௪௭
புயல்-மழைப்பெயல், முகில் ௨௰
புலத்தல் - ஊடல் ௫௰
புல்லுதல் - தழுவல் ௧௭
புள் - பறவை ௫௯
புறவு - முல்லைநிலம் ௧௯, ௨௪
புனம் - கொல்லை ௨௰
புனல் - நீர் ௫௨
பூ - அழகு ௪௧
பெண்ணை - பனைமரம் ௬௪
பெயர்தல் - ஊர்தல் ௨௮
திரும்பல் ௫௯
பேதமை - அறியாமை ௪௪
பேதை - பெண் ௪௮
பேதையர் - அறிவிலார் ௩௧
பேழ்வாய் - பிளந்தவாய் ௩௧
பொங்கல் - களித்துத் திரிதல் ௨௰
பொதியில் - மன்றம் ௩௧
பொதும்பு - சோலை ௩
பொய் - வஞ்சகம் ௫௰
பொய்கை - மலர்த்தடம் ௪௭
தடாகம் ௫௪, ௩௫
பொருந்தினர் - காதலரோடு கூடிவாழுங்காதலியர் ௧௨
பொலம் - பொன் ௫௫
பொறி - தலைச்சூட்டு ௩௩
செல்வம் ௪௩
பொன் - திருமகள் ௪௮
அழகு ௫௮
போத்தருதல்-கொணர்தல் ௬௬
போத்து—போது - நேரம் ௪௫
போர் - சண்டை ௩௫
மகிழ்நன் - மருதநிலத் தலைவன் ௪௮
மஞ்ஞை - மயில் ௧௬
மடம் - அறியாமை ௮
மென்மை ௪௯
மயங்கல் - கலத்தல் ௨௰
மரல் - மருள்செடி ௩௩

மராம் - மராமரம் ௧௨
மருள் - மாயம் ௫௬
மரையான் - மான் ௰
மலிதல் - மிகுதல் ௪௮
மறி - ஆட்டுக்குட்டி ௧௩
மறு - பாழ், குற்றம் ௩௪
மனை - வீடு ௩௪
மன்றம் - பலர்கூடும்வெளி ௯
மன்று - மக்கள் முதலோர் சென்று தங்குமிடம் ௪
மா - விலங்கு ௩௮
மாந்தல் - தின்னல், ௧௨; மேய்தல் ௪௬; உண்ணல் ௬௪
மார்பு - நெஞ்சம் ௫௧
மாலை - அந்திவேளை ௧௭
மால் - காதல் ௪௬
மீளி - வீரம் ௩௮
முகன் - மணப்போக்கு ௫௮
முசு - ஒருவகைக் குரங்கு ௯
முண்டகம் - தாழை ௬௧
முண்டம் - தலை [கடவுள் வாழ்த்து.]
முதுமரம் - ஆலமரம் ௪௰
முத்தம் - முத்து ௬௩
முந்நீர் - கடல் ௬௰
முயங்கல் - தழுவல் ௫௨
முழங்கல் - ஆரவாரித்தல் ௨௨
மெலிவு - வருத்தம், குறைவு ௫
மொய்ம்பு - வலிமை ௩௮

யாணர் - புதுவருவாய் ௪௯
வணர் - வளைவு ௬௪
வண்ணம் - அழகு ௬௩
வதிதல் - தங்கல் ௪௬
வயங்கல் - விளங்கல் ௬
வயம் - வெற்றி ௩௮
வயல் - கழனி ௪௭
வரி - நீளம், இரேகை ௩௭
வரை - மலை ௩, ௰
வரைதல் - மணம்புரிதல் ௰
வலன் - வலப்பக்கம் ௩௩
வழங்கல் - செலுத்தல் ௨௨
நடமாடல் ௧௪, ௩௨, ௬௨
வழிபாடு - வணக்கம் ௫௩
வாடல் - மெலிதல் ௨
வாடுதல் - குறைதல் ௨௧
வாயில் - காரணம் ௨௯
வார் - நீண்ட ௧௩
வாழ்நாள் - வாழுங்காலம் ௫௬
வானம் - விசும்பு ௧௫, ௧௮
முகில் ௧௬, ௧௭, ௧௮
வான் - மழை ௨; பெருமை ௨௮
விருப்பம் - காதல் ௧௯
வீ - பூ ௩௮
வெருகு - காட்டுப்பூனை ௩௬
வெறி - நறு நாற்றம் ௮
வேட்டல் - விரும்பல் ௧௪
வேலன் - தேவராளன் ௧௩
வைகல் - நாடோறும் ௫௫

கழக வெளியீடு—கஅஉ.

கணிமேதாவியார்

இயற்றிய

# திணைமாலை நூற்றைம்பது

மூலமும், பழைய வுரையும்



தமிழ்ப் புலவர்

திரு. அ. நடராச பிள்ளையவர்கள்

எழுதிய

விளக்க வுரையும்



திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்

திருநெல்வேலி & சென்னை

யுவ—மாசி

# முகவுரை.

---

கீழ்க்கணக்கு நூல்கள் பதினெட்டனுள் ஐந்திணை நூற்கள் நான்கினுந் தலைசிறந்து விளங்குவது திணைமாலை நூற்றைம்பது என்பதேயாகும். இதன்கண் தொல்காப்பியர் கண்ட பல அரிய அகப்பொருட் டுறைகள் செம்மணிகளெனத் திகழ்கின்றன. மேலும், கோவை நூல்களிற் காணப்படும் பல்வகைத் துறைகளிற் பெரும்பான்மை, ஈங்குப் பிறங்கல் விளக்கே போல் பிறங்கிடு முறைமை கற்றோர் நெஞ்சங் கவருந் திறத்ததாம். இஃது எம்மொழியுங் காணா இலக்கணமாகிய பொருளின்கண்ணதாகிய அகத்திணை குறிஞ்சி, நெய்தல், பாலை, முல்லை, மருதம் எனப் பகுத்து விளக்கிச் செல்லாநின்றது. ஒவ்வொரு பகுப்பின்கண்ணும் முப்பது பாக்களாக ஐந்து பகுப்புக்களிலும் நூற்றைம்பது பாக்களைக் கொண்டு திணைமாலை நூற்றைம்பது என்ற பெயர்க்குப் பொருந்துமாறு இந்நூல் காணப்பட வேண்டுமாயினும், அங்ஙனமன்றிக் குறிஞ்சி முப்பத்தொன்றும், நெய்தல் முப்பத்தொன்றும், பாலை முப்பதும், முல்லை முப்பத்தொன்றும், மருதம் முப்பதுங் கொண்டு மொத்தம் நூற்றைம்பத்து மூன்றாகப் பாக்கள் பரவப் பெற்றுள்ளது; பாயிரமொன்று இறுதியிற் புறவுரையாகப் போற்றப் பெற்றுளது.

நாலைந்திணை நூல்களின் நாயகமாகிய இத்திணைமாலை நூற்றைம்பது அகப்பொருளின் அமைதியாகிய அன்பினைந் துறைதோறும் போற்றும்வண்ணம் பலபடியாகப் பகர்ந்திருக்கு முறை; பாவலரும் நாவலரும் பரிந்து கொண்டாடும் பான்மையதாம். இதனாலன்றே, பாயிரத்தின்கண்ணும், "முனிந்தார் முனிவொழியச் செய்யுட்கண் முத்துக்கனிந்தார்," எனக் காணப்பட்டுளது. அன்பின் ஆணிவேராகிய புணர்ச்சியின் போக்கினை முன்னர்க் கூறி,

அன்பின் முதிர்வாகிய இரங்கலையும், இரங்குதற்குக் காரணமாகிய பிரிவினையும், பிரிவினை ஆற்றியிருத்தலாகிய முல்லையினையும், ஆற்றியிருத்தலின் பயனாகிய ஊடலுடன் கூடலையும் முறையே கூறியுள்ளமை கூர்ந்து நோக்கிக் கொண்டாடற்குரியதாம்.

குறிஞ்சிக்கண் தலைவியின் இற்செறிப்புக்குக் காரணமாகத் தினை முற்றியமையினைக் கூறுதல் விடுத்து, "கார்மயிலன்னாள் இமிழக் கிளியெழா வார்த்து," எனத் தலைமகளின் முதுக்குறை வினைக் குறிப்பிடுதலும், நல்வினையானது மிகுதலாற் செல்வம் மிகு மென நன்னெறி கூறலும், வேங்கையினைத் தீத்தீண்டு கையார் என்றலும், நீர்வீழ்ச்சியினை, மாவீல மாண்ட துகிலுமிழ்வ தொக்கு மெனக் கூறலும் படிப்பார் நெஞ்சைப் பற்றுவனவாகும். இரவுக் குறி விலக்கல் கூறுமுகத்தான், ஆங்காங்குக் குறிஞ்சி நிலத்தின் தன்மை கண்கூடாகக் காணுமாறுபோற் கூறப்பட்டுள்ளது. அறத் தொடு நிற்றல் வாயிலாய்க் களிறுதரு புணர்ச்சி, பூத்தரு புணர்ச்சி, புனல்தரு புணர்ச்சிகள் இங்குப் பொலிவுடன் காணப்படுகின்றன. மலைநாட்டுச் சிற்றூர், "ஒருவரைபோ லெங்கும் பல்வரையுஞ் சூழ்ந்த, அருவரை யுள்ளதாம்," எனக் கூறப்படுதலும், "பலா வெழுந்த பால் வருக்கை," எனத் தொடங்கிப் பகற்குறியிட வமைதியினைக் காட்டும் பண்பும் மனத்தகத்தே பதியவைக்கும் மாண்புடையனவாம். ஓரம்பாற் போக்குதலும், ஈரம்பாற் போக் காமையுமாகிய சொன்னயமும் இங்குக் காணலாம்.

நெய்தற்கண் ஆங்காங்குக் கடற்காட்சிகளும், நெய்தனிலக் கருப்பொருள்களும் நிறைந்து நின்று கற்பார் கருத்தைக் கவரு கின்றன. "தாமரையாகிய முகம் நீலமாகிய கண்ணால் உறங்கும்," எனவும், "குருகு தாழை முகையினைக் குஞ்சு என்று கருதிக் காக் கும்," எனவும் இறைச்சிப் பொருள் கையாளப் பெற்றுள்ளது. வலிதாகக் குறை நயப்பித்த நாகரீகம் நாற்பதாவது செய்யுளிற் கண்டு களிக்கும் வண்ணம் காணப்படுகின்றது. தலைவிக்குக் கையுறையாகக் கொண்டு செல்வது இளந்தளிர்களே யன்றித் திணைக்கேற்ப, நெய்தனிலக் கருப்பொருள்களி லொன்றாகிய

முத்துக்களைக் கைக்கொண்டது பெரிது முன்னற்பாலதாம். இடையிடையே காணப்பெறும் பசுங்குறிப்பாங்குகளும், இரவுக் குறியமைந்த இடத்தின் சிறப்புகளும் எண்ணி யெண்ணி இன்புறற் குரியனவாம். மேலும், "ஒருதிரை யொடாமுன் இருதிரை மோதும் வரைமை," என்ற கடற்கரை இயற்கைக் காட்சி எடுத் தியம்பப் பெற்றுள்ள நேர்மை; அக்காலப் புலவரின் மனத்தே எளிய காட்சிகளும் வலியுற்று நின்றன எனக் காட்டாநின்றது.

பாலைக்கண் அந்நிலக் கொடுங்காட்சிகள் பலபடியாக விரிக்கப் பட்டுள்ளன. பாலைக்கு நிலமின்றெனுங் கொள்கையை மேற் கொண்டு, நெய்தற்கட் பாலையும், குறிஞ்சிக்கட் பாலையும் இடையிற் கொள்ளக் கிடக்கின்றன. பெண்மக்கட்கு இடக்கண்ணாடல் நல் லறிகுறியென்பதும், படிமத்தாளின் தெய்வ வன்மையால் எதிர் கால நிகழ்ச்சிகளை யறிய விரும்புதலும் அக்கால மரபென இதன் கண் அறியலாம். எண்பத்தோராவது செய்யுட்கண் சுருங்கச் சொல்லலாலும், இரட்டுற மொழிதலாலும் ·எடுத்துக் கொண்ட பொருளை விளக்கிச் செல்வது வியக்கற்பாலதாம். எல்லா இன்பங் கட்கும் காரணமாய பொருளாலும் சென்ற விளமைக் காலத்தைப் பெறவியலாதென்ற பெற்றியும், பெண்மக்களை அறனிற நோக்கா ஆண்மை நிறையும் எண்பத்தைந்து, எண்பத் தொன்பதாவது செய் யுட்களின்கண் முறையே சிறப்புற்றுத் தென்படுகின்றன.

முல்லை, முதற்கண் எதிர்ப்படுஞ் செய்யுளினிடத்தே "இருங் கடன்மா கொன்றான் வேன்மின்னி," எனக் கார்காலச் சிறப்புக் கூறுமிடத்தில் முருகன் புகழ் கூறப்படுகின்றது. இஃதே போன்று, ஐந்திணையம்பது என்ற நூலின்கண் நூலின் முதலும், முல்லையின் தொடக்கமுமாகிய செய்யுளின்கண், "செல்வக்கடம்பமர்ந்தான் வேன் மின்னி," எனக் கூறப்படுதலால், அந்நூலின்கண் காணப் படும் திணைமுறைவைப்பே இந்நூலுக்கும் கொள்ளப்பட வேண்டும் போற் கூறக் கிடக்கின்றது. ஞாயிற்றின் வெப்பத்தாற் கார் தோன்று மென்ற இயற்கையுணர்வு அக்காலத்து முண்டென்பது நூற்றைந்தாவது செய்யுளான் வலியுறுகின்றது. இம்மையிற் செய்

தனை இம்மையிலேயே பயன்றரு மென்ற செய்தி நூற்றிருபத்து மூன்றாவது செய்யுளால் விளக்கமுறுகின்றது. இடையிடையே முல்லை நிலத்தின்கண் தோன்றுங் கார்காலக் காட்சி ஓவியன் வரைந்த உருவெழிலோடு கற்பார் கண்ணகத்தே காணுமாறு இத் திணைக்கண் செப்பிச் செல்லுமுறை சிந்தையிற் சேர்க்கற்பாலதாம்.

மருதத்திணைக்கண் அந்நிலவளனும், பாணற்கு வாயின் மறுக்கும் வழிகளும் பல்லாற்றான் விரிக்கப்பட்டுள்ளன. இடையிடையே உள்ளுறை யுவமமும், இறைச்சிப் பொருளும் புகுந்து கற்பார்க்கு நல்விருந்தாக நடக்கின்றன. தலைமகள் பூப்புற்றமையினைச் செவ் வணியுற்ற சேடியர் சென்று தலைவற்குத் தெரிவிக்கும் மரபும், பெற்ற மகற்கு ஐம்படை பூட்டி, பெயரிட்டு, முகங்கண்டு தலைவன் மகிழுஞ் செய்திகளும் இங்குத் தெளிவுறுகின்றன.

இந்நூலின்கண் நூற்று ஐம்பத்துமூன்று நேரிசை வெண்பாக் களும், இன்னிசை வெண்பா ஒன்றும் காணப்படுகின்றன. அவை மற்றைய சங்க நூற்களிற் கையாளப்பட்ட பாக்கள் போன்றே சுருங்கச் சொல்லிப் பெரும் பொருள் பலவற்றை விரிக்கும் பெற்றி யனவாகக் காணப்படுகின்றன. மருதத்திணையின்கண் மூன்று செய்யுட்களில் ஏட்டுப் பிரதிகளி லேற்பட்ட சிதைவால் சில மொழிகள் காணக் கிடையாமற்போயின. அவற்றை முன் பின் வரு மொழிகளின் துணைகொண்டு நிரப்புதல் செய்து, பெரிய எழுத்துக்களான் அவை காட்டப்பட்டுள்ளன. இதனை இயற்றிய கணிமேதாவியார் என்பார்க்கு, 'கணிந்தார்,' என மற்றொரு பெயரு முண்டென இறுதியிற் காணப்படும் பாயிரச் செய்யுளாற் பெறப் படும். நான்காவது செய்யுளின்கண், "கோடாப்புகழ்மாறன் கூடல்," என இவர் கூறலான் மதுரையின்கண் பாண்டியனை யண்மி வாழ்ந்த பலபுலவர்களி லொருவ ரெனப் பகரலாம் போலும். இன் னும் முல்லைத்திணை முதற்செய்யுளின்கண், "இருங்கடன்மா கொன்றான்," என முருகப் பெருமானைக் கூறியுள்ளமையாலும், தொல்காப்பியர் போக்கின்படி முல்லையை முதற் கொண்டு நூலை அவர் தொடங்கியிருப்பர் எனக் கருத நேருகின்றமையாலும் இவர்

சமயம் சைவமாமெனத் தோன்றுகின்றது. இவற்றுக்குமேல் இவரைப்பற்றி யறிதற்குச் சான்று யாதுங் கிடைத்திலது.

இந்நூல் மிக அருமையான பழைய பொழிப்புரை யொன்றினையும், பாட்டின் கருத்தினை விளக்கும் சிறு சொற்றொடர்களையும் கொண்டுள்ளது. இவற்றைக் கண்டார் யாரெனக் காணுமாறுங் கிட்டிலது. நாற்பத்து மூன்றாவது செய்யுளின் பழைய வுரையின் இறுதித் தொடரும், நூற்றிருபத்தேழாவது செய்யுளின் பழைய வுரைப் பிற்பகுதியும் ஏடுகளின் சிதைவாற் காணப் பெறாது புதியன வாகச் சேர்க்கப்பட்டன. நூற்றிருபத்தெட்டாவது செய்யுண் முதல் இருபத்தேழு செய்யுட்கட்குப் பழையவுரையுங் கிடைக்கப் பெறவில்லை. இவற்றுக்குப் புதிதாகப் பதவுரை மட்டும் எழுதிச் சேர்க்கப்பட்டன. இப்புதியவுரைக்கண் அரிய பல திருத்தங்கள் செய்து உதவிய சாத்தூர் வழக்கறிஞர் திருவாளர் T. S. கந்தசாமி முதலியாரவர்கள் B.A. காலத்தினாற் செய்த நன்றி என்றும் எண்ணிப்பாராட்டும் ஏற்றமுடையதாகும்.

சென்னை அரசாங்கக் கையெழுத்துப் புத்தகசாலையில் உள்ள திணைமாலை நூற்றைம்பது என்ற இந்நூலின் கையெழுத்துப் பிரதி கொண்டு நூற்று ஐம்பத்திரண்டாவது செய்யுட்கு, 'மூலை', என்ற பாட பேதமும், 'தழு', என்ற பாட பேதமும், நூற்று ஐம்பத்து மூன்றாவது செய்யுட்கு, 'நோக்கென்', என்ற பாட பேதமும் மேற் கொள்ளப்பட்டன.

இந்நூல் எளிய முறையில் எல்லோர்க்கும் பயன்பட வேண்டு மென்ற நல்லெண்ணத்தினானே ஊக்குவிக்கப்பட்டுப் பதவுரை விரிவுரைகளுடன் இங்ஙனம் வெளியிட முன்வந்தமையின், இதனைக் கண்ணுறும் பெரியோர்கள் யான் அறியாமையாற் கொண்டுள்ள பிழைகளை எடுத்துக் காட்டி மன்னிக்க வேண்டுகின்றனன். தோன்றாத் துணையாக முன்னின்று இதனை முடிப்பித்த எல்லாம் வல்ல இறைவற்கு எனது வணக்கம் உரியதாகுக! இதனை வெளி யிட்டுதவிய தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்

நார்க்கும், இதனை வெளியிடுங்கால் அன்புகூர்ந்து பார்வையிட்டுத் திருத்தங்கள் செய்தும், செய்யுள் முதற்குறிப்பகராதி, அருஞ்சொற் பொருளகராதி, துறை சொற்றொடர் விளக்கம் இவற்றையமைத்தும் உதவிய மேற்படி கழக வெளியீட்டுக் குழுவுறுப்பினரும், பாளையங்கோட்டை அர்ச் சவேரியர் கல்லூரித் தலைமைத் தமிழாசிரியரும் ஆகிய திருவாளர் வித்வான். பு. சி. புன்னைவனநாத முதலியாரவர்கட்கும் யான் என்றும் நன்றி பாராட்டுங் கடப்பாடுடையேன்.

இங்ஙனம்,

திருச்சி,
9—2—36.

அ. நடராச பிள்ளை.



# திணைமாலை நூற்றைம்பது

## விளக்கவுரை பழைய பொழிப்புரையுடன்.

---

### முதலாவது—குறிஞ்சி.

நறைபடர் சாந்த மறவெறிந்து நாளா
லுறையெதிர்ந்து வித்தியவூ ழேனற்—பிறையெதிர்ந்த
தாமரைபோல் வாண்முகத்துத் தாழ்குழலீர்! காணீரோ
வேமரை போந்தன வீண்டு.

[தலைமகளுந் தோழியும் ஒருங்கிருந்தவழிச் சென்று
தலைமகன் தோழியை மதியுடம்படுத்தது.]

(பதவுரை) நறைபடர் - மணமிக்க பூங்கொடிகள் படர்ந்துயர்ந்த, சாந்தம் - சந்தனமரங்களை, அற - (வேரோடு) கெடும்படி, எறிந்து - வெட்டி, நாளால் - நல்லநாளில், உறை - மழை பெய்யுங் காலத்தை, எதிர்ந்து - மேற்கொண்டு, வித்திய - விதைத்ததனால், ஊழ் - முதிர்ந்த, ஏனல் - தினைப்புனத்தினைக் (காவல் செய்யும்,) பிறை - பிறையாகிய மதியினை, எதிர்ந்த - மேற்கொண்டுள்ள, தாமரைபோல் - தாமரைமலரினை யொத்த, வாள் முகத்து - ஒளியோடு கூடிய முகத்தினைக் கொண்ட, தாழ்குழலீர் - நீண்ட கூந்தலையுடைய பெண்மணிகளே! ஈண்டு - இவ்விடத்தைநோக்கி, போந்தன - வந்தனவாகிய, ஏ மரை - (எமது வில்லினின்று புறப்பட்ட) அம்பினைக் கொண்ட மான்களை, காணீரோ - கண்டிலீரோ? (என்று தலைவன் வினவினான்.)

(பழையவுரை) நறைக் கொடி படர்ந்துயர்ந்த சந்தனங்களை அற வெட்டி நல்ல நாளால் மழை பெய்யுங்

காலத்தை யேற்றுக்கொண்டு வித்தி முதிர்ந்த ஏனலின்கண், பிறையை யேற்றுக் கொண்டதொரு தாமரை மலரைப் போலும் வாண் முகத்தையும் தாழ்ந்த குழலையு முடையீர்! கண்டிலீரோ? ஏவுண்ட மரை போந்தனவற்றை இவ் விடத்து.

(விரிவுரை) குறிஞ்சி - புணர்தலும் புணர்த னிமித்தமுமாகிய வொழுக்கம்: மலைநாட்டில் நிகழ்வது. ஒருங்கு இருந்தவழி - ஒன்றாக விருந்தவிடத்து. மதியுடம்படுத்தல் - தோழியின் அறிவுப் போக்கினைத் தலைவன் தனது விருப்பினை நிறைவேற்றற்குத் தகுதியாக மாற்றல். இது பாங்கியிற் கூட்டத்தின்பாற்படும். நாளால் - வேற்றுமை மயக்கம். பிறையெதிர்ந்த தாமரை - இல் பொருளுவமம். "நறைபரந்த சாந்தம்," எனவும் பாடம். இது கெடுதி வினவுந் துறையெனவும் படும். கெடுதி வினவல் - தான் போக்கடித்த வொன்றைத் தெரிவான் வேண்டிக் கேட்டல். (௧)

சுள்ளி சுனைநீலஞ் சோபா லிகைசெயலை
யள்ளி யளகத்தின் மேலாய்ந்து—தெள்ளி
யிதணாற் கடியொடுங்கா வீர்ங்கடா யானை
யுதணாற் கடிந்தா னுளன்.

[தோழ் செவிலிக்கு அறத்தோடு நின்றது.]

(பத.) தெள்ளி - (உயிரைக் காப்பது பேரறமென்று) தெளிந்து துணிந்து, இதண் ஆல் - பரணினாலே, கடி ஒடுங்கா - காத்துக் கொள்ளுதற்கியலாத நிலையில், ஈர்ம் கடாம் - குளிர்ந்த மத நீரையுடைய, யானை - களிறானது (தலைவியைத்தாக்க வந்த வேளையில்,) உதண் ஆல் - மொட்டம்பினாலே, கடிந்து - (அவ் யானையை) விலக்கித் (தலைவியைக் காப்பாற்றி,) சுள்ளி - அனிச்சமலரையும், சுனை நீலம் - சுனைக்கண் மலர்ந்த நீலோற்பலப் பூக்களையும், சோபாலிகை - ஒளியினையுடைய, செயலை - அசோக மலரையும், அள்ளி - கொய்து எடுத்து வந்து, அளகத்தின் மேல் -

தலைவியின் கூந்தலில், ஆய்ந்தான் - மிக அழகாகப் புனைந்தவனாகிய (கட்டழகன்) ஒருவன், உளன் - (தலைவியின் அகத்தே தனிச் சிறப்புற்று) விளங்குகின்றனன். (என்று தோழி செவிலியின் மாட்டுக் கூறினள்.)

(ப-ரை.) நறவ மலரையுஞ் சுனை நீல மலரையும் அசோக மலரையும் கொய்துமுடித்து நின்மகள் குழலின் மேலே ஆராய்ந்து புனைவதுஞ் செய்து பின்னொருநாட் டணிந்து பாறும் காவலமையாத ஈர்ங்கடா யானையை மொட்டம்பாற் கடிந்து காத்தும் இப்பெற்றி யுதவி செய் தான் ஒருவனுளன்.

(விரி.) அறத்தொடு நிற்றல் - களவுப் புணர்ச்சி யுண்மையைச் செவிலி முதலியோர்க்குக் கூறிவிடல். சுள்ளி = நறவம்-அனிச்சம். உதணம் - மொட்டம்பு. இஃது இங்கு அம் சாரியை விட்டு நின்றது. தலைவன் தலைவியை நெருங்குதற்குரிய வழியினை முன்னர்க் கூறியே புனைதலைக் கூற வேண்டியது முறையாகலின், "கடிந்து ஆய்ந் தான்," என விகுதி பிரித்துக் கொண்டுகூட்டுக் கூறப்பட்ட தென்க. இதனை, "களிறு தருபுணர்ச்சி," எனவும், "பூத்தரு புணர்ச்சி," எனவுங் கூறுவர். இங்கு, 'பூ', புணர்ச்சிக்கு வாயிலாகா மையின், இது, "களிறுதருபுணர்ச்சி," எனக் கூறப்படுதலே சாலு மென்க. (௨)

சாந்த மெறிந்துழுத சாரற் சிறுதினைச்
சாந்த மெறிந்த விதணமிசைச்—சாந்தங்
கமழக் கிளிகடியுங் கார்மயி லன்றே
யிமிழக் கிளியெழா வார்த்து.

[பகற்குறிக்கண் வந்த தலைமகனைக் கண்டு தோழி செறிப்பறிவுறீஇயது.]

(பத.) சாந்தம் - சந்தனமரங்களை, எறிந்து - வெட்டி, உழுத - உழவுத் தொழிலாற் பண்படுத்தப்பட்ட, சாரல் - மலைப் பக்கத்தி

னிடத்தே, சிறுதினை - (பயிர் செய்யப்பட்ட) இளமையான தினைப் புனத்தின்கண், சாந்தம்-சந்தனமரக் கட்டைகளை, எறிந்த-(கால்கள் முதலியனவாக) இட்டு அமைத்த, இதண்மிசை - பரணின்மீதிலே, (அமர்ந்து) சாந்தம் கமழ - மெய்யிற் பூசிய சந்தனக்குழம்பு (நாற் புறமுஞ் சென்று) மணக்கும்படி, கிளிகடியும் - கிளிகளை விரட்டும் படியான, கார்மயில் அன்னாள் - கார்காலத்திலே தோகையை விரித்துத் தோன்றும் மயிலை யொத்தவளான தலைவி, இமிழ - (வாய் திறந்து 'ஆயோ,' என்று) கூவியும், கிளி - (தினைக்கதிரிற்படியுங்) கிளிகள், ஆர்த்து எழா - (அவள்குரல் கிளிக்குரல்போல் மாறிய தன்மைகொண்டு) ஆரவாரித்துச் செல்வதில்லை. (ஆகலின், பிறரைத் தினைப்புனங் காவற்கிட்டுத் தலைவியினை வீட்டிற் கழைத்துக் கொள்ளப் போகின்றனர், என்று தோழி தலைவனிடங் கூறினாள்.)

(ப-ரை.) சந்தனங்களை வெட்டியுழுத சாரலின்கண் வித்திய ஏனலின்கட் படிந்த கிளிகளை, சந்தனங்களைக் காலாக எறிந்து செய்த பரண்மிசை யிருந்து பூசிய சாந்தம் எங்கும் பரந்து கமழ உலாவி, கடிகின்ற கார்மயி லன்னாள் தான் வாய்திறந்து ஆயோ என்றியம்புதலாற் றம்மின மென்று கிளிகள் ஆர்த்துப்போகா.

(விரி.) பகற்குறி - பகற்காலத்தே தலைவனும், தலைவியுந் தம்முள் எதிர்ப்பட்டுக் கூடுமிடம். இது தினைப்புனத்தி னருகேயுள்ள பூஞ்சோலைக்கண்ணதாகும். இப்புணர்ச்சி களவின்கண் பாங்கியிற் கூட்டத்தின்பாலதாம். செறிப்பு அறிவுறீஇயது - தலைவியை வீட்டின்கண் கொண்டுசேர்த்தலைத் தலைவனுக்குத் தெரிவித்தது. தலைவி முதுக்குறைவுற்றுத் தலைவனைக் கூடிக் களிக்கத் தொடங்கியமையால் அவள் குரல் பெண்தன்மை மிகுந்து மென்மைப் படுதலின் கிளிகள் ஆர்த்து எழாவாயின வென்க. இனி "சாந்த மறைத்த இதண்," எனப் பாடங் கூறிச் சந்தனத் தழைகளால் மறைத்து அமைத்த பரண் எனப் பொருள் கூறுவாரு முண்டு. முதுக்குறைவு-பேரறிவு: இன்பவாழ்வினுணர்ச்சி. (௩)

கோடாப் புகழ்மாறன் கூட லனையாளை
யாடா வடகினுங் காணேன்போர் — வாடாக்
கருங்கொல்வேன் மன்னர் கலம்புக்க கொல்லோ
மருங்குல்கொம் பன்னாண் மயிர்.

[தலைமகள் இற்செறிந்த காலத்துப் புனத்தின்கண்
வந்த தலைமகன் தலைமகளைக் காணாது ஆற்றாது
பெயர்கின்றான் சொல்லியது.]

(பத.) கோடா - மாறுபடுதலில்லாத, புகழ் - நற்பெயரைக் கொண்ட, மாறன் - பாண்டியனது, கூடல் - மதுரையம்பதியினை, அனையாளை - ஒத்த தலைவியினை, அடா - சமைத்தற்கியலாத, அடகினும் - (கீரை யென்னும் மற்றொரு பொருளினைக் கொண்ட மகளிர்) விளையாட்டுப் பண்ணையிலும், காணேன் - கண்டேனில்லை, மருங்குல் - இடைப்பாகமாகிய இடுப்பானது, கொம்பு அன்னாள் - பூங்கொம்பினை யொத்ததாகிய அவளது, மயிர் - கூந்தலாகிய மயிர்கள், போர் - போர்க்களத்தினிடத்தே, வாடா - பின்வாங்காத, கரும் கொல் - இரும்புக் கொல்லுத் தொழிலையுடைய, வேல் - வேற் படையினைக் கொண்ட, மன்னர்கலம் - அரசர் அணியும் முதன்மை அணிகலமாகிய முடியாக, புக்க கொலோ - ஒன்று கூடி வளர்ந்து (முடிக்குறையினைக்) காட்டினவோ? (என்று தலைவன் வினவிக் கொண்டனன்.)

(ப-ரை.) கோடாத புகழையுடைய மாறன் மதுரை யனையாளை அடாத பண்ணையுளுங் காண்கின்றிலேன்; போரின்கண் வாடாத கருங்கொற் றொழிலையுடைய வேல் மன்னர் அணிகலமாகிய முடிகூடின கொல்லோ! இடையாற் கொம்பையனையாள் மயிர்கள்.

(விரி.) அடா = ஆடா: நீட்டல் விகாரம். ஆற்றல் - பொறுத்தல். பெயர்தல் - திரும்பல். அடகு - கீரை, பண்ணை. அடா வடகு - பண்ணையாகிய மகளிர் விளையாடுமிடம். தலைவியின்

கூந்தலாகிய மயிர்கள் முடியாகக் கொள்ளும் வண்ணங் கூடி அவளின் முதுக்குறைவினைக் காட்டியதால் அவளை இற்செறித் தனர் போலும் என்பது கருத்து. பண்ணை என்பதனை, "அடா வடகு," என்றதும், முடி என்பதனை, "மன்னர் கலம்," என்றதும் குறிப்பு மொழிகளாம். "அடா வடகு என்று விளையாட்டிற்கு வெளிப்படைநிலை யென்னும் அணியாற் பெயராயிற்று," என்பர் பழையவுரையினை யுடையார். இனி, மயிர்கள் முடி கூடுதல் முதுக் குறைவினையுணர்த்தும், என்பதனைச் சிலப்பதிகாரம் வஞ்சிக் காண்டம் வரந்தரு காதையில் வந்துள்ள, "மையீரோதி வகை பெறு வனப்பின், ஐவகை வகுக்கும் பருவங்கொண்டது," என வரும் ௧௦, ௧௧-வது அடிகளின் பொருளாற் றெளிக. கருங்கொல் - இரும்புத்தொழில். (௬)

வினைவிளையச் செல்வம் விளைவதுபோ னீடாப்
பனைவிளைவு நாமெண்ணப் பாத்தித்—தினைவிளைய
மையார் தடங்கண் மயிலன்னாய்! தீத்தீண்டு
கையார் பிரிவித்தல் காண்.

[தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குச்
சொல்லுவாளாய்த் தோழி செறிப்பறிவுறீஇயது.]

(பத.) மையார் - மை தீட்டப் பெற்ற, தடம் - பெரிய, கண் - கண்களையுடைய, மயில் அன்னாய் - மயிலையொத்த தலைவியே! நீடா - (நம்மை விட்டு) நீங்கிப்போதலில்லாத, பனை - பனையென் னும் அளவினைப் போன்று மிக்க, விளைவு-இன்பமாகிய விளைவினை, நாம் எண்ண - நாம் (களவுப் புணர்ச்சியில்) எதிர் பார்த்துக் கொண் டிருக்க, (அதற் கிடையூறாக,) வினைவிளைய-(ஒருவனுக்கு) நல்வினை பெருகுதலினாலே, செல்வம் - பொருள், விளைவதுபோல் - பெருகுவது போல, பாத்தி - பாத்தியின்கண்ணே, தினைவிளைய - தினைப்பயிரானது விளைந்து போனபடியினாலே, தீ தீண்டு - நெருப் புப் படுதலினாலே, (வேம்,) கையார் - (வேங்)கையார் (வேங்கைமரம்,)

பிரிவித்தல் - (பூத்தலாகிய வினைமிகுதியாலே தினைகொய்ய வேண்டிய நாள் அடுத்ததென்று நம்மவர் (அதைத் தெரிவித்து) நம்மைத் தலைவனி னின்றும் (இற்செறிக்கையால்) பிரியச் செய்தலை, காண் - காண்பா யாக. (என்று தோழி தலைவியினிடங் கூறினள்.)

(ப-ரை.) கொடாக பனை யென்று மனவுபோன்ற அளவிளையுடைய இன்ப விளைவினை நாடோறும் விரும்ப அதற்கிடையூறாக, கல்வினை வினையச் செல்வம் விளைவது போலப் பாத்தியின்கட் டினைவிளைதலான், மையார் தடங் கண் மயிலன்னாய்! தினைகொய்ய நாட்சொல்லி வேங்கையார் நம்மை இங்குநின்றும் பிரிவித்தலைப் பாராய்.

(விரி.) பனை - போகவினைக் குறிக்குஞ் சொல். தினை-அதற் கெதிரானது. நீத்நீண்டுகையார் - குறிப்பு மொழி. வேங்கை மரத் தினை வேங்கையார் என்றது எள்ளல்பற்றிய தென்க. தினைப்புனத் தருகேயுள்ள வேங்கைமரங்கள் பூக்குமாயின், தினை முதிர்ந்து கொய்யப்பட்டுத் தலைவி இற்செறிக்கப் படுவாளாதலின், "வேங்கை யார் பிரிவித்தலைக்காண்," எனக் கூறப்பட்ட தென்க. (ரு)

மானீல மாண்ட துகிலுமிழ்வ தொத்தருவி
மானீல மால்வரை நாட! கேண்—மாநீலங்
காயும்வேற் கண்ணாள் கனையிருளி னீவர
வாயுமோ மன்றநீ யாய்.

[இரவுக்குறி வேண்டிய தலைமகற்குத் தோழி
மறுத்துச் சொல்லியது.]

(பத.) மால்நீலம் - பெரிய நீலமணிவரை, மாண்ட - சேர்த்தியான, துகில் - வெள்ளாடையினை, உமிழ்வது - வெளிவிடு வதனை, ஒத்து - போன்று, அருவி - நீர்வீழ்ச்சிகள், மால் - மயங்கிக் (கலந்து) காணப்படும்படியான, நீலம் - நீலநிறத்தோடு கூடிய, மால் - பெரிய, வரை நாட - மலைநாட்டிற்குரிய தலைவனே! கேள் - (யான் சொல்வதைக்) கேட்பாயாக, மா - கரிய, நீலம் - நீலோற்பல

மலர்களை, காயும் - வெறுத்தொதுக்குதற்குக் காரணமான, வேல் கண்ணாள் - வேலினைப்போன்ற கண்களையுடைய தலைவி, கனை இருளில்-மிகுந்த இருள் நிரம்பிய நள்ளிரவிலே, நீவர-நீ வருதலைச் செய்ய, (அதனால், நினக்கு இடையூறு இல்லாமையினை,) ஆயுமோ-ஆராய்ந்து கண்டுபிடித்து மனவமைதியை அடையவல்லளோ? நீ மன்ற ஆய்-நீ அதனைச் சிறிது உண்மையாக நினைத்துப் பார்ப்பாயாக. (என்று தோழி தலைவனிடங் கூறினாள்.)

(ப-ரை.) மிக்க நீலமணிவரை மாட்சிமைப்பட்ட வெண்டுகிலை யுமிழ்வதுபோல, அருவிகள் மயங்காநின்ற நீல மால்வரை நாடனே! கேளாய்; கரிய நீல மலர்களை வெகுளாநின்ற வேல்போன்ற கண்ணாள், செறிந்த இருளின்கண் நீவர, நினக் கிடையூறில்லாமை ஆராயவல்லளோ? உண்மையாகப் பாராய்.

(விரி.) இரவுக்குறி - தலைவனும் தலைவியும் களவுப் புணர்ச்சியில் இராக்காலத்தே தம்முள் எதிர்ப்பட்டுக் கூடுமிடம். இது தலைவியின் இல்லினையடுத்த தோப்பின் கண்ணதாம். நீலம் - பண்பாகு பெயர், "மாண்டதுகில்" என்றமையின் வெள்ளாடை யென்பது பெற்றும். என்னை? மாட்சிமையாகிய தூய்மை வெண்மைக் கண்ணதாகலின் என்க. மா-பெருமை, கருமை. மால்நீலம் - பெரிய நீலமணி யெனவுமாம். (சு)

கறிவளர்பூஞ் சாரற் கைந்நாகம் பார்த்து
நெறிவளர் நீள்வேங்கை கொட்கு—முறிவளர்
நன்மலை நாட! இரவரின் வாழாளா
னன்மலை நாடன் மகள்.

[இதுவு மது.]

(பத.) முறி - (பலவகையான) தளிர்கள், வளர் - தளிர்த்துக் காணும், நல்மலை நாட - நல்ல மலைநாட்டிற்குரிய தலைவனே! கறி - மிளகுக் கொடிகள், வளர் - படருகின்ற, பூ சாரல் - அழகிய மலைப்

பக்கத்தினிடத்தே, கை நாகம் - துதிக்கையினையுடைய யானை களை, பார்த்து - எதிர்பார்த்துக்கொண்டு, நெறி - வழியின்கண், வளர் நீள் வேங்கை - பதினறடிவரை வளர்ந்து நீண்ட பெரும் புலிகள், கொட்கும் - திரிதரும்படியான, இர - இரவின்கண், வரின் - நீ வருவாயானால், நல்மலை நாடன் மகள் - நல்ல மலை நாட்டிற்குரிய தலைவனின் மகள், வாழாள் - பொறுக்கமாட்டாள். (என்று தோழி தலைவனிடங் கூறினள்.)

(ப-ரை.) மிளகு படர்கின்ற பூஞ்சாரலின்கட் கையை யுடைய நாகங்களைப் பார்த்து வழியின்கண் வளர்கின்ற பெரும்புலிகள் திரிதரும் இரவின்கண் நீ வரின், தளிர் வளர்கின்ற நன்மலை நாட! நன்மலைநாடன் மகள் வாழாள்.

(விரி.) 'இரா', என்ற பெயர்ச் சொல், 'இர', எனக் குறியதன் கீழாக் குறுகி வரலாயிற்று. "வளர் நீள் வேங்கை," என்றமையின் 'பதினறடி,' என்பது பெற்றும். ஆல்-அசைநிலை. (எ)

அவட்காயி னைவனங் காவ லமைந்த
திவட்காயிற் செந்தினைகா ரேன—லிவட்காயி
னெண்ணுளவா லைந்திரண் டீத்தான்கொ லென்னுங்கொல்
கண்ணுளவாற் காமன் கணை.

[பின்னிலை முனியாது நின்ற தலைமகன் றோழியை மதியுடம்படுத்தது.]

(பத.) அவண் கு ஆயில் - (யான்) அவ்விடத்து வருவேனு யின், ஐவனம் - மலைநெற் குவியலுக்கு, காவல் - பாதுகாப்பு, அமைந்தது - பொருந்தியதாகும், இவண் கு ஆயில் - இவ்விடத்து (யான்) இருப்பேனுயின், செந்தினை கார் - சிவந்த தினையினையும் கருந்தினையினையும் கொண்ட, ஏனல் - தினைப்புனக்காவல் (பொருந்தியதாகும்,) (ஆனல், நீயோ அவ்விரண்டிற்குந் தக்கன வான மறுமாற்றம் தருகின்றிலை,) இவட்கு ஆயின் - இத் தலைவி யினிடத்திலோவெனின், காமன் கணை - மதவேளின் அம்பாகிய,

ஐந்து எண் - ஐந்தும், உள - உளவாயிருக்கின்றன, இரண்டு - அவற்றுள் இரண் டம்புகளை, கண்உள - கண்களில் உள்ளனவாக, ஈத்தான் கொல் - (காமன் இவளுக்கு) கொடுத்துள்ளானோ? ஆல் - ஆதலான், என் ஆம் கொல் - என் உயிர்க்கு யாது நேருமோ? (அறியேன், என்று தலைவன் தோழியிடங் கூறினான்.)

(ப-ரை.) அவ்விடத்து வருவேனாயின் நினக்கு ஐவனங் காவ லமைந்தது; இவ்விடத்தின்கண் வருவேனாயிற் செந்தினையுஞ் செறிந்த பசுந்தினையும் காத்தலே அமைந்தது; ஆதலான் எனக்கொரு மறுமாற்றந் தருகின்றிலை; நின்றோழியாகிய இவட்காயில், காமன் அம்பு ஐந்தெண்ணுள வால்; அவற்றுள் இரண்டம்பினைக் கண்ணாகக் கொடுத்தான் கொல்லோ! நின்றோழிக்குக் கண்கள் காமன்கணை யுளவால்; என்னுயிர்க்கு என்னாங் கொல்லோ?

(விரி.) பின்னிலை முனிதல் - தோழியின் பின்னின்று தன் குறை முடித்துக் கொள்ளுதலை வெறுத்தல். பழையவுரையிற் கண்டுள்ள, 'ஆதலான்,' என்பது பொருட்போக்கிற்கு முரண்படுதலும், அவ்விடத்து, 'ஆனால்', என்பது பொருந்துதலுங் காண்க. அவ்விடம்- தலைவியின் இல்லிடம். இவ்விடம் - தினைப்புனமாகிய விடம். ஆல் - அசைநிலை. செந்தினை, கார்தினை, எனத் தினையினை யிரிடத்துங் கூட்டுக. அன்றிக் கார்காலத்து விளைந்த செந்தினையினை யுடைய ஏனல் எனலுமாம். காமன் ஐந்தம்புகள் - முல்லை, அசோகு, நீலம், தாமரை, மாம்பூ.	(அ)

வஞ்சமே யென்னும் வகைத்தாலோர் மாவினைய்த்
தஞ்சந் தமியனாய்ச் சென்றேனென்—னெஞ்சை
நலங்கொண்டார் பூங்குழலா ளன்றாயத் தன்றென்
வலங்கொண்டாள் கொண்டா ளிடம்.

[பாங்கற்குத் தலைமகன் றலைமகளைக் கண்டவகை கூறித்
தன் ஞற்றமை மிகுதி சொல்லியது.]

(பத.) ஓர் - ஒரு, மாவினாய் - (வேட்டையினின்றும் விடுபட்ட) விலங்கினைக் கண்டதுண்டோ ? என்று வினவ வேண்டியவனாய், தஞ்சம் தமியனாய் - (எனக்குப்) பற்றுக் கோடு யானேயாய், அன்று சென்றேன் - (யான் அப்புனத்தினை நாடி அந்நாட்) போயினேன், ஆயத்து - (அங்கு) மகளிர் நாப்பண் (வீற்றிருந்த,) நலம் கொண்டு ஆர்-நறுமணங்கொண்டு பொருந்திய, பூ குழலாள்-பூக்களையணிந்த கூந்தலையுடையாள், நன்று - நன்றாக, என்வலம் - என்னுடைய வெற்றித் திறமைகளை யெல்லாம், கொண்டாள்-கைப்பற்றியவளாய், என் நெஞ்சை - எனது மனத்தை, இடம் - தனக்கிடமாக, கொண்டாள் - மேற்கொண்டு விட்டாள், வஞ்சமே என்னும் - இது ஒரு மாயமே என்று சொல்லப்படும், வகைத்து - தன்மைத்தாகும் ! (என்று தலைவன் தோழனிடங் கூறினான்.)

(ப-ரை.) மாயமே யென்று சொல்லப்படுந் தன்மைத்தால் ! ஒரு மாவினை வினாவி யான் நினைவினை நீங்கித் தனியே எளியேனாய்ச் சென்றேன் : சென்றவிடத்து நலங்கொண்டு நிறைந்த பூங்குழலை யுடையாள் மிகவுந் தன்னாயத்தின்கண் அன்று என் வென்றியை யெல்லாங்கொண்டு என்னெஞ்சத்தைத் தனக்கிடமாய்க் கொண்டாள்.

(விரி.) பாங்கன் - தோழன். இது பாங்கற் கூட்டத்தின்பாற்படும். ஆல் - அசைநிலை. (க)

கருவிரற் செம்முக வெண்பற்சூன் மந்தி
பருவிரலாற் பைஞ்சுனைநீர் தூஉய்ப் — பெருவரைமேற்
றேன்றேவர்க் கொக்கு மலைநாட ! வாரலோ
வான்றேவர் கொட்கும் வழி.

[தோழி நெறி விலக்கியது.]

(பத.) கருவிரல் - கரிய விரல்களையும், செம்முகம் - சிவந்த முகத்தினையும், வெண்பல் - வெண்மையான பற்களையும், சூல் -

கருப்பத்திணையு முடைய, மந்தி - பெண் குரங்கானது, பரு விரலால் - தன் பெரிய விரல்களானே, பைஞ்சுனை - பாசிலை படர்ந்த சுனையின்கண்ணுள்ள, நீர் - நீரினை, தேவர்க்கு - தேவர்கட்கு, தூய் - வழிபாடாகத் தூவி, பெருவரைமேல் - பெரிய மலையுச்சியிலே (வைக்கப்பட்டுள்ள,) தேன் - தேன் கூடுகளை (யெடுத்து,) ஒக்கும் - கொடுத்தற்கிடமான, மலை நாட - மலைநாட்டிற்குரிய தலைவனே! வான் - தெய்வத்தன்மையான் மிகுந்த, தேவர் - தேவர்கள், கொட்கும் - நடமாடித் திரியும், வழி - (இம்மலை) வழியின் கண்ணே, வாரல் - நீ தலைவியை நாடி வருதலைச் செய்யாதிருப்பாயாக. (என்று தோழி தலைவனிடங் கூறினாள்.)

(ப-ரை.) கருவிரலினையுஞ் செம்முகத்தினையும் வெண்பல்லினையுமுடைய சூன்மந்தி தன் பெரிய விரலானே பைஞ்சுனையினீரைத் தூவி, பெருவரையின்மேலே வைத்த தேன்பொதிகளைத் தேவர்கட்குக் கொடுக்கும் மலைநாடனே! வாரா தொழிவாயாக; தேவர்கள் திரிதரும் வழியாம்.

(விரி.) தூஉய் - இசை நிறை யளபெடை. ஒக்குதல் - கொடுத்தல். "ஒண்ணிணப்பலி யொக்குவல்," என்ற திருக்கோவையார் உகூரு-ஆம் செய்யுள் அடியினை நோக்குக. ஓ - அசைநிலை. (ய)

கரவில் வளமலைக் கல்லருவி நாட!
உரவில் வலியா யொருநீ—யிரவின்
வழிகடாஞ் சால வரவரிய வார
விழிகடா யானை யெதிர்.

[இதுவு மது.]

(பத.) கரவு இல் - குற்றமில்லாத, வளம் மலை - வளங்களையுடைய மலைகளையும், கல் அருவி - கல் என ஒலிக்கும் நீர் வீழ்ச்சிகளையுங் கொண்ட, நாட - (மலை) நாட்டிற் குரிய தலைவனே! ஒரு நீ - ஒப்பற்ற நீ, இரவின் - இரவின்கண், உரம் வில் - வலியவில்லினையே, வலியாய் - துணையாய்க் கொண்டு (வருகின்ற), வழிகள் -

மலைவழிகள், சால - மிகவும், வரவு அரிய - துணையின்றி வருவதற்குக் கூடாதனவாக இருக்கின்றன, இழி - வழியாநின்ற, கடா யானை - மதநீர் பெருகும் யானைகளின், எதிர் - எதிராக, வாரல் - (அவ்வழியே) வாராதிருப்பாயாக. (என்று தோழி தலைவனிடங் கூறினள்.)

(ப-ரை.) பழுதில்லாத வளங்களையுடைய கல்லருவி நாடனே! வலிய வில்லே நினக்கு வலியாய் ஒருநீ இரவின் கண்ணுகத் துணையின்றி வழிகள் தாம் மிகவும் வரவரிய; இழியாநின்ற கடாத்தையுடைய யானைகளின் எதிர் வாரல்.

(விரி.) கரவு - குற்றம். கல் - ஒலிக்குறிப்பு. தாம் - அசைநிலை.

(கக)

வேலனார் போக மறிவிடுக்க வேரியும்
பாலனார்க் கீக பழியிலாள்—பாலாற்
கடும்புனலி னீந்திக் கரைவைத்தாற் கல்லா
னெடும்பணைபோ றோணேரா னின்று.

[வெறிவிலக்கித் தோழி செவிலிக்கு அறத்தோடு நின்றது.]

(பத.) வேலனார் - (வெறியாடும் பொருட்டு வரவழைத்த) வேல் கைக்கொண்டபூசாரி, போக - செல்லக் கடவதாக, மறி - (வெறியாடும் பொருட்டுப் பலியிடக் கொண்டுவந்துள்ள) ஆட்டுக் குட்டியினை, விடுக்க-(அதன் துயர்தீர) விட்டுவிடுவாயாக, வேரியும்- (பூசனைக்குக் கொண்டுவந்துள்ள) கள்ளினையும், பாலனார்க்கு - (அதனையுண்ணும்) பான்மையுள்ள மக்கட்கு, ஈக-கொடுத்துவிடுவாயாக, பழியிலாள்-குற்றமில்லாத என் தலைவி (நீ கருதுவதுபோன்று தெய்வக் குறையான் மயங்கினளல்லள்,) பால் ஆல் - ஊழ்வினைவலியால், நின்று - (மனவொருப்பாட்டுடன்) நிலைப்பட்டு, நெடும்பணை- நீண்ட மூங்கிலை, போல் - போன்ற, தோள் - தோள்களை, கடும் - விசையோடு செல்லும், புனலில் - யாற்று நீரில், நீந்தி - பாய்ந்து

சென்று, கரைவைத்தாற்கு-(நீரால் அடித்துப்போகப்பட்ட தன்னை யெடுத்துக்) கரையின்கண் சேர்த்த காதலனுக்கு, அல்லால்-அன்றி (வேறு எவர்க்கும்,) நேராள் - நல்கி மணம்புரியாள். (அதுவே அவள் மயக்கிற்கு முதலாம், என்று தோழி செவிலியிடங் கூறினாள்.)

(ப-ரை.) வெறியைவிட்டு வேலனார் போக; மறியை யும் விடுக்க; கள்ளையும் அக்கள்ளினை நுகர்வார்க் கீக; இப்பழியிலாதாள் ஊழ்வலியாற் கடும்புனலுட் பாய்ந்து நீந்தித் தன்னை யெடுத்துக் கரையின்கண் வைத்தாற் கல்லது நெடிய வேய் போன்ற தோளை நல்காள் இறந்து நின்று.

(விரி.) வெறி - முருகனுக்குச் செய்யும் சிறப்புவிழா, இங்குத் தலைவனுக்கும் தலைவிக்கும் புனல்தரு புணர்ச்சி கிட்டியதாகக் கூறப்பட்டுள்ளது. (கஉ)

ஒருவரைபோ லெங்கும் பல்வரையுஞ் சூழ்ந்த
வருவரை யுள்ளதாஞ் சீறூர்—வருவரையு
ளைவாய நாகம் புறமெல்லா மாயுங்காற்
கைவாய நாகஞ்சேர் காடு.

[நெறியினதருமை கூறித் தோழி இரவுக்குறி மறுத்தது.]

(பத.) ஒரு வரை போல் - ஒரு மலையினைப் போலவே, எங்கும் - எல்லாப் பக்கங்களிலும், பல்வரையும் - பல மலைகளும், சூழ்ந்த - தம்முள் ஓரளவாயுயர்ந்து நெருங்கிய, அருவரை - (கடத்தற்) கரிய எல்லையினுள்ளே, சீறூர் - (எமது) சிற்றூர், உள்ளதாம் - உள்ளதாகும், வரு வரை - (நீ கடந்து) வரவேண்டிய அவ்வெல்லையினது, உள் - உட்பாகத்தின்கண்ணே, ஐவாய - ஐந்து வாய்களைக் கொண்ட, நாகம் - நாகப்பாம்புகள் (நிறைந்துள்ளன,) ஆயும் கால் - நன்காராய்ந்து நோக்கின், புறம் எல்லாம் - அவ்வெல்லையின் வெளிப்பக்கங்களெல்லாம், கைவாய - கையோடு சேர்ந்த வாயினையுடைய, நாகம் - யானைகள், சேர் - நிறைந்த, காடு - காடுகள். (உள்ளன, என்று தோழி தலைவனிடங் கூறினாள்.)

(ப-ரை.) ஒரு மலைபோல எல்லா மலையும் தம்முள் அளவொக்க உயர்ந்து சூழ்ந்த அரிய எல்லையுள் உள்ளதாம் எங்கள் சீறூர்; நீ வரும் அவ்வெல்லையுள் உள்ளகத்தின்கண் உள்ளன ஐந்துவாயையுடைய நாகங்கள்; புறத்துள்ளன ஆராயுங்காற் கையொடுசேர்ந்த வாயையுடைய யானைகள் சேர்ந்த காடுகள்.

(விரி.) நாகம் - யானை, பாம்பு. வரை - மலை, எல்லை. சீறூர் - மலைநாட்டுச் சிற்றூர். (கரு)

வருக்கை வளமலையுண் மாதரும் யானு
மிருக்கை யிதண்மேலே மாகப்—பருக்கைக்
கடாஅமால் யானை கடிந்தானை யல்லாற்
றொடாஅவா லென்றோழி தோள்.

[செவிலிக்குத் தோழி அறத்தோடு நின்றது.]

(பத.) வருக்கை - ஒருவகைப் பலா மரங்கள் (மிகுந்த,) வள மலையுள் - வளப்ப நிறைந்த மலையினிடத்திலே, மாதரும் - என் தலைவியும், யானும் - நானும், இருக்கை - (தினைப்புனத்தின்கண்) இருப்பிடமாக அமைத்துள்ள, இதண் மேலேம் ஆக - (ஒருகால்) பரணின் மேலாக இருக்க, (அப்பொழுது எங்கட்கு இடையூறாகத் தோன்றிய,) பரு கை - பருத்த துதிக்கையினையும், கடாம் மால் - மதநீரால் மிக்க மயக்கத்தினையுங் கொண்ட, யானை - யானையினின்றும் (எங்களை,) கடிந்தானை - காப்பாற்றிய அக் காளை போல்வானை, அல்லால்-அன்றி (வேறு எவரையும்,) என் தோழி - என்னுடைய தலைவியின், தோள் - தோள்கள், தொடா - தீண்ட மாட்டாவாம். (என்று தோழி செவிலியிடங் கூறினாள்.)

(ப-ரை.) வருக்கைப் பலாவினையுடைய வளமலையின் கண் மாதரும் யானும் எமக்கிருக்கையாகிய பரண்மேலே யிருந்தேமாக, பெரிய கையினையுங் கடாத்தையும் பெருமை

யையும் உடைய யானையைத் துரந்து கடிந்தானை யன்றித் தீண்டாவால், என்றோழியுடைய தோள்கள்.

(விரி.) கடாஅமால், தொடாஅவால் - இசைநிறை யளபெடைகள். ஆல் - அசைநிலை. இது களிறுதரு புணர்ச்சி எனப்படும். (கசு)

வாடாத சான்றோர் வரவெதிர் கொண்டிராய்க்
கோடாது நீர்கொடுப்பி னல்லது—கோடா
வெழிலு முலையு மிரண்டிற்கு முந்நீர்ப்
பொழிலும் விலையாமோ போந்து.

[தலைமகன் சான்றோரை வரைவு வேண்டி விடுத்தவிடத்துத் தலைமகளின் தந்தைக்குந் தனையன்மார்க்கும் நற்றாய் அறத்தோடு நின்றது.]

(பத.) வாடாத - குறைவு படுதலில்லாத, சான்றோர் - (தலைவன் வரைவு வேண்டியனுப்பிய) பெரியோர்களினது, வரவு - வருகையினை, எதிர் கொண்டிராய் - ஏற்றுக் கொண்டவர்களாய், கோடாது - மாறுபடாது (உடம்பாடு கொண்டு,) நீர் கொடுப்பின் அல்லது - நீர் வார்த்துக் கொடுத்தலாகிய மண முறையில் மகளைக் கொடுத்தாலல்லாமல், கோடா - தளர்ச்சியுறாத, எழிலும் - நம் மகளின் கட்டழகும், முலையும் - முலைகளுமாகிய, இரண்டிற்கும் - இரண்டினுக்கும், முந்நீர் - கடலாற் சூழப்பட்ட, பொழிலும் - இவ்வுலகமும், போந்து - பொருந்தியதாக வந்து நின்று, விலையாமோ - பரிசமாகக் கொள்ளத் தக்கதாமோ? (ஆகலின், மாறாக் காதலினையே முலைவிலையாக மதிக்க வேண்டும், என்று நற்றாய் கூறினாள்.)

(ப-ரை.) தள்ளாத சான்றாண்மையை யுடையார் வரவை எதிர்கொண்டிராய்க் கோடாது உடம்பட்டு நீர் கொடுப்பினன்றித் தளராத அழகும் முலையும் என்னும் இரண்டிற்கும் முந்நீராற் சூழப்பட்ட வுலகும் விலையாமோ நிரம்பி.

(விரி.) சான்றோர் - பெற்றோர் முதலிய பெரியார்கள். தன்னை யன் - தன் + ஐயன்: தலைவிக் குடன்பிறந்த மூத்தோன். நற்றாய் - பெற்ற தாய். முந்நீர் - கடல்: ஆக்கல், காத்தல், அழித்தலாகிய முத்தன்மையினையுடைய நீர். (கரு)

நாணாக நாறு நனைகுழலா ணல்கித்தன்
பூணாக நேர்வளவும் போகாது—பூணாக
மென்றே னிரண்டாவ துண்டோ மடன்மாமே
னின்றேன் மறுகிடையே நேர்ந்து.

[தோழி சேட் படுத்த விடத்துத் தலைமகன்
றனதாற்றாமையாற் சொல்லியது.]

(பத.) நாள் நாகம் - அன்று பூத்த சுரபுன்னை மலர், நாறும் - மணக்கும்படியான, நனை - (தேறல்) நனையப்பட்ட, குழலாள் - கூந்தலையுடைய தலைவி, தன் - தன்னுடைய, பூண் ஆகம் - அணிகல னோடு கூடிய மார்பினை, நல்கி - (எனக்குக்) கொடுத்து, நேர்வு அளவும் - என்னோடு புணரும் வரைக்கும், பூண் ஆகம் - (எலும்பாற் செய்த) அணிகலன் என் மார்பினின்றும், போகாது - நீங்கப் போவ தில்லை, என்றேன் - என்று (நினக்குச்) சொல்லினேன், இரண் டாவது - (இனி அதற்கு மாறாக) மற்றொரு சொல், உண்டோ - உண்டாகுமோ? (இல்லை,) மறுகு இடையே - (தலைவியின்) தெரு வழியே, நேர்ந்து - எதிர்ப்பட்டு, மடல் மா மேல் - பனைமடலாற் செய்யப்பட்ட குதிரையின்மீதே, நின்றேன் - அமர்ந்து ஊருதற்கு துணிந்து விட்டேன். (என்று தலைவன் தோழியினிடங் கூறினான்.)

(ப-ரை.) நாக நாண்மலர் நாறும் தேறல் நனையப் பட்ட குழலாள் எனக்கு நல்கித் தன்னுடைய பூண்மார்பினை நேருமளவும் என் மார்பினின்றும் அவ்வெலும்பாற் செய்த பூண் போகாதென்று நினக்குச் சொல்லினேன்; இனி

இரண்டாவது வேறொரு சொல்லுண்டோ? பனைமடலாற் செய்யப்பட்ட மாவினையூரத் துணிந்து நின்றேன், தெருவி னடுவே யுடன்பட்டு.

(விரி.) சேட் படுத்தல் - நெருங்கவொட்டாது விலக்கல். ஆற் றாமை - பொறுக்க முடியாமை. நாகம் - முதலாகு பெயர். மடன் மாமே லூருதல் - தலைவியைப் பெற முடியாது போயின விடத்துத் தலைவன் மேற்கொள்ளும் வினையாம். அவ்வினை இவ்வைந்திணைக் கும் அடங்காப் பெருந்திணையின் பாற்படும். அது பனைமடலாகிய கருக்கினாலே குதிரை யொன்று செய்து அதன்கண் தலைவன் மெய்யெல்லாம் நீறு பூசி எலும்பு மாலை யணிந்து தலைவியின் வடிவ மெழுதிய ஓவியத்தைக் கையிற் பிடித்துக்கொண்டு அமர்ந்திருக்கத் தலைவனைச் சார்ந்தோர் அக்குதிரையினைச் சிறிய சகடமொன் றினிற் சேர்த்துத் தலைவியின் வீதி வழியே இழுத்துச் செல்வ தாம். அப்பொழுது தலைவியின்மேலுள்ள காதலால், தலைவன் பனைமடலால் உண்டாம் நோயினைப் பொருட்படுத்தாது செல்வன். அதனைக் கண்ட தலைவியின் உற்றார் வியந்து தலைமகளை அவ னுக்கு மணம் புரிவிப்பர். (கரு)

அறிகவளை யைய விடைமடவாய்! ஆயச்
சிறிதவள்செல் லாளிறுமென் றஞ்சிச்—சிறிதவ
ணல்கும்வாய் காணாது நைந்துருகி யென்னெஞ்ச
மொல்குவா யொல்க லுறும்.

[நின்னாற் சொல்லப்பட்டவளை அறியேனாலோ என்ற தோழிக்குத் தலைமகன் அறிய வுரைத்தது.]

(பத.) மடவாய் - இளமை மிக்க தோழியே! அவளை அறிகு - (யான்) அவளை (நன்கு) தெரிவேன், ஐயம் - (உண்டோ இலையோ என்று) ஐயமுறுதற்கிடமான, இடை - இடுப்பானது, ஆய - வருந் தும்படியாக, அவள் சிறிது செல்லாள் - தலைவி சிறிது தொலை செல்வதற்கு முன்னரே, என் நெஞ்சம் - எனது மனமானது,

இறும் என்று அஞ்சி - (அவ்விடை) இற்று விழுந்துவிடுமே என்று பயந்து, அவள் சிறிது நல்கும் வாய் - அவள் சிறிதும் என்பால் அன்புகாட்டும் நெறியினையும், காணாது - அறிய வியலாது, நைந்து - தளர்ந்து, உருகி இளக்கமுற்று, ஒல்கும் வாய் - (தலைவியின்) தளர்நடையினைக் காணுந்தோறும், ஒல்கல் உறும் - அவள் பின்சென்று தளர்ந்து வருந்தும். (என்று தலைவன் தோழியினிடங் கூறினான்.)

(ப-ரை.) அறிவேன் யான் அவளை; தன்னுடைய மெல்லிய இடை வருந்த, மடவாய்! சிறிது மவள் நடவாளாக இறும் இறும் என்றஞ்சி அவள் எனக்குச் சிறிதும் அருளு நெறி காணாது தளர்ந்துருகி என்னெஞ்சம் அவளொல்கி நடக்குந்தோறும் பின்சென்று தளர்தலுறும்.

(விரி.) அறிகு - தன்மை யொருமை வினைமுற்று. நெஞ்சம் அஞ்சி, காணாது, உருகி, ஒல்கலுறும், என முடிக்க. ஆய - வருந்த.

(கஎ)

என்னுங்கொ லீடி விளவேங்கை நாளுரைப்பப்
பொன்னும்போர் வேலவர் தாம் புரிந்த—தென்னே
மருவியா மாலை மலைநாடன் கேண்மை
யிருவியா மேன வினி.

[பகற்குறிக்கட் டலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி செறிப்பறிவுறீஇ வரைவுகடாயது.]

(பத.) என்னே - இஃதென் கொடுமை! ஈடு இல் - பெருந்தன்மை இல்லாத, இள வேங்கை - இளமையான இவ்வேங்கை மரமானது, நாள் - (தினைக் கதிர் கொய்ய வேண்டிய) நாளினை, உரைப்ப - (தான் பூத்தமையால்) தெரிவிக்க, (அதனால்,) இனி - இனிமேல், ஏனல் - புனமானது (கதிர்கள் கொய்யப்பட்டு,) இருவியாம் - வெறுந் தினைத் தாள்களைக் கொண்டதாகும், போர் வேலவர் -

போர்விருப்ப மிக்க வேலினையுடைய எந்தையும் என்னையன்மாரும் புரிந்தது - (தலைவிக்குப்) பரிசமாக விரும்பியது, பொன் ஆம் பொன்னாலாகிய அணிகலன் முதலியவாம், (ஆதலால்,) மருவி பழகுவதால், ஆம் - பயின்று வருகின்ற, மாலை - தன்மையினை யுடைய, மலைநாடன் - மலைநாட்டிற் குரிய தலைவனது, கேண்மை - நட்பானது, என் ஆம் கொல் - இனி யாதாய் முடியுமோ? (என்று தோழி கூறினாள்.)

(ப-ரை.) தகுதியில்லாத இளவேங்கை நாட்சொல்ல இனிக் குரலொழிந்து இருவியாய்க் கழியுந் தினையெல்லாம்; எந்தையும் என்னையன்மாருமாகிய போர் வேலவர் இவட்குப் பரிசமாக மிக விரும்புகின்றது பொன்னும்; ஆதலாற் பயிலப் பழகிவருந் தன்மையையுடைய மலைநாடன் கேண்மை யினி யென்னாய் விளையுங் கொல்லோ! என்னே!

(விரி.) இதனை நச்சினார்க்கினியர், 'தினையரிகின்றமையுஞ் சுற்றத்தார் பொருள் வேட்கையுங் கூறியது' என்பர். தாம் - அசை நிலை. சிறைப்புறம் - தினைப்புன வேலியின் வெளிப்புறம். இருவி - தினைத்தாள். (கஅ)

பாலொத்த வெள்ளருவி பாய்ந்தாடிப் பல்பூப்பெய்
தாலொத்த வைவனங் காப்பாள்கண்—வேலொத்தென்
னெஞ்சம்வாய்ப் புக்கொழிவு காண்பாறே காண்கொடா
வஞ்சாயற் கேநோவல் யான்.

[பின்னின்ற தலைமகன் தோழீ குறைமறுமற்
றனதாற்றமை மிகுதி சொல்லியது.]

(பத.) பால் ஒத்த - பால் போன்ற, வெள் அருவி - வெண்மை யான நீர்வீழ்ச்சிகளிலே, பாய்ந்து - குதித்து, ஆடி - நீராடுதலைச் செய்து, பல் பூ - பல்வகையான பூக்களை, பெய்தால் ஒத்த - பரப்பி வைத்தாற் போன்ற, ஐவனம் - மலைநெல் விளையும் புனத்தினை,

காப்பாள் - காவல் செய்யுந் தலைவியின், கண் - கண்கள், வேல் - வேற்படையினை, ஒத்து - போன்று, என் நெஞ்சம் - எனது மனத்தின்கண், வாய்-வாவி (—தாவி,) புக்கு - புகுந்து (தங்கியது,) ஒழிவு- (என் உயிரின்) ஒழிவினை, காண்பான் ஒ - காணவேண்டியோ? (அதற்கு இவ்வளவு முயற்சி வேண்டுமோ? வேண்டுவதின்று; என்னெனின்,) யான் - நான், காண்கொடா - (தலைவியைக்) காணுதல் கொண்டு, அம் சாயல் கு எ - அவளது அழகிய மேனியினுக்கே, நோவல் - வருந்தாநிற்கின்றேன். (என்று தலைவன் தோழியினிடங் கூறினான்.)

(ப-ரை.) பால் போன்ற வெள்ளருவியைப் பாய்ந்தாடி, பல பூக்களையும் பெய்து பரப்பினாற்போலப் பூங்கொடிகள் பரந்த ஐவனப்புனத்தைக் காப்பாள் கண்கள், வேல் போன்று எனது நெஞ்சத்தின்கண் வாவிப்புக்கு என்னுயிரை ஒழிவு காண வேண்டியோ புறம் போகாது உள்ளே அடங்கின; இத்துணை வேண்டுமோ? அவளுடைய அழகிய மேனிக்கே நோவாநின்றேன் யான்.

(விரி.) பின் நின்ற - தோழியின் பின்னின்று குறை வேண்டிய. குறை மறுமல் - தன் வேண்டுகோளை மறுக்காத வண்ணம். கொடா - செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். இது பகற்குறி இரத்தல் எனவும் படும். (கக)

நாள்வேங்கை பொன்விளையு நன்மலை நன்னாடா!
கோள்வேங்கை போற்கொடியா ரென்னையன்மார்
—கோள்வேங்கை
யன்னையா னீயு மருந்தழையா மேலாமைக்
கென்னையோ நாளை யெளிது.

[கையுறை மறை.]

(பத.) நாள் வேங்கை - அன்று பூத்த வேங்கைப் பூக்கள், பொன் விளையும் - பொன் போன்ற தாதுக்களை மிகுவிக்கும், நல்

மலை - நல்ல மலைகளையுடைய, நல் நாட - நல்ல நாட்டிற்குரிய தலைவனே! என் ஐயன்மார் - (இன்று இங்கு வரப் போகும்) என் தமையன்மார்கள், கோள்வேங்கை - வலிமைமிக்க பெரும் புலியினை, போல் - போன்று, கொடியார் - கொடுமை மிக்கவர்களாவார்கள், நீயும் - தலைவனாகிய நீயும், கோள்வேங்கை யன்னை - வலிமைமிக்க பெரும் புலியினை யொத்துளாய், (ஆதலான், நீ இங்கே இருப்பின், பெரும் போர் விளைதல் கூடும்,) யாம்-நாங்கள், அரும் தழை - நீ கொணர்ந்த அருமையான இத் தழையினை, ஏலாமைக்கு - ஏற்றுக்கொள்ளாமைக்கு, என்னை-வேறு காரணம் யாது? (இதுவொழிய வேறு ஒன்றுமின்று,) நாளை - (ஆதலால் நீ இத் தழையினை) நாளைக் கொண்டு வந்தால், எளிது - (நாங்கள் ஏற்றுக் கொள்வது) எளிதாகும். (என்று தோழி தலைவனிடங் கூறினாள்.)

(ப-ரை.) வேங்கை நாண்மலர் பொன்விளைக்கும் நன்மலை நாடனே! கோள் வேங்கைபோற் கொடியார் என் ஐயன்மார்; நீயுங் கோள் வேங்கை யனையை யாதலான் இன்று நீயும் இங்கே நிற்கின் மிகப் போர் விளையும்; நீ கொணர்ந்த தழையை யாங் கொள்ளாமைக்கு வேறு காரண மென்னை? நாளை நீ கொண்டு வந்தால் எளிது.

(வி.) கையுறை மறை - தலைவன் தலைவியின் கையிற் சேர்க்கும் பரிசாகக் கொண்டுவந்த பொருளை யாதாமொன்று கூறித் தோழி முதலியோர் மறுத்தல். இக் கையுறை பெரும்பாலும் பூக்கள் அல்லது இளந்தளிர்களாக இருக்கக் கூடும். இச்செய்யுளினை நச்சினார்க்கினியர், "கையுறை மறுத்துப் பின்வருக," என்றது என்பர். "அருந்தழையா மேலாமைக் கென்னையோ நாளை யெளிது", என்ற தொடர் அவ்வுரையினை வலியுறுத்துமாறு காண்க. ஆல் - அசைநிலை. (உ௰)

பொன்மெலியு மேனியாள் பூஞ்சுணங்கு மென்முலைக
ளென்மெலிய வீங்கினவே பாவமென்—றென்மெலிவிற்

கண்கண்ணி வாடாமை யானல்ல வென்றாற்றா
னுண்கண்ணி வாடா ளுடன்று.

[ஆற்றாய தலைமகனைத் தோழி ஏன்று கொண்டு
கையுறை யெதிர்ந்தது.]

(பத.) பொன் மெலியும் - (உருக்கி வார்த்த) பொன்னைப் போன்று ஒளிவிட்டுக் காணும், மேனியாள் - வடிவினையுடைய தலைவியின், பூ சுணங்கு - வேங்கைப் பூப்போன்ற தேமல்கள் படர்ந்த, மெல் முலைகள் - மெதுவான முலைகள், என் - எதற்காக, மெலிய - (யான்) வருந்தும்படி, வீங்கின - புடைத்துப் பருத்துக் காண்கின்றன, பாவம் என்று - ஐயோ என்று சொல்லி, மெலி விற்கு - நீ வீணே வருந்துதற்கு, என் - காரணம் யாது? (ஒன்று மின்று,) அண் கண்ணி-(நீ கொண்டு வந்த) இக் குறுங் கண்ணிகள், வாடாமை - (வீணே) வாடிப்போக வகையாக, யான் - நான் (தலைவி பால் கொண்டு சென்று,) நல்ல என்று - (இக்கண்ணிகள்) நல்லன வென்று, ஆற்றான் - வழிப்படுத்திக் காட்டினால், உண் கண்ணி - மை தீட்டப் பெற்ற கண்களையுடைய தலைவி, உடன்று - மாறு பட்டு, வாடாள் - துன்புறுதவளாய் (ஏற்றுக் கொள்வாள், என்று தலைவனிடந் தோழி கூறினாள்.)

(ப-ரை.) பொன்றளரும் மேனியாள் வேங்கைப் பூப் போன்ற சுணங்கினையுடைய மென்முலைகள் எற்றுக்கு யான் மெலியப் புடைத்து வீங்கின, என்னே பாவமென்று சொல்லி நீ மெலிதற்குக் காரணமென்னை? நீ கொணர்ந்த குறுங் கண்ணிகள் வாடாத வகை யான் கொண்டு சென்று இவை நல்ல வென்று காட்டினால், அவ்வுண்கண்ணிதான் மாறு பட்டுத் துன்புறாள் வாங்கும்.

(விரி.) ஏன்று கொளல் - ஏற்றுக் கொள்ளல். எதிர்தல் - பெறுதல். அண் கண்ணி-கையுறை. அண்மை-குறுமை. கண்ணி—பூமாலை. (உக)

கொல்யானை வெண்மருப்புங் கொல்வல் புலியதளு
நல்யானை நின்னையர் கூட்டுண்டு—செல்வார்தா
மோரம்பி னெய்து போக்குவர்யான் போகாம
லீரம்பி னெய்தா யின்று.

[பகற்குறிக்கட் டலைமகள் குறிப்பன்றிச் சார்கிலாத
தலைமகன் றனதாற்றமை சொல்லியது.]

(பத.) நல் யானை - நல்ல யானையினைப் போன்ற, நின் ஐயர் - நின்னுடைய தமையன்மார்கள், கொல் யானை-கொல்கின்ற யானையின், வெண் மருப்பும் - வெண்மையான கொம்புகளையும், கொல் வல் - கொல்லும் வலிமைமிக்க, புலி அதளும் - புலித் தோல்களையும், கூட்டு உண்டு - திறையாகக் கொண்டு, செல்வார் - நடப்பவராகி, (இப் புனத்தின்கண் வருபவர்களாகிய பிறரை,) ஓர் அம்பினன் - ஓரம்பினாலே, எய்து - தாக்கி, போக்குவர் - ஒழிப்பர், (ஆனல், நீயோ) யான் - நான், போகாமல் - இவ்விடத்தை விட்டு நீங்காமலிருக்கும்படி, இன்று - இப்பொழுது, ஈர் அம்பினல் - நின் கண்களாகிய இரண்டம்புகளினாலே, எய்தாய் - தாக்கினாய், (என்று தலைவன் தலைவியை நோக்கிச் சொன்னான்.)

(ப-ரை.) கொல் யானைகளினுடைய வெண்மருப்பையுங் கொலைவல்ல புலித் தோல்களையும். நல்யானை போன்ற நின் ஐயர் திறைகொண் டொழுகுவார், இப்புனத்தின்கட் பிறர் வருவாரை ஓரம்பினா லெய்து போக்குவர்; யான் பிழைத்துப் போகாதவகை நின் கண்ணென்னு மிரண்டம்பினால் எய்தாய் இன்று.

(விரி.) திறை - கப்பப் பொருள். தாம் - அசைநிலை. ஓரம்பாற் போக்கலும், ஈரம்பாற் போக்காமையும் ஆய சொன்னயந் தெளிக. இதனை, "இடம் பெற்றுத் தழாஅல் - தலைவியின் குறிப்பறிந்து சார்ந்து தழுவல்," எனலுங் கூடும். அன்றி—அல்லாமல். சார்கிலாத - நெருங்க முடியாத. (உஉ)

பெருமலை தாநாடித் தேன்றுய்த்துப் பேணு
தருமலை மாய்க்குமவர் தங்கை—திருமுலைக்கு
நாணழிந்து நல்ல நலனழிந்து நைந்துருகி
யேணழிதற் கியாமே யினம்.

[நின்னாற் குறிக்கப்பட்டாளை யானறியேன் என்ற
தோழிக்குத் தலைமகன் கூறியது; அல்லது,
பாங்கற்குக் கூறியதூஉமாம்.]

(பத.) பெருமலை - பெரிய மலைப்பக்கங்களெங்கும், தாம் நாடி - தாம் புகுந்து தேடி, தேன் துய்த்து - அகப்பட்ட தேன் முழுவதை யும் குடித்து, பேணாது - சிறிதும் பொருட்பண்ணாது, அருமலை - அரிய மலைகளைப் போன்ற யானைகளை, மாய்க்குமவர் - அகப்படுத்திக் கொள்பவர்களுடைய, தங்கை - பின்னவளாகிய தலைவியினது, திரு முலைக்கு - அழகிய முலைகளின்மீதே (கொண்ட விருப்பினாலே,) நாண் அழிந்து - நாணத்தைத் துறந்து, நல்ல - நன்மைகட்குக் காரணமான, நலன் - அறிவு முதலிய அரும் பண்புகள் நான்கும், அழிந்து - கெடப் பெற்று, நைந்து - தளர்ந்து, உருகி - வருந்தி, ஏண் - வலிமை, அழிதற்கு - கெட்டலையு நிலைக்கு, யாம் - நாம், இனம் - எடுத்துக்காட்டாக அமைந்தோம். (என்று தலைமகன் கூறினான்.)

(ப-ரை.) பெருமலை யெங்கும் தாம் புக்கு நாடித் தேன் வாங்கி நுகர்ந்து மனத்தின்கண் நுடங்கிப் பாதுகாவாது அருமலை போன்றிருந்த யானைகளைப் பிணித்துக் கொள்வா ருடைய தங்கையுடைய திருமுலைக்குத் தோற்று நாணழிந்து மிக்க அறிவு முதலாயின குணங்கள் நான்கு மழிந்து தளர்ந்துருகி வலியழிதற்கு யாமமைந்தேம்.

(விரி.) "அருமலை மாய்க்குமவர் தங்கை," என்பது, தன்னாற் குறிக்கப்பட்டாள் இன்னாள் என விளக்கி நின்றது. தேன் - மலை நாட்டார் குடிவகைகளி லொன்று. பேணுதல் - மனத்தின்கட்

கலங்கிப் பின்வாங்கல். அரும்பண்புகள் நான்கு - அறிவு, ஆண்மை, உயர்வு, ஒழுக்கம். எடுத்துக்காட்டு - உதாரணம். (உரு)

நறுந்தண் டகரம் வகுள மிவற்றை
வெறும்புதல்போல் வேண்டாது வேண்டி—யெறிந்துழுது
செந்தினை வித்துவார் தங்கை பிறர் நோய்க்கு
நொந்தினைய வல்லளோ நோக்கு.

[தோழி குறைமறுமற் றலைமகன் றனதாற்றமை மிகுதி சொல்லியது.]

(பத.) நறும் - மண மிக்க, தண் - குளிர்ந்த, தகரம் - தகர மரம், வகுளம் - மகிழமரம், இவற்றை - என்னும் இவைகளை, வெறும்புதல் போல் - பயனில்லாத புதர்களைப் போல், வேண்டாது - விரும்பாது, எறிந்து - (வேரற) வெட்டி யெறிந்து, வேண்டி - (பயிர் செய்தலை) விரும்பி, உழுது - பண்படுத்தி, செந்தினை வித்துவார் - சிவந்த தினையினை விதைப்பவர்களாகிய மலைநாட்டிற் குரிய தலைவர் களின், தங்கை - பின்னவளாகிய தலைவி, பிறர் நோய்க்கு - பிறர் படுந் துன்பினுக்காக, நொந்து - தளர்ந்து, இனைய - வருந்த, வல்ல ளோ - தகுதியளோ? நோக்கு - (நீ இதனை நன்கு ஆராய்ந்து) பார்ப்பாயாக. (என்று தலைவன் தோழியினிடங் கூறினன்.)

(ப-ரை.) நறுவிய குளிர்ந்த தகரம், வகுளம் என்னு மிவற்றைப் பயன்படாத வெறும் புதல் போல விரும்பாது வெட்டியுழுது, விரும்பிச் செந்தினையை வித்துவார் தங்கை பிறர் கொண்ட நோய்க்கு நொந்திரங்க வல்லளோ? ஆராய்ந்து பாராய் தோழி!

(விரி.) தகர மரம் - ஐந்து வகை நறு நாற்றப் பொருள்களி லொன்று. குறைமறுமல் - நின் குறையை நீயே சென்று உரை என்று மறுத்துக் கூறிவிடாதபடி. தகரம் வகுள முதலியவற்றை வெறுத்து வெட்டுபவர் தங்கையாகலான் பிறர் நோய் கருத அறி

யாள் என்பதும், தோழி நெருங்கி அறிவுறுத்தல் இன்றியமையா தென்பதும் தலைவன் கருத்தாம். இதனை நச்சினார்க்கினியர், "தலைவியைப் பேதைமை யூட்டியது," எனக் கொள்வர் (தொல். களவு. உங). அங்ஙனமாயின், இதனைத் தோழி கூற்றாகக் கொள்க. தலைவியைப் பேதைமை யூட்டியது - தலைவியினிடத்திற் பேதைமைக்குணம் பெருகியுள்ளதாகத் தோழி தலைவனுக்குச் சொல்லியது. (உ௨).

கொல்லியல் வேழங் குயவரி கோட்பிழைத்து
நல்லியற் றம்மின நாடுவபோ—னல்லிய
ஏமவேற் கண்ணா ணடுநடுப்ப வாரலோ
வேமவே லேந்தி யிரா.

[தோழி தலைமகனை நெறிவிலக்கி வரைவு கடாயது.]

(பத.) கொல் இயல் - கொல்லும் இயல்பினையுடைய, வேழம் - யானைகள், குயவரி - புலியினால், கோள் - கொள்ளப்படுதலினின்றும், பிழைத்து - தப்பி, நல் இயல் - நல்ல தன்மையினையுடைய, தம் இனம் - தங் கூட்டத்தினை, நாடுவ போல் - தேடித் திரிவன போல, இரா - இரவின்கண், ஏமம் - பாதுகாவலாகிய, வேல் - வேற்படையினை, ஏந்தி - கைக்கொண்டு, நல் இயல் - நல்லிலக்கண மிக்க, ஏமவேல் - அச்சத்தை யுண்டாக்கும் வேலினையொத்த, கண்ணாள் - கண்களையுடைய தலைவி, நடுநடுப்ப - நடுநடுங்கும்படி, வாரல்-வாராதிருப்பாயாக. (என்று தோழி தலைவனிடங் கூறினள்.)

(ப-ரை.) கொல்லும் இயல்பினையுடைய யானைகள் புலியினாற் கொல்லப்படுதலைத் தப்பி மிக்க இயல்பினையுடைய தங்கூட்டத்தைத் தேடுவது போலும்; ஆதலான் மிக்க வியல்பினையுடைய அச்சத்தைச் செய்யாநின்ற வேல்போன்ற கண்ணாள் நடுநடுங்கும்வகை வாராதொழிவாயாக, அரணாகிய நின் வேலை யேந்தி இரவின்கண்.

(விரி.) ஓ - அசைநிலை. வேழம், பிழைத்து, நாடுவ போல், இரா வேலேந்தி, நடுநடுப்ப வாரல், என முடிக்க. (உரு)

கருங்கா லினவேங்கை கான்றபூக் கன்மே
லிருங்கால் வயவேங்கை யேய்க்கு—மருங்கான்
மழைவளருஞ் சார லிரவரின் வாழா
ளிழைவளருஞ் சாய லினி.

[இதுவு மது.]

(பத.) இழை - அணிகலன்களாலே, வளரும் - மிகுந்து காணப் படும் (அழகினை,) சாயல் - (இயல்பாகவே கொண்ட) எழிலினை யுடைய தலைவி, இனி - மேலும், கரும் கால் - கரிய அடிப்பாகத்தை யுடைய, இனம் வேங்கை - கூட்டமாகிய வேங்கை மரங்கள், கான்ற - சொரிந்த, பூ - மலர்கள், கல் மேல் - பாறைகளின் மீதே (படிந்து,) இரும் கால் - பெரிய கால்களையுடைய, வயம் வேங்கை - வெற்றிமிக்க பெரும்புலியினை, எய்க்கும் - ஒத்திருக்கும்படியான, மருங்கு ஆல் - இடங்களோடு (கூடி,) மழை வளரும் - மழை விடாது பெய்யும்படியான, சாரல் - மலைப்பக்கத்தின் வழியே, இரவரின் - இராக்காலத்தே நீ வருவாயாயின், வாழாள் - உயிர் தரிக்கமாட் டாள். (மிகவும் வருந்துவள், என்று தோழி தலைவனிடங் கூறி னாள்.)

(ப-ரை.) கருங்காலினையுடைய இனவேங்கை கன்மே லுகுத்த பூக்கள் பெரியதாளினையுடைய வயப்புலியை யொக்குகின்ற மருங்கான் மழைவளருஞ் சாரலானே இர வின்கண் நீவரின், உயிர்வாழ மாட்டாள்; இழை வளருஞ் சாயலாள்.

(விரி.) மருங்கு ஆல் - ஆல் உடனிகழ்ச்சிப் பொருள் கொண் டுள்ளது. சாயல் - பண்பாகு பெயர். (உகா)

பனிவரைநீள் வேங்கைப் பயமலைநன் னாட!
இனிவரையா யென்றெண்ணிச் சொல்வேன்—முனிவரையு
ணின்றாள் வலியாக நீவர யாய் கண்டா
ளொன்றாள்காப் பீயு முடன்று.

[தோழி படைத்துமொழி கிளவியான் வரைவு கடாயது.]

(பத.) பனிவரை - குளிர்ந்த குவடுகளையும், நீள் - நீண் டுயர்ந்த, வேங்கை - வேங்கை மரங்களையுங் (கொண்ட,) பயமலை - பல்வகை வளங்கள் நிறைந்த மலைகள் சூழ்ந்த, நல் நாட - நல்ல நாட்டிற்குத் தலைவனே! இனி - (இதற்கு முன் எமது தலைவியை மணவாது நாளைக் கழித்தாய்) இனிமேலாகிலும், வரையாய் - (அங்ஙனஞ் செய்யாமல்) மணந்து கொள்வாயாக, என்று எண்ணி - என்று நீள நினைந்து, சொல்வேன் - (நினக்கு ஒன்று) சொல்கின்றேன், முனி வரையுள் - (கொடுமைச் செயலால்) வெறுக்கத்தக்க இம் மலையின்கண், நின்தாள் - நின் கால் வன்மையே, வலியாக - துணையாக, நீ வர - நீ வருதலை, யாய் - எம்முடைய அன்னை, கண்டாள் - பார்த்தவளாகி, உடன்று - எம்மோடு சினந்து, ஒன்றாள் - மாறுபட்டு, காப்பு ஈயும் - காவலைத் தாராநின்றாள். (ஆகலின், தலைவியை விரைவில் மணந்து களிப்பாயாக, என்று தோழி தலைவனிடங் கூறினாள்.)

(ப-ரை.) குளிர்ந்த குவடுகளையும் நீண்ட வேங்கை மரங்களையும் உடைய பயமலை நாடனே! இதற்கு முன்பு வரைந்திலையாயினும் இனி வரைந்து புகுதாய் என்று நினக்கு ஆராய்ந்து சொல்வேன்; வெறுக்கத்தக்க மலையின் கண் நின்தாளாண்மையே வலியாக இரவின்கண் நீ வர எம் அன்னை கண்டாள்; இனி எங்களோடு பகைத்து வெகுண்டு மிக்க காவலை எமக்குத் தரும்.

(விரி.) படைத்து மொழி கிளவி - தானாக வொன்றைக் கற் பித்துக் கூறுவது. வரைவு கடாதல் - மணம் புரிந்து கொள்ளும்படி

தூண்டுதல். யாய் - செவிலித்தாய். நின் வரவினை செவிலித்தாய் அறிந்தாள்; இனி, எம்மேற் கண்காணிப்பினை மிகுதிப்படுத்துவாளாதலான் இனிக் களவுப் புணர்ச்சிக்கு இடமின்றிக் கற்புப் புணர்ச்சியே வேண்டற்பால தாயிற்று என்பது தோழி கருத்தாம். (உஎ)

மேகந்தோய் சாந்தம் விசைதிமிசு காழகி
லாகந்தோய் நாக மெனவிவற்றைப்—போக
வெறிந்துழுவார் தங்கை யிருந்தடங்கண் கண்டு
மறிந்துழல்வா னோவிம் மலை.

[தலைமகன் சொன்ன குறிவழியே சென்று தலைமகளைக் கண்டு பாங்கன் சொல்லியது.]

(பத.) மேகம் தோய் - முகில்கள் வந்து படியாநின்ற, சாந்தம் - சந்தன மரங்களும், விசை - விசை யென்னும் ஒருவகை மரங்களும், திமிசு - வேங்கை மரங்களும், காழ் அகில் - உள்ளீடு மிக்க அகில் மரங்களும், நாகம் - தேவருலகினை, தோய் - தீண்டி நிற்கும், நாகம் - சுரபுன்னை மரங்களும், என - என்று சொல்லப் பட்ட, இவற்றை - இவைகளை யெல்லாம், போக - ஒழியும்படி, எறிந்து - வெட்டி, உழுவார் - உழுது தினைப்பயிர் செய்பவராகிய மலை நாட்டாரின், தங்கை - பின்னவளாகிய இத் தலைவியின், இரும் தடம் கண் - பெரிய அகன்ற கண்களை, கண்டும் - பார்க்க நேர்ந்தும், மறிந்து - இங்கிருந்து மீண்டு, உழல்வான் - அங்கு வர முயன்று பாடுபட்டு வந்த தலைவன், ஒ - ஆ! இம்மலை - இந்த மலையினைப் போன்ற நிலைத்த நெஞ்சினனே யாவன். (என்று தோழன் தலைவியைக் கண்டு தலைவனை வியந்து தனக்குட் டானே கூறிக் கொண்டனன்.)

(ப-ரை.) முகிலைத் தோயாநின்ற சந்தனமும், விசை மரமும், திமிசும், காழகிலும், துறக்கத்தைச் சென்று தோயாநின்ற நாகமரமும் என்று சொல்லப்பட்ட இவை யெல்லாம் போக வெட்டிப் புனமுழுவார் தங்கையாகிய இவ

ளுடைய இருந்தடங்கண் கண்டுவைத்தும், இங்குநின்றும் மீண்டு அங்குவரவல்ல எம்பெருமான் இத்தோன்றுகின்ற மலைபோல் நிலையுடையன்.

(விரி.) ஓ - வியப்பிடைச் சொல். இது பாங்கற் கூட்டத் தின்பாற் பட்டதாம். பாங்கன் - தோழன். (உஅ)

பலாவெழுந்த பால்வருக்கைப் பாத்தி யதனேர்
நிலா வெழுந்த வார்மண னீடிச்—சுலாவெழுந்து
கான்யாறு கால்சீத்த காந்தளம்பூந் தண்பொதும்பர்
தாறுறத் தாழ்ந்த விடம்.

[பகற்குறிக்கண் இடங் காட்டியது.]

(பத.) எழுந்த - மிகவும் உயர்ந்து காணப்படும், பலா பால் - பலாமரத்தின் பக்கத்திலே, வருக்கை - வருக்கைப் பலா மரங்க ளால், பாத்தி - பகுத்துப் பிரிக்கப்பட்ட, அதன் நேர் - அப் பலாத் தோட்டத்தின் நடுவே, நிலா-நில வொளியானது, எழுந்த-பொருந் திக் காணும்படியான, வார் - மிகுந்த, மணல் - மணலானது, நீடி - உயர்ந்து, சுலா எழுந்து - வட்டமாகப் பரவித் தோன்றி, கான் யாறு - (அருகே யுள்ள) காட்டாற்றுப் பெருக்கினலே, கால் சீத்த - ஒழுங்கு பண்ணப்பட்ட, காந்தள் அம் பூ - காந்தளின் அழகிய பூக்கள் (மிகுந்து காணும்படியான,) தண் - குளிர்ந்த, பொதும்பர் தான் - சோலையே, நாற - நறுநாற்றங் கொள்ளும்படி, தாழ்ந்த - (யானும் என் தலைவியும் பகற் பொழுது) தங்கி விளையாடிய, இடம் - இடமாகும். (என்று தோழி தலைவனிடங் கூறினள்.)

(ப-ரை.) பலா வெழுந்த மருங்கின்கண் வருக்கைப் பலாக்களாற் பாக்கப்பட்டத னடுவே நிலாவொளி மிக்க ஒழு கிய மணலுயர்ந்து வளைந்து தோன்றி, கான்யாறுகள் இடங்க ளெல்லாஞ் சீத்த காந்தளம்பூந் தண்பொதும்பர்தான் விரை

கமழ்ந்து தழைத்தவிடம், யாங்கள் பகலின்கண் விளையாடு மிடம்.

(விரி.) பகற்குறி - தலைவனும் தலைவியும் பகற்காலத்தே தம் முள் எதிர்ப்பட்டுக் கூடுமிடம். இப்புணர்ச்சி பாங்கியின் உதவி யால் நிகழ்வதாம். இவ்விடம் தினைப்புனத்தினை யடுத்த வொரு சோலையாம். பாங்கியிற் கூட்டத்தினை விரும்பிய தலைவற்குப் பாங்கி நேர்ந்து, தான் தலைவியைக் கொண்டுவந்து சேர்க்குமிடம் இதுவெனக் கூறுகின்றனள். இது குறிப்பாக விளையாடியவிடம் எனக் கூறப்படுதல் களவுப் புணர்ச்சி கருதிய தென்க. (உக)

திங்களுள் வில்லெழுதித் தேராது வேல்விலக்கித்
தங்களு ளாளென்னுந் தாழ்வினா—லிங்கட்
புனங்காக்க வைத்தார்போற் பூங்குழலைப் போந்தென்
மனங்காக்க வைத்தார் மருண்டு.

[பாங்கற்குத் தலைமகன் கூறியது.]

(பத.) திங்களுள் - நிறைந்த மதியின்கண்ணே, வில் - இரண்டு விற்களை, எழுதி - புருவங்களாக வரைந்து வைத்து, தேராது - (பிறர்க்குத் தீங்கா மென்பதை) நினைத்துப் பாராது, வேல் - இரு வேல்களாகிய கண்களை, விலக்கி - அவ்விற்களிடத்திலே மாறுபா டாகப் பொருத்தி வைத்து, தங்களுள்ளாள் - தமது குலத்தில் வந்த வொருத்தி யென்று, என்னும் - (தாம்) கருதப்படும், தாழ்வி னால் - எளிமை காரணத்தினாலே, இங்கண் - இவ்விடத்திலே, பூ குழலை - பூக்கள் நிறைந்த கூந்தலை யுடைய தலைவியை, புனம் - தினைப்புனத்தை, காக்க வைத்தார் போல் - காவல் செய்ய வைத்த வர்களைப் போல, மருண்டு - அறிவின்றி, என்மனம் - எனது மனத் தின்கண், போந்து - புகுந்து, காக்க வைத்தார் - காவல் செய்யும்படி வைத்துவிட்டார்கள். (என்று தலைவன் தோழனிடங் கூறினான்.)

(ப-ரை.) ஒரு நிறைமதியின் கண்ணே இரண்டுவில்லை எழுதிப் பிறருயிரை யுண்ணுமென்று ஆராயாது இரண்டு

வேலியினையழுத்தி, தங்கள் குலத்துள்ளா ளொருத்தி யென்று தாங்கள் கருதப்படுந் தாழ்வு காரணத்தால் இவ்விடத்தின் கட் டினைப்புனத்தைக் காக்க வைத்தார் போலப் பூங்குழலை என் மனத்தைப் போந்து காக்க வைத்தார், அறிவின்றி.

(விரி.) இது தலைவியைக் கண்டு நிறையழிந்த தலைமகன் தன் னிலையினைத் தோழனிடங் கூறியதாகும். பூங்குழல் - இரண்டாம் வேற்றுமைத் தொகைப்புறத் தன்மொழி. (௫௰)

தன்குறையி தென்னான் றழைகொணருந் தண்சிலம்ப
னின்குறை யென்னு நினைப்பினனாய்ப்—பொன்குறையு
நாள்வேங்கை நீழ லுணங்கா னெவன்கொலோ
கோள்வேங்கை யன்னான் குறிப்பு.

[தோழி தலைமகளை மெலிதாகச் சொல்லிக்
குறைநயப்பக் கூறியது.]

(பத.) தண் சிலம்பன் - குளிர்ந்த மலைநாட்டுத் தலைவன், தன் குறை - தனக்காக வேண்டிய காரியம், இது என்னான் - இன்ன தென எனக்கு விளங்கச் சொல்கின்றானில்லை, தழை கொணரும் - பூந்தழைகளை அடிக்கடி கொண்டுவருகின்றனன், நின் குறை - (தான் நாடிவந்த காரியம்) நின்னால் முடியவேண்டிய கருமம், என்னும் - என்று கருதும், நினைப்பினன் ஆய் - கருத்தோடு கூடிய வனாய், பொன் குறையும் - பொன்னினது நிறத்தையும் குறைவு படுத்தும், நாள் - அன்று பூத்த (மலர்கள் நிரம்பிய,) வேங்கை - வேங்கை மரத்தினது, நீழல் உள் - நிழலின்கண்ணும், நண்ணான் - நெருங்கிச் சிறிது பொழுதும் தங்காதவனா யிருக்கின்றனன், (ஆக லின்,) கோள் வேங்கை - வலிமை மிக்க பெரும் புலியினை, அன் னான் - ஒத்தவனாகிய இவனது, குறிப்பு - மனக் கருத்து, எவன் கொலோ - யாதாங் கொல்லோ? (என்று தோழி தலைவியை வினவினள்.)

(ப-ரை.) தன் காரியம் இது என்று எனக்கு விளங்கச் சொல்லான், தழையைக் கொண்டு வந்தான், தண் சிலம்பை யுடையான் நின்றான் முடியுங் கருமம் இது என்னுங் கருத் தினனாய்ப் பொன்னிறந் தரும் நாண்மலர்களையுடைய வேங்கை நிழலின்கண்ணுஞ் சிறிது பொழுதுஞ் சார்ந்தி ரான், என்னை கொல்லோ! கோள் வேங்கை யன்னானது கருத்து.

(விரி.) நாள் - காலவாகு பெயர். நீழல் - நீட்டல் விகாரம். எவன் - அஃறிணைவினா வினைக்குறிப்பு. கொல், ஓ - அசை நிலை கள். மெலிதாக-நயமாக. குறை நயப்ப-குறையேற்று முடிக்க. (௩௧)

குறிஞ்சி முற்றும்.

## இரண்டாவது—நெய்தல்.

பானலந் தண்கழிப் பாடறிந்து தன்னைமார்
நூனல நுண்வலையா னெண்டெடுத்த—கானற்
படுபுலால் காப்பாள் படைநெடுங்கண் ணோக்கங்
கடிபொல்லா வென்னையே காப்பு.

[பாங்கற்குச் சொல்லியது.]

(பத.) பானல் - நெய்தன் மலர்கள் (பூத்துள்ள,) அம் - அழகிய, தண் - குளிர்ந்த, கழி - உப்பங்கழிகளிடத்தே, பாடு - (மீன்கள்) அகப்படும் வழிகளை, அறிந்து - தெரிந்து கொண்டு, தன் ஐமார்-தன் தமையன்மார்கள், நூல் நல - நல்ல நூல்களாற் (பின்னப் பெற்ற,) நுண் - நுட்பமான, வலையால் - வலைகளினாலே, நொண்டு-முகந்து, எடுத்த - பிடித்துக் கொண்டு வந்த, படு புலால் - காய வைத்துள்ள கருவாட்டினை, கானல் - கடற்கரைச் சோலையிலிருந்து, காப்பாள் - (பறவைகள் பற்றிக் கொண்டு போகாவண்ணம்) பாதுகாப்பவளாகிய தலைவியின், படை - வேற்படையினை யொத்த, நெடும் கண் - நீண்ட கண்களின், நோக்கம் - பார்வையானது, கடி-(கருவாட்டினைக்) காத்தலில், பொல்லா - தகுதி கொள்ளாது, என்னையே - எளியேனையே, காப்பு - (தன்னகப்படுத்திக்) காத்தலில் (வன்மை கொண்டுள்ளது, என்று தலைவன் தோழனிடங் கூறினன்.)

(ப-ரை.) நெய்தற் பூக்களையுடைய தண் கழியின்கண் மீன் பாட்டை யறிந்து தன்னைமார் நூலாற் செய்யப்பட்ட நல்ல நுண்ணிய வலையான் முகந்து எடுத்த படு புலாலைக் கானலின்கணிருந்து காப்பாள் படை நெடுங்கண் ணோக்கம் படு புலாலைக் காக்க மாட்டா, என்னையே காக்கும் அத்துணை.

(விரி.) நெய்தல் - இரங்கலும் இரங்கல் நிமித்தமுமாகிய ஒழுக்கம். பாங்கன் - தோழன். இது பாங்கற் கூட்டத்தின்பாற்

படும். படை - ஆயுதப் பொதுப் பெயர். ஏ - பிரிநிலைப் பொருள் கொண்டுள்ளது. கடி பொல்லா - மிகுதியும் துன்புறுத்துவது என்றுமாம். (௩௨)

பெருங்கடல் வெண்சங்கு காரணமாப் பேணா
திருங்கடன் மூழ்குவார் தங்கை—யிருங்கடலுண்
முத்தன்ன வெண்முறுவல் கண்டுருகி நைவார்க்கே
யொத்தனம் யாமே யுளம்.

[இதுவு மது.]

(பத.) பெரும் கடல் - பெரிய கடலினிடத்தேயுள்ள, வெண் சங்கு - வெண்மையான சங்குகளை, காரணமா - (பெறுதலை) கருத்தாகக் (கொண்டு,) பேணாது - தம் உயிரைச் சிறிதும் பொருட் செய்யாது, இரும் கடல் - பெரிய கடலினகத்தே, மூழ்குவார் - அமிழ்ந்து முயல்பவர்களாகிய பரதர்களின், தங்கை - பின்னவளாகிய தலைவியின், இரும் கடல் உள் - பெரிய கடலினிடத்தே (விளையும்,) முத்து அன்ன - முத்துக்களை யொத்த, வெண் முறுவல் - வெள்ளிய பற்களின் ஒளியினை, கண்டு - பார்த்து, உருகி - மனந்தளர்ந்து, நைவார்க்கு - வருந்துகின்ற மக்களை, யாம் - நாம், ஒத்தனம் - ஒப்புமையுடையேமாகி, உளம் - இருக்கின்றனம். (என்று தலைவன் பாங்கனிடம் கூறினன்.)

(ப-ரை.) பெருங் கடலுள் வெண் சங்கு பெறுதலை காரணமாகத் தங்களுயிரைப் பாதுகாவாது பெருங் கடலினுள்ளே குளிப்பார் தங்கையுடைய இருங் கடலின் முத்தன்ன வெண் முறுவல் கண்டு உருகி நைவார்க்கே பொருந்தி யாம் மேவியுளம்.

(விரி.) நைவார்க்கு - வேற்றுமை மயக்கம். ஏ - அசைநிலைகள். தங்கையின் முறுவல், முத்தன்ன வெண்முறுவல், எனக் கூட்டுக. (௩௩)

தாமரை தான்முகமாத் தண்ணடையீர் மாநீலங்
காமர்கண் ணாகக் கழிதுயிற்றுங்—காமருசீர்த்
தண்பரப்ப ! பாயிரு ணீவரிற்றாழ் கோதையாள்
கண்பரப்பக் காணீர் கசிந்து.

[புணர்ந்து நீங்குந் தலைமகனைக் கண்ணுற்று
நின்ற தோழி வரைவு கடாயது.]

(பத.) கா மரு சீர் - கடற்கரைச் சோலைகள் பல பொருந்திச் சிறப்புற்ற, தண் - குளிர்ந்த, பரப்ப - கடற்பரப்பினையுடைய தலைவனே! தாமரை - தாமரைப்பூவே, முகமா - அழகிய முகமாகவும், தண் - குளிர்ந்த, அடை - இலைகளையுடைய, ஈர் - ஈரமான, மா நீலம் - பெரிய நீல மலர்கள், காமர் - கண்டாரால் விரும்பப்படும், கண் ஆக - கண்களாகவுங் கொண்டுள்ள, கழி - கடற் கழிகளை, துயிற்றும் - உறங்குவிக்கும், பாய் இருள் - பரவி நிற்கும் இருள் (நிரம்பிய இவ்விரவில்,) நீ வரில் - நீ நாளைமுதல் வருவாயாயின், தாழ் - நீண்டு தொங்கும்படியான, கோதையாள் - கூந்தலையுடைய தலைவி, கசிந்து - வருந்தி, கண் - கண்கள், நீர் பரப்ப - நீரினை வெளிவிட, காண் - நீ காண்பாய். (என்று தோழி தலைவனிடங் கூறினாள்.)

(ப-ரை.) தாமரை மலர்கள் தாமே முகமாகக் குளிர்ந்த இலையையுடைய ஈரத்தையுடைய மாநீல மலர்கள் காதலிக்கப் படுங் கண்ணாக, அக்கண்களைக் கழிக்கட் டுயில்வியாநின்ற காமருசீர்த் தண் பரப்பை யுடையானே! பெரிய இருளின் கண் நீ வரிற் றாழ்ந்த கோதையை யுடையாள் இரங்கி அவள் கண்கள் நீர் பரப்பக் காணாய்.

(விரி.) தான் - அசைநிலை. பரப்ப! கழி துயிற்று மிருள் நீ வரில், கோதையாள் கசிந்து, கண் நீர் பரப்பக் காண்(பாய்,) என முடிக்க. காண் - தொகுத்தல் விகாரம் பெற்று வந்துள்ளது. (௬௪)

புலாலகற்றும் பூம்புன்னைப் பொங்குநீர்ச் சேர்ப்ப
நிலாவகற்றும் வெண்மணற்றண் கானற்--சுலாவகற்றிக்
கங்குனீ வாரல் பகல்வரின்மாக் கவ்வையா
மங்குனீர் வெண்டிரையின் மாட்டு.

[இரவும் பகலும் வாரலேன்று தலைமகனைத்
தோழி வரைவு கடாயது.]

(பத.) புலால் - புலவு நாற்றத்தினை, அகற்றும் - விலக்கவல்ல, பூ புன்னை - (நறு நாற்ற மிக்க) பூக்கள் மலர்ந்துள்ள புன்னை மரங்கள், பொங்கு - மிகுந்து காணப்படும், நீர் சேர்ப்ப - கடனீர்த் துறை முகத்திற்குரிய தலைவனே! நிலா - நிலவொளியினையும், அகற்றும் - வென்று விலக்கும்படியான, வெண் மணல் - வெள்ளிய மணல் பரந்த, தண் - குளிர்ந்த, கானல்-கடற்கரைச் சோலைக்கண், (நீ நாடோறும்,) கங்குல் - இராக் காலத்திலே (வந்து அதனாலுண்டாகும்,) சுலா - (தலைவியின் மனச்) சுழற்சியினை, அகற்றி - விலக்கும் பொருட்டு, நீ வாரல் - நீ வாராதிருப்பாயாக, பகல்வரின் - (அது தவிர்ந்து) பகல் வேளையில் நீ வருவாயாயின், மங்குல் நீர் - மேகம் போன்ற நீரினையும், வெண் திரையின் மாட்டு - வெள்ளிய அலைகளையு முடைய கடற்கரையின் பக்கங்களிலெல்லாம், மா - மிகுதியும், கவ்வை - (பிறரால் தூற்றிக் கூறப்படும்) பழிச் சொற்கள், ஆம் - தோன்றும்.

(ப-ரை.) புலானாற்றத்தை நீக்கும் பூக்களையுடைய புன்னைப் பொங்குநீர்ச் சேர்ப்பனே! நிலாவினதொளியை வென்று நீக்கும் வெண்மணற் றண் கானலின்கட் கங்குலின் கண்ணே வருதலின், இவளாவி வருந்தலைப் பெருக்கி நீ வாராதொழிக; பகல்வருவையாயிற் பிறரால் அலர் தூற்றப் படுங் கவ்வை பெருகும், மங்குல் போன்ற நீரையும் வெண்டிரையையுமுடைய கடன் மருங்கின்.

(விரி.) அகற்றல் - விலக்கல், பெருக்கல். கவ்வை - பழிச்சொல். அலர் - புறத்தே கூறும் பழிப்புரை. வாரல் - அல்லீற்று எதிர்மறைவியங்கோள். சுலா - யாது செய்வதென்று தோன்றாது மனத்தின்கண் உண்டாம் தடுமாற்றம். அகற்றி - அகற்ற; எச்சத் திரிபு. (௯௫)

முருகுவாய் முட்டாழை நீண்முகைபார்ப் பென்றே
குருகுவாய்ப் பெய்திரை கொள்ளா—துருகிமிக
வின்னா வெயில்சிற கான்மறைக்குஞ் சேர்ப்ப! நீ
மன்னா வரவு மற.

[தோழி வரைவு கடாயது.]

(பத.) முருகு - நறு நாற்றம், வாய் - வாய்க்கப் பெற்றுள்ள, முள் தாழை - முள்ளையுடைய தாழைமரத்திற் (றோன்றிய,) நீள் முகை - நீண்ட மொட்டுக்களை, குருகு - நாரைகள், பார்ப்பு என்று - (தம்முடைய) குஞ்சுகள் என்று கருதி, இரை - (தாம் கொண்டுவந்த) இரையினை, வாய் - (அம்மொட்டுக்களின்) வாயிலே, பெய்து-புகட்டி, கொள்ளாது - (அவ்விரையிற் சிறிதும் தாம்) அருந்தாது, உருகி மிக - மிகுதியும் மன இளக்கங் கொண்டு, இன்னா - துன்பினைத் தரும்படியான, வெயில் - கதிர் வெப்பத்தினை, சிறகால் - தம்முடைய சிறகுகளினாலே, மறைக்கும் - (அம்மொட்டுக்களின்மேல் விழவொட்டாது) பாதுகாக்கும், சேர்ப்ப - கடற்கரைத் துறைமுகத்திற்குரிய தலைவனே! நீ மன்னா வரவு - நீ (அடிக்கடி வந்து போகும்படியான) நிலையில்லாத வருகையை, மற - மறந்து, (நிலையுள்ள வரவினை மேற்கொண்டு தலைவியைப் பாதுகாப்பாயாக.)

(ப-ரை.) விரை வாய்த்த முட்டாழையினது நீண்முகையைக் குஞ்சு என்று கருதிக் குருகுகள் அம்முகைவாயிலே இரையைப் பெய்து தாம் அவ்விரையைக் கொள்ளாது உருகி மிக வின்னாத வெயிலைத் தஞ் சிறகான் மறைக்குஞ்

சேர்ப்பை யுடையானே ! நீ இங்கு வரும் நிலையாத வரவினை மறந்து நிலைக்கும் வரவினைச் செய்வாயாக.

(விரி.) ஏ - அசைநிலை. நிலைக்கும் வரவு - வரைவு ; மணம். நின்னுடைக்குருகுகளும் மகப்பெற்றோம்ப விழைகின்றபோது நீ இங்ஙனம் மன்னா வரவினை மேற்கொண்டிருத்தல் நன்றன்று; மன்னும் வரைவினை மேற்கொள்வது இன்றியமையாதது என்பன கருத்தாம். (௩௪)

ஓதநீர் வேலி யுரைகடியாப் பாக்கத்தார்
காதனீர் வாராமை கண்ணோக்கி—யோதநீ
ரன்றறியு மாதலால் வாரா தலரொழிய
மன்றறியக் கொள்ளீர் வரைந்து.

[இதுவு மது.]

(பத.) ஓதம் நீர் - அலைகளையுடைய கடனீர், அன்று - முன்பு (நீர் இவட்குச் சொல்லிய உறுதிமொழிகளை,) அறியும் ஆதலால் - தெரிந்து (சான்றாக விருந்துகொண்டிருக்கின்றது) ஆகலின், ஓதம் நீர் - கடலினை, வேலி - பாதுகாவலாகக் கொண்ட, பாக்கத்தார் - (எம்) ஊரார், உரை - அலர் மொழிகளால், கடியா - விலக்கிப் பேசாமலும், காதல் - (உம்மேலுள்ள) அன்பினால் (துன்புற்று,) நீர் வாராமை - (இவள் கண்கள்) நீர் வரப் பெறாமலும், கண் - நுங் கண்களால், நோக்கி - (இவள் வேறுபாட்டைக்) கூர்ந்து பார்த்து, வாராது - (இவ்வாறு) வருதலைச் செய்யாது, அலர் ஒழிய - (இவள் மேல் கூறப்படும்) பழிச்சொற்கள் நீங்கும்படியாக, மன்று - உறவின ராகிய கூட்டத்தார், அறிய - தெரிந்திருக்கும்படியாக, வரைந்து கொள்ளீர் - (இவளை) மணம் புரிந்துகொள்வீராக. (என்று தோழி தலைவனிடங் கூறினாள்.)

(ப-ரை.) ஓத நீர் வேலியையுடைய பாக்கத்தார் உரை யாற் கடியாது உம்மேலுள்ள காதலாற் றுன்புற்று இவள் கண்கள் நீர் வாராத வகை இவண்மாட்டு வேறுபாட்டைப்

பார்த்து முன்பு நீரிவட்குச் சொல்லிய வஞ்சினத்தை ஓத நீர் அறியுமாதலான், இவ்வாறு வாராது அலரொழியும் வகை மன்றத்தாரறிய வரைந்து கொள்ளீர்.

(விரி.) கடியா - ஈறு கெட்ட எதிர்மறை வினையெச்சம். மன்று - மணவிழாக் கூட்டம். (௩௭)

மாக்கடல்சேர் வெண்மணற் றண்கானற் பாய்திரைசேர்
மாக்கடல்சேர் தண்பரப்பன் மார்பணங்கா—மாக்கடலே!
என்போலத் துஞ்சா யிதுசெய்தார் யாருரையா
யென்போலுந் துன்ப நினக்கு.

[காமமிக்க கழிபடர் கிளவி.]

(பத.) மா கடல் - பெருங்கடலின் (அலைகளினாலே,) சேர் - (வந்து) சேர்ந்த, வெண் மணல் - வெள்ளிய மணலினையுடைய, தண் கானல் - குளிர்ந்த கடற்கரைச் சோலையின் கண்ணே, பாய் - பரவுகின்ற, திரை சேர் - அலைகளோடு கூடிய, மா கடல் - பெரிய கடலினை, சேர் - சார்ந்த, தண் பரப்பன் - குளிர்ந்த இடத்தை யுடைய தலைவனது, மார்பு அணங்கா - மார்பினாலே வருத்தமுறாத, மா கடலே - பெரிய கடலே! என் போல - என்னைப் போல, துஞ்சாய் - உறக்கங் கொள்ளாது எப்பொழுதும் ஓலமிட்டுக் கொண்டிருக்கின்றாய், என் துன்பம் போலும் - எனது துன்பத்தைப் போன்ற, இது - இவ்வுறங்காமையாகிய கொடுமையினை, நினக்கு - உனக்கு, செய்தார் - செய்தவர்கள், யார் - யாவர்? உரையாய் - (அன்பு கூர்ந்து) தெரிவிப்பாயாக. (என்று தலைவி கடலை நோக்கிக் கூறினாள்.)

(ப-ரை.) பெருங்கடலினானே வந்து சேர்ந்த வெண் மணற் றண் கானலின்கண் வந்து பரவாநின்ற திரை சேர்ந்த மாக்கடலைச் சேர்ந்த தண்பரப்பினை யுடையான் மார்பினான் வருத்தப்படாத பெருங்கடலே! என்னைப் போலக் கண்

டுஞ்சுகின்றிலே ; இக் கண்டுஞ்சாமையைச் செய்கின்ற என் போலுந் துன்பத்தை நினக்குச் செய்தார் யாவர் சொல்லாய்?

(விரி.) அணங்கா - ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். கழிபடர் - மிக்க துன்பம். கிளவி - சொல். (௬௮)

தந்தார்க்கே யாமாற் றடமென்றோ ளின்னநாள்
வந்தார்க்கே யாமென்பார் வாய் காண்பாம்—வந்தார்க்கே
காவா விளமணற் றண்கழிக் கானல்வாய்ப்
பூவா விளஞாழற் போது.

[நொதுமலர் வரைந்து புகுந்த பருவத்துத்
தோழி செவிலிக் கறத்தொடுநின்றது.]

(பத.) வந்தார்க்கு - (கடற்காட்சி காண்பான்) வந்த மக்கட்கு, கா ஆம் - (நிழலினைக் கொடுத்துப்) பாதுகாக்குமிடமாகும், இள மணல் - நுண்ணிதான மணல் பரவிய, தண் - குளிர்ந்த, கழி - உப்பங்கழிகளை (யருகே கொண்ட,) கானல்வாய் - கடற்கரைச் சோலையினிடத்திலே (வந்து,) பூவா - முன்பு பூவாது (அப்பொழுது தான் பூத்த), இள ஞாழல் - இளமையான கோங்கினது, போது - பூவினை, தந்தார்க்கே - (என் தலைவி கையிற் பறித்துத்) தந்து சென்ற தலைவர்க்கே, தடம் மெல் தோள்-(தலைவியின்) பெரிய மெல் லிய தோள்கள், ஆம் - தகுதியுடையவாகும், இன்னநாள் - இப் பொழுது, வந்தார்க்கே - (மணம் பேசி) வந்தவர்க்குத்தான், ஆம் என்பார் - தகுதியுடையன என்று சொல்பவர்களுடைய, வாய் - வாய் மொழியின் உறுதிப்பாட்டினை, காண்பாம் - எத்தகையதென வுணர்வோம். (என்று தோழி செவிலியிடங் கூறினாள்.)

(ப-ரை.) வந்து சேர்ந்தார்க்கு ஏமமாம் இளமணற் றண்கழிக் கானலிடத்து வந்து, முன்பு பூவாதே பூத்த இள ஞாழற் பூவினை இவட்குத் தந்தவர்க்கே யாமால், இவள் தடமென்றோள் ; இந்நாள் வதுவை வரையப்புகுந்தார்க்கா மென்பாருடைய மெய்யுரையைக் காண்பாம்.

(விரி.) நொதுமலர்-அயலோர். வரைந்து-வரைய. ஏ-தேற்றம், பிரிநிலை. ஆல் - அசை. முதன் முதலாகப் பூத்த ஞாழல் என்பார், "பூவா விளஞாழல்," என்றார். இது பூத்தரு புணர்ச்சி. (நக)

தன்றுணையோ டாடு மலவனையுந் தானோக்கா
வின்றுணையோ டாட வியையுமோ—வின்றுணையோ
டாடினாய் நீயாயி னந்நோய்க்கென் னொந்தென்று
போயினான் சென்றான் புரிந்து.

[வலிதாகச் சொல்லிக் குறை நயப்பித்தது.]

(பத.) தன் - தனது, துணையோடு - பெட்டை நண்டுடன், ஆடும் - (இன்புற்று) விளையாடும், அலவனையும் - ஆண் நண்டினையும் என்னையும், தான் - அவன், நோக்கா - பார்த்து, (தன்னுள்) இன் துணையோடு - (என்) இனிய துணைவியாகிய தலைவியோடு, ஆட - (இவ்வகை இன்புற்று) விளையாட, இயையுமோ - (எனக்கு) வாய்க்குமோ? (என்று கூறிக் கொண்டவனாகி, ஆண் நண்டினை நோக்கி,) நீ இன் துணையோடு - நீ உனது இனிய துணையாகிய பெட்டை நண்டுடன், ஆடினாய் ஆயின் - இன்புற்று விளையாடு தலாகிய வொன்றையே செய்திருப்பாயானால், (பிரிவுத்துன்பமென் பதனை அறியாய் ஆதலான்,) அந்நோய் - அப்பிரிவுத்துன்பத்தினை, நொந்து - (நினக் கெடுத்துச் சொல்லி) வருந்தியதால், என் - யாது பயன்? என்று-எனச் சொல்லி விட்டு, போயினான் - (இவ்விடத்தை விட்டு) அகன்றான், புரிந்து - (மீண்டும்) விருப்பத்தை மேற் கொண்டு (வருதலைக் கருதாதவனாய்,) சென்றான் - (காணப்படாத வனாய்ப்) போய்விட்டான். (என்று தோழி தலைவியிடங் கூறினாள்.)

(ப-ரை.) தன் பெடை நெண்டொடு இன்புற்று விளை யாடும் அலவனையும் என்னையும் பார்த்து, "என்னுடைய இனிய துணையோடு இப்பெற்றி போல ஆட எனக்குக் கூடுமோ? நின்னுடைய இன்றுணையாகிய பெடை நெண்

டேனே விளையாடினாய் நீயாயிற் பிரிவுத்துன்பம் அறியா யாதலான், அப்பெற்றிப்பட்ட நினக்கு என் பிரிவுத்துன் பத்தைச் சொல்லி நொந்து என்னை," என்று சொல்லிப் போயினவன் பின்னை வந்து மேவித் தோன்றுகின்றிலன், என் செய்தானோ!

(விரி.) வலிதாக - மனத்தில் நன்கு பதியும்படியாக. அலவனை யும் - உம்மை எச்சப் பொருளது. தான் - அவன்: தலைவன். நோக்கா - செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். தலைவன் மனவெறுப்புக் கொண்டு போய்விட்டான் என்பார், "போயினன் சென்றான் புரிந்து," என்றார். தோழி முன்பு மெலிதாகக் குறை நயந்து கூறியதில் தலைவி இணங்காதிருந்தமையின், அவள் காதலன் வெறுப்புற்றுச் சென்றுவிட்டான் என வலிதாகக் கூறிக் குறை நயக்கலாயினள். (சு௰)

உருகுமா லுள்ள மொருநாளு மன்றாற்
பெருகுமா னம்மலர் பேணப்—பெருகா
வொருங்குவான் மின்னோ டுருமுடைத்தாய்ப் பெய்வா
னொருங்குவான் போல நெகிழ்ந்து.

[தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழியாற் சொல்லெடுக்கப் பட்டுத் தலைமகள் தனதாற்றாமையாற் சொல்லியது.]

(பத.) ஒருங்கு - ஒன்றாக, பெருகா - பெருகி, வால் - வெள் ளிய, மின்னோடு - மின்னல்களுடன், உரும் - இடிகளையும், உடைத் தாய் - கொண்டு, பெய்வான் - பெய்தற்கு வேண்டி, நெருங்கு - நாற்புறமும் சூழ்கின்ற, வான் - மழையினை, போல - போன்று, பேண - (ஏதிலார்) விரும்பும் வண்ணம், நம் அலர் - நம்மீது கூறப் படும் பழிச் சொற்கள், பெருகும் - மிகாநின்றன, ஆல் - ஆகலான், ஒரு நாளும் அன்று - ஒருநாளு மன்றி, (பல நாளும்,) உள்ளம் - நம் மனம், நெகிழ்ந்து - கசிந்து, உருகும் - வருந்தாநிற்கும்.

(ப-ரை.) ஒருங்கு பெருகி வாலிய மின்னோடு உருமுடைத்தாகிப் பெய்யவேண்டி நெருங்குகின்ற மழைபோலப் பெருகாநின்றது, ஏதிலார் விரும்பும்படி நம் அலரானது; ஆதலான் நம்முள்ளம் ஒருநாளுமன்றியே பலநாளும் நெகிழ்ந்து உருகாநின்றது.

(விரி.) ஆல் - அசைநிலை. அன்று - அன்றி: எதிர்மறை வினையெச்சம் செய்யுட்கண் உகரவீறு கொண்டு வரலாயிற்று. சொல் எடுக்கப்படல் - தோழி தலைவியினிடத்து, "அவர் போவதற்கு முன்னே நம் வருத்தத்தை வெளிப்படக் கூறு," எனச் சொல்லல். இதனைத் தொல்காப்பியர், "உரையெனத் தோழிக் குரைத்தல்," (தொல். கள. 21.) என்பர். (சக)

கவளக் களிப்பியன்மால் யானைசிற் றாளி
தவழத்தா னில்லா ததுபோற்—பவளக்
கடிகை யிடைமுத்தங் காண்டொறு நில்லா
தொடிகை யிடைமுத்தந் தொக்கு.

[நயப்பு; கையுறையுமாம்.]

(பத.) கவளம் - தீனித்திரளை (யையுண்டதனாலே,) களிப்பு - கிளர்ச்சியாகிய, இயல் - தன்மை மிக்க, மால் யானை - மதமிக்க யானையானது, சிறு ஆளி - யாளியின் சிறு குட்டி, தவழ - நடைகற்கும் பருவத்திலும் (அதற்கு முன்,) நில்லாது-(அஞ்சி யெதிர்த்து) நிற்கமாட்டாது, அது போல் - அதனைப் போன்று, பவளக் கடிகை - பவளத்துண்டமாகிய (தலைவியின்) வாய் இதழ்களின், இடை - நடுவே (தோன்றும்,) முத்தம் - பற்களாகிய முத்துக்களை, காண் தொறும் - காண்கின்ற வேளைகளிலெல்லாம், கையிடை - (தலைவியின்,) கைகளிலணிந்துள்ள, தொடி - வளைகளில் (அழுத்தியுள்ள,) முத்தம் - முத்துக்கள், தொக்கு-ஒன்று கூடியும், நில்லா - ஒப்புமையாக நிற்க வியலாது தோற்கும். (என்று தலைவன் தோழியிடங் கூறினான்.)

(ப-ரை.) கவளத்தையுடைய களிப்பியன்ற மால் யானை, அரிமாவின் குருளைதான் நடைகற்கும் பருவத்தும் அஞ்சி யெதிர் நில்லாதது போல, இவளுடைய அதரமாகிய பவழத்துண்டத்தினிடை யரும்பும் முறுவலாகிய முத்தங் களைக் காணுந்தொறுந் தோற்று நில்லா, இவள் கையிடைத் தொடியின்கண் அழுத்திய முத்தங்கள் திரண்டு.

(விரி.) நயப்பு-குறை நயப்பு: தலைவன் தன் குறைகளைத் தோழி யிடம் நயமாகத் தெரிவித்தல். தான்-அசை. கையுறை - தலைவன் தான் தலைவிக்குக் கொண்டு வந்த பரிசுப் பொருளாகிய கையுறை யினைப்பற்றிக் கூறல். "கடிகையிடை முத்தம் காண்டொறும் தொடிகை யிடை முத்தந் தொக்கு நில்லா," எனக் கையுறையாகிய துறைக்குக் கொள்க. கடிகையிடை முத்தங்கள் தொக்கு நிற்பது போல் கையுறையாகிய முத்தங்கள் தொடிகையிடை நிற்க வியலா தனவாய் என் கையகத்து வறிதேயுள்ளன என்பது கருத்தாம். நச்சினார்க்கினியர் இதனைக் கையுறை கொண்டு வந்து கூறியதாகக் கொண்டு, இதன்கண், "நின் வாயிதழையும் எயிற்றையுங் காணுந் தொறும் என்கையிடத்தில் இருக்கின்ற பவளக் கொடியும் முத்தும் நில்லா என்க," என வுரைப்பர் (தொல். பொ. களா. கக.) (சஉ)

கடற்கோ டிருமருப்புக் கால்பாக னாக
வடற்கோட் டியானை திரையா—வுடற்றிக்
கரைபாய்நீள் சேர்ப்ப ! கனையிருள் வாரல்
வரைவாய்நீ யாகவே வா.

[தலைமகனைத் தோழி வரைவு கடாயது.]

(பத.) கடல் - கடலின்கண்ணுள்ள, கோடு - சங்குகள், இரும் மருப்பு (ஆக) - பெரிய கொம்புகளாகவும், கால் - வீசுகின்ற காற்று னது, பாகன் ஆக - யானைப்பாகனாகவும், திரை - அலையானது, அடல் கோடு யானை ஆ - கொல்லுகின்ற கொம்பினையுடைய யானையாக வும் (அமைந்து,) கரை - கடற்கரையினை, பாய்ந்து உடற்று - குத்தி

வருத்தும்படியான, நீள் - பெரிய, சேர்ப்ப - துறைமுகத் தலைவனே! கனை இருள் - மிகுந்த இருளையுடைய இரவின்கண், வாரல் - வாரா திருப்பாயாக, (வருதலை வேண்டின்,) நீ வரைவாய் ஆகவே - நீ மணத்தற்குரியையாகவே, வா - வருவாயாக. (என்று தோழி தலைவனிடங் கூறினாள்.)

(ப-ரை.) கடலின்கட் சங்குகளே பெரிய மருப்பாக, காற்றே பாகனாக, திரையே அடற் கோட்டி யானையாக வருத்திக் கரையைக் குத்துகின்ற நீண்ட சேர்ப்பையுடையானே! செறிந்த இருளின்கண் வாராதொழிக; வருதலை வேண்டின், நீ வரைவா யாகவே வா.

(விரி.) "திரை யானையா," என மாற்றுக. குத்தி வருத்துதல் இயல்பாகலின், "கரை பாய்ந்து உடற்று நீள் சேர்ப்ப," என விகுதி கூட்டிப் பிரித்துக் கொண்டு கூட்டப்பட்டதென்க. பழைய வுரையின்கண் இறுதியிற் பெரிய எழுத்துக்களாகக் காணப்படுந் தொடர் புதிதாகச் சேர்க்கப்பட்டதாம். ஏ - தேற்றப் பொருள் தருமிடைச் சொல். (சங)

கடும்புலால் புன்னை கடியுந் துறைவ!
படும்புலாற் புட்கடிவான் புக்க—தடம்புலாந்
தாழைமா ஞாழற் றதைந்துயர்ந்த தாழ்பொழி
லேழைமா னேக்கி யிடம்.

[பகற்குறியிடங் காட்டியது.]

(பத.) கடும் - மிகுந்த, புலால் - புலானாற்றத்தை, புன்னை - புன்னை மலர்கள், கடியும் - (தமது நறு நாற்றத்தான்) விலக்கும்படியான, துறைவ - துறைமுகத்திற்குரிய தலைவனே! தடம் - பெரிய, புல் ஆம் - புல் இனத்தைச் சார்ந்தது என்று சொல்லும்படியான, தாழை - தாழை மரங்களும், மா-பெரிய, ஞாழல் - கோங்கு மரங்களும், ததைந்து - நெருங்கி, உயர்ந்த - வானளாவிய, தாழ் - (பலரும்) தங்குதற்குரிய, பொழில் - பூஞ்சோலை, படும்

புலால் - காயவைத்துள்ள மீன்களைக் (கவரவரும்,) புள் - பறவை களை, கடிவான் - விலக்கும்பொருட்டு, புக்க - தொடங்கிய, ஏழை மான் - வேடுவர்களாற் சூழப்பட்ட மான் போன்ற, நோக்கி - பார் வையினையுடைய எம் தலைவியின், இடம் - விளையாடுமிடமாம். (என்று தோழி தலைவனிடங் கூறினாள்.)

(ப-ரை.) மிக்க புலானாற்றத்தைப் புன்னைப் பூக்கள் நீக் குந் துறைவனே! புலாலிற் பட்ட புள்ளைக் கடிய வேண்டிப் புக்க ஏழை மானோக்கி விளையாடுமிடம், பெரிய புல்லாகிய தாழையும் ஞாழலும் நெருங்கி யுயர்ந்த தாழ்பொழில்.

(விரி.) புலால் - கெடுநாற்றம், கருவாடு. புல் - புறக்கா ழுடைய பொருள். தாழை முதலியன உள்ளீடின்றிப் புறத்தே மட்டும் வன்மை பெற்றிருத்தலின், "தடம் புலாந்தாழை," என லாயினர். தொல்காப்பியரும், "புறக்கா ழுடையன புல்லென மொழிப," (தொல். பொருள். மரபு. அ௬.) என்றார். (சச)

தாழை தவழ்ந்துலாம் வெண்மணற் றண்கானன்
மாழை நுளையர் மடமக—ளேழை
யிணைநாடி லில்லா விருந்தடங்கண் கண்டுந்
துணைநாடி னன்றோ மிலன்.

[தலைமகன் சொல்லிய குறிவழி யறிந்து தலைமகளைக் கண்ட பாங்கன் தலைமகனை வியந்து சொல்லியது.]

(பத.) தாழை - தாழை மரங்கள், தவழ்ந்து-படர்ந்து, உலாம் - பரவி நிற்கும், வெண் மணல்-வெள்ளிய மணல்கள், (நிரம்பிய,) தண் கானல்-குளிர்ந்த கடற்கரைச் சோலையிலேயுள்ள, மாழை - அழகிய, நுளையர் மடமகள் - நெய்த னிலத்தலைவர்களின் இளையமகளாகிய, ஏழை - இப்பெண்பாவையினுடைய, இணை நாடில் - ஒப்புமை யுண்டோவென ஆராயின், இல்லா - அவ்வொப்புமை கிடைக்காத, இரும் தடம் கண் - மிகப் பெரிய கண்களை, கண்டும் - பார்க்க

நேர்ந்தும், துணை - பாங்கனாகிய என்னை, நாடினன் - தேடி வந்து சேர்ந்தவனாகிய என் தலைவன், தோம் இலன் - சிறிதுங் குற்றங் கூறப் பெறும் தன்மை கொண்டவனல்லன். (என்று தோழன் கூறிக் கொண்டனன்.)

(ப-ரை.) தாழைகள் படர்ந்து பரக்கும் வெண்மணலை யுடைய தண்கானலின்கண் வாழும் மாழைமையையுடைய நுளையர் மடமகளாகிய இவ்வேழையுடைய ஒப்புமை நாடி லில்லாத இருந்தடங்கண் கண்டுந் துணையை நாடிய எம் பெருமான் ஒரு குற்றமு மிலன்.

(விரி.) இடந்தலைப் பாட்டிற் புணர்ந்து திரும்பிய தலைவனைப் பாங்கன் கண்டு, "எளிய பெண்பாலிடத்தே இறைவன் மனம் பற்றியது இழுக்காம்," என்று முன்னர் எண்ணிப் பின்னர்த் தலைவன் காட்டிய குறிவழி புணர்ந்துவந்து தலைவியைக் கண்டு வியக்கின்றானாகலின், "துணை நாடினன்றோமிலன்," எனக் கூறலாயினன் என்க. (சரு)

தந்தாயல் வேண்டாவோர் நாட்கேட்டுத் தாழாது
வந்தானீ யெய்துதல் வாயான்மற்—றெந்தாய்!
மறிமகர வார்குழையாள் வாழாணீ வார
லெறிமகரங் கொட்கு மிரா.

[தோழி நெறிவிலக்கி வரைவு கடாயது.]

(பத.) எந்தாய் - எம்பெருமானே! தந்து-(வறிதே சிலரைக்) கொண்டு, ஆயல் வேண்டா-(மணவினை) ஆராய்ச்சி செய்து (காலத்தைப் போக்க) வேண்டுவதின்று, ஓர்நாள் - நல்லதொரு நாளினை, கேட்டு-ஆராய்ந்து, தாழாது - (காலத்தை) நீட்டியாதே, நீ வந்தால்- நீ (மணம் பேசி) வருதலைச் செய்வாயானால், எய்துதல் - (இவளை) அடைதல், வாய் - (நினக்குக் கட்டாயம்) வாய்க்கும், எறி - (கரைவழியே செல்பவர்களைத்) தாக்கும், மகரம் - சுறா மீன்கள்,

கொட்கும் - (கழிகளில்) சுழன்று திரியும், இரா - இரவின் கண், வாரல் - (இனி) வாராதிருப்பாயாக, (அன்றி மேலும் வருவா யாயின்,) மறிமகரம் - குட்டியாகிய (சிறிய) சுறாமீனினைப்போன்று, வார் - வார்க்கப்பட்ட, குழையாள் - காதணிகளையுடைய தலைவி, வாழாள் - உயிர்வைத்திருக்கமாட்டாள். (என்று தோழி தலைவனிடங் கூறினாள்.)

(ப-ரை.) சிலரைக் கொணர்ந்து ஆராயவேண்டுவதில்லை; நல்லதொரு நாட்கேட்டு நீட்டியாதே நீ வரைதற்கு வந்தால் இவளை எய்துதல் மெய்ம்மையால்: எம்மிறைவனே! எறிசுறுக்கள் கழியெங்குஞ் சுழலு மிராவின்கண் வாரல்; வரின், மறிமகர வார்குழையாள் உயிர் வாழாள்.

(விரி.) ஆல் - அசைநிலை. மற்று - அசைநிலை. (௬௬)

பண்ணாது பண்மேற்றேற பாடுங் கழிக்கான
லெண்ணாது கண்டார்க்கே யேரணங்கா-லெண்ணாது
சாவார்சான் றாண்மை சலித்திலா மற்றிவளைக்
காவார் கயிறுரீஇவிட் டார்.

[பாங்கன் றலைமகனைக் கண்டு தலைமகளை வியந்து சொல்லியது.]

(பத.) பண்ணாது - (யாழினைக் கொண்டு) இசைக்காமலே, பண் - இசையானது, மேல் - மேன்மையுற, தே - தேன்வண்டுகள், பாடும் - இசைக்கும்படியான, கழி - கடற்கழிகளையுடைய, கானல் - கடற்கரைச் சோலையானது, எண்ணாது - (எதனையுங்) கருதாது, கண்டார் கு ஏ - காண நேர்ந்தவர்களுக்கே, ஏர் அணங்கு - இயற்கையழகால் இனிய தெய்வமாகக் காணப்படும், எண்ணாது - (இவ்வுலக வாழ்க்கையைக்) கருதாது, சாவார் - (இறைவனையே எண்ணி) இறந்துபடும் பெரியோர்களின், சான்று ஆண்மை - மனவமைதியாகிய உறுதிப்பாட்டின் முன்னும், சலித்திலா - வேறுபடாத, இவளை - இத்தலைவியை, காவார் - (இவளின் பெற்றோர்

மனையின்கண் வைத்துப்) பாதுகாத்தலைச் செய்யாராய், (அச்சோலைக் கண்,) கயிறு உரீஇ - (கொல்லேற்றினது) கட்டுக்கயிற்றை யவிழ்த்துப்(பலர்க்குந் தீங்கு பயக்குமாறு விட்டாற்போல,) விட்டார்-(தலைவியினைப்போக) விட்டு விட்டார்கள். (என்று பாங்கன் தலைவனிடத்திற் கூறினான்.)

(ப-ரை.) யாழினைப் பண்ணுது பண்மேற் சேரத் தேன்கள் பாடுங் கழிக்கானலின்கண் ஆராயாதே வந்து கண்டார்க்கே அழகிய தெய்வங்களாம்; ஆதலான், அறிவினுைராயாது இறந்துபடுவார் சான்றாண்மையின் கண் வேறுபட்டிலா மற்றிவளைக் காவாது கயிறுரீஇ விட்டார் சான்றாண்மையின் வேறு பட்டார்.

(விரி.) தேன் + பாடும் = தேபாடும். தலைமகளின் உயர்வினைக் கண்டு சென்ற பாங்கன் தலைமகன்பால், "இயற்கை யழகான் மிக்க அச் சோலையின்கண் நின்றாற் காதலிக்கப்பட்டாள் காணப்படுவது கொல்லேற்றினைப் பாதுகாவாது கயிற்றினின்று விடுவித்து விட்டதனைப் போன்று ஆண்மக்கட்கு அருங் கேட்டினை விளைவிப்பதாயுள்ளது," என வியந்து கூறினன். தலைமகளின் உயர்வு பெரியோரின் சான்றாண்மையினையும் எதிர்த்து வெல்லுதற்குரிய தென்பார், "சாவார் சான்றாண்மை சலித்திலா மற்றிவள்," என்றார். மற்று - அசைநிலை. உரீஇ - சொல்லிசை யளபெடை; அலகு பெறாது நின்றது. ஆல் - அசைநிலை. (சஎ)

திரைமேற்போந் தெஞ்சிய தெண்கழிக் கானல்
விரைமேவும் பாக்கம் விளக்காக்—கரைமேல்
விடுவாய்ப் பசும்புற விப்பிகான் முத்தம்
படுவா யிருளகற்றும் பாத்து.

[தலைமகற்கு இரவுக்குறி மறுத்தது.]

(பத.) திரைமேல் - அலைகளுக்கு மேலே, போந்து - வந்து, கரைமேல் - கரையோரங்களில், எஞ்சிய - ஒதுங்கிநின்ற,

விடுவாய் - பிளந்த வாயினையும், பசும்புறம் - பசிய வெளிப்பக்கத்தினையும் (கொண்டுள்ள,) இப்பி - சிப்பிகள், கால் - வெளிவிட்ட, முத்தம் - முத்துக்கள், தெள் கழி - தெளிந்த கடற்கழிகளையும், கானல் - சோலைகளையுஞ் (சூழக் கொண்டு,) விரைமேவும் - மணம் பொருந்திய, பாக்கம் - பட்டினத்திற்கு, விளக்கா - விளக்குகளாக வமைந்து, படுவாய் - இருள்படு மிடங்களிலெல்லாம், இருள் - அவ்விருளை, பாத்து-(பல்லாறுகப்) பிரித்துச் (சிதறடித்து,) அகற்றும் - நீக்கும், (ஆதலான், பலர் நின் வரவினை யறிந்து அலர் தூற்றுவர், என்று தோழி தலைமகற்கு இரவுக்குறி மறுத்துரைத்தனள்.)

(ப-ரை.) திரைமேற் போந்து கரைமே லொழிந்த விடுவாயையும் பசும்புறத்தையுமுடைய இப்பி கான்ற முத்தம், தெண்கழிக்கானலின் விரைமேவும் பாக்கம் ஒளியுண்டாம் வகை இருள்படுமிட மெல்லாம் அவ்விருளைப் பகுத்தகற்றும்.

(விரி.) பாக்கம் - கடற்கரையினையடுத்த வூர்; பட்டினம். முத்தம் விளக்கா, அகற்றும், என முடிக்க. இரவுக்குறி வேண்டிய தலைமகற்குத் தோழி மறுத்துரைத்தது, என விரித்துரைத்துக் கொள்க. நச்சினார்க்கினியர், 'பகற்குறி நேர்வாள்போல் இரவுக்குறி விலக்கியது' (தொல். கள. உங) என்பர். (சஅ)

எங்கு வருதி யிருங்கழித் தண்சேர்ப்ப!
பொங்கு திரையுதைப்பப் போந்தொழிந்த—சங்கு
நரன்றுயிர்த்த நித்தில நள்ளிருள்கால் சீக்கும்
வரன்றுயிர்த்த பாக்கத்து வந்து.

[இதுவு மது.]

(பத.) இரும் கழி - பெரிய உப்பங்கழிகளையுடைய, தண் - குளிர்ந்த, சேர்ப்ப - கடற்கரைத் தலைவனே! வரன்று - (அலைகள் கொண்டுவந்து கரைக்கண் சேர்த்த கடல் வளங்களை) வாரிக்கொண்டு

சென்று, உயிர்த்த - வாழ்க்கையை நடத்தும் (மக்கள் நிரம்பிய,) பாக்கத்து - பட்டினத்திடத்தே, பொங்கு - மிகுந்துவரும்படியான, திரை - அலைகள், உதைப்ப - வெளியே தள்ள, போந்து - கரைக் கண் வந்து, ஒழிந்த - தங்கிய, சங்கு - சங்குகள், நரன்று - ஒலித்துக் கொண்டு, உயிர்த்த - ஈன்ற, நித்திலம் - முத்துக்கள், வந்து - புகுந்து, நள் - செறிந்த, இருள் - இருளினை, கால் சீக்கும் - விலக் கும், (அங்ஙனமிருக்க,) எங்கு வருதி - எவ்விட மறைவுகொண்டு வருவாய்? (நின் களவினைப் பலருங்காண அலர் பெருகுமாகையான் இரவுக்குறியினை எண்ணுதொழிக, எனத் தோழி தலைமகனிடம் மறுத்துரைத்தனள்.)

(ப-ரை.) எவ்விடத்தானே வருவாய் இருங்கழித் தண் சேர்ப்பனே! பொங்கு திரைகளானே யுதைக்கப்பட்டுப் போந்து கரையின்கட் டங்கிய சங்குகள் கதறிப் பொறை யுயிர்த்த முத்தங்கள் செறிந்த இருளை இடங்களினின்றுஞ் சீயாநிற்கும்; திரை கொணர்ந்து போதவிட்டனவற்றைக் கண்டார் வரன்முநின்ற பாக்கத்தின்கண்.

(விரி.) சேர்ப்ப! நித்திலம் பாக்கத்து வந்து, இருள்கால் சீக்கும்; ஆதலான் எங்கு வருதி? என முடிக்க. (௫௧)

திமில்களி றாகத் திரைபறையாப் பல்புட்
டுயில்கெடத் தோன்றும் படையாத்—துயில்போற்
குறியா வரவொழிந்து கோலநீர்ச் சேர்ப்ப!
நெறியானீ கொள்வது நேர்.

[தோழி வரைவு கடாயது.]

(பத.) கோலம் - அழகிய, நீர் - கடனீரினையுடைய, சேர்ப்ப - துறைமுகத்தலைவனே! திமில் - தோணியினை, களிறு ஆக - யானை யாகவும், திரை - அலையினை, பறையா - பறைவாத்தியமாகவும், பல் புள் - பல கடற் பறவைகளினை, துயில் கெட - உறக்கங் கெடும் படியாக, தோன்றும் - வெளிப்படும், படையா - படையாகவும்

(கொண்டு,) துயில் போல் - கனக்கண்டாற் போன்று, குறியா - இன்னதென்று தெளிய முடியாத, வரவு - (களவின்கட் டனியே வரும்படியான நினது) வருகையானது, ஒழிந்து - விலகப் பெற்று, நெறியால் - மணச்சடங்கு முறைப்படி, நீ கொள்வது - நீ (இவளை) மணந்துகொள்வது, நேர் - (நினக்குத்) தகுதியானதாகும். (என்று தோழி தலைமகனிடங் கூறினள்.)

(ப-ரை.) திமிலே களிறாகத் திரையே பறையாகத் துயில் கெடத்தோன்றும் படை புட்களாக, கனக்கண்டாற்போலத் தேறமுடியாத களவின்கட் டனியேவரும் வரவினை யொழிந்து, கோலநீர்ச் சேர்ப்பனே! நெறியானே வரைந்து இவளைக் கொள்வது நினக்குத் தகுதி.

(விரி.) சேர்ப்ப, வரவொழிந்து, கொள்வது நேர், என முடிக்க. களிறாக, பறையா, படையா (கொண்டுள்ள) குறியா வரவு, எனக் கூட்டுக. இங்குத் தலைவன் நெய்தனிலத்திற் குரியனாகலின் அவன் இங்ஙனங் கூறப்பட்டானென்க. தலைவற்கும் தலைவிக்கும் துயிலினை விலக்கி இரவுக்குறிக்கண் எதிர்ப்படச் செய்தலிற் புட்கள் இன்றியமையாதனவாயிருத்தலின், "பல்புட் டுயில் கெடத் தோன்றும் படையா," எனக் கூறினர். திமில் - மரக்கல மெனினுமாம். துயில்-இடவாகு பெயர். (௫0)

கடும்புலால் வெண்மணற் கானலுறு மீன்கட்
படும்புலால் பார்த்தும் பகர்து—மடும்பெலாஞ்
சாலிகை போல்வலை சாலப் பலவுணங்கும்
பாலிகை பூக்கும் பயின்று.

[தலைமகற்குத் தோழி குறைநேர்ந்து பகற்குறியிட மறியச் சொல்லியது.]

(பத.) கடும்புலால் - கொடிய புலால் நாற்றத்தைக் கொண்ட, வெண்மணல் - வெள்ளிய மணலையுடைய, கானல் - கடற்கரைச் சோலையினை, உறு - அடுத்துப் பொருந்திய, மீன் படும் புலால்

கண் - மீனுகிய காயவைத்துள்ள கருவாட்டினிடத்தே, பார்த்தும் - (பறவைகள் படியாமல் யாங்கள்) பார்த்துக் கொண்டிருப்பேம், பகர்தும் - (அக் கருவாட்டினை) விற்பதும் செய்வேம், அடும்பு எலாம் - (அவ்விடத்துள்ள) அடப்பங் கொடிகளெல்லாம், பாலிகை- முளைப்பாலிகையினைப்போல, பயின்று - ஒன்றாகக் கூடி, பூக்கும் - மலர்ந்து காணும், சால பல வலை - மிகவும் பலவலைகள், சாலிகை போல் - மெய்புகு கருவிகளை விரித்து வைத்தாற் போன்று, உணங்கும் - (அவற்றின்மேல்) காயவைக்கப்பட்டிருக்கும். (அவ விடமே பகற்குறியிடமாகும், என்று தோழி தலைவனுக்குக் குறிப்பாகக் கூறினாள்.)

(ப-ரை.) கடும்புலாலையுடைய வெண்மணற் றண்கழிக் கானலின்கண் இருந்து, யாங்கள் ஆங்கடுத்த மீனுகிய படு புலாலின்கட் புட்டிரியாமற் பார்ப்பேம்; அவற்றை விற்பதுஞ் செய்வேம்; அக்கானலின்கண் அடும்பெல்லாம் பாலிகை போலப் பூக்கும்; சாலிகை விரிந்தாற்போல வலைகளும் உணங்கும்.

(விரி.) சேர்தல் - இணங்கல். பகர்தல் - விலைகூறி விற்றல். சாலிகை - மெய்புகு கருவி : கவசம். (ருக)

திரைபாக ளுகத் திமில்களி ளுகக்
கரைசேர்ந்த கானல் படையா—விரையாது
வேந்து கிளர்ந்தன்ன வேலைநீர்ச் சேர்ப்ப ! நா
ளாய்ந்து வரைத லறம்.

[தலைமகனைத் தோழி வரைவு கடாயது.]

(பத.) திரை - அலைகள், பாகன் ஆக - யானைப்பாகனுகவும், திமில் - தோணிகள், களிறு ஆக - ஆண்யானைகளாகவும், கரை சேர்ந்த - கடற்கரையினை யடுத்துள்ள, கானல் - சோலைகள், படையா - சேனையாகவும் (கொண்டு,) வேந்து - அரசன், கிளர்ந் தன்ன - புறப்பட்டாற் போன்ற, வேலை நீர் - கடனீரையுடைய,

சேர்ப்ப - துறைமுகத்திற்குரிய தலைவனே ! விரையாது - (களவுப் புணர்ச்சியில்) மிகுந்த விருப்பங்கொண்டு செல்லாது, நாள் ஆய்ந்து - நல்ல நாளொன்றினைப் பார்த்து, வரைதல் - இவளை மணம்புரிந்து கொள்வது, அறம் - நல்லொழுக்கமாகிய நன்னெறியாம். (என்று தோழி தலைவனிடங் கூறினாள்.)

(ப-ரை.) திரையே பாகனாகத் திமிலே களிறாகக் கரை சேர்ந்த கானலின்கண்ணுள்ள பல புட்களே படையாக வேந்து கிளர்ந்தன்ன வேலைநீர்ச் சேர்ப்பனே! விரையாதே நல்லநாளாராய்ந்து அறிந்து வரைந் திவளைக் கோடல் நினக் கறமாவது.

(விரி.) கானல் - சோலையின்கண் வாழும் பறவை என்றுமாம்: இடவாகு பெயர். வேலை நீர், பாகனாக, களிறாக, படையாக வேந்து கிளர்ந்தன்னது எனக் கொள்க. வேலை - வேலா என்ற வட சொற்றிரிபு.

(ருஉ)

பாறு புரவியாப் பல்களிறு நீடிமிலாத்
தேறு திரைபறையாப் புட்படையாத்—தேறாத
மன்கிளர்ந்த போலுங் கடற்சேர்ப்ப! மற்றெமர்
முன்கிளர்ந் தெய்தன் முடி.

[இதுவு மது.]

(பத.) பாறு - (மீன் முதலியவற்றைப் பற்றுவான் பறந்து திரியும்) பருந்துகள், புரவியா - குதிரைகளாகவும், நீள் - பெரிய, இமில் - தோணிகள், பல் களிறு ஆ - பல யானைகளாகவும், தேறு - தெளிவான, திரை - அலைகள், பறையா - பறைவாத்தியமாகவும், புள் - கடற் பறவைகள், படையா - சேனையாகவுங் கொண்டு, தேறாத - (அமைதியின் அருமையை) அறியாத, மன் - அரசர்கள், கிளர்ந்தபோலும் - படையெடுத்துப் புறப்பட்டது போன்று காணப் படும், கடல் - கடற்காட்சியினையுடைய, சேர்ப்ப - துறைமுகத் தலைவனே! எமர் முன் - எம்மவர்களாகிய சுற்றத்தார்க்கு முன்னே, கிளர்ந்து - சென்று, எய்தல் - (மணச்சடங்கின்படி இவளைப்) புணர்

தலை, முடி - செய்து முடிப்பாயாக. (என்று தோழி தலைவனிடங் கூறினள்.)

(ப-ரை.) பாறே குதிரையாக நீண்ட திமிலே பல களிறுகளாகத் தெளிந்த திரையே பறையாகப் புட்களே படையாகத் தேருத வேந்துகள் படை யெழுந்து கிளர்ந்தன போலுங் கடற் சேர்ப்பனே! எமருடைய முன்னேசென்று இவளை நீயே புணர்தலை முடிப்பாயாக.

(விரி.) மற்று - அசைநிலை. கிளர்தல் - எழுதல், புறப்படல், செல்லல். (ருக)

வாராய் வரினீர்க் கழிக்கான னுண்மணன்மேற்
றேரின்மா காலாழுந் தீமைத்தே—யோரிலோர்
கோணாடல் வேண்டா குறியறிவார்க் கூஉய்க்
நாணாடி நல்குத னன்று. [கொண்டோர்

[இதுவு மது.]

(பத.) வாராய் - (தலைவனே! நீ இங்ஙனம் இரவின்கண்) வருதலைச் செய்யாதிருப்பாயாக, வரின் - வருதலைச் செய்வாயாயின், நீர் கழி கானல் - நீர் நிறைந்த கடற்கழிகளோடு கூடிய சோலையிலேயுள்ள, நுண்மணல் மேல் - நுட்பமான மணலினிடத்தே, தேரின் மா-(உனது) தேரிற் பூட்டியுள்ள குதிரையின், கால் - கால்கள், ஆழும் - புதைந்து போகும்படியான, தீமைத்து - பொல்லாங்கு மிகுந்துளது, (ஆகலான்,) ஓரில் - நன்கு ஆராய்ந்து பார்க்கின், ஓர் - ஒத்த குலத்தாராகிய நமக்குள், கோள் - (மணப்பொருத்த முதலிய தொடர்ச்சி) கோடலை, நாடல் - (ஐயுற்று) ஆராய்தல், வேண்டா - வேண்டுவதின்று, குறி அறிவார் - நிமித்த மறியும் கணிகளை, கூஉய்கொண்டு - வரவழைத்து, ஓர் நாள் - ஒரு நல்ல மண நாளை, நாடி - பார்த்து, (மணம் புரிந்து,) நல்குதல் - (நீ இவட்கு) நன்மை புரிதல், நன்று - நல்லதாகும். (என்று தோழி தலைவனிடங் கூறினள்.)

(ப-ரை.) வாராதொழிவாயாக; வருவையாயின், நீர்க் கழிக்கானல்தான் நுண்மணன்மேல் நின்றோர் பூண்ட குதிரை காலாழுந் தீமையுடைத்து; ஆதலான், ஒத்த குலத்தார்க்குத் தொடர்ச்சி கோடலை ஐயுற்றுராய்தல் வேண்டா; நிமித்த மறிவாரை யழைத்து நல்லதொரு நாளை நாடி இவட்கு நல்குதல் நன்று.

(விரி.) கூஉய் - சொல்லிசை யளபெடை. நல்குதல் - புணர்ச்சி யின்பத்தினை யளித்தல். கணி - சோதிடன். (ருச)

கண்பரப்பக் காணுய் கடும்பனி கால்வறோர்
மண்பரக்கு மாயிருண் மேற்கொண்டு—மண்பரக்கு
மாறுநீர் வேலைநீ வாரல் வரினுற்று
ளேறுநீர் வேலை யெதிர்.

[இதுவு மது.]

(பத.) நீர் வேலை - நீரினை நிறையக்கொண்ட கடலையுடைய தலைவனே! கண் - (இவள்) கண்கள், கடும்பனி - மிக்க துன்பத்தாலாகிய நீரினை, பரப்ப - வெளிவிடுவதை, காணுய் - காண்பாயாக, கால் வல் தேர் - காலின் வன்மை மிகுந்த தேரினிடத்தே, மண் - உலக மெங்கும், பரக்கும் - பரவி யிருக்கும், மா இருள் - மிகுந்த இருளோடு கூடிய இராக் காலத்து, மேல் கொண்டு - அமர்ந்து, மண் - உலகமெல்லாம், பரக்கும் ஆறு - (பழிச் சொற்கள்) நிரம்பும் படி, நீ வாரல் - நீ வருதலைச் செய்யா திருப்பாயாக, வரின் - வருவாயாயின், ஏறுநீர் - (எதிர்த்துக் கரையின்மீதே) ஏறி வரும் அலைகளையுடைய, வேலை எதிர் - கடலின் எதிரிலுள்ள இப்பாக்கத்தினிடத்தே, ஆற்றுள் - இவள் பொறுக்க வியலாது வாழாள். (என்று தோழி தலைவனிடங் கூறினள்.)

(ப-ரை.) இவளுடைய கண்களும் மிக்க நீர் பரப்பக் காணுய்; கால்வலிய தேரில் மண்ணெல்லாம் பரக்கும் பெரிய இருண் மேற்கொண்டு உலகமெல்லாம் நிவந்த அலர் பரக்கு

மாறு, நீருண்ட வேலையையுடையாய்! வாரல்; வருவை யாயின், இவளுயிர் வாழாள்: ஓதமேறுகின்ற நீர் வேலையி னெதிரே.

(விரி.) பனி - துன்பத்தாலுண்டாகும் கண்ணீர்: காரண வாகு பெயர். கால் - சக்கிரம். மண்பரக்கு மாயிருளில் தேர் மேற் கொண்டு, பரக்குமாறு வாரல் என முடிக்க. இச்செய்யுட்கு, "நெறி விலக்கியது," என்ற துறை பொருந்துமாறு காண்க. வேலை யெதிர்-கடலின் எதிரிலுள்ளபாக்கம்: இடவாகு பெயர். வேலை-கடல். (ருரு)

கடற்கானற் சேர்ப்ப! கழியுலாஅய் நீண்ட
வடற்கானற் புன்னைதாழ்ந் தாற்ற—மடற்கான
லன்றி லகவு மணிநெடும் பெண்ணைத்தெம்
முன்றி லிளமணன்மேன் மொய்த்து.

[தலைமகற்கு இரவுக்குறி நேர்ந்த தோழி இடங் காட்டியது.]

(பத.) கடல் கானல் - கடற்கரைச் சோலைகளையுடைய, சேர்ப்ப - துறை முகத்திற்குரிய தலைவனே! எம் முன்றில் - எமது இல்லத்தின் முன்னே, கழி உலாய் - உப்பங்கழிகள் சூழப்பட்டு, இளமணல்மேல் மொய்த்து - நல்ல மணல்கள் மேலாக நிரம்பி, நீண்ட - பெரிய, அடல் கானல் - (மீன்களைக்) கொன்று காயவைத் துள்ள உப்பளத்தோடு கூடி, புன்னை ஆற்ற தாழ்ந்து - புன்னை மரங்கள் மிகவும் தழைக்கப் பெற்று, மடல் கானல் - பூ விதழ்களை யுடைய கடற்கரைச் சோலையில் வாழும், அன்றில் - அன்றிற் பற வைகள், அகவும் - (சேர்ந்து) அழையாநின்ற, அணி - அழகிய, நெடும் - உயர்ந்த, பெண்ணைத்து - பனையோடு கூடியது, (யாம் விளையாடுமிடம், என்று தோழி தலைவனுக்கு இரவுக்குறியிடங் கூறினள்.)

(ப-ரை.) கடற்கானற் சேர்ப்பனே! கழிகள் சூழ்ந்து நீண்ட மீன் கொலைகளையுடைய கானலின்கண் மிகவும் புன்னை

தழைக்கப்பட்டு, பூவிதழையுடைய இக்கானலின்கண் உள்ள அன்றில்கள் அழையாநின்ற அழகிய நெடும் பெண்ணையை யுடைத்து; எம் மில்லத்தின்முன் இளமணல்களும் மொய்த்து.

(விரி.) முன்றில்-இலக்கணப் போலி: இல்முன் என்னற்பாலது இங்ஙனமாயது. சேர்ப்ப! குறியிடம் எம் இல்முன் கழியுலாய், மொய்த்து, தாழ்ந்து, அகவும் பெண்ணைத்து என முடிக்க. உலா அய் - இன்னிசையளபெடை. (௫௬)

வருதிரை தானுலாம் வார்மணற் கான
லொருதிரை யோடா வளமை—யிருதிரை
முன்வீழுங் கானன் முழங்கு கடற்சேர்ப்ப!
வென்வீழல் வேண்டா வினி.

[தோழி வரைவு கடாயது.]

(பத.) வரு திரை - (கரையை நோக்கி) வந்து கொண்டிருக்கின்ற திரைகள், உலாம் - உலாவுகின்ற, வார் - ஒழுகி யமைந்த, மணல் - மணலோடு கூடிய, கானல் - கடற் கழிகளினிடத்தே, ஒரு திரை - ஓர் அலையானது, ஓடாமுன் - சென்று சேர்வதற்கு முன்னே, இரு திரை-இரண்டு அலைகள், வீழும் - (வந்து) மோதும் படியான, வளமை - வளப்பத்தினையுடைய, கானல் - கடற்கரைச் சோலையினிடத்தே, முழங்கு - ஆரவாரிக்கின்ற, கடல் சேர்ப்ப - கடற்றுறைமுகத்திற்குரிய தலைவனே! இனி - இனிமேல், என் - என்னால் வந்து மேற்கொள்ளும் இக்களவுப் புணர்ச்சியினை, வீழல் - விரும்புதல், வேண்டா - வேண்டுவதின்று, (வரைவுப் புணர்ச்சியே வேண்டற்பாலதாம், என்று தோழி தலைவனிடங் கூறினாள்.)

(ப-ரை.) வருதிரை தான் வந்து உலவாநின்ற ஒழுகிய மணற்கானலின்கண் ஒருதிரை வந்து பெயர்வதற்கு முன்னே இரண்டு திரை வந்து வீழாநின்ற கானலின்கண் வந்து முழங்கு கடற்சேர்ப்பனே! என்னால் வந்து இப்

புணர்ச்சியை விரும்பல் வேண்டா; இனி வரைந்து கொள்வாய்.

(விரி.) தான் - அசைநிலை. உலாம் - உலாவும்: செய்யுமென்னெச்ச வீற்றுயிர் மெய் கெட்டு வந்தது. (௫எ)

மாயவனுந் தம்முனும் போலே மறிகடலுங்
கானலுஞ்சேர் வெண்மணலுங் காணுயோ—கான
லிடையெலா ஞாழலுந் தாழையு மார்ந்த
புடையெலாம் புன்னை புகன்று.

[தலைமகற்குத் தோழி பகற்குறி நேர்ந்து இடங்காட்டியது.]

(பத.) மாயவனும் - கண்ணனும், தம் முன்னும் - தமையனாகிய பலதேவனும், போல் - போன்று, (காணப் பெறும்,) மறி கடலும் - (அலைகள்) மறிந்துவரப் பெறுகின்ற கடலினையும், கானலும் - கடற்கரைச் சோலையினையும், சேர் - அதனைச் சார்ந்த, வெண்மணலும் - வெள்ளிய மணலினையும், கானல் இடை எலாம் - அச் சோலையின் நடுவெல்லாம் (நிறைந்துள்ள,) ஞாழலும் - கோங்க மரங்களையும், தாழையும் - தாழை மரங்களையும், புடைஎலாம் - அச் சோலையின் பக்கங்களிலெல்லாம், ஆர்ந்த - நிறைந்த, புன்னை - புன்னை மரங்களையும், புகன்று - விரும்பி, காணாய் - பார்ப்பாயாக. (என்று தோழி தலைவனிடத்திற் சொன்னாள்.)

(ப-ரை.) மாயவனும் அவன் முன்னோனும் போல, மறி கடலும் கடற்சோலையும் அச்சோலையைச் சேர்ந்த வெண் மணலும் பாராயோ! அக்கடற் சோலையின் நடுவெல்லாம் ஞாழலுந் தாழையுமாய் இருக்கும்; நிறைந்த மருங்கெல்லாம் புன்னையாயிருக்கும்; இவற்றையும் விரும்பிப் பாராய்.

(விரி.) ஏ - அசைநிலை. ஓ - அசைநிலை. கடலையும், கானலையும், மணலையும்; ஞாழலையும், தாழையையும், புன்னையையும் புகன்று காணாய்; என முடிக்க. மாயவனுக்கு மறிகடலையும், தம்

முனுக்குக் கானல் சேர் வெண்மணலையும் உவமேயங்களாகக் கூட்டிக் காண்க. "புகன்று காண்பாய்," என்றது பகற்குறியிட மென மனத்தகத்தே பதித்துக் காண்பாய் என்பதனைக் குறிப்பாய் உணர்த்தியது. (ங அ)

பகல்வரிற் கவ்வை பலவாம் பரியா
திரவரி னேதமு மன்ன—புகவரிய
தாழை துவளுந் தரங்கநீர்ச் சேர்ப்பிற்றே
யேழை நுளைய ரிடம்.

[இரு பொழுதும் வாரலேன்று வரைவு கடாயது.]

(பத.) பகல்வரின் - பகற் பொழுதின்கண் (புணர்ச்சியை வேண்டி) வருவாயாயின், கவ்வை - பழிச் சொற்கள், பல ஆம் - பலவாய்ப் பெருகும், பரியாது - (அப்பழிச் சொற்களுக்காகப்) பரிந்து வரைவினை மேற்கொள்ளாது, இர வரின் - இராப்பொழுதிலே வருவாயாயின், ஏதமும் - (உண்டாம்) இடையூறுகளும், அன்ன - அவைபோற் பலவாய்த் தோன்றும், (மேலும்,) ஏழை - எளியவர்க ளாகிய, நுளையர் - எம்மவராகிய பரதர்கள், இடம் - வாழுமிட மானது, புக அரிய - (பிறர்) புகுதற்கு முடியாதபடி, தாழை - தாழை மரங்கள், துவளும் - நெருங்கிப் படர்ந்து கிடக்கும், தரங்கம் நீர் - அலையோடு கூடிய கடனீரினையுடைய, சேர்ப்பிற்று - கரை யின்கண்ணதாகும். (ஆகலின், இருபொழுதும் வருதலை விடுத்து வரைவினை மேற்கொள்வாயாக, என்று தலைவனிடத்திற் றோழி கூறி னாள்.)

(ப-ரை.) பகல் வருவாயாயின், அலர்பலவு முளவாம்; அவ்வலர்க்கு இரங்காதே இரவு வருவையாயின், ஊறு வரும் ஏதமும் பலவுளவாம்; உள் புகுதற்கரிய தாழை யடர்ந்த திரைநீர்ச் சேர்ப்பையுடைத்து, எங்கள் ஏழை நுளையர் வாழுமிடம்.

(விரி.) கவ்வை - அலர்; பழிச் சொற்கள். பரிதல்-அன்போடு கூடி இரங்கல். தரங்கம் - வடமொழி. ஏ - அசைநிலை. (ருக)

திரையலறிப் பேராத் தெழியாத் திரியாக்
கரையலவன் காலினாற் காணாக்—கரையருகே
நெய்தன் மலர்கொய்யு நீணெடுங் கண்ணினாண்
மைய னுளையர் மகள்.

[பாங்கற்குத் தலைமகன் கூறியது.]

(பத.) மையல் - (எனக்கு) மயக்கத்தையுண்டாக்கிய, நுளையர் - பரதரின், மகள் - மகளாகிய தலைவி, திரை-(கடலின்கண்ணுள்ள) அலைகள், அலறி - ஒலித்து, பேரா - திரும்பிப் போகும் வண்ணம், தெழியா - நீந்தித் துவைத்து, கரை திரியா - கரையினிடத்தே அலைந்து, அலவன் - அங்குள்ள நண்டுகளை, கால் இன் ஆல் - கால்களினாலே, காணா - கண்டு பிடித்து, கரை அருகே-கரைக்குப் பக்கத்திலே (மலர்ந்துள்ள,) நெய்தல் மலர் - நெய்தற்பூக்களை, கொய்யும் - கொய்கின்ற, நீள் நெடும் - மிகவும் நீண்ட, கண்ணினாள் - கண்களை யுடையவளாவள். (என்று தலைவன் தோழனிடங் கூறினான்.)

(ப-ரை.) திரைகள் அலறிப்பெயரும் வகை தெழித்துத் திரிந்து கரையின்கண் அலவன்களைத் தன்காலினாலாராய்ந்து, கரையருகே நின்ற நெய்தன் மலர்களைக் கொய்யாநிற்கும் நீளிய நெடுங்கண்ணினாள் நுளையருடைய மையன் மகள்.

(விரி.) நீள் நெடும் - ஒருபொருட் பன்மொழி. இது, தலைவன் பாங்களிடத்துத் தலைவியினியல்பினை எடுத்துக் கூறியதாகும். இங்கு நுளையர் மகளின் இயல்பினை நண்டு பிடித்து நெய்தலைக் கொய்யும் நெடுங்கண்ணினாள் என்ற நேர்மை காண்க. (கூ0)

அறிகரிதி யார்க்கு மரவநீர்ச் சேர்ப்ப !
நெறிதிரிவா ரின்மையா லில்லை—முறிதிரிந்த
கண்டலந்தண் டில்லை கலந்து கழிசூழ்ந்த
மிண்டலந்தண் டாழை யிணைந்து.

[தலைமகற்குத் தோழி இரவுக்குறி மறுத்தது.]

(பத.) அரவம் - ஆரவாரிப்பினையுடைய, நீர் - கடனீரை யுடைய, சேர்ப்ப - துறைமுகத்திற்குரிய தலைவனே! முறி - தளிர்கள், திரிந்த - சுருண்டு நிறைந்த, கண்டல் - நீர் முள்ளிச் செடிகள், அம் - அழகிய, தண் - குளிர்ந்த, தில்லை - தில்லைமரங் களுக்கிடையே, கலந்து - மிடைந்து, கழி - கடற்கழிகள், சூழ்ந்த - சூழப்பெற்ற, மிண்டல் - நெருக்கமான, அம் - அழகிய, தண் - குளிர்ந்த, தாழை - தாழை மரங்களும், இணைந்து - (அவைகளுடன்) கலந்து, யார்க்கும் - எவருக்கும், அறிகு - (வழியினைத்) தெரிதல், அரிது - முடியாத தொன்றாகும், (மேலும்) நெறி - வழிகளில், திரி வார் இன்மையால் - (அடிக்கடி) நடந்து செல்லும் மக்கட் பழக்கம் இல்லாதபடியாலே, இல்லை - (நல்லதொரு வழியே) இல்லையாகும். (ஆகலின், நீ இரவுக்குறியின்கண் வருதல் ஏதமாம், என்று தோழி தலைவனிடங் கூறினாள்.)

(ப-ரை.) யார்க்கும் அறிதலரிது ; ஓசையையுடைய நீர்ச் சேர்ப்பனே ! எங்குந் திரிவாரில்லாமல் வழியில்லை ; தளிர் சுருண்டிருந்த கண்டலும், அழகிய தண் டில்லைகளும், தம்முண் மிடைந்து கழியைச் சூழ்ந்த மிண்டன் மரங்களும், தாழைகளும் இடைப்பட்டு.

(விரி.) அறிகு - தொழிற்பெயர். கண்டல் - ஒருவகை மரமு மாம்; "முறிதிரிந்த," என்ற அடைமொழி கொண்டு நீர் முள்ளி யென்றும். மிண்டல் - ஒருவகை மரம் எனலுமுண்டு. தில்லை - ஒருவகை மரம்.

(௬௧)

வில்லார் விழவினும் வேலாழி சூழுலகி
னல்லார் விழவகத்து நாங்காணே—நல்லாய்!
உவர்க்கத் தொரோவுதவிச் சேர்ப்பனொப் பாரைச்
சுவர்க்கத் துளராயிற் சூழ்.

[தலைமகளை ஒருநாட் கோலஞ் செய்து அடியிற்கொண்டு முடிகாறு நோக்கி, 'இவட்குத் தக்கான் யாவனுவன் கொல்லோ?' என்றாராய்ந்த செவிலிக்குத் தோழி அறத்தொடுநின்றது.]

(பத.) நல் ஆய் - நல்ல எமது அன்னையே! வேலாழி - கடலி னாலே, சூழ் - சூழப் பெற்ற, உலகில் - இவ்வுலகத்தினிடத்தே, வில்லார் - விற்போரில் வல்ல வீரர்கள் (கூடி நடத்தும்,) விழவினும் - வில்விழாக் கூட்டத்தினும், நல்லார் - நல்ல பெண்களின் (மணங் காரணமாகக் கூடிய,) விழவு அகத்தும் - மணவிழாக் கூட்டத் தினும், உவர்க்கத்து - (அன்று) கடற்கரையினிடத்து, ஒரோ உதவி - (இவட்கு) ஒப்பற்ற உதவியினைச் செய்த, சேர்ப்பன் - கடற்றுறை முகத்துக்குரியானை, ஒப்பாரை - ஒத்த ஆடவரை, நாம் காணேம் - நாங்கள் காணவில்லை, (ஆகலின், இவட்குத் தக்கான் அவனே யாவன்; அவனன்றி, அவன் போலும் ஆடவர்,) சுவர்க்கத்து - துறக்க வுலகத்திடத்தே, உளராயில் - இருப்பாராயின், சூழ் - ஆராய் வாய். (என்று தோழி செவிலியிடங் கூறினள்.)

(ப-ரை.) வில்லுழவர் காரணமாகத் தொடங்கிய விழ வகத்தும், நல்லாராகிய வனிதையர் காரணமாகத் தொடங் கிய விழவகத்தும் எல்லா மாந்தருந் திரள்வராதலால், நாங்கள் அங்குக் கண்டறியேம்; எமக்கு ஒருதவி பண் டொருநாட் செய்த சேர்ப்பனோ டொப்பாரை: மற்றவனே இவட்குத் தக்கான்; அவனைப் போலும் ஆடவர் சுவர்க்கத் துளராயின் ஆராய்வாய்.

(விரி.) வேலா + ஆழி = வேலாழி - கரையோடு கூடிய கடல். கோலஞ் செய்தல் - அழகுபடுத்தல். ஆராய்தல் - ஆலோசித்தல். உதவி - பூத்தரு புணர்ச்சி முதலியவற்றுள் ஈண்டுப் பொருத்தமான வொன்றினைக் கொள்க. தலைவனை யொப்பானாகிய தக்கான் யாண்டு மிலன் என்பாள், "சுவர்க்கத்துளராயின்," என்றாள். (சாஉ)

நெய்தல் முற்றும்.

## மூன்றாவது—பாலை.

எரிநிறநீள் பிண்டி யிணரின மெல்லாம்
வரிநிற நீள்வண்டர் பாடப்—புரிநிறநீள்
பொன்னணிந்த கோங்கம் புணர்முலையாய்! பூந்
தொன்னணிந்த வீடில் பசப்பு. [தொடித்தோ

[தலைமகளைத் தோழி பருவங்காட்டி வற்புறீஇயது.]

(பத.) புணர்-இரண்டாகச் சேர்ந்து காண்கின்ற, முலையாய் - முலைகளையுடைய தலைவியே! பிண்டி இனம் எல்லாம் - அசோக மரக் கூட்டங்கள் எல்லாம், நீள் - நீண்ட, எரிநிறம்-நெருப்பினைப் போன்ற நிறத்தோடு கூடிய, இணர் - பூங்கொத்துக்களைக் (கொண்டுள்ளன,) கோங்கம் (எல்லாம்) - கன்னிகார மரங்களெல் லாம், வரி - கோடுகளோடு கூடிய, நிறம் - அழகிய, வண்டர் - வண்டுகள், நீள் - நீட்டிப்பாடும் இளியென்னும் பண்ணினை, பாட- பாடிக் கொண்டு (மொய்க்கும் படி,) புரி-விரும்பப்படுகின்ற, நிறம் - அழகோடுகூடிய, நீள்-பெரிய, பொன்-பொன் போன்ற மலர்களை, அணிந்த - மேற்கொண்டன, பூ தொடி தோள் - அழகிய வளைய லணிந்த நின் தோள்கள் மட்டும், ஈடு இல் - (தமக்குத்) தகுதி யில்லாத, பசப்பு - பசலை நிறத்தை, என் அணிந்த-எதன் பொருட் டாக மேற்கொண்டன? (என்று தோழி தலைவியை வினவினள்.)

(ப-ரை.) எரிநிறத்தை யுடையன அசோகின் பூங்கொத் தினமெல்லாம்; வரிநிறத்தையுடைய வண்டுகள் இளி யென் னும் பண்ணைப்பாட விரும்பப்படுகின்ற நீண்ட மிக்க பொன் போன்ற மலர்களை யணிந்தன, கோங்கமெல்லாம்; ஆதலாற் பொருந்திய முலையினை யுடையாய்! நின்னுடைய பூந்தொடித் தோள்கள் யாதின் பொருட்டு அணிந்தன தமக்குத் தகுதி யில்லாத பசப்பினை?

(விரி.) பருவம் - வேனில். வற்புறுத்தல்-தலைவன் வருதலைத் தலைவியின் மனத்தே வலியுற நிலைபெறுத்தல். வரி - கோடு, இரேகை. பொன் - உவமையாகு பெயர். இங்குத் தலைவன் வருவதாகக் கூறிச் சென்ற வேனிற்பருவம் வந்தமையினைத் தலைவிக்குத் தோழி எடுத்துக் காட்டி அவன் வருகை யடுத்தது என்பதனை வற்புறுத்திக் கூறுகின்றனள். பாலை - பிரிதலும், பிரிதனிமித்தமுமாகிய வொழுக்கம். இங்குத் தலைவி தலைவனைப் பிரிந்து நின்ற நிலை கூறப்படுகின்றது. பசப்பு - பசலை; தலைவனைப் பிரிந்த தலைவியர் கொள்ளும் மேனிமாற்றம். நீள் - பண்பாகு பெயர். (கூ௩)

பேணு யிதன்றிறத் தென்றாலும் பேணாதே
நாணுய நல்வளையாய்! நாணின்மை—காணு
யெரிசிதறி விட்டன்ன வீர்முருக் கீடில்
பொரிசிதறி விட்டன்ன புன்கு.

[இதுவு மது.]

(பத.) இதன் திறத்து - நீ இவ்வகை யுறுகின்ற துன்பத்தினின்றும், பேணாய் - விலகி யுன்னைப் பாதுகாத்துக் கொள்வாய், என்றாலும் - என்று (யான் பன்முறை) சொல்லியும், பேணாது - பாதுகாத்துக் கொள்ளாது, நாண் ஆய - வெட்கமுறுதற்குக் காரணமான துன்புறுதலை மேற்கொண்ட, நல்வளையாய் - நல்ல வளைகளை அணிந்த தலைவியே! ஈர் முருக்கு - குளிர்ந்த முருக்கமரங்கள், எரி - நெருப்பினை, சிதறி விட்டு அன்ன - சிதறி விட்டாற்போன்று பூத்தன, புன்கு - புன்கமரங்கள், ஈடு இல் - பளுவில்லாத, பொரி - நெற்பொரியினை, சிதறி விட்டு அன்ன - சிதறி விட்டாற் போன்று மலர்ந்தன, (ஆதலால்,) நாண் இன்மை - நீ முன்பு செய்தது வெட்கக் கேடானது என்பதையும், (அவர் சொல்லிச் சென்ற வேனிற் பருவம் வந்தது என்பதையும்,) காணாய் - கண்டு நினது துன்புறுதலை யொழிப்பாயாக. (என்று தோழி தலைவியிடங் கூறினாள்.)

(ப-ரை.) "நீ உறுகின்ற துன்பத்தைப் பாதுகாவாய்," என்று யான் சொன்னாலும் பாதுகாவாதே நாணத்தகும் ஆற்றாமை செய்த நல்வளையாய்! நீயும் முன்பு நாணின்மை செய்தா யென்பதனை இனி யறிந்து கொள்ளாய்; எரியைச் சிதறிவிட்டாற் போலவிருந்த, ஈர்முருக்குக்கள்; கனமில் லாத பொரி சிதறிவிட்டாற் போலப் பூத்தன, புன்குகள்; ஆதலான் அவர் சொல்லிய பருவம் இதுகாண்.

(விரி.) இங்கு, 'வேனில் வந்தது; வேந்தன் வருவன்', எனக் கூற வந்த தோழி, "பேணு யிதன்றிறத் தென்றாலும் பேணாதே நாணுய நல்வளையாய்!" என்றதும், "நாணின்மை காணாய்," என்றதும் தலைவியின் அறியாமை கூறி வற்புறுத்தியனவாம். (௬௪)

தான்றாயாக் கோங்கந் தளர்ந்து முலைகொடுப்ப
வீன்றாய்நீ பாவை யிருங்குரவே!—ஈன்றாண்
மொழிகாட்டா யாயினு முள்ளெயிற்றாள் சென்ற
வழிகாட்டா யீதென்று வந்து.

[சுரத்திடைச் சென்ற செவிலித்தாய் குரவோடு புலம்பியது.]

(பத.) இரும் குரவே - பெரிய குராமரமே! கோங்கம் - கோங்க மரம், தாய் ஆ - தாய் போன்று, தளர்ந்து - தாழ்ந்து (மன நெகிழ்வுற்று,) முலை கொடுப்ப - முலை போன்ற கோங்க மலர் களைக் கொடுக்க (பாலூட்ட,) நீ பாவை ஈன்றாய் - நீ பொம்மை போன்ற காய்கள் காய்க்கப்பெற்றாய் (பெண்குழந்தையைப் பெற் றெடுத்தாய்,) (அதனால்,) ஈன்றாள் - என்னாற் பெற்றெடுக்கப் பட்டாள் (தலைவி,) மொழி - (நின்மாட்டுச் சொல்லிய) சொற்களின் பொருளை, காட்டாய் - (எனக்கு) எடுத்துக் காட்ட வல்லாயல்லை, ஆயினும் - ஆனாலும், முள் எயிற்றாள் - கூர்ந்த பற்களைக் கொண்ட என் மகள், சென்ற - (தலைவன் பின்னாகப்) போய, வழி - வழியினை, வந்து - முன்வந்து, ஈது என்று - இதுதான் என்று, காட்டாய் - காண்பிப்பாயாக. (என்று செவிலி குராவொடு கூறினாள்.)

(ப-ரை.) கோங்கந்தான் தாயாகத் தாழ்ந்து முலை கொடுத்து வளர்ப்ப நீ பாவையினை யீன்ற இத்துணையே யாதலான், இருங்குரவே! யானின்றுள் நினக்குச் சொல்லிய சொல்லை யெனக்குச் சொல்லா யாயினும் முள்ளெயிற்றாள் போயின வழியையாயினும் சொல்லிக்காட்டாய் வந்து இது என்று.

(விரி.) தான் - அசைநிலை. குரவு பாவையினை ஈன்ற வொன்றையே செய்து, வளர்த்தலை யறியாது போயினமையின் தலைவியின் மொழியினை அறிய வன்மை கொள்ளாததாயிற்று. வளர்க்குங்காலன்றோ மக்களின் மொழி கேட்கும் பேறு வாய்க்கும்? சுரம் - பாலை நிலவழி. சென்ற - தலைவனுடன் போய தலைவியைத் தேடிச் சென்ற. குரவு - குராமரம்; குழந்தை போன்றுள்ள காய் காய்ப்பது. (கூ௫)

வல்வருங் காணாய் வயங்கி முருக்கெல்லாஞ்
செல்வர் சிறார்க்குப்பொற் கொல்லர்போ—னல்ல
பவளக் கொழுந்தின்மேற் பொற்றாலி பாஅய்த்
திகழக்கான் றிட்டன தேர்ந்து.

[தோழி பருவங் காட்டி வற்புறுத்தியது.]

(பத.) முருக்கு எல்லாம் - முருக்க மரங்களெல்லாம், வயங்கி - விளக்கத்தோடு கூடியனவாய், செல்வர் சிறார்க்கு - செல்வமுடையாரின் மக்கட்கு, பொன் கொல்லர் போல் - தட்டார் (ஐம்படைத் தாலி செய்தாற்) போன்று, நல்ல - உயர்ந்த, பொன்தாலியின்மேல் - பொன்னாற் செய்யப்பட்ட கழுத்தணியின்மீதே, பவள கொழுந்து - பவளமாகிய துண்டத்தினை, பாய் - பதித்துவைத்தாற் போல, திகழ - காணும்படியாக, கான்று இட்டன - வெளிவிட்டன (மலர்ந்தன,) (ஆதலான்,) தேர்ந்து - ஆராய்ந்து, காணாய் - (இது வேனிற்காலம் என்பதை) அறிவாயாக, (ஆகவே,) வல்வரும் - (நம்

காதலன்) விரைவில் வருவன். (என்று தோழி தலைவியிடங் கூறினாள்.)

(ப-ரை.) நங் காதலர் விரைந்து வருவர்: விளங்கி முருக்குக்களெல்லாம், செல்வ முடையார் புதல்வர்க்குப் பொற்கொல்லர் ஐம்படைத்தாலி செய்தாற்போல, மிக்க பவளக் கொழுந்தின் அடியிலே பொற்றாலியைப் பதித்து வைத்தாற்போல் விளங்கக் காண்றன; ஆதலாற் றேர்ந்து பாராய்.

(விரி.) பாஅய் - செய்யுளிசைநிறை யளபெடை. "பொற் றாலியின்மேல் பவளக் கொழுந்து," எனமாற்றுக. முருக்கமலரின், புல்லிதழாகிய அடிப்பாகம் பசுமை கலந்த மஞ்சள் நிறமாய் அழகுறக் காணலின், அது பொற்றாலி எனப்பட்டது. ஐம்படைத் தாலி - திருமாலின் படைகள் ஐந்தின் வடிவத்தையு மமைத்துச் செய்த அணிகலன். (கூகூ)

வெறுக்கைக்குச் சென்றார் விளங்கிழாய்! தோன்றார்
பொறுக்கவென் றற்பொறுக்க லாமோ—வொறுப்பபோற்
பொன்னு ளுறுபவளம் போன்ற புணர்முருக்க
மென்னு ளுறுநோய் பெரிது.

[பருவங்கண்டு ஆற்றளாகிய தலைமகள்
தோழிக்குச் சொல்லியது.]

(பத.) விளங்கு இழாய் - ஒளிமிக்க அணிகலன்களையுடைய தோழியே! புணர் முருக்கம் - நெருங்கிய முருக்க மரங்கள், ஒறுப்பபோல் - (என்னை) வருத்த வந்தன போன்று, பொன் உள் - பொன்னினிடத்திலே, உறு - பொருந்தியுள்ள, பவளம் போன்ற - பவழத்தினைப் போன்று மலர்ந்தன, (அவற்றால்,) என் உள் - எனது மனத்தினிடத்திலே, உறு - உற்ற, நோய் - துன்பம், பெரிது - மிகுந்துளது, வெறுக்கை கு - பொருள் தேடும் பொருட்டு,

சென்றார் - சென்றிருப்பவராகிய காதலர், தோன்றார் - (வேனிற் பருவம் வந்தும்) காணப்பெறுகின்றாரில்லை, பொறுக்க என்றால் - இப்பருவத்தின்கண் நீ என்னை ஆற்று என்று சொன்னால், பொறுக்கல் ஆமோ - என்னால் ஆற்ற வியலுமோ? (இயலாது, என்று தலைவி தோழியிடங் கூறினாள்.)

(ப-ரை.) மிக்க பொருட் பொருட்டுச் சென்றார், விளங் கிழையாய்! வந்து தோன்றுகின்றிலர்; இப் பருவத்தின்கண் நீ என்னை ஆற்று என்றால் எனக்கு ஆற்றலாமோ? என்னை ஒறுப்பனபோலப் பொன்னின் உள்ளுற வைத்த பவளம் போன்ற, பொருந்திய முருக்கம் பூக்கள்; ஆதலால் என்னுள்ளத்துற்ற நோய் பெரிது.

(விரி.) வெறுக்கை - காரணப் பெயர்; வெறுக்கவேண்டுவது. "வெறுக்கைக்குச் சென்றார்," என்பதில் தன்னை வெறுக்கும் பொருட்டுச் சென்றார் எனும் சொல்நயங் காண்க. (கஎ)

சென்றக்காற் செல்லும்வா யென்னோ விருஞ்சுரத்து
நின்றக்கா னீடி யொளிவிடா—நின்ற
விழைக்கமர்ந்த வேயே ரிளமுலையா னீடில்
குழைக்கமர்ந்த நோக்கின் குறிப்பு.

[பொருள்வலித்த நெஞ்சிற்குத் தலைமகன் சொல்லிச் செலவழுங்கியது.]

(பத.) (நெஞ்சே!) நின்ற - நிலைபெற்ற, இழைக்கு அமர்ந்த - அணிகலன்கட்குத் தக்கவாய, ஏர் - அழகையுடைய, இளம் முலையாள் - இளமையான முலைகளைக்கொண்ட தலைவியின், ஈடு இல் - ஒப்பில்லாத, குழைக்கு அமர்ந்த - காதணிவரை சென்று கலக்கும், நோக்கின் குறிப்பு - கண்களின் பல கருத்துக்கள் கொண்ட பார்வை, நீடி - நெடுந்தொலை தொடர்ந்து (நம் முன்னே வந்து), ஒளிவிடா-ஒளிவிட்டு, இரும் சுரத்து - பெரிய இப்பாலை நிலவழியே,

நின்றக்கால் - எதிர்ப்பட்டுத் தோன்றினால், சென்றக்கால் - (பொருளின் பொருட்டு நாமிவளைப் பிரிந்து) போகுங்கால், செல்லும்வாய்- போகும் வகை, என்னோ - எங்ஙனமாமோ? (என்று தலைவன் தனக்குட்டானே வினவிக் கொண்டனன்.)

(ப-ரை.) பொருளின் பொருட்டு நாமிவளை நீங்கிப் போயக்காற் போம்வகை யெங்ஙனேயோ? நெஞ்சே! மன்னிய அணிகட்குத் தக்க அழகையுடைய இளமுலையாளுடைய ஒப்பில்லாத குழைக்கமர்ந்த நோக்கின் குறிப்புக்கள் நம் முன்னே வந்து நீடி யொளிவிட்டு இருஞ்சுரத்திடையே தோன்றி நின்றக்கால்.

(விரி.) பொருள் வலித்தல் - பொருளினைத் தேட வேண்டுமென்று தீர்மானித்தல். செல வழுங்கல் - செல்லுதற்கு வருந்தி எண்ணல். ஏ - அசைநிலை. விளி, பொருளின் விளக்கங் கருதி வரவழைக்கப்பட்டதென்க. இது, பொருள் தேடக் கருதிய தலைமகன் பிரிவானேருந் துன்பங்களை எண்ணிக் கூறியதாகும். செல் அக்கால் - சென்றக்கால்; எதுகை நோக்கிய திரிபு. (கூஅ)

அத்த நெடிய வழற்கதிரோன் செம்பாக
மத்தமறைந் தானிவ் வணியிழையோ—டொத்த
தகையினெஞ் சீறூர்த் தங்கினிராய் நாளை
வகையினிராய்ச் சேறல் வனப்பு.

[இடைச் சுரத்துக் கண்டார் செலவு விலக்கியது.]

(பத.) அத்தம் - (நீங்கள் செல்லவேண்டிய) இப்பாலை நில வழிகளும், நெடிய - நீண்டனவாயுள்ளன, அத்தம் - அத்த மலையின் கண்ணே, அழல் - நெருப்பினைப் போன்ற, கதிரோன் - கதிர்களையுடையவனாகிய பகலோன், செம்பாகம் - பாதி யளவு வரை, மறைந்தான் - மறைந்துவிட்டான், (ஆதலால்,) இ அணியிழை ஓடு - இவ்வழகிய மங்கையுடன் (நீரும்,) ஒத்த - (எம்மோடு) ஒருபடித்தாய, தகையினால் - தகுதியோடு, எம் சீறூர் - எமது சிறிய ஊரின்

கண்ணே, தங்கினிர் ஆய் - (இன்று) தங்கி, நாளை - மறுநாள், வகை யினிர் ஆய் - எங்களின் நீங்கி, சேறல் - போதல், வனப்பு - அழ காம். (என்று சுரத்திடைக் கண்ட மக்கள் தலைவனை நோக்கிச் சொன்னார்கள்.)

(ப-ரை.) வழிகளும் நெடிய; அத்த மலையின்கண்ணே அழற் கதிரோனுஞ் செம்பாகம் மறைந்தான்; இவ்வணி யிழையோடு நீரும் எம்மோ டொத்த தகையினால் எஞ்சீறா ரிலே இன்று தங்கினீராய் நாளை எங்களினீங்கிப் போத லழகு.

(விரி.) அத்தம் - ஒரு மலை. இது, களவின் இறுதியில் தலை வியை உடன் கொண்டு சென்ற தலைவனை நோக்கிப் பாலை நில வழி யிடையே எதிர்ப்பட்ட மக்கள் கூறியதாகும். சேறல்=செல்+தல். இடைச் சுரம் - சுரத்திடை. சுரம் - பாலை நில வழி. செம்பாகம் - சரி பாதி. (சுக)

நின்னோக்கங் கொண்டமான் றண்குரவ நீழல்காண்
பொன்னோக்கங்கொண்ட பூங்கோங்கங்காண்-பொன்னோக்கங்
கொண்ட சுணங்கணி மென்முலைக் கொம்பன்னாய்!
வண்ட லயர்மணன்மேல் வந்து.

[புணர்ந்து உடன்போய தலைமகன் தலைமகளை ஆற்றுவித்துக் கொண்டு போவான் சொல்லியது.]

(பத.) பொன் - பொன்னினது, நோக்கம் - காட்சியினை, கொண்ட - பெற்றுள்ள, சுணங்கு - தேமல்களை, அணி - அழகாகப் பெற்றுள்ள, மெல் முலை - மென்மையான முலைகளை யுடைய, கொம்பு அன்னாய் - பூங்கொம்பினை யொத்த பூவையே! நின் - உன்னுடைய, நோக்கம் - பார்வையின் தன்மையை, கொண்ட - மேற்கொண்டுள்ள, மான் - மான்களை, காண் - பாராய், தண் - குளிர்ந்த, குரவ நீழல் - குராமரத்தினது நிழலின் நேர்மை

யினை, (காண் -) காண்பாயாக, பொன் - பொன்னினது, நோக்கம்- காட்சியினை, கொண்ட - கொண்டுள்ள, பூ - பூக்களை யுடைய, கோங்கம் காண் - கோங்கமரங்களைக் கண்டு களிப்பாய், மணல் மேல் - இவ்வழகிய மணலிடத்தே, வந்து - வருதலைச் செய்து, வண்டல் அயர் - விளையாட்டினை மேற்கொள்வாயாக. (என்று தலைவன் தலைவியை நோக்கிக் கூறி அவளுக்கு உள்ளக் கிளர்ச்சியை யுண்டாக்கினான்.)

(ப-ரை.) நின்னுடைய நோக்கின் றன்மையைக் கொண்ட மான்களைப் பாராய்; குளிர்ந்த குரவ நீழலைப் பாராய்; பொன்னினது காட்சியைக் கொண்ட பூங் கோங்குகளைப் பாராய்; பொன்னினது காட்சியைக் கொண்ட சுணங் கணிந்த மென்முலையையுடைய கொம்பன்னாய்! மணன்மேல் வந்து விளையாட்டை விரும்பாய்.

(விரி.) ஆற்றுவித்தல் - பொறுமையை மேற்கொளச் செய்தல். நீழல் - நீட்டல் விகாரம். வண்டல் - மகளிர் விளையாட்டு. போவான் - செல்ல வேண்டி. (எய)

அஞ்சுடர்நீள் வாண்முகத் தாயிழையு மாறிலா
வெஞ்சுடர்நீள் வேலானும் போதரக்கண்—டஞ்சி
யொருசுடரு மின்றி யுலகுபா ழாக
இருசுடரும் போந்தனவென் றூர்.

[சுரத்திடைச் சென்ற செவிலிக்குத் தலைமகனையுந்
தலைமகளையுங் கண்டார் சொல்லிய வார்த்தையைக்
கேட்டாராகச் சிலர் சொல்லியது.]

(பத.) அம் சுடர் - அழகிய மதிபோன்ற, நீள் - மிகுந்த, வாள் - ஒளியினையுடைய, முகத்து - முகத்தோடு கூடிய, ஆயிழையும் - ஆராய்ந்தெடுத்த அணிகலன்களைக் கொண்ட தலைவியும், மாறு இலா - எதிரில்லாத, வெம் சுடர் - வெய்ய ஒளியினையும், நீள் -

நீட்சியினையுங் கொண்ட, வேலானும் - வேலினையுடைய தலைவனும், போதர - இச்சுரத்திலே செல்ல, கண்டு - பார்த்து, அஞ்சி - அச்சமுற்று, ஒரு சுடரும் - (இரு சுடர்களில்) ஒன்றும், இன்றி - (தோற்றம்) இல்லாமல், உலகு - உலகமெல்லாம், பாழ் ஆக - கெடும்படி, இரு சுடரும் - அவ்விரண்டு சுடர்களும், போந்தன - (அச்சுரத்தின் கண்ணே) போயின, என்றார் - என்று (கண்டார் சிலர்) சொன்னார்கள், (என்று கேள்விப்பட்டார் சிலர் செவிலியை எதிர்ப்பட்டுச் செப்பினார்கள்.)

(ப-ரை.) அழகிய மதிபோன்ற நீண்ட ஒளியையுடைய முகத்தாயிழையும் எதிரில்லாத வெஞ்சுடர்நீள் வேலானும் இச்சுரத்தின்கண்ணே போதரக்கண்டு அஞ்சி, இருசுடருள் ஒருசுடருமின்றியே உதயம் பாழாம் வகை இருசுடரும் அச்சுரத்தே போந்தன என்று கண்டார் சிலர் சொன்னார்.

(விரி.) போதரல் - செல்லல். இருசுடர் - கதிர் மதிகள். இச்செய்யுளின் கருத்தை நச்சினார்க்கினியரும், "இடைச்சுரத்துக் கண்டோர் கூறிய வார்த்தையைக் கேட்டோராகச் சிலர் கூறியது," (தொல். அகம். சுய) என விளக்குவர். (எக)

முகந்தா மரைமுறுவ லாம்பல்கண் ணீல
மிகந்தார் விரல்காந்த ளென்றென்—றுகந்தியைந்த
மாழைமா வண்டிற்கா நீழல் வருந்தாதே
யேழைதான் செல்லு மினிது.

[சுரத்திடைச் சென்ற செவிலியைத் தலைமகளைக்
கண்டார் சொல்லி ஆற்றுவித்தது.]

(பத.) (தலைமகளின்) முகம் - முகத்தினை, தாமரை - தாமரை மலர், என்று - எனக் கருதியும், முறுவல் - பற்களையுடைய வாயினை, ஆம்பல் - ஆம்பல் மலர், என்று - எனக் கருதியும், கண் - கண்களை, நீலம் - நீலோற்பல மலர் (எனக் கருதியும்,) இகந்து - ஒன்றினை யொன்று ஒவ்வாது கடந்து, ஆர் - அமைந்துள்ள, விரல் - விரல்களை,

காந்தள் - காந்தள் அரும்பு (எனக் கருதியும்,) உகந்து - அவ் வுறுப்புகளை விரும்பி, இயைந்த - தலைவியோடு நெருங்கி வாழும், மாழை - கூட்டமாகிய, மா - சிறந்த, வண்டு இன் கு - வண்டுகளுக்கு, ஆம் - தக்கதான, நீழல் - நிழல் வழியாக, ஏழை - நின்மகள், வருந்தாது - துன்புறாது, இனிது - நன்றாக, செல்லும் - செல்லாநின்றாள். (ஆகலின், நீ வீணே வருந்துத லொழிக, என்று செவிலியை நோக்கி எதிர்ப்பட்டார் சிலர் கூறினார்கள்.)

(ப-ரை.) இவள் முகம் தாமரை மலர், இவள் முறுவலையுடைய வாய் ஆம்பல் மலர், இவள் கண் நீலமலர், ஒன்றையொன்றொவ்வாது கடந்தார்ந்த விரல்கள் காந்தளரும்பு என்று கருதிக் காதலித்துப் பொருந்திய மாழைமா வண்டிற்குத் தக்க நீழலிலே வருத்தமின்றி நின்னுடைய ஏழை செல்லாநின்றாள் இனிதாக.

(விரி.) தான் - அசை நிலை. "தலைமகளைக் கண்டார் சுரத்திடைச் சென்ற செவிலியை எதிர்ப்பட்டுச் சொல்லி ஆற்றுவித்தது," எனக் கருத்தினைத் தெரிவிக்குந் தொடரை மாற்றி வருவித்துப் பொருள் கொள்க. தலைவி துன்புறுதற் கில்லாத நிழல் என்பார், "இயைந்த வண்டிற் காநீழல்," என்றார். (எஉ)

செவ்வாய்க் கரியகட் சீறிற் கேளாதுங்
கவ்வையாற் காணது மாற்றது—மவ்வாயந்
தார்த்தத்தை வாய்மொழியுந் தண்கயத்து நீலமு
மோர்த்தொழிந்தா ளென்பேதை யூர்ந்து.

[முன்னை ஞான்று உடன்போக்கு வலித்துந் தலைமகனையுந் தலைமகளையும் உடன்படுவித்துப் பின்னை அறத்தோடு நிலை மாட்சிமைப்பட்டமையாற் றலைமகனைக் கண்டு தோழி உடன்போக்கு அழுங்குவித்தது.]

(பத.) (தலைவனே!) என் பேதை - என்னுடைய தலைவி, கவ்வையால் ஊர்ந்து - ஊரவர் கூறும் பழிச் சொற்களால் முன்பு

உடன் போக்கை மேற்கொண்டு, தார் தத்தை - (கழுத்தின் கண்) மாலை போன்ற வரியினையுடைய கிளியினது, செவ்வாய் - சிவந்த வாயினின்றும் வெளிப்படும், வாய் மொழியும் - வாய்ப்பான சொற்களையும், கேளாதும் - தான் கேட்கப் பெறாதும், சீர் இன் ஆல் - சிறப்பினாலே, கரிய கண் - கருமையான கண்களையொத்த, தண் - குளிர்ந்த, கயத்து - குளத்திடை (மலர்ந்த,) நீலமும் - நீல மலர்களையும், காணாதும் - காணப் பெறாதும், அ ஆயம் - அப் பண்ணைமகளிர், ஆற்றாதும் - (தலைவியினைப் பிரிந்து) பொறுக்க வியலாது துன்புறப் போவதையும், ஓர்த்து - நீள நினைந்து பார்த்து, ஒழிந்தாள் - (பின்பு உடன் போக்கை) விட்டாள், (என்று தோழி தலைவனிடங் கூறினாள்.)

(ப-ரை.) செவ்வாயின்கட் டார்த்தத்தை வாய்மொழியைக் கேளாதும், கரிய கண்ணின்கட் டண்கயத்து நீலங்களின் றன்மைகளைக் காணாதும், அவ்வாயம் ஆற்றா தொழிவதனை யோர்த்துப் பின்பு உடன்போக்கை யொழிந்தாள்; என் பேதை அலர் காரணத்தான் முன்பு உடன்போக்கை மேற்கொண்டு.

(விரி.) முன்னை ஞான்று - முதனாள். வலித்தல் - இன்றியமையாதென நினைத்தல். அறத்தொடுநிலை - உண்மையாகிய அறத்தினை மேற்கொண்டு செவிலி முதலியவர்களோடு சேர்ந்து நிற்றல். மாட்சிமைப் படல் - சிறப்பாகக் காணப்படல். அழுங்குவித்தல் - வருந்துவித்துத் தவிர்த்தல். இங்குத் தலைவி கிளிமொழி கேட்கப்பெறாதும், கயத்தின் நீலமலர்க் காட்சி காணப்பெறாதும், தன் பிரிவான் ஆயம் ஆற்றாதும் போவதனை எண்ணி உடன்போக்கினை ஒழித்தாள், என்று தலைவனிடந் தோழி கூறலாயினள். பழைய வுரையில், ஆயமகளிர் தலைவியின் கிளி மொழிகளைக் கேளாதும், நீலக்கண்களைக் காணாதும், வருந்துவர் என்பதனைத் தலைவி எண்ணி உடன் போக்கை யொழித்தாள் எனத் தோழி கூறுவதாக விளக்கப் பட்

டுளது. தலைவி ஆயமொன்றன் பிரிவைமட்டும் எண்ணி உடன் போக்கை யொழித்தாள் என்பதைக் காட்டிலும் தான் பயின்ற கிளி முதலிய மூன்றன் பிரிவையெண்ணி உடன்போக்கினை யொழித் தாள் என்பது சிறப்பாமாகலான் அங்ஙனம் கண்ணளித்தாம். வாய் மொழியும், நீலமும் - உம்மைகள் உயர்வு சிறப்புப் பொருளன. (எஉ)

புன்புறவே சேவலோ டூடல் பொருளன்று
லன்புற வேயுடையா ராயினும்—வன்புற்
றதுகா ணகன்ற வழிநோக்கிப் பொன்போர்த்
திதுகாணென் வண்ண மினி.

[காமம் மிக்க கழிபடர் கிளவி : நிலத்தாற்பாலை ;
ஒழுக்கத்தான் நெய்தல்.]

(பத.) புன்புறவே - சிறிய பெட்டைப்புறாவே! சேவல் ஓடு - நின் தலைவனாகிய ஆண்புறாவோடு, ஊடல் - ஊடுதலை மேற்கொள் ளல், பொருள் அன்று - பயனில்லாத தொன்றாம், (என்னெனின்), அன்பு உறவு ஏ - (எங்காதலர் எம்மிடத்து) அன்பாகிய உறவொன் றினையே, உடையராயினும் - (முன்பு) கொண்டிருந்தாராயினும், இனி - இப்பொழுது, வன்பு உற்றது-(பிரிந்தவராய்) மனநெகிழ்ச்சி யுறாது வலியரான தன்மையை, காண்-பாராய், அகன்ற-(தேரோடும் வந்து) நீங்கிய, வழிநோக்கி-வழிச்சுவட்டினைப் பார்த்துக்கொண்டு, பொன் போர்த்து - பொன்னிறம் உடலெல்லாம் மூடும்படி (வந்த,) வண்ணம் - பசலையெனும் வண்ணமாகிய, என் இது - என்னிலை யாம் இதனை, காண் - பாராய். (என்று தலைவி கூறினாள்.)

(ப-ரை.) புல்லிய நிறத்தையுடைய பேடைப்புறாவே! நின்சேவலோடூடல் நினக்குக் காரிய மன்றால்; எங்காதலர் எமக் கன்பு மிகவுடையாராயினும், அவர் மனநெகிழாது வலியரான தன்மையைப் பாராய்; அவர் தேரோடும் வந்து

நீங்கிய வழிச்சுவடு நோக்கிப் பொன்னிறம் போர்க்க வந்த வண்ணமிதனைப் பாராய், இப்பொழுது.

(விரி.) புறவு - பாலை நிலக்கருப் பொருள். இக்கருப்பொருளும், அகற்சி (- பிரிவு) ஆகிய உரிப்பொருளும் வந்துள்ளமையால் இச்செய்யுள் பாலைத் திணையிற் சேர்க்கப் பட்டது. ஆயினும், அகற்சி நீட்டித்தமையான் தலைவி காமமிக்கு இரங்கலாயின ளாக லின் நெய்தலின் உரிப்பொருள் பாலையின்கண் மயங்கி வரலாயிற்று. இவற்றையே துறையாகிய கருத்தினிடத்தே, "நிலத்தாற் பாலை; ஒழுக்கத்தான் நெய்தல்," என்றார். எங்காதலர் மிக அன்புடைய ராயினும் பிரிந்த இப்பொழுது வன்புடையா ராயினர். ஆதலின், நீ நின் காதலனுடன் ஊடல் பயனின்று. இவ்வூடலான் பிரிவு ஏற்படின், நின் காதலனும் வன்புடையானுவன் என்பது கருத்தாம். ஆல் - அசைநிலை. ஏ - பிரிநிலை. (எச)

எரிந்து சுடுமிரவி யீடில் கதிரான்
விரிந்து விடுகூந்தல் வெஃகாப்—புரிந்து
விடுகயிற்றின் மாசுணம் வீயுநீ ளத்த
மடுதிறலான் பின்சென்ற வாறு.

[மகட்போக்கிய தாய் சொல்லியது.]

(பத.) விரிந்து - விரித்து, விடு கூந்தல் - விட்ட கூந்தலை யுடைய என்மகள், அடுதிறலான்-போர்வன்மை மிக்க தலைவனின், பின் - பின்னர், வெஃகா - விருப்பத்தோடு கூடி, சென்ற ஆறு - போய வழியானது, எரிந்து - அழன்று, சுடும் - சுடுகின்ற, இரவி-பகலோனது, ஈடு இல் - ஒப்பில்லாத, கதிரான் - வெப்பத்தினாலே, மாசுணம் - மலைப்பாம்புகள், புரிந்து - முறுக்கி, விடு - விட்ட, கயிற்றின் - கயிற்றினைப் போன்று, வீயும் - புரண்டு மாண்டு கிடக்கும், நீள் - நீண்ட, அத்தம் - கடத்தற்கரிய பாலை நிலவழியாம். (அதன்கண் என் மகள் எங்ஙனம் அச்சமின்றிச் செல்வளோ? என்று

தாய் வருந்தித் தனக்குட்டானே கூறித் துயரம் மிகக் கொண்டனள்.)

(ப-ரை.) அழன்று சுடாநின்றபகலோனது ஒப்பில்லாக் கதிரான் மாசுணங்கள் முறுக்கிவிட்ட கயிறுபோலப் புரண்டழியும் அத்தம், விரிந்துவிட்ட கூந்தலையுடையாள் அடுதிறலான் பின் விரும்பிச்சென்ற வழி.

(விரி.) விரிந்து - விரித்து: எதுகை நோக்கி மெலிந்தது. விடுகூந்தல் - வினைத்தொகை யன்மொழி. தாய் - பெற்ற தாய். வெஃகா - செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். போக்கிய - உடன்போக்கால் தவறவிட்ட. (எரு)

நெஞ்ச நினைப்பினு நெற்பொரியு நீளத்த
மஞ்ச லெனவாற்றி னஞ்சிற்று—லஞ்சிப்
புடைநெடுங் காதுறப் போழ்ந்தகன்று நீண்ட
படைநெடுங்கண் கொண்ட பனி.

[பொருள் வலித்த நெஞ்சிற்குச் சொல்லித்
தலைமகன் செலவழுங்கியது.]

(பத.) நெஞ்சு - (எனது) மனமானது, அஞ்சல் என - அச்சமுறல் என்று (இவளை,) ஆற்றின் - ஆற்றுவிப்பதற் குரிய சில சொற்களை, நினைப்பினும் - (சொல்ல) நினைத்தாலும், நெல் - (அங்கு அகப்படும்) நெற்களும், பொரியும் - (பகலவன் கதிர்களாற்) பொரிந்து போம்படியான, நீள் - நீண்டு செல்லும்படியான, அத்தம் - பாலைநில வழியினை (எடுத்து நன்மையாகச் சொல்ல வேண்டி நினைப்பதற்கு முன்னே,) அஞ்சிற்று - பிரிவினை எண்ணி அச்சமுறலாயது, (என் முகக்குறிப்பாற் பிரிவினை யுணர்ந்த இவளின்,) புடை - பக்கத்தே அடுத்துள்ள, நெடும் - நீண்ட, காது - செவிகளை, உற - பொருந்தும்படியாக, போழ்ந்து - ஊடுருவிச் சென்று, அகன்று - பரந்து, நீண்ட - நீட்சியுற்ற, படை - வேற்படையினை யொத்த, நெடும் - பெரிய, கண் - கண்கள், அஞ்சி -

அச்சமுற்று, பனி - துன்பத்தாற் றோன்றும் நீரினை, கொண்ட - நிறையப் பெற்றன. (ஆகலான், யான் இவளைப் பிரிந்து செல்லல் இயலாத தொன்றாம், என்றான் தலைவன்.)

(ப-ரை.) என்னெஞ்சமே! இவளை ஆற்றுவிக்குஞ் சில சொற்களைச்சொல்ல நினைக்கின்றாயாயின்,இவளோ தானெறி பொரியும் நீளத்தத்தைச் சொல்ல நினைப்பதற்கு முன்னே பிரிவினை யஞ்சிற்றால்;புடை நெடுங்காதுறப் போழ்ந்தகன்று நீண்டபடை நெடுங்கண்களும் பிரிவினையஞ்சிப் பனி கொண்டன: ஆதலான் நமக் கிவளைப் பிரிய முடியாது.

(விரி.) வலித்தல் - இன்றியமையா தென நினைத்தல். அழுங்கல் - தவிர்ந்து வருந்தல். நெஞ்சு, நினைப்பினும், அஞ்சிற்று; நெடுங்கண் அஞ்சி, பனிகொண்டன, என முடிக்க. பழையவுரையில், 'நெஞ்சு,' என்பதனை அண்மைவிளியாக் கொண்டு, 'அஞ்சிற்றால்,' என முடித்தமை பொருந்தாமையான், படர்க்கைப் பெயராக் கொண்டாம். ஆல் - அசைநிலை. பொருள்வயிற் பிரிய நினைத்த தலைமகன் தனக்குட்டானே சொல்லிக்கொண்டதாகு மிச் செய்யுள்.

வந்தாற்றான் செல்லாமோ வாரிடையாய்! வார்கதிரால்
வெந்தாற்போற் றோன்றுநீள் வேயத்தந்—தந்தார்
தகரக் குழல்புரளத் தாழ்துகில்கை யேந்தி
மகரக் குழைமறித்த நோக்கு.

[வினைமுற்றிய தலைமகன் தலைமகளை நினைந்தவிடத்துத் தலைமகள் வடிவு தன்முன் நின்றாற்போல வந்து தோன்ற அவ்வடிவை நோக்கிச் சொல்லி ஆற்றுவிக்கின்றது.]

(பத.) ஆர் இடையாய் - காணுதற்கரிய இடையினை யுடைய காரிகாய்! தந்து - கொடுத்து (அணிந்து,) ஆர் - நிறைந்த, தகரம் - மயிர்ச்சாந்தினையுடைய, குழல் - கூந்தலானது, புரள - (அவிழ்ந்து) தொங்க, தாழ்-பின்புறமாகத் தொங்குகின்ற, துகில்-முன்தானையை, கை - வலக்கையாலே, ஏந்தி - பற்றிக்கொண்டு, மகர குழை - சுறா

மீன் போன்று செய்யப்பட்ட காதணியோடு, மறித்த - (சென்று) மடங்கி நின்ற, நோக்கு - பார்வையுடன், வந்தால் - (என் எதிரே நீ) வருதலைச் செய்தால், வார் - நீண்ட, கதிரால் - பகலவன் சுடர்களால், வெந்தால் போல் - வேக்காடுற்றன போல், தோன்றும் - காணப்படும், நீள் - நீண்ட, வேய் - மூங்கில்கள் நிறைந்த, அத்தம் - இப்பாலை நிலவழியே, செல்லாமோ - (திரும்பி நின்பாற் செல்லும்) செலவினை யாம் ஒழிப்பேமோ? (ஒழியேம், நின்னுடன் வருவேம். ஆகலின், நீ இரங்கல், என்று தலைமகன் தன்முன் தோன்றிய உரு வெளித் தோற்றமாகிய தலைமகள்மாட்டுச் செப்பினன்.)

(ப-ரை.) கொண்டணிந்து நிறையப்பட்ட தகரத்தை யுடைய குழல்கள் அசையத் தாழ்ந்து துகிலைக் கையானே ஏந்தி மகரக்குழை மறித்த நோக்குடனே நீ வந்தால் யாம் போகோமோ? அரிய இடையினை யுடையாய்! நீ இரங்க வேண்டா.

(விரி.) தான் - அசைநிலை. வினைமுற்றல் - சென்ற காரியம் நிறைவேறல். "வார்கதிரால் வெந்தாற் போற் றோன்று நீள் வேயத் தம்," என்ற தொடர்க்குப் பழையவுரையிற் பொருள் காணப்படவில்லை. ஆற்றுவித்தல் - நின்னொடு செல்வேனெனத் தலைமகளை ஆற்றுவிப்பது. இங்குக் கூறும் உரு வெளிப்பாடு படிப்பார்க்குப் படம் பிடித்துக் காட்டியாங்குக் கூறப்படுதல் காண்க. இச்செய்யுளினை நச்சினார்க்கினியர் பாலையிற் பாலைத்திணை என்றார், (தொல். அகம். சம) பிரிவின்கண் உடன் போக்கு கூறப்படுதலின். தாழ் துகில் - வினைத்தொகை. (எஎ)

ஒருகை யிருமருப்பின் மும்மதமால் யானை
பருகுநீர் பைஞ்சுனையிற் காணு—தருகல்
வழிவிலங்கி வீழும் வரையத்தஞ் சென்றா
ரழிவில ராக வவர்.

[ஆற்ற ளெனக் கவன்ற தோழிக்கு ஆற்றுவல்
என்பது படச் சொல்லியது.]

(பத.) ஒருகை-துதிக்கையொன்றனையும், இரு மருப்பு இன் - இரண்டு கொம்புகளையும், மும் மதம் - மூன்று மதங்களையுங் கொண்ட, மால் - பெரிய, யானை - யானைகள், பைஞ்சுனையில் - பசிய சுனையினிடத்திலே, பருகுநீர் - குடிப்பதற்குத் தண்ணீர், காணாது - கிடைக்கப் பெறாது, அருகல் - அச்சுனையினை யடுத்து, வழி விலங்கி - மேலும் வழி நடக்கமாட்டாது, வீழும் - தளர்ந்து விழுந்து கிடக்கும்படியான, வரை - மலைகளையுடைய, அத்தம் - பாலைநிலவழியே, சென்றார் அவர் - சென்றவராகிய நம் தலைவர், அழிவிலர் ஆக - எவ்வகை இடையூறு மின்றிச் செவ்வனே திரும்பு வாராக. (என்று தோழிக்குத் தலைமகள் கூறினாள்.)

(ப-ரை.) ஒரு கையினையும் இருகோட்டினையும் மூன்று மதத்தினையும் உடைய மால் யானைகள் பருகு நீரைப் பைஞ் சுனையின்கட் காணாவாய் மருங்கே வழிவிலங்கித் தளர்ந்து வீழும் வரைகளையுடைய அத்தத்தைச் சென்ற அவர் அவ் வழி இடையூறின்றி அழிவிலராக.

(விரி.) காதன் மிகப் பெற்ற இவளைக் கைவிட்டுச் சென்ற தலைவன் கன்னெஞ்சன் எனக் கவன்ற தோழிக்குத் தலைவி தான் ஆற்றுவல் என்பது தோன்ற அவர் சென்று செவ்வனே திரும்புவ ராக, என்று சொல்லியதாகு மிச் செய்யுள். அருகல் - அணைதல்; அடுத்தாதல். (எஅ)

சென்றார் வருதல் செறிதொடி! சேய்த்தன்றா
லின்றார்சொற் றேறாதாய்! நீடின்றி—வென்றா
ரெடுத்த கொடியி னிலங்கருவி தோன்றுங்
கடுத்த மலைநாடு காண்.

[பருவங் காட்டித் தலைமகளைத் தோழி வற்புறுத்தியது.]

(பத.) செறி தொடி - கைகள் நிறைய வளையணிந்த காரி கையே! வென்றார் - போரின்கண் வெற்றியுற்றவர், எடுத்த - உயர்த்துக் கட்டிய, கொடியின் - கொடியாகிய வெண் சீலையினைப்

போன்று, கடுத்த - வேனிலால் வறண்ட, மலைநாடு - இம்மலை நாட்டில், இலங்கு அருவி - (கார்ப் பெயலால்) விளங்காநின்ற நீர் வீழ்ச்சி, தோன்றும் - காணப்படும், (ஆகலான்,) சென்றார் - (பொருள் வேண்டி நம்மைப் பிரிந்து) சென்ற தலைவர், வருதல் - (திரும்பி நம்மாட்டுச்) சேறல், சேய்த்து - சேண்மைக்கண் உள்ளது, அன்று - அல்லாது (அண்மைக் கண்ணதாயிற்று,) நின்றார் - நின்மாட்டு இருந்து பழகிய தலைவரின், சொல் - சொற்களின் உறுதிப் பாட்டினை, தேறாதாய் - தெரியாதவளே! நீடு இன்றி - கால நீட்டிப்பு இன்றி (இன்றிரவின்கண்,) காண் - (தலைவனைக்) கண்டு களிப்பாயாக. (என்று தோழி தலைமகளிடத்திற் சொல்லினாள்.)

(ப-ரை.) நம்மைப் பிரிந்து போயினார் வருதல் செறிதொடி! சேய்த்தன்றால்; நின்மாட்டு நின்றொழுகுகின்றாருடைய சொற்களைத் தெரியாதாய்! போரின்கண் வென்றெடுத்த கொடிகள் போலத் தெளிந்திலங்கருவி தோன்றாநின்றது மிக்க மலை நாடு; ஆதலால், நீடின்றி இன்றை இரவின்கட் காண்பாயாக.

(விரி.) செறி தொடி - வினைத் தொகை யன்மொழி; அண்மை விளி கொண்டுள்ளது. ஆல் - அசைநிலை. இது குறிஞ்சியின்கண் வந்த பாலைத் திணை. பாலைக்கு நில மின்மையின் நான்கு நிலங்களில் யாதா மொன்றின்கண் வருமென்பது மரபு. சென்றார் - வெற்றியினை வேண்டிப் பிரிந்து சென்றவரென்றுமாம். (எ௬)

உருவவேற் கண்ணாய்! ஒருகாற்றேர்ச் செல்வன்
வெருவிவீந் துக்கநீ ளத்தம்—வருவர்
சிறந்து பொருடருவான் சேட்சென்றா ரின்றே
யிறந்துகண் ணாடு மிடம்.

[இதுவு மது.]

(பத.) உருவ வேல் கண்ணாய் - அழகிய வேலினை யொத்த கண்களையுடைய தலைவியே! இடம் கண் - எனது இடக்கண்ணா

னது, இறந்து - மிகுந்து, ஆடும் - ஆடா நின்றது, (ஆகலான்) ஒருகால் - ஒற்றை யாழியினையுடைய, தேர் செல்வன் - தேரில் அமர்ந்து செல்பவனுகிய கதிரவனுல், வெருவி - (கண்டார்க்கு) அச்சமுண்டாகும்படி, வீந்து - மடிந்து, உக்க - அவிந்துபோன, நீள் - நீண்ட, அத்தம் - பாலைநில வழியாக, பொருள் தருவான் - பொருள் தேடும் பொருட்டு, சிறந்து - (முயற்சியில்) மேம்பட்டு, சேண் சென்றூர் - நெடுந் தொலை சென்ற தலைவர், இன்று ஏ வருவர் - இற்றைநாளே வந்து சேர்வர். (துன்புரு திருப்பாயாக, என்று தலைவிக்குத் தோழி கூறினள்.)

(ப-ரை.) அஞ்சத் தக்க வேல்போன்ற கண்களை யுடையாய்! ஒரு காலையுடைய தேர்ச் செல்வனுற் பிறர் கண்டார் வெருவும் வகை வீந்தவிந்த கானத்தானே முயற்சியாற் சிறந்து பொருடருவான் வேண்டிச் சென்றவர் இன்றே வருவர்; மிக்குக் கண் இடமாடா நின்றது.

(விரி.) வெருவி - வெருவ: எச்சத் திரிபு. பொருள் + தருவான் = பொருடருவான்; இரண்டன் தொகை. ஏ - பிரிநிலை. (அ௰)

கொன்றாய்! குருந்தே! கொடிமுல்லாய்! வாடினீர்
நின்றே னறிந்தே னெடுங்கண்ணுள்—சென்றுளுக்
கென்னுரைத்தீர்க் கென்னுரைத்தாட் கென்னுரைத்தீர்க்
பின்னிரைத்த பூண்மிளிர விட்டு. [கென்னுரைத்தாண்

[தலைமகள் இற்செறிப்புக் கண்டபின்னை அவள் நீங்கிய புனங்கண்டு ஆற்றாய் மீள்கின்ற தலைமகன் சொல்லியது; அன்றி, சுரத்திடைச் சென்ற செவிலித்தாய் சொல்லியதூஉமாம்.]

(பத.) கொன்றாய் - கொன்றைமரமே! குருந்தே - குருந்தமரமே! கொடிமுல்லாய் - கொடிகளாகப் படர்ந்துள்ள முல்லைச் செடியே! வாடினீர் - நீங்கள் மிகவும் வாட்டமுற்றுக் காண்கின்றீர்கள், நின்றேன் - (உங்கள் எதிரில்) நிற்பேனுகிய யான், அறிந்

தேன் - (இவ்வாட்டத்திற்குக் காரணமாகிய செய்தி தலைவியுடன் நீங்கள் உரையாடியதே என்பதைத்) தெரிந்துகொண்டேன், நெடும் கண்ணாள் - நீண்ட கண்களையுடைய தலைவியாகிய, மின் நிரைத்த - ஒளியமைந்து தோன்றும், பூண் - அணிகலன்கள், மிளிரவிட்டு - ஒளி விடும்படி செய்துகொண்டு, சென்றாளுக்கு - இவ்விடத்தினின்றும் சென்றவளுக்கு, என் உரைத்தீர் கு - யாது கூறினீர்கள்? நமக்கு, என் உரைத்தாள் கு - (அவள்) யாது கூறினாள்? அவட்கு, என் உரைத்தீர் கு - (பின் நீங்கள்) யாது கூறினீர்கள்? நமக்கு, என் உரைத்தாள் - அவள் பின்னர் யாது கூறினாள்? (என்று தலைவன் தன்னாற்றாமையான் வினவினன்.)

(ப-ரை.) கொன்றாய்! குருந்தே! கொடி முல்லாய்! நீர் வாடிநின்றீர்; இதற்குக் காரணம் யானறிந்தேன்; நெடுங் கண்ணாள் இங்கு நின்று போகின்றாட்கு நீர் என்னுரைத்தீர்? நமக்கு அவள் என்னுரைத்தாள்? அவட்கு நீர் பின்னை என்னுரைத்தீர்? அவள் உமக்குப் பின்னை என்னுரைத்தாள், மின்னிரைத்த பூண் விட்டு மிளிராநின்று?

(விரி.) இற்செறிப்புக் காணல் - மனையகம்புகல். சுரத்திடைச் சென்ற - உடன் போக்கினை மேற்கொண்ட தலைவியை தேடிக் கொண்டு பாலை நிலவழியே சென்ற. வறுங்களங் கண்டு மயங்கிய தலைவன் அங்கு நின்ற கொன்றை முதலியவற்றிேனாடு இங்ஙனம் விளாவினான் என்பது கருத்து. அன்றி, தலைவியை நாடிச் சென்ற செவிலி சுரத்திடைக் கண்ட கொன்றை முதலியவற்றுடன் ஆற்றாமை மிகுதியான் இங்ஙனம் வினவினாள் என்பதுமாம். இற்செறிப்புக் காரணமாகப் புனத்தை விட்டு நீங்குந் தலைமகள்மாட்டுக் கொன்றை முதலியன வினவும் விளாவும் விடையும் தலைமகன் பேரில் பரிவுடையனவாக வேண்டுதலின், "சென்றாளுக் கென்னுரைத்தீர்க் கென்றுரைத்தாட் கென்னுரைத்தீர்க் கென்னுரைத் தாள்?" என்று உரையாடிய முறையை விரித்துத் தலைமகன் வினவலாயினன் என்க. (அக)

ஆண்கட னுமாற்றை யாயுங்கா லாடவர்க்குப்
பூண்கடனுப் போற்றிப் புரிந்தமையாற்—பூண்கடனுச்
செய்பொருட்குச் செல்வராற் சின்மொழி! நீசிறிது
நைபொருட்கட் செல்லாமை நன்று.

[தலைமகனது செலவுக்குறிப்பறிந்து ஆற்றளாய தலைமகளைத் தோழி உலகினதியற்கை கூறி ஆற்றி யுடன்படுவித்தது.]

(பத.) சில் மொழி - சிலவாகிய தீஞ் சொற்களையுடைய தலைவியே! ஆண் கடன் ஆம் - ஆண் தன்மையின் கடமையாகிய, ஆற்றை - நெறியினை, ஆயுங்கால் - இன்னதென ஆராயுமிடத்து, ஆடவர்க்கு - ஆண்மக்களுக்கு, பூண் கடன் ஆ - மேற்கொள்ள வேண்டிய கடமையாக, போற்றி - (பொருள் தேடுதலைப் பெரியோர்) ஏற்பாடு செய்து, புரிந்தமையால் - வைத்தபடியினாலே, பூண் கடன் ஆ - (அவ் வாண்மக்கள்) மேற் கொள்ள வேண்டிய கடமையாக, செய் பொருள் கு - தேடவேண்டிய பொருளுக்கு, செல்வர் - நங்காதலர் செல்லவேண்டியவராவர், ஆல் - ஆதலால், நீ சிறிது - நீ சிறிது காலம், நை பொருள் கண் - பிரிவால் வருந்துகின்ற வகையிலே, செல்லாமை - புகாது ஆற்றி யிருத்தல், நன்று - நன்மையாகும். (என்று தலைவிக்குத் தோழி கூறினுள்.)

(ப-ரை.) ஆள்வினைக் கடனுகிய நெறியை ஆராயுங்கால், ஆடவர்க்குப் பூணுங் கடனுகப் பாதுகாத்து நல்லார் சொல்லி மேவினமையாற் றமக்கு அவ் வாள்வினை பூணுங் கடனுகத் தேடும் பொருட்டுச் செல்வர் நங் காதலர்; ஆதலாற் சின்மொழியை யுடையாய்! நீ யதற்கு மனனழியுந் திறத்தின்கட் செல்லாமை நன்று.

(விரி.) உலகினதியற்கை - ஆண் மக்கள் பொருள் தேடுதல். சின்மொழி - பண்புத் தொகை யன்மொழி: சுருங்கப் பேசும் சொல் லழகு பற்றி வந்தது. போற்றுதல் - பாதுகாத்தல்: இன்னார்க்

கிது வென ஏற்பாடு செய்தல். செய்தல் - பொருள் தேடுதலைச் செய்தல். நை பொருள் - துன்பம். நல்லார் - பெரியார். (அஉ)

செல்பவோ சிந்தனையு மாகாதா னெஞ்செரியும்
வெல்பவோ சென்றார் வினைமுடிய—நல்லாய்!
இதடி கரையுங்கன் மாபோலத் தோன்றிச்
சிதடி கரையுந் திரிந்து.

[தலைமகன் செலவுணர்த்திய தோழிக்குத் தலைமகள் உடன்படாது சொல்லியது.]

(பத.) நல்லாய் - நல்ல தோழியே! இதடி - காட்டு எருமைகள், கரையும் - (பிரிந்துபோன காட்டெருமைப் போத்துக் களை நினைத்துக்) கதறு நிற்க விடமாயதும், கல் - (அங்குப் பல வாய்க் கிடக்கும்) கற்களும், மா போல - யானைகள் பரவி நிற்பன போல, தோன்றி - தோன்ற, சிதடி - சிள் வண்டுகள், திரிந்து - பல்லிடங்களிலும் சென்று கலந்து, கரையும் - ஒலிப்பதற்கு இட மாயதுமாகிய (பாலை நிலவழியே,) செல்பவோ - எவராயினும் செல்ல விரும்புவா ருண்டோ? சிந்தனையும் ஆகாது - அச் செலவினை நினைத்தலும் கூடாத தொன்றாகும், நெஞ்சு எரியும் - நினைத்த நெஞ்சு எரிந்து துன்புறும், சென்றார் - இவற்றை யெல்லாம் பொருட் படுத்தாது சென்றவர்களும், வினைமுடிய - தாம் எடுத்துக் கொண்ட காரியம் முடிவு பெறும்படி, வெல்பவோ - அப் பாலை நிலவழியே சென்று மீளுதலாகிய வெற்றியை மேற்கொள்ளவல்ல ராவரோ (ஆகார்; ஆகலின், நம் தலைவர் பொருள்வயிற் பிரிதல் பொல்லாத தொன்றாம், என்று தலைமகள் தோழியிடங் கூறினள்.)

(ப-ரை.) இப்பெற்றித்தாகிய சுரத்தின்கட் செல்வா ருளரோ? நினைத்தலு மாகாதால்; நினைத்த நெஞ்சும் எரியும்; மாறிச் சுரத்தின்கட் சென்றார் சுரத்தை வெல்ல வல்ல வரோ? தாமெடுத்துக் கொண்ட வினை முடியும்படி; நல்லாய்! காட்டெருமைப் போத்துக்களைப் பிரிந்த பெண் எருமைகள்

கதறு நிற்கும்; அங்குப் பலவாய்க் கிடந்த கற்களும் மா பரந்தாற்போலத் தோன்றும்; சிள்வீடுகளும் திரிந்து கதறு நிற்கும் ஆதலான்.

(வி'ரி.) உடன் படல் - சம்மதித்தல். தோன்றி - தோன்ற: எச்சத்திரிபு. சிதடி - சிள்வீடு : சிள்வண்டு. (அரு)

கள்ளியங் காட்ட கடமா விரிந்தோடத்
தள்ளியுஞ் செல்பவோ தம்முடையார்—கொள்ளும்
பொருளில ராயினும் பொங்கெனப்போந் தெய்யு
மருளின் மறவ ரதர்.

[இதுவு மது.]

(பத.) கொள்ளும் - கொள்ளை கொள்ளுதற்குரிய, பொருள் இலராயினும் - பொருளை வழிச் செல்வோர் கொண்டிலராயினும், அருள் இல் மறவர் - வன்கண்மை மிக்க பாலை மக்களாகிய மறவர்கள், பொங்கு என - திடீரென்று, போந்து - வழியிடைத் தோன்றி, எய்யும் - (அவர்களை) எய்து கொல்லும், அதர் - பாலைநிலவழியாகிய, கள்ளியம் காட்ட - கள்ளிகள் வளர்ந்து மிகுந்த காட்டில், தம் உடையார் - தமக்கென அறிவினையுடையார் எவரும், கடமா - காட்டுப்பசுக்கள், இரிந்து ஓட - பின்வாங்கி யோடும்படி, தள்ளியும் - மறந்தும், செல்பவோ - செல்வாரோ? (செல்லமாட்டார்; ஆகலின், நம் தலைவர் பொருள்வயிற் பிரிதல் நன்றன்று, என்று தலைவி தோழியிடங் கூறினாள்.)

(ப-ரை.) கள்ளியங் காட்டின்கட் கடமாக்கள் இரிந்தோடும் வகை மறந்துஞ் செல்வரோ தம் மறிவை யுடையார்? வழிபோம் வம்பலராற் கொள்ளும் பொருளிலராயினும் கதுமெனப் போந்தெய்கின்ற அருளில்லாத மறவர் வாழும் வழியை.

(வி'ரி.) பொங்கெனல் - ஒலிக்குறிப்பு. தம்முடையார் அதராகிய காட்ட, ஓட, செல்பவோ, என முடிக்க. வம்பலர்-புதியர். (அச)

பொருள்பொரு ளென்றார்சொற் பொன்போலப் போற்றி
யருள்பொரு ளாகாமை யாக—வருளான்
வளமை கொணரும் வகையினன் மற்றோ
ரிளமை கொணர விசை.

[தலைமகனைத் தோழி செலவழுங்குவித்தது.]

(பத.) பொருள் - (எல்லாவற்றையும் இனிதின் நிறைவேற்றும்) பொருளே, பொருள் - யாவரும் கருத்திற் பதிக்கவேண்டிய காரியமாகும், என்றார் - என்று உமக்கு எடுத்துச் சொன்னவர்களுடைய, சொல் - சொல்லை, பொன்போல - பொன்னைப் போன்று, போற்றி - நீர் மேற்கொண்டு திரிதலான், அருள் - (பெண்பாலாகிய தலைவியின்மாட்டுக் காட்டவேண்டிய) அன்பின் மிகுதியாகிய அருளும், பொருள் ஆகாமை ஆக - கருதவேண்டிய காரியமாகக் கொள்ளப்படாது போயினும் போகுக, வளமை கொணரும் வகையினல் - நீ சென்று பல்வளங்களையும் தரும் பொருளைக் கொண்டுவரும் வலிகொண்டு, அருளான் - அன்பு கூர்ந்து, மற்று ஓர் - (பின்பு நாம் பெறுதற்கியலாத) வேறோர், இளமை - இளமையாகிய தன்மையை, கொணர - அங்கிருந்து கொண்டுவருவதற்கு, இசை - உடன்படுவாயாக. (என்று தோழி தலைவனிடங் கூறினள்.)

(ப-ரை.) பொருள் பொருளாவதென்று சொன்னார் சொல்லைப் பொன்போல. விரும்பித் தெளிதலான், அருளுடைமை பொருளாகாமை ஆவதாயினும் ஆக; பொருளைக் கொணரும் வகைமைபோல நின்னருளினாலே வேறோரிளமை கொணர்தற்கு எமக் குடன்படுவாயாக.

(விரி.) பொருளால் யாவும் முடிக்க வியலுமெனக் கருதிப் பொருள் தேடப் புகும் புரவலனே! நீ தேடும் பொருள்கொண்டு, சென்றுவிடும் இளமையினைப் பெற உனக்கு இயலுமோ? இயலாது, என்று தோழி தலைவனிடங் கூறினள் என்பதும், அது கேட்டுத் தலைமகன் பொருள் தேடச் செல்லுதலினின்றும் விலகி மனங்

கலங்கலாயினன் என்பதும் கருத்துக்களாம். செலவு அழுங்குவித்தல் - செல்லுதலினின்றும் தவிர்வித்து வருந்தச் செய்தல். (அரு)

ஒல்வா ருளரே லுரையா யொளியாது
செல்வாரென் றாய்நீ சிறந்தாயே—செல்லா
தசைந்தொழிந்த யானை பசியாலாட் பார்த்து
மிசைந்தொழியு மத்தம் விரைந்து.

[தலைமகள் தோழிக்குச் செலவுடன்படாது சொல்லியது.]

(பத.) செல்லாது - போகமாட்டாது, அசைந்து - வருந்தி, ஒழிந்த - இறந்து வீழ்ந்த, யானை - யானைகளை, ஆள் - அங்குள்ளவர்கள், பசியால் - தமது பசி மிகுதியினாலே, பார்த்து - தேடிப் பார்த்து, மிசைந்து ஒழியும் - தின்று செல்லும்படியுமான, அத்தம் - பாலைநில வழியே, விரைந்து - விரைவாக, ஒளியாது - மறைக்காமல், செல்வார் - நங்காதலர் செல்வது உறுதி, என்றாய் - என்று சொன்னாய், (ஆதலால்,) நீ சிறந்தாய் ஏ - நீ எனக்கு மெய்யாகச் சிறந்த தோழியே யானாய், (ஆயினும்,) ஒல்வார் உளரேல் - ஆற்றுவார் எவரேனு மிருப்பின், உரையாய் - காதலர் பிரிவினை அவர்கட்குச் சென்று உரைப்பாயாக. (என்பால் உரைக்க வேண்டுவதின்று, என்று தலைவி தோழியிடங் கூறினாள்.)

(ப-ரை.) ஆற்றுவா ருளராயின், அவர் பிரிவினை அவர்கட்கு உரையாய்; தவிராதே நங்காதலர் செல்வாரென்றாய்; ஆதலால், நீ எனக்கு மெய்யாகச் சிறந்தாயே யன்றோ? போகமாட்டாதே வருந்தி யிறந்து வீழ்ந்த யானைகளை அங்குள்ளவர்கள் தம் பசியானே எங்கும் பார்த்துத் தின்று போம் அத்தத்தினை விரைந்து.

(விரி.) கொடிய பாலைநில வழியாகத் தலைவர் பிரிந்து செல்வார் என்பதை மறையாது கூறிய முறையில் நீ கொண்டாடத் தக்கவளே ஆயினும், இதனை ஆற்றுவார்மாட்டுக் கூறுதலே நல்லதாம் என்று தலைவி தோழியினை நோக்கிக் கூறினாள் என்பது கருத்து. பழைய

வுரையில், "தவிராதே நங்காதலர் செல்வர்,'' எனக் காண்பதற்கு, 'ஒழியாது,'' எனப் பாடத்தைத் திருத்திக்கொள்வது பொருந்து மாறு காண்க. பாலைநிலவழி உணவும் நீருமின்றி வறந்திருத்தலின், "செல்லாது அசைந் தொழிந்த யானை பசியாலாட் பார்த்து மிசைந் தொழியும்,'' என்றார். இது தலைவன் பிரிவைத் தெரிவித்த தோழிக்குத் தலைவி கூறியதாகும். (அ௬)

ஒன்றானு நாமொழிய லாமோ செலவுதான்
பின்றாது பேணும் புகழான்பின்—பின்றா
வெலற்கரிதாம் வில்வலான் வேல்விடலை பாங்காச்
செலற்கரிதாச் சேய சுரம்.

[புணர்ந்து உடன்போக்கு நயப்பித்த தோழிக்குத்
தலைமகள் உடன்பட்டுச் சொல்லியது.]

(பத.) பின்றா - பின் வாங்காத, வெலற்கு அரிது ஆம் - வெல்லுதற்கு அரிதாகிய, வில் - விற் போரிலே, வலான் - வன்மை மிக்கவனாகிய, வேல் - வேல் கைக்கொண்ட, விடலை - மணவாளன், பாங்கா - பக்கத்தே துணையாய் வர, சேய - தொலைவான, சுரம் - பாலை நிலவழியினை, செலற்கு அரிது ஆ - செல்லுதற்கரியதாக, ஒன்றானும் - யாதாயினும், நாம் மொழியலாமோ - நாம் சொல்லுதல் கூடுமோ? (கூடாது,) பேணும் - யாவரும் விரும்பும், புகழான் - புகழினைக் கொண்ட நம் தலைவனின், பின் செலவு - பின்னே செல்லுதல், பின்றாது - ஒழுக்கத்திற் பிறழாத தொன்றேயாம். (என்று தலைமகள் தோழியிடங் கூறினாள்.)

(ப-ரை.) பிறழாத வெலற்கரிதாகிய வில்லினை வல்லானாகிய வேல்விடலை தான் துணையாகச் சுரத்தைச் செலற்கரிதாக யாதானுஞ் சொல்லலாமோ? அப் பேணும் புகழான் பின் சேறல் ஒழுக்கத்திற் பிறழாது காண்.

(விரி.) நயப்பித்த - விரும்புவித்த. உடன்படல் - சம்மதித்தல். தான் - அசைநிலை. விடலை - பாலை நிலத்தலைவன் என்றுமாம்.

"பேணும் புகழான்," என்றது, உடன்போக்கிற் றீங்கின்மை குறித்து நின்றது. (அஎ)

அல்லாத வென்னையுந் தீரமற் றையன்மார்
பொல்லா‡தென்பது நீபொருந்தா—யெல்லார்க்கும்
வல்லி யொழியின் வகைமைநீள் வாட்கண்ணாய்!
புல்லி யொழிவான் புலந்து.

[புணர்ந்து உடன்போவான் ஒருப்பட்ட தலைமகள் தோழிக்குச் சொல்லியது.]

(பத.) வகைமை - நேர்த்தியான, நீள் - நீண்ட, வாள் - வாளினைப்போன்ற, கண்ணாய்-கண்களையுடைய தோழியே! புல்லி - (உடன்போகின்ற என்னைத் தலைவன்) தழுவிக் கொண்டு, ஒழிவான்- செல்ல வேண்டி, புலந்து - மனத்தின்கண் மாறுபட்டு நீங்குதற்கு, வல்லி - வல்லையாய், ஒழியின் - (என்னை நீங்கி மனைக்குச்) செல்வா யாயின், ஐயன்மார் - நம்மையன்மார் கூறும், அல்லாத - (ஆண்மைக் குப்) பொருத்தமில்லாத மொழிகளினின்றும், என்னையும்-என்னை யும் என் தலைவனையும், தீர - நீக்கி, பொல்லாது என்பதும் - எம் மாட்டுப் பொல்லாப்புண்டு என்று கருதுங் கருத்தினையும் நீக்கி, நீ எல்லார்க்கும் பொருந்தாய் - நீ எல்லோருக்கும் நல்லவளாகப் பொருந்தி யிருப்பாயாக. (என்று தலைவி தோழியினிடங் கூறினாள்.)

(ப-ரை.) எம்பெருமானோடு பொருந்தி இங்கு நின்றும் ஒழிந்து போவதற்கு முன்பு வேறுபட்டு மற்றதன்கண் அல்லாத வென்னை நீ இங்கே யிருந்து நம் மையன்மார் பொல்லாத தென்று கொள்ளும் மனத்தின் கண்ணுள்ள கோளினையுந் திருத்தி நீ பொருந்தாய்; எல்லார்க்குந் தத்த மனத்தின்கணுள்ள வேறுபா டொழியுமாயின், வல்லிபோன் றிரு வாட்கண்ணாய்!

அல்லதூஉம், உடன்போகின்ற என்னைப் புல்லிக் கொண்டொழிவான் வேண்டி மனத்தின்கட் புலந்து நீங்கு

தற்கு வல்லையாயொழியின், வகைமையையுடைய நீண்ட வாட்கண்ணாய்! ஆண்மையல்லாத வுரைகளை என்னை நீக்கி, நம்மையன்மார் பொல்லாத தென்னுங் கருத்தினையும் நீக்கி எல்லார்க்கும் பொருந்துவாயாக, என்றுமாம்.

(விரி.) ஒருப்படல் - தீர்மானித்துப் புறப்படத் தொடங்கல். வகைமை - ஒழுங்கு, நேர்த்தி. வல்லி - முன்னிலை யொருமைக் குறிப்பு வினை முற்று. ஐயன்மார்-தந்தை தமயன்மார். ஆண்மைக்குப் பொருத்த மில்லாத மொழிகள் - தலைவன் தலைவியரின் ஒப்பற்ற காதல் கருதாது வெறும் வீரமே கருதும் வஞ்சின மொழிகள். பொல்லாப்பு - வீட்டைவிட்டுச் செல்லுதலாகிய குற்றம். தலைவி தோழியை மனைக்குச் சென்று தன் போக்காலுண்டாம் மனைக் குழப்பங்களை அவ்வப்பொழுது வேண்டியன கூறி யடக்கி, தன் பெருமைக்கு இழுக்கு வாராவகை நடந்து கொள்ளுமாறு கூறுவ தாகு மிது. தலைவி உடன்போக்கிற் புகுவது தன் கற்பிற்குப் பழுது நேருவதைத் தடுப்பதற்காகவே யாதலான், அவ் வுண்மைகளைப் பெற்றோர் முதலியவர்கட்குத் தெரிவித்துத் தன் பெருமையினைக் காக்கவேண்டலாயினள். பழைய வுரை இரண்டில் பின்னது விளக்கமும் எளிமையும் பெற்றுள்ளமை காண்க. மற்று-அசைநிலை.

நண்ணிநீர் சென்மி னமரவ ராபவே
லெண்ணிய வெண்ண மெளிதரோ—வெண்ணிய
வெஞ்சுட ரன்னானை யான்கண்டேன் கண்டாளாந்
தண்சுட ரன்னாளைத் தான்.

[சுரத்திடைச் சென்ற செவிலிக்குத் தலைமகனையுந் தலைமகளையுங் கண்டமை எதிர்ப்பட்டார் சொல்லி ஆற்றுவித்தது.]

(பத.) நீர் எண்ணிய - நீர் கருதிக் கொண்டு தேடிவருகின்ற, வெம் சுடர் அன்னானை - வெப்ப மிக்க ஞாயிறு அனைய தலைவனை, யான் - நான், கண்டேன் :- எதிராகப் போகப் பார்த்தேன்,

தண்சுடர் அன்னாளை - குளிர்ந்த மதியை யொத்த மாதரசியை, தான் - இவள், கண்டாளாம் - எதிராகப் பார்த்தாளாம், அவர் - அவ்விருவரும், நமர் ஆபவேல் - நம்மவர்களாவாராயின், நண்ணி - விரைந்து செல்லுதலில் மனம் பொருந்தி, சென்மின் - செல்வீராக, (அங்ஙனம் விரைந்து செல்வீராயின்,) எண்ணிய - அவ்விருவரையும் சென்று காணவேண்டுமென்று நினைத்துள்ள, எண்ணம் - கருத்து, எளிது - இலகுவில் முடிவதாகும். (என்று செவிலியை எதிர்ப்பட்ட கணவன் மனைவியாகிய இருவரிற் கணவனாகிய ஆடவன் செவிலியிடங் கூறினான்.)

(ப-ரை.) பொருந்தி நீர் சென்மின்; அவரும் நமக்குச் சுற்றத்தாராயின், நீர் அவரைச் சென்றெய்த வேண்டுமென்று எண்ணிய எண்ணம் எளிது; நீர் கருதிய வெய்ய பகலோனன்னானை யான்கண்டேன், கண்டாளாம் தண்மதியனையாளை இவள்தான்.

(விரி.) சுரத்திடைச் சென்ற - உடன் போக்கினை மேற்கொண்ட தலைவன் தலைவியரைத் தேடிக்கொண்டு பாலைநில வழியே போன. எதிர்ப்பட்டார் - எதிரே தோன்றிய கணவன் மனைவியராகிய இருவர். செவிலி வயதில் முதிர்ந்தவளாதலால் நீர் என உயர்வுப் பன்மை கொடுக்கப்பட்டாள். எதிர்ப்பட்ட இருவரில் ஆடவன் பிறன்மனை நோக்காப் பேராண்மை யுடையனாகலின், "கண்டாளாந் தண்சுடரன்னாளைத் தான்," எனக் கூறலாயினன். (அக)

வேறாக நின்னை வினவுவேன் றெய்வத்தாற்
கூறாயோ கூறுங் குணத்தினாய்—வேறாக
வென்மனைக் கேறக் கொணருமோ வெல்வளையைத்
தன்மனைக்கே யுய்க்குமோ தான்.

["நன்னு மவனும்," என்பதனுள், "நன்மை தீமை," என்பதனால் நற்றாய் படிமத்தாளை வினயது.]

(பத.) நின்னை - உன்னை, வேறு ஆக - நிமித்தஞ் சொல்வார் பலருள்ளும் வேறாகக் கொண்டு, வினவுவேன் - யான் கேட்கின்றேன் (ஆதலால்,) தெய்வத்தால் - உன் தெய்வத்தன்மை மிக்க கழங்கினாலே, எல் வளையை - ஒளிமிக்க வளையணிந்த என் மகளை (உடன்கொண்டு சென்றவன்,) கூறும் - (உலகத்தார் புகழ்ந்து) சொல்லும், குணத்தினனாய் - நற்குணத்தினைக் கொண்டவனாய், என்மனைக்கு-எனது மனைக்கண், ஏற-(மணவிழாச் சிறப்புப்) பொருந்தும் வண்ணம், கொணருமோ - (அவளைக்) கொண்டு வருவானோ? (அல்லது,) தன்மனைக்கு எ-தனது மனைக்கண்ணேயே, உய்க்குமோ-அவளைக் கொண்டுபோய்ச் சேர்ப்பானோ? (என்று,) கூறாய்-கூறுவாயாக. (என்று நற்றாய் படிமத்தாளை வினவினள்.)

(ப-ரை.) நிமித்தஞ் சொல்வார் பலருள்ளும் நின்னை வேறாகக்கொண்டு வினவாநின்றேன்: உன்னுடைய தெய்வத்தன்மையுடைய கழங்காற் பார்த்துக் கூறாய்; உலகத்தார் கூறும் நற்குணத்தினை யுடையனாய் எல்வளையை உடன் கொண்டுபோனவன் என்மனைக்கே மணஞ் செய்வதாகக் கொண்டு வருமோ? அஃதன்றி, யாம் வேறாகத் தன் மனைக்கே மணஞ்செய்யக் கொண்டுபோமோதான்?

(விரி.) ஓ, தான் - அசைநிலைகள். "தன்னும் அவனும்," என்று தொடங்குகிற தொல்காப்பிய (அகம்-௩௬)ச் சூத்திரத்துள் "தனக்கும் தலைவன் தலைவியர்க்கும் வரக்கடவ நன்மை தீமைகளை நற்றாய் ஆராய்வள்," என்ற கருத்தின்படி இங்கு, நற்றாய் படிமத்தாளாகிய தேவராட்டியிடம் எதிர்கால நிகழ்ச்சியினைப்பற்றி வினவலாயினள். இது தலைவியின் உடன்போக்கிற்குப்பின் நிகழ்வதாம். கழங்கு - குறி பார்க்கும் கருவி. (௩௰)

கள்ளிசார் காரோமை நாரில்பூ நீண்முருங்கை
நள்ளியவேய் வாழ்பவர் நண்ணுபவோ—புள்ளிப்

பருந்து கழுகொடு வம்பலர்ப் பார்த்தாண்
டிருந்துறங்கி வீயு மிடம்.

[தலைமகன் செலவுடன்படாத தலைமகள் தோழிக்குச் சொல்லியது.]

(பத.) புள்ளி - புள்ளிகளையுடைய, பருந்து - பருந்துகள், கழுகு ஒடு - கழுகுகளுடனே, வம்பலர் - புதிதாக வழிச்செல்வாரை, பார்த்து-(கொண்டுபோம் பொருளைக் கொள்ளை கொள்வான்) எதிர் பார்த்து, ஆண்டு - அவ்விடத்து, இருந்து - தங்கி, உறங்கிவீயும் - (கொள்ளை கிடையாமையால்) உறங்கி விழுதற்கிடமான, கள்ளி சார்- கள்ளிச்செடிகளை யடுத்த, கார் - கரிய, ஓமை - மாமரங்களும், நாரில் - நாராகிய பற்றுதலில்லாத, பூ - பூக்களையுடைய, நீள் - நீண்டு வளர்ந்த, முருங்கை - முருங்கை மரங்களும், நள்ளிய - மிகுந்த, வேய் - மூங்கிற் புதர்களும் (நிறைந்த), இடம் - இடமாகிய பாலை நிலவழியே, வாழ்பவர் - நல் வாழ்க்கையை மேற்கொள்ள விரும்பும் மக்கள், நண்ணுபவோ - செல்ல விரும்புவார்களோ? (விரும்பார்கள், என்று தலைவி தோழியிடங் கூறினள்.)

(ப-ரை.) புள்ளிப் பருந்துகள் கழுகுடனே வழிபோவாரைப் பார்த்து அங்கிருந்து உறங்கப்பட்டுக் கள்ளியுஞ் சாருங் காரோமையும் நாரில்பூ நீண்முருங்கையும் வேயும் பொருந்தி யமர்ந்து வீயுமிடத்தை உயிர்வாழ்பவர் நண்ணுவரோ?

(விரி.) தலை மகன் செலவு - தலைமகன் பொருள் தேடச் செல்லுகின்ற செலவு. சார் - ஒரு வகை மரமுமாம். முருங்கை மரம் - நாரின்றி இலகுவில் முறிந்துவிடுந் தன்மையதாதலின், "நாரில் பூ நீண் முருங்கை," எனப்பட்டது. பாலைநில வழியானது வாழ்பவர் நண்ணு வொன்றாகலான், தலைவன் செல்லத்தக்க தில்லை என்று கூறியதாகுமிது. (கக)

செல்பவோ தம்மடைந்தார் சீரழியச் சிஃடுவன்றிக்
கொல்பபோற் கூப்பிடும் வெங்கதிரோன்—மல்கிப்
பொடிவெந்து பொங்கிமேல் வான்சுடுங் கீழா
லடிவெந்து கண்சுடு மாறு.

[இதுவு மது.]

(பத.) சிள் - சிள் வண்டுகள், துவன்றி - நெருங்கி, கொல்ப போல் - (கொடிய வொலியாலே பிறரைக்) கொல்வனபோல, கூப்பிடும் - ஒலிக்கும்படியானதும், வெம் கதிரோன் - வெப்ப மிக்க ஞாயிறு, மல்கி - மிகுந்து (எரிந்து,) பொடி - புழுதிகள், வெந்து - வேக்காடுற்று, பொங்கி - ஆவி கிளம்பி, மேல் - மேலே (சென்று,) வான் சுடும் - விசும்பினைக் கொதிக்கச் செய்வதும், கீழால் - தரையிலே, அடி - (செல்வார்) அடிகள், வெந்து - வேவ, கண் - (அவர் தம்) கண்களை, சுடும் - சுடச் செய்வது மாகிய, ஆறு - பாலைநில வழியே, தம் அடைந்தார் - தம்மைப் பற்றுக்கோடாகக் கொண்ட மனைவிமார்கள், சீர் அழிய - சிறப்பழிந்து துன்புறும்படி, செல்பவோ - நல்லோராகிய கணவன்மார்கள் செல்வார்களோ? (செல்ல மாட்டார்கள், என்று தலைவி தோழியிடங் கூறினள்.)

(ப-ரை.) தம்மையடைந்தார் சீர்மையழிய நல்லார் செல்வரோ? சிள்வீடுகள் நெருங்கிக் கடிய வோசையாற் பிறரைக் கொல்வனபோலக் கூப்பிடாநிற்கும் வெய்ய வெயிலோன் மிக்குப் பொடிகள் வெந்து பொங்கி மேலே விசும்பினைச் சுடாநிற்கும், கீழின்கண் வழிபோவார் அடி வேவ அவர் கண்களைச் சுடாநிற்கும் இப்பெற்றிப்பட்ட அவ்வழியினை.

(விரி.) சிள் + துவன்றி = சிஃடுவன்றி. சிள் - காட்டின் கணுள்ள ஒருவகை யொலிக்கும் பூச்சி. இஃது ஒருவகை வீட்டில் போன்றது. வெந்து - வேவ: எச்சத்திரிபு. (கூஉ)

பாலை முற்றும்.

## நான்காவது - முல்லை.

கருங்கடன் மாந்திய வெண்டலைக் கொண்மூ
விருங்கடன்மா கொன்றான்வேன் மின்னிப்—பொருங்கட
றன்போன் முழங்கித் தளவங் குருந்தணைய
வென்கொல்யா னாற்றும் வகை.

[பருவங் கண்டழிந்த தலைமகள் தோழிக்குரைத்தது.]

(பத.) கரும் கடல் - கரிய கடலின் கண்ணே (புகுந்து), மாந்திய - நீரினை நிறைய வுண்ட, வெண்தலை - வெண்மையான தலைப்பாகத்தையுடைய, கொண்மூ - மேகங்கள், இரும் கடல் - பெரிய கடலினிடத்தே (புகுந்து,) மா - மாமர வடிவுகொண்ட சூரபன்மனை, கொன்றான் - வெட்டி வீழ்த்திய முருகப்பெருமானின், வேல் - வேலினைப் போன்று, மின்னி - மின்னலைச் செய்து, பொரும் - (அலைகள் ஒன்றோடொன்று) மோதிக்கொள்ளும், கடல் போல் - கடலைப் போல, முழங்கி - இடித்து ஆரவாரித்தலால், தளவம்-செம்முல்லைக் கொடிகள் (தளிர்த்து,) குருந்து-அருகிலுள்ள குருந்த மரத்தினை, அணைய - தழுவிப் படரும்படியாக (வந்த கார்ப் பருவத்தினைக் கண்டு,) யான் - நான், ஆற்றும் வகை - பொறுக்கு மாறு, என் கொல் - எம்முறையிலோ? (அறியேன், என்று தலைவி தோழியிடங் கூறினாள்.)

(ப-ரை.) கருங்கடலைப் பருகிய வெண்டலை முகில்கள் இருங்கடலின்கண்ணே புக்கு மாவினைக்கொன்ற முருகன் வேல்போல மின்னிப் பெருங்கட றன்னைப்போல முழங்குதலால் முல்லைக் கொடிகளெல்லாம் குருந்தமரத்தின்மேற் சென்றணையக்கண்டு யான் ஆற்றுந் திறம் என்னை கொல்லோ?

(விரி.) பருவம் - கார்ப் பருவம். அழிதல் - வருந்தல். "பெருங் கடல்," என்றும் பாடம். அப்பாடத்தினையே பழைய வுரையாசிரி யர் கொண்டுள்ளார். முழங்குதற்குப் பொருங்கடல் என்ற பாடம் பொருந்திக் காணுதலாற் கைக்கொள்ளப்பட்டது. தளவங் குறுந் தணையுங் காட்சி தலைவியின் ஆற்றுமையை மிகுவிப்பதற்குக் கருவி யாமாறு காண்க. தன், கொல் - அசைநிலைகள். முல்லையாவது தலைவி தலைவன் வருகையை எதிர்பார்த்துக் கற்பாற்றி யிருக்கும் ஒழுக்கமாம். அவ்வொழுக்கத்திற்குக் காரணமாயவைகளும் ஈண்டுக் கொள்ளப்படும். கற்பாற்றி யிருந்த தலைமகள் தலைவன் திரும்புவ தாகக் குறித்துச்சென்ற கார்ப்பருவங்கண்டு கலங்கிக் கூறியதாகு மிச் செய்யுள். (௯௩)

பகல்பருகிப் பல்கதிர் ஞாயிறுகல் சேர
விகல்கருதித் திங்க ளிருளைப்—பகல்வர
வெண்ணிலாக் காலு மருண்மாலை வேய்த்தோளாய்!
உண்ணிலா தென்னுவி யூர்ந்து.

[இதுவு மது.]

(பத.) வேய் தோளாய் - மூங்கிலினையொத்த தோள்களை யுடைய தோழியே! பல்கதிர் - பலவாகிய கதிர்களைக் கொண்ட, ஞாயிறு - பகலவன், பகல் - பகற்பொழுதிற்குரிய வெளிச்சத்தினை, பருகி - தன்னுள் வாங்கிக்கொண்டு, கல் சேர - மேற்கு மலைத் தொடரிற் சென்று மறைய, (அதனல் இருள் பரவ) திங்கள் - மதி யானது, இருளை - அவ்விருளை, இகல்- (வெளிச்சத்தினை விலக்கிய) பகையென்று, கருதி - எண்ணி, பகல் - (மறைந்துபோன வெளிச்சத் தோடு கூடிய) பகல் வேளை, வர - திரும்பவும் தோன்றும்படியாக, வெண்நிலா - வெள்ளிய நிலவொளியினை, காலும் - வெளிவிட்டு விரட்டும்படியான, மருள் மாலை - மயக்கத்தைத் தரக்கூடிய மாலைப் பொழுதின்கண், என் ஆவி - எனது உயிர், ஊர்ந்து - வெளிப்பட்டு, உள் நிலாது - என்னிடத்துத் தங்கி நிலைப்பதில்லை. (என்று தலைவி தோழியினிடத்துக் கூறினள்.)

(ப-ரை.) பகற்பொழுதைப் பருகிப் பல்கதிர்ஞாயிறு மலையின்கட் சேர, திங்களானது இருளைப் பகையென்று கருதிப் பகலின்றன்மை வர வெண்ணிலாவை யுகாநின்ற மருண்மாலையின்கண், வேய்த்தோளாய்! என்னிடத்து நிலை கின்றதில்லை; என்னுயிர் சென்று.

(விரி.) 'திங்கள், ஞாயிறுகல் சேர, இருளை இகல் கருதி, பகல் வர, நிலாக் காலும், மாலை,' என முடிக்க. வேய்த்தோள் - உவமைத் தொகை. (கூச)

மேனோக்கி வெங்கதிரோன் மாந்தியநீர் கீழ்நோக்கிக்
கானொக்கங் கொண்டழகாக் காண்மடவாய்—மானோக்கி!
போதாரி வண்டெலா நெட்டெழுத்தின் மேற்புரியச்
சாதாரி நின்றறையுஞ் சார்ந்து.

[தோழி தலைமகளைப் பருவங்காட்டி வற்புறுத்தியது.]

(பத.) மடம் - இளமைத் தன்மை, வாய் - வாய்த்துள்ள, மானோக்கி - மான் போன்று மருண்டு நோக்கும் தலைவியே! வெம் கதிரோன் - வெப்பத்தைக் கொண்ட பகலவன், மேல் நோக்கி - மேல்முகமாக, மாந்திய - வாங்கி யுட்கொண்ட, நீர் - நீர் நிறைந்த முகிலானது, கீழ் நோக்கி - பூமியை நோக்கிப் பெய்தபடியினாலே, கான் - முல்லை நிலமாகிய காடுகளெல்லாம், ஒக்கம் கொண்டு - தழைத்தோங்குதலாகிய நன்மையினைப் பெற்று, அழகா - அழகோடு கூடி, போது எலாம் - பூக்கள் தோறும், அரிவண்டு - இரேகைகளோடு கூடிய வண்டினங்கள், நெட்டு எழுத்தின்மேல் - நெடிய வோசையினையுடைய எழுத்துக்களின் ஒலியின்பேரிலே, புரிய் - விருப்பங்கொண்டு ஒலிக்க, சாதாரி - சாதாரி யென்னும் பண்ணானது, சார்ந்து - அவ் வொலியின் சார்பாகத் தோன்றி, நின்று - நிலைபெற்று, அறையும் - ஒலிக்கும், காண் - நீ அந்நிலையினைக் காண்பாயாக. (ஆகலின், கார்ப்பருவமாகிய இப்பொழுது தலைவன் கட்டாயம் வந்து சேர்வன் என்று தோழி தலைவிக்குக் கூறினாள்.)

(ப-ரை.) வெங்கதிரோன் மேனோக்கிப் பருகிய நீர் கீழ் நோக்குதலால் காடெல்லாம் ஒக்கங்கொண்டு அழகாகப் போதுதோறும் அரிவண்டுகள் நெட்டெழுத்தோசைமேல் மேவிச் சாதாரி என்னும் பண்ணினைச் சார்ந்தொலியா நின்றன ; மானோக்கி ! இதனைக் காணாய்.

அல்லதூஉம், 'போதாரி வண்டெலாம்,' என்பது போதினைப் பார்த்து இவ்வண்டெல்லாம் எனலுமாம்.

(விரி.) பருவம் - கார்காலம். நோக்கி - காரணப் பொருளில் வந்த வினையெச்சம். ஆரி = அரி - நீட்டல் விகாரம். அன்றி, ஆரி என்பதற்குப் பார்த்து எனப் பொருள் கொண்டு, 'வண்டெலாம் போதினைப் பார்த்து நெட்டெழுத்தின் மேற்புரிய,' எனக் கூட்டுக. நெட்டெழுத்துக்கள்—ரா, ரீ, ரூ, ரே, ரோ முதலியன. வற்புறுத்தல் - கூறுஞ் செய்தியை மனத்திற் பதியச் செய்தல். பழைய வுரையில், "மடவாய்," என்ற தொடர் பொருள் பெறாது போயிற்று.கூ௦

இருள்பரந் தாழியான் றன்னிறம்போற் றம்மு
னருள்பரந்த வாய்நிறம் போன்று—மருள்பரந்த
பால்போலும் வெண்ணிலவும் பையர வல்குலாய் !
வேல்போலும் வீழ்துணையி லார்க்கு.

[மாலைப்பொழுது கண்டு ஆற்றளாய தலைமகள்
தோழிக்குச் சொல்லியது.]

(பத.) பை - படத்தோடு கூடிய, அரவு - பாம்பினையொத்த, அல்குலாய்-நிதம்பத்தினையுடைய தோழியே! ஆழியான்தன் - சக்கரத்தையுடைய மாயவனது, நிறம்போல்-கரிய நிறத்தைப்போன்று, இருள் பரந்து - எங்கும் இருள் சூழப்பெற்று, தம்முன் - அம்மாயவனின் முன்னோனாகிய பலராமனது, அருள்பரந்த-பேரன்பு மிகுந்த, ஆய் - (கண்டார்) நீள நினைந்து பார்க்கும்படியான, நிறம்போன்றும் - வெண்மை நிறத்தைப் போலவும், மருள் - (கண்டார்) மயங்கி

வியக்கும்படியான தன்மை, பரந்த-நிரம்பிய, பால்போலும்-பாலின் நிறத்தைப் போன்றும், (தோன்றும்படியான,) வெண் நிலவும் - வெண்மையான மதியும், வீழ்-விரும்பப்படுகின்ற, துணையிலார்க்கு - காதலர்களைப் பக்கத்தே கொண்டிராத மங்கையர்க்கு, வேல் போலும் - வேலாயுதத்தைப் போன்று துன்பினை விளைவிக்கும். (என்று தலைவி தோழியிடங் கூறினாள்.)

(ப-ரை.) சக்கரத்தையுடைய மாயவனிறம்போல எங்கும் இருள்பரந்து, அம்மாயவன் முன்னோனுடைய நிறம் போன்று வியப்புமிக்க பானிறமும் போன்ற வெண்ணிலாவும், பையரவல்குலாய்! இவை விரும்பப்படுந் துணையில்லாதார்க்கு வேல் போலும்.

(விரி.) மாயவன் - கண்ணபிரான். வெண்ணிலவும் - உம்மை உயர்வு சிறப்புப்பொருளது. பால்போலும், போன்றும் - உம்மைகள் எண்ணுப்பொருளன. வேல்போலும் - போலும் என்பது செய்யுமென்வினைமுற்று. எனவே பழையவுரையிற் கண்ட, 'இவை,' என்பது பொருளின்றிக் காணப்படுகின்றது. (கூசா)

பாழிபோன் மாயவன்றன் பற்றார் களிற்றெறிந்த
வாழிபோல் ஞாயிறு கல்சேரத்—தோழியோ!
மான்மாலை தம்மு னிறம்போன் மதிமுளைப்ப
யான்மாலை யாற்றே னினைந்து.

[இதுவு மது.]

(பத.) தோழியோ - தோழியே! மாயவன் - கண்ணபிரான், பாழிபோல் - தனக்கு வன்மையுண்டாக்கிக் கொள்பவன்போல, தன்பற்றார் - தன்பகைவர்களது, களிறு - ஆண்யானையினது மத்தகத்தின்மீதே, எறிந்த - செலுத்தி நுழைந்த, ஆழிபோல் - சக்கரத்தினைப் போன்று, ஞாயிறு - பகலோன், கல்சேர - மேற்கு மலைத்தொடரின் கண்ணே சென்று, (மறைய வந்த) மால்மாலை-மயக்கத்தி

ணைத்தரும் மாலைக்காலத்தின்கண்ணே, தம்முன் - அம்மாயவ னுடைய முன்னோனாகிய பலராமனது, நிறம்போல் - வெண்மை நிறத்தைப்போல, மதி - நிலவானது, முளைப்ப - தோன்ற, (அத னால்) யான் - நான் (கொண்ட,) மாலை - மயக்கத்தினை, நினைந்து- எண்ணி வருந்தி, ஆற்றேன் - பொறுக்க வியலாதவளாயிருக்கின் றேன். (என்று தலைவி தோழியிடங் கூறினாள்.)

(ப-ரை.) தனக்கு வலிபோலக் கருதி மாயோன் பற்றூர் களிற்றின் முகத்தெறிந்த சக்கரம்போல ஞாயிறு குடமலை யைச் சேரத் தோழி! மருண்மாலையின்கண் அம்மாயவன் முன்னோன் நிறம்போல மதி தோன்றுதலான் யான் கொண்ட மயலை ஆற்றமாட்டுகில்லேன் வருந்தி.

(விரி.) கண்ணபிரான் இயல்பாகவே வலியுடையாராகலான், "பாழிபோன் மாயவன்றன் பற்றூர்களிற் றெறிந்த வாழி," என்றார். குடமலை - மேற்குமலைத் தொடர். மாலை - முன்னது சாயுங்காலம் எனவும், பின்னது மால் + ஐ — மயக்கத்தை எனவும் பொருள்படும். ஈண்டு மயக்கம் புணர்ச்சி விருப்பம். தோழியோ-ஓ - விளியுருபு.

வீயும் வியப்புறவின் வீழ்துளியான் மாக்கடுக்கை
நீயும் பிறரொடுங்கா ணீடாதே—யாயுங்
கழலாகிப் பொன்வட்டாய்த் தாராய் மடலாய்க்
குழலாகிக் கோல்சுரியாய்க் கூர்ந்து.

[பருவமன்றென்று வற்புறுத்திய தோழிக்குத் தலைமகள் வன்புறை யெதிரழிந்து சொல்லியது.]

(பத.) (தோழியே!) விய புறவின் - பெரிய முல்லை நிலத்தின் கண்ணேயுள்ள, மா கடுக்கை - சிறந்த கொன்றை மரமானது, வீழ் துளியான் - விழுகின்ற மழைத்துளிகளானே, ஆயும் - சிறுமிகள் ஆய்ந்து விளையாடும்படியான, கழல் ஆகி - கழற்சிக்காய்களைப் போன்ற அரும்புகளை முதன் முதலாக அரும்புவித்துப் பின்,

பொன்வட்டு ஆய் - பொன்னால் செய்யப்பட்ட சூதுக்கருவிகளைப் போன்று அவற்றை முதிர்வித்து, தார்ஆய்-பின்பு பூமாலைபோன்று அவற்றைப் பொலிவித்து, மடலாய் - பின்னர் அவற்றை இதழ்களாய் மலர்வித்து, குழல் ஆகி - மேலும் அவற்றைப் பெண்களின் கூந்தல்போல் காய்ப்பித்து, கூர்ந்து சுரிகோல் ஆய் - முடிவில் மிகுதியுங் காய்ப்பித்து துளையினையுடைய கொம்பாக அவற்றை மாற்றி, வீயும் - அழிப்பிக்கும், (இதனை) பிறரொடும் - மற்றைய தோழிமார்களோடும், நீயும்-உயிர்ப்பாங்கியாகிய நீயும், நீடாது - கால நீட்டிப்பின்றி உடனே, காண் - போய்க்காண்பாயாக. (என்று தலைவி தோழியிடங்கூறிக் கார்ப்பருவம் வந்து நின்றமையினை விளக்கிக் காட்டினள்.)

(ப-ரை.) ஆயப்படுங் கழல்போல அரும்பி, பொன் வட்டுப்போல முதிர்ந்து, பின்னைப் பூமாலையாய், இதழாய் விரிந்து, மடவார் குழல்போலக் காய்த்து, பின்னைத் துளையையுடைய கோலாய் மிக்கு அழியாநின்றன; வியன் புறவின்கண்ணே வீழ்துளியானே பெருங் கொன்றைகள்: இதனைப் பிறரோடே நீ போய் நீயுங் காணாய் நீடியாதே.

(விரி.) இங்கு முதல்வினைகள் கழலாகி, வட்டாய், தாராய், மடலாய், குழலாகி, சுரியாய் எனச் சினைவினைகளாக முதல்சினை யொற்றுமை கருதிக் கூறப்பட்டுள்ளன. "புறவின், கடுக்கை, துளியான் ஆகி, வட்டாய், தாராய், மடலாய், குழலாகி, கூர்ந்து சுரி கோலாய் வீயும் (அதனை) பிறரொடும் நீயும் நீடாதே காண்," என முடிக்க. ஏ - அசைநிலை. வீழ்துளி - மழை. வன்புறை - வன்பு + உறை: கடினமாகக் கூறுஞ் சொற்கள். எதிர் அழிந்து சொல்லல்- எதிராகக் கலங்கிக் கூறல். (௬அ)

பொன்வாளாற் காடில் கருவரை போர்த்தாலு
மென்வாளா வென்றி யிலங்கெயிற்றாய் !—என்வாள்போல்

வாளிழந்த கண்டோள் வனப்பிழந்த மெல்விரலு
நாளிழந்த வெண்மிக்கு நைந்து.

[இதுவு மது.]

(பத.) இலங்கு எயிற்றாய் - விளங்குகின்ற பற்களையுடைய தோழியே! பொன் வாள் ஆல் - பொன்போன்ற வெயிலொளியினாலே (வெந்து), காடு இல்-மரஞ் செடிகொடிகளாகிய சிறைக்காடுகளைக் கொண்டிராது வெறுந்தரைகளோடு காணப்படும், கருவரை-பெரியமலைகள், போர்த்தாலும் - (இப்பொழுது பெய்யும் மழைமிகுதியால்)மரஞ் செடிகொடிகள்மிக்கு மலர்களான் மூடப்பட்டிருந்தும், என் வாளா என்றி - இதனால் என்ன பயன்? இது கார்ப்பருவம் அன்று என்று சொல்லி நிற்கின்றாய், என்வாள்போல்-என் மேனியின்கணுள்ள ஒளி கெட்டவாறு போலவே, கண் - என்கண்களும், வாள் இழந்த - ஒளியிழந்தன, இழந்த நாள் - (தலைவனைப் பிரிந்தமையால்) நலமிழந்த நாள்களின், எண்-எண்ணிக்கை, மிக்கு-மிகுதலான், மெல்விரலும் - என் மெல்லிய விரல்களும் (அந்நாட்களை யெண்ணி,) நைந்து - தேய, தோள் - என் தோள்களும், வனப்பு - அழகினை, இழந்த - இழந்தன. (என்று தலைவி தோழியிடங் கூறினாள்.)

(ப-ரை.) பொன்போன்ற வெயிலொளியால் வெந்து காடின்றியிருந்த கருவரைகள் கார்ப்பருவஞ்செய்து மலரிதழ்களான் மூடப்பட்டாலும், அதனாற் பயனென்? பருவமன்று என்று சொல்லி வாளாநின்றி; இலங்கெயிற்றையுடையாய்! என்மேனியின்கண்ணுள்ள ஒளிபோல ஒளியிழந்தன என் கண்களும்: போயிழந்த நாள்களின் எண் மிகுதலான் எண்ணி என்விரல்களுந் தேய என்தோள்களும் வனப்பிழந்தன.

(விரி.) வாளா - சும்மா: ஒன்று மின்மைப்பொருள் தருமிடைச் சொல், எயிற்றாய், போர்த்தாலும், வாளாவென்றி, கண்

வாள் இழந்த, தோள் வனப்பிழந்த, என முடிக்க. மெல்விரலும் இழந்தாள் எண்மிக்கு (எண்ணி) நைந்து தோள்வனப்பிழந்த, எனக் கூட்டுக. மிக்கு - காரணப் பொருளில் வந்த வினையெச்சம். நைந்து - நைய : செயவென் எச்சத்திரிபு. (௧௧)

பண்டியையச் சொல்லிய சொற்பழுதான் மாக்கடல்
கண்டியைய மாந்திக்கால் வீழ்த்திருண் - டெண்டிசையுங்
கார்தோன்றக் காதலர் தேர்தோன்ற தாகவே
பீர்தோன்றி நீர்தோன்றுங் கண்.

[பருவங்கண்டழிந்த கிழத்தி தோழிக்குச் சொல்லியது.]

(பத.) (தோழியே!) கார் - முகிற் கூட்டமானது, மா கடல்- பெருங்கடலினிடத்தே, கண்டு - முதலிற் காணப்பெற்று, இயைய- தன்னிடத்தே நிரம்பிப்பொருந்தும்படி, மாந்தி-கடனீரைக்குடித்து, இருண்டு - கருத்து, எண்திசையும் - எட்டுத் திக்குகளிலும், கால் வீழ்த்து - மழை பெய்ய இறங்கி, தோன்ற - காணப்பட்டும், காத லர் தேர் - தலைவரின் தேரானது, தோன்றது - தோன்றுகின்ற தில்லை, ஆகவே - ஆதலான், பண்டு - தலைவர் முன்பு நம்மைப் பிரிந்து சென்ற காலத்து, இயைய - நாம் இணங்கவேண்டியதற் காக, சொல்லிய-(கார்காலத்தில் திரும்பி வந்துவிடுவதாகக்) குறிப் பிட்டுச் சொல்லிக்கொண்ட, சொல்-உறுதிமொழியானது, பழுது- தவறிப் போயிற்று, கண்-அதனுல் என் கண்களும், பீர்தோன்றி- (என் மனத்தின்கண்உள்ள) அச்சந்தோன்றும்படி, நீர் தோன்றும் நீரைத் தோற்றுவியாநின்றன; (என்று தலைவி தோழியிடங் கூறினள்.)

(ப-ரை.) தாமுன்பு நம்மைப் பிரிகின்றநாட் குறிப் படச் சொல்லிய சொற்பழுதாயிற்றால்; பெருங்கடற் சென்று கண்டு நிரம்பப்பருகிக் கால்வீழ்த்தே யிருண்டு திசையெட்டு மழை தோன்றக் காதலர் தேர் தோன்று

கின்றதில்லை: ஆதலால் என்கண்கள் பீர் தோன்ற நீர் தோன்றுகின்றன.

(விரி.) ஆல் - அசைநிலை. தோன்றி - தோன்ற: எச்சத்திரிபு. இழுத்தி - தலைவி. கார், கண்டு, மாந்தி, இருண்டு, கால் வீழ்த்து, தோன்ற (வும்) காதலர் தேர் தோன்றாது, என முடிக்க. தோன்ற- உம்மை தொக்கு நின்றது. பீர் - அச்சம். பருவம் - கார்ப் பருவம். (கOO)

வண்டினம் வெளவாத வாம்பலும் வாரிதழான்
வண்டினம் வாய்வீழா மாலையும்—வண்டின
மாராத பூந்தா ரணிதேரான் றன்போத
வாராத நாளே வரும்.

[இதுவு மது.]

(பத.) வண்டு இனம் - வண்டுக் கூட்டங்கள், வெளவாத - விரும்பி மேற்கொள்ளாத, ஆம்பலும் - ஆம்பல் என்னும் பெயரை யுடைய புல்லாங்குழலும், வார் - ஒழுங்காயமைந்த, இதழ் ஆன் - இதழ்களில், வண்டு இனம் - வண்டுக் கூட்டம், வாய் வீழா - வாய் வைக்க விரும்பாத, மாலை - சாயுங்காலமாகிய மாலையும், வண்டு இனம் - வண்டுக் கூட்டம், ஆராத - பொருந்த விரும்பாத, பூதார் - வெட்டிப் பூக்கள் முதலியவற்றாற் செய்த மாலைகளால், அணி - அலங் கரிக்கப்பட்ட, தேரான் - தேரினையுடைய தலைவன், போத - என் னிடஞ் சேரும்படி, வாராத - வருதலைச் செய்யாத, நாளே - நாள் களிலேயே, வரும் - (அவ்விரண்டும்) வந்து என்னைத் துன்புறுத்தும். (என்று தோழியிடம் தலைவி கூறினாள்.)

(ப-ரை.) வண்டினங்கள் விரும்பாத ஆம்பலென்னும் பெயரையுடைய குழலும், ஒழுகிய மலர்களிற் புக்கு வண் டினங்கள் வாய்வீழாத அந்தியாகிய மாலையும், வண்டினங்கள் புக்கொலியாத பூச்செயல்களையுமுடைய புரவி பூண்ட தார்

மணிகளையுடைய புரவிகளாலே ஒப்பிக்கப்பட்ட தேரினையு முடையான் வாராத நாளே வந்து என்னை நலியும்.

(விரி.) ஆம்பல் - ஆம்பற்பூவின் வடிவாக அணைசு (அணிகலமாவும், உறுதியாகவும் அணைத்து வைக்கப்படும் யாதாமொரு உலோகத்தாலாகிய பூண்) பண்ணிச் செய்யப்பட்ட புல்லாங்குழல். இங்கு இஃது ஓசையினைக் குறித்து நின்றது. ஆம்பலோசையும், மாலையும் தோரான்வாராத நாளிலே வரும், என முடிக்க. தான் - அசைநிலை. ஏ - பிரிநிலை. (க0க)

மானெங்குந் தம்பிணையோ டாட மறியுகள
வானெங்கும் வாய்த்து வளங்கொடுப்பக்—கானெங்குந்
தேனிறுத்த வண்டோடு தீதா வெனத்தேரா
தியானிறுத்தே னாவி யிதற்கு.

[இதுவு மது.]

(பத.) (தோழியே!) எங்கும் - முல்லை நிலங்களாகிய எல்லாப் பாகங்களிலும், மான் - ஆண்மான்கள், தம்பிணையோடு - தம்முடைய பெண்மான்களுடனே கூடி, ஆட - விளையாடுதலைச் செய்ய, மறி - அவற்றின் குட்டிகளும், உகள - அவற்றோடு சேர்ந்து குதித்துத் திரிய, வான் எங்கும் - விண்வெளியெல்லாம், வாய்த்து - முகில்கள் நிரம்பி மழையினைப் பெய்து, வளம் கொடுப்ப - வளத்தினையுண்டாக்க, கான் எங்கும் - காடுகளிலெல்லாம், தேன் - தேன்வண்டுகள், இறுத்த - தம்மோடு கூடித் தங்கிய, வண்டோடு - வண்டுகளுடனே, தீதா என - தீ தா என்ற ஒலிக்குறிப்புடன் ஒலித்தலான், யான் - நான், தேராது - (தலைவர் கார்காலத்துத் திரும்புவேன் என்று பிரிவதும், கார்காலம் வருவதும், தலைவர் உறுதி மொழி பழுதாவதும் இயல் பென்பதைத்) தெளியாதவளாய், இதற்கு - இக்கார்காலம் தோன்றியும் தலைவர் வாராமைக்காக மயங்கி, ஆவி - எனது உயிரை, இறுத்தேன் - கடமையாகக் கொடுத்துக் கவல்கின்றேன். (என்று தலைவி தோழியிடங் கூறினாள்.)

(ப-ரை.) மான்கள் தம்பிணைகளைக் கூடி எங்கும் விளையாட, அவற்றின் மறிகளுநேமுகள, மழை யெங்கும் பெய்து வாய்த்து வளங்கொடுப்ப, காடெங்கும் தேன்களும் தம்மொடு சார்ந்த வண்டுகளோடு தீதாவென்றொலித்தலான், ஆராயாதே மயங்கிப் பருவத்துக் கென்னுவியைக் கடனுகக் கொடுத்தேன்.

(விரி.) தீதா - ஒலிக்குறிப்பு. இறுக்கப்படுவது இறையாகலான் கடமை எனப்பட்டது. (கO௨)

ஒருவந்த மன்று லுறைமுதிரா நீராற்
கருமந்தான் கண்டழிவு கொல்லோ—பருவந்தான்
பட்டின்றே யென்றி பணைத்தோளாய்! கண்ணீரா
லட்டினே னுவி யதற்கு.

[பருவமன்றென்று வற்புறுத்தின தோழிக்குத் தலைமகள்
பருவமே யென்றழிந்து சொல்லியது.]

(பத.) பணைத் தோளாய் - மூங்கில் போலும் தோள்களையுடைய தோழியே! (நீ என்னை நோக்கி) ஒரு வந்தம் அன்று-(இது கார்ப்பருவமென்பது) உறுதியல்லதாம், (என்னெனின்,) உறை - மழைத்துளிகள், முதிரா நீரால் - முதிர்ச்சி பெருத (மழை பெயல் நிரம்பாத) நீர்மையாலாம், கருமம்தான் - (வேலையில்லா வுனக்கு) வேலைதான், கண்டு - பருவமல்லாத வொன்றைப் பருவமாகக் கண்டு, அழிவு கொல்லோ - வருந்துவதோ? பருவம்தான் - கார்ப்பருவமென்பது, பட்டின்றே - வரவேயில்லை, என்றி - என்று இங்ஙனம் பல்வகையாகச் சொல்லி என்னைத் தேற்று நின்றய், (யானே) அதற்கு - அப்பருவமல்லாப் பருவத்திற்கு, ஆவி - எனது உயிரை, (பருவமென நினைத்து,) கண்ணீரால் - கண்ணீரினை நீராகக் கொண்டு, அட்டினேன் - தாரை நீராக வார்த்துக் கொடுத்தேன். (என்று தலைவி தோழியிடங் கூறினள்.)

(ப-ரை.) ஒருவந்தமன்றால் என்பது இது பருவமென்பது மெய்ம்மை யன்றோ வென்றவாறு. உறை மூதிரா நீரால் என்பது மழை பெயல் நிரம்பாத நீராலென்றவாறு: வம்ப மழை யென்றவாறும். கருமந்தான் கண்டழிவு கொல்லோ என்பது கருமமாவது பருவமல்லாத பருவத்தைக் கண்டழிவதோ என்றவாறு. பருவந்தான் பட்டின்றே யென்பது பருவம் வந்து பட்டதில்லை என்றவாறு. என்றி என்பது இவையெல்லாஞ் சொல்லி என்னைத் தேற்றா நின்றாய் என்றவாறு. பணைத்தோளாய் கண்ணீரா லட்டினேனாவி யதற்கு என்பது கண்ணீரே நீராக வார்த்து என்னுயிரைப் பருவத்துக்குக் கொடுத்தேன், பணைத்தோளாய் என்றவாறு.

(விரி.) ஆல் - முன்னது அசைநிலை, பின்னது மூன்றாவதனுருபு. கொல் - அசைநிலை. அட்டுதல் - வார்த்தல், ஏ - தேற்றப் பொருள். அழிதல் - வருந்தல். ஒருவந்தம்-உறுதி. (க0ரு)

ஐந்துருவின் வில்லெழுதி நாற்றிசைக்கு முந்நீரை
யிந்துருவின் மாந்தி யிருங்கொண்மூ—முந்துருவி
னொன்றாய் யுருமுடைத்தாய்ப் பெய்வான்போற் பூக்கொன்று
கொன்றாய்! கொன்றாயெற் குழைத்து.

[பருவங் கண்டழிந்த கிழத்தி கொன்றைக்குச் சொல்லுவாளாய்த் தோழி கேட்பச் சொல்லியது.]

(பத.) கொன்றாய் - கொன்றை மரமே! ஈந்து உருவின் - ஈச்சம் பழத்தின் உருவத்தினையுடைய, இரும் கொண்மூ-பெரிய மேகமானது, முந்நீரை - கடனீரை, மாந்தி - குடித்து, ஐந்து உருவின்-ஐந்து நிறங்களையுடைய. வில் - வானவில்லை, எழுதி - எழுதிவைத்தாற்போல தோற்றுவித்து, முந்து உருவின் - பழைமையான உருவாகிய வானின் நீல நிறத்தைப் போன்று, நால்திசைக்கும்-நான்கு திக்குகட்கும், ஒன்றாய் - ஒன்றாக (நீல நிறத்தோடு பரவி), உரும்

உடைத்தாய் - இடிகளையுங் கொண்டு, பெய் - பெய்யப்படுகின்ற, வான்போல் - ஆகாயவெளி என்னைக் கொல்கின்ற தன்மைபோல, குழைத்து - தழைத்தலைச் செய்து, பூக்கு என்று - பூத்தலைச் செய்வேனென்று, என் கொன்றாய் - என்னைக் கொன்றுவிடுகின்றனை. (என்று தலைவி கொன்றை மரத்தை நோக்கிக் கூறினாள்.)

(ப-ரை.) ஐந்து நிறத்தினையுமுடைய வில்லை யெழுதினாற்போலக் கோலி, முந்நீரைப் பருகி, ஈந்தின் கனிபோன் றருந்துகின்ற வுருவோடு இருங்கொண்மூ நாற்றிசைக்கண்ணும் ஒன்றா யுருமுடைத்தாய்ப் பெய்யப்படுகின்ற வானம் என்னைக் கொல்கின்றாற்போலத் தழைத்துப் பூப்பேனென்று என்னைக் கொன்றாய்; கொன்றை மரமே!

(விரி.) இந்து - ஈந்து: குறுக்கல் விகாரம். முந்நீர்-கடல்; படைத்தல், காத்தல், அழித்தல் என்ற முத்தன்மையினையுடைய நீர்: காரணப் பெயர். பூக்கு - தன்மை யொருமை எதிர்கால வினைமுற்று. குழைத்தல் - தழைத்தல். (கO௪)

எல்லை தருவான் கதிர்பருகி யீன்றகார்
கொல்லைதரு வான்கொடிக ளேறுவகாண்—முல்லை
பெருந்தண் டளவொடுதங் கேளிரைப்போற் காணாய்
குருந்தங் கொடுங்கழுத்தங் கொண்டு.

[பருவங் கண்டழிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது.]

(பத.) (தோழியே!) எல்லை - பகல் வேளையினை, தருவான் - கொடுப்பவனாகிய பகலோனின், கதிர் - கதிர்கள், பருகி - (நிலத்தின்கணுள்ள நீரினைக்) குடித்து, ஈன்ற - உண்டாக்கிய, கார்-மழை பெயலினாலே, கொல்லை-முல்லை நிலமானது, தரு-வளர்விக்கின்ற, வான் கொடிகள் - நீண்ட கொடிகள், ஏறுவ காண் - மரங்களிற் படர்ந்து கொண்டிருப்பதைக் காண்பாயாக, முல்லை - முல்லைச் செடிகள், பெரும் - பெரிய, தண் - குளிர்ந்த, தளவொடு - செம்

முல்லைப்பூச் செடிகளுடனே கூடி, குருந்து - குருந்த மரங்களை, தம் கேளிரைப்போல் - தம் சுற்றமாகிய கணவன்மாரைப் பெண்டிர் தழுவிக்கொள்ளுமாறு போல, அங்கு - அவ்விடத்தே, ஒடுங்கு - (அம்மரங்கள்) ஒடுங்கி நிற்கும்படியாக, அழுத்தம் கொண்டு - கெட்டியாக, (ஏறுவ-) படர்ந்தேறி நிற்பதை, காணாய் - காண்பாயாக, (என்று தலைவி தோழியிடங் கூறினாள்.)

(ப-ரை.) பகலினைத் தருங் கதிரோனுடைய கதிர்கள் நீரை நிலத்தின்கட் பருகி யீன்ற காரானே கொல்லைகள் தருகின்ற வாலிய கொடிகண் மரந்தோறுஞ் சென்றேறுவன வற்றைக் காணாய்! அன்றியேயும், முல்லைகள் பெருந் தண்டளவுடனே குருந்து அங்கு ஒடுங்கு அழுத்தங்கொண்டு தங் கேளிரைப்போ லேறுவன காணாய்!

(விரி.) எல்லை - பகற்பொழுது. எல்லை தருவான் - இரண்டன் றொகை. இங்குச் சூரிய வெப்பத்தால் கார் உண்டாகின்றது எனும் இக்காலக் கொள்கை கூறப்பெறுதல் காண்க. வான் - பெரிய: பெருமை ஈண்டு நீட்சியைக் குறித்தது. ஏறுவ என்பதைப் பின்னுங் கூட்டுக. பருவக்காட்சியானது தலைவிக்குப் புணர்ச்சி வேட்கையை மிகுத்து அவள் அழிதற்குக் காரணமாய் நிற்குமாறு காண்க. (௯௦௫)

என்னரே யேற்ற துணைப்பிரிந்தா ராற்றென்பா
ரன்னரே யாவ ரவரவர்க்கு—முன்னரே
வந்தாரந் தேங்கா வருமுல்லை சேர்தீந்தேன்
கந்தாரம் பாடுங் களித்து.

[வற்புறுத்துந் தோழிக்குத் தலைமகள் வன்புறை யெதிரழிந்து சொல்லியது.]

(பத.) (தோழியே!) முன்னரே - எனக்கு முன்பாகவே, ஆரம் - சந்தனச் சோலைகளிலும், தேம் கா - தேன்மிகுந்த பொழி

லில், வரு - வளர்கின்ற, முல்லை - முல்லைச் செடிகளிலும், சேர் - தங்கியுள்ள, தீம் தேன் - செவிக்கினிய வொலியினையுடைய தேன் வண்டுகள், வந்து - சேர்ந்து, களித்து - மகிழ்ச்சிகொண்டு, கந்தாரம் - காந்தாரம் என்னும் பண்ணினை, பாடும் - பாடாநின்றன, (இவ்வேளையில்) ஏற்ற - (தம்மையே இம்மை மறுமைத் துணையாக) மேற்கொண்ட, துணை - காதலிமார்களை, பிரிந்தார் - பிரிந்து சென்ற காதலர்கள், என்னரே - எப்படிப்பட்ட கொடியராவர்! (மேலும்,) அவர்க்கு - அங்ஙனம் பிரிந்து வருந்தும் காதலிமார்க்கு, ஆற்று என்பார் - பிரிவினைப் பொறுத்துக்கொள் என்று சொல்பவர்களாகிய, அவர் - ஆறுதல் கூறுபவர்கள், அன்னரே யாவர் - (அக்காதலிமார்களைப் பிரிந்து சென்ற) காதலராகிய கொடியார்களையே ஒப்பாவர். (ஆகலின், என்னை வற்புறுத்தி ஆற்றுவிக்கும் நீயும் கொடியள் என்று குறிப்பாகத் தோழிக்குத் தலைவி கூறினள்.)

(ப-ரை.) என்னரே யேற்ற துணைப்பிரிந்தார் என்பது எப்பெற்றியர் அவர் தமக்கன்புபட்ட காதலரைப் பிரிந்தார் என்றவாறு. ஆற்றென்பா ரன்னரே யாவரவரவர்க்கு என்பது அக்காதலித்தாரைப் பிரிந்தாரோ டொப்பர், பிரியப்பட்டார்க் காற்றி இறந்துபடாதிருக்கச் சொல்லுவார் என்றவாறு. முன்னரே வந்து ஆரந் தேங்கா வரு முல்லை சேர் தீந்தேன் கந்தாரம் பாடுங் களித்து என்பது எனக்கு முன்னே வந்து சந்தனப் பொழிலையும், தேங்காவின்கண் வளர் முல்லைகளையுஞ் சேர்ந்த தீந்தேன்கள் கந்தார மென்னும் பண்ணினைக் களித்துப் பாடாநின்றன என்றவாறு.

(வி.) வற்புறுத்தல் - பொறுத்துக்கொள் என்று வற்புறுத்திக் கூறுதல். காந்தாரம் - ஒரு பண். (௧௦௯)

கருவுற்ற காயாக் கணமயிலென் றஞ்சி
யுருமுற்ற பூங்கோட லோடி—யுருமுற்ற

வைந்தலை நாகம் புரையு மணிக்கார்தா
னெந்தலையே வந்த தினி.

[பருவங் கண்டழிந்த கிழத்திக்குந் தோழி சொல்லியது.]

(பத.) (அன்புள்ள தலைவியே!) கரு உற்ற - கருக் கொண்டு பூத்துள்ள, காயா - காசாம்பூச்செடியின் திரட்சியை, கணம் - தோகையாகிய தொகுதியினையுடைய, மயில் என்று - ஆண் மயில் என்று நினைத்து, அஞ்சி-பயந்து, உரும் உற்ற - (இருந்த இடத்தை) விட்டுப் பின்வாங்குதலுற்ற, ஐந்தலை நாகம் - ஐந்து தலைகளையுடைய நாகப்பாம்பானது, உரும் உற்ற - இடியினாலே தாக்குதலுற்ற, பூங் கோடல் - பூக்களையுடைய வெண் காந்தளின் அருகிலே, ஓடி - சென்று, புரையும் - அதனை யொத்துக் காணும்படியான, மணிக் கார் - இந்த அழகிய கார்ப்பருவமானது, இனி - இப்பொழுது, எந்தலையே - நம்மிடத்தினையே குறிக்கோளாகக் கொண்டு, வந்தது - வருத்தும்பொருட்டு வந்துவிட்டது. (என்று தோழி தலைவியினிடங் கூறினாள்.)

(ப-ரை.) கருக்கொண்டு பூத்த காயாம்பூவினைத் தொகுதியையுடைய மயிலென்றஞ்சி உருமுற்ற ஐந்தலை நாகங்கள் உருமுற்ற பூங்கோடல்களை யொவ்வாநின்ற அழகிய இக் கார்ப்பருவந்தான், எம்முடைய மாட்டே நலிய வந்தது இப்பொழுது.

(விரி.) உரும் - விடுதல், இடி. "நாகம் காயாவினை யஞ்சி, ஓடி, புரையும் கார் இனி வந்தது," என முடிக்க. (கOஎ)

கண்ணுள வாயின் முலையல்லை காணலா
மெண்ணுள வாயி னிறவாவா—லெண்ணுளவா
வன்றொழிய நோய்மொழிச்சார் வாகா துருமுடைவா
னென்றொழிய நோய்செய்த வாறு.

[பருவம் அன்றென்று வற்புறுத்துந் தோழிக்குத் தலைமகள் ஆற்றாது சொல்லியது.]

(பத.) (தோழியே!) உரும் உடை வான் - இடியோடு கூடிப் பெய்கின்ற இம் மழை, ஒன்று ஒழிய - (காமத்தா லுண்டாம் பத்துத் துன்பங்களுள்) சாக்காடு என்னும் துயர் ஒன்று நீங்கலாக, நோய் - மற்றைய ஒன்பதுவகைத்துன்பங்களையும், செய்த - உண்டாக்கிய, ஆறு - வழியினை (இம் மழையாற் பூத்த முல்லைச் செடிகள் கண்களைப் பெற்றிராமையின் காணுதே நகுவனவாயின,) முல்லையல்லை - நீ அம் முல்லையினைப் போன்றவளல்லவாகலின், (உனக்குக் கண்கள் இருக்கவேண்டும்,) கண் உளவாயின் - அங்ஙனம் உனக்குக் கண்கள் இருப்பது மெய்யாளுல், காணலாம் - (என் துயர்க்கு நகுதலே யன்றி அதனைக் காணுதலையும் செய்யலாம், எண் - (காதலர் இத் துணை நாட்களில் வருகின்றேன் என்று குறித்துச் சென்ற) நாட் கணக்கு, உளவாயின் - தவறுதிருக்க இது அப்பருவமன்றுயின், இறவா - (இம்மழை இங்ஙனம்) எல்லை கடந்து தொடர்ந்து பெய்ய மாட்டா, ஆல் - ஆகலின், நோய் ஒழிய - நான் கொண்ட துன்பங்கள் நீங்கும்படி, மொழி - (நீ என்னை யாற்றுவிக்கின்ற) நின் சொல், எண்-நீ (என்னை யாற்றுவிக்க விரும்பி நின் மனத்தின்கண் நினைத்த) எண்ணத்தின்கண், உளவா அன்று - உள்ள முறையே யல்லாமல், சார்வு ஆகாது - எனக்குப் பற்றுக்கோடாக மாட்டாது. (என்று தலைவி தோழியிடங் கூறினுள்.)

(ப-ரை.) உருமுடை வான் ஒன்றொழிய நோய் செய்த வாறு கண்ணுளவாயின் முல்லையல்லை காணலாம் என்பது உருமுடையவான் இறந்து பாடொன்றையும் ஒழிய மற்றைக் குறிப்புக்கள் ஒன்பதும் எனக்குளவாம்படி என்னை நோய் செய்தவாற்றை நினக்குங் கண்ணுளவாயின் முல்லையல்லை யாதலின் நக்குக் காண் என்றவாறு. எண்ணுளவாயின் இறவாவால் என்பது அவர் குறித்த இத்துணை நாளுள் வருகின்றேன் என்ற எண் பழுது படாவாயின், அவர் சொன்ன நாளைக் கடவா அன்றே என்றவாறு. எண்ணுள வாவன்றொழிய நோய் மொழிச் சார்வாகாது என்பது

என்னை ஆற்றுவிக்க வேண்டி நின் மனத்தின்கண் எண்ணின எண்ணின்கண் ணுள்ளவா வன்றி என்னோ டொழிதற்கு நீ யாற்றுவிக்கின்ற நின்மொழி எனக்குச் சார்வாகாது என்றவாறு.

(விரி.) "நீ பருவமன்றென்று கூறுகின்றாய். பெய்யும் மழையோ பருவகாலம் போன்று தொடர்ந்து பெய்து என்னைப் பெரிதும் துன்புறுத்துகின்றது. உன் கருத்தும் மொழியும் என்னை யாற்றுவிப்பதிலே ஊன்றி நிற்கின்றன. ஆயினும், அவற்றால் யான் பெறும் பயன் யாதுமின்று," என்று தலைவி தோழிக்குக் கூறிய தாகு மிச்செய்யுள். மற்றைய ஒன்பதுவகைத் துன்பங்கள்:— அன்பொடு பார்த்தல், உளங்கொடு பற்றல், புணர்ச்சி வேட்கை, உறக்க மொழிதல், உடன் மெலிதல், உணர்வொழிதல், நாணழிதல், வாய்விட்டரற்றல், மயக்கமுறுதல். முலை = முல்லை: இடைக்குறை விகாரம். அன்றி = அன்று: செய்யுளாகலின், இகரம் உகர மாயிற்று. ஆற்றுதல் - பொறுத்தல். (க0அ)

என்போ லிகுளை! இருங்கடன் மாந்தியகார்
பொன்போறார் கொன்றை புரிந்தன—பொன்போற்
றுணைபிரிந்து வாழ்கின்றார் தோன்றுவர் தோன்றா
ரிணைபிரிந்து வாழ்வ ரினி.

[பருவங்கண்டு ஆற்றளாய தலைமகள் தோழிக்குச்
சொல்லியது.]

(பத.) என்போல் - எனதுயிர்போன்ற, இகுளை - இனிய தோழியே! கார் - முகில்கள் (மழையினைப் பெய்யும் பொருட்டு,) இரும் கடல் - பெரிய கடனீரை, மாந்திய - உண்டு கருத்து வெளிப்பட்டன, (அவ்வளவில்,) கொன்றை - கொன்றை மரங்கள், பொன் போல் - பொன்னாற் செய்யப்பட்டன போன்ற, தார் - மலர் வரிசைகளாகிய மாலைகளை, புரிந்தன - பூத்து மேற்கொண்டன, (அவ்வளவிலே,) பொன்போல் - பொன்னினைப் போன்று பெறுதற்

கரிய, துணை - காதலிமார்களை, பிரிந்து வாழ்கின்றார் - பிரிந்து சென்ற காதலர்கள், தோன்றுவர் - திரும்பி வந்து தங்காதலியரை மகிழ்விக்கலாயினர், இணை - நம்மோடு கூடுதலினின்றும், பிரிந்து - பிரிதலைச் செய்து, வாழ்வர் - பொருளைப் போற்றுதலாகிய வாழ்க்கையை நடத்தும் தலைவர், இனி - இக்கார்ப் பருவத்திலும். தோன்றார் - திரும்பி வருதலைச் செய்யாதவரா யிருக்கின்றனர், (என்னே! என்று தலைவி வருத்த முற்றவளாய்த் தோழியிடங் கூறினாள்.)

(ப-ரை.) என்னைப் போன்ற தோழி! பொன் போன்ற தார்களைக் கொன்றைகள் ஈனும் வகை இருங்கடலைப் பருகின முகில்களாதலால், பொன் போலப் பெறுதற்கரிய தந் துணைகளைப் பிரிந்து போய் வாழ்கின்றார் அத்துணைக்கண் அவர்மாட்டுத் தோன்றுவர்; நம்மோடிணை தலைப் பிரிந்து வாழ்கின்றார் இப்பருவத்தின்கண்ணுந் தோன்றுகின்றிலர்.

(விரி.) இருளை - அண்மை விளி. உயர்திணைப் பொருளே யன்றி அஃறிணைப் பொருளும் ஒழுங்குடன் நடைபெறத் தன் காதலர் மட்டும் அங்ஙனமாயது கொடிது என்பது தலைவி கருத்து. (௧0௧)

பெரியார் பெருமை பெரிதே யிடர்க்கா
ணரியா ரெளியரென் றாற்றாப்—பரிவாய்த்
தலையழுங்கத் தண்டளவந் தாநகக்கண் டாற்றா
மலையழுத சால மருண்டு.

[இதுவு மது.]

(பத.) (தோழியே!) ஆற்றா - பொறுக்க வியலாத, பரிவாய் - துன்பத்துடன், தலையழுங்க - நாம் தலை சாய்க்கும் படியாக, தண் - குளிர்ந்த, தளவம் - செம்முல்லைச் செடிகள் (நமது நிலையினை யெண்ணித் தமது சிறுமைக் குணத்தால்) நக - சிரித்துக்கொண்டு பூக்க, மலை - மலைகள், கண்டு - அதனைப் பார்த்து, அரியார் - தலை

விக்கு முன்பு அருமையானவராய் இருந்த தலைவர், இடர் - இடருற்ற இப்பொழுது, எளியர் - (அவ்விடரினை விலக்க) வியலா நிலையினராய்த் தொலைவிலுள்ளாரே, என்று - என நினைத்து, ஆற்று - பொறுக்காதனவாய், சால-மிகவும், மருண்டு-மயக்கத்தோடு கூடியனவாய், அழுத - (மழை நீரினைக் கண்ணீராக வழிய விட்டு) அழுதன, காண் - இதனைக் காண்பாயாக, (ஆதலான்) பெரியார் - பெரியவர்களாயுள்ளவர்களின், பெருமை - பெருந்தன்மைக்குணம், பெரிதே-உண்மையிற் கொண்டாடத் தகுந்ததாகவே காணப்படும். (என்று) தலைவி தோழியிடங் கூறினாள்.)

(ப-ரை.) பெரியாராயிருப்பார் பெருமைக்குணம் மெய்ம்மையாகப் பெரிதே: காண முன்னரியரா யுள்ளார் இடர் வந்த இப்பொழுது எளியராயினா ரென்றிரங்கி யழுங்கி ஆற்றுவாய் மலைகள் மிகவும் அழுதன; தலைசாய்க்கும் வகை பரிவாய்த் தண்டளவங்கள் தஞ்சிறுமையால் நகக் கண்டு.

(விரி.) ஆற்று=முற்றெச்சம் முன்னது ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். தாம் - அசைநிலை. (கசo)

கானங் கடியரங்காக் கைம்மறிப்பக் கோடலார்
வானம் விளிப்பவண் டியாழாக—வேனல்
வளரா மயிலாட வாட்கண்ணாய்! சொல்லா
யுளராகி யுய்யும் வகை.

[இதுவு மது.]

(பத.) வாள் கண்ணாய் - வாள் போன்ற கண்களையுடைய தோழியே! கானம் - காடாகிய முல்லை நிலமானது, கடி - சிறந்த, அரங்கா - நாடகசாலையாகவும், வானம் - முகிற் கூட்டமானது, விளிப்ப - (இடிக்குரலாகிய) பாட்டினைப் பாடவும், வண்டு - வண்டினங்கள், யாழ் ஆக - வீணையாகச் சுருதி கூட்டவும், வேனல் - கொதிப்பு மிக்க வேனிற்காலத்திலே, வளரா - தோகை விரித்து

மகிழ்ந்தாடாத, மயில் - மயிற் கூட்டங்கள், ஆட - ஆடுதலைச் செய்ய வும், கோடலார் - வெண் காந்தள் மலர்களாகிய வேடிக்கை பார்ப் போர், கைமறிப்ப - வியந்து கைகளைத் தூக்கி அசைத்துக் காட்ட வும் (நேர்ந்த இக்கார்காலத்தில்), உளர் ஆகி - (காதலரைப் பிரிந்த காதலிமார்கள்) இறந்துபடாது நிலைபெற்று, உய்யும் வகை - பிழைக் கும் வழி (ஏதேனுமிருந்தால்,) சொல்லாய் - எடுத்துச் சொல்வா யாக. (என்று தலைவி தோழியிடங் கூறினள்.)

(ப-ரை.) கானங் கடியரங்காகக் கோடலார் வியந்து கைம்மறிப்ப, முகில் பாட, வண்டுகள் யாழாக, வேனற் காலத்துக் களியாத மயில் களித்தாடாநிற்க, வாட்கண்ணாய்! சொல்லாய்; காதலரைப் பிரிந்தார் இறந்துபடாது உளராகி யுய்யுந் திறத்தை.

(விரி.) வேனல் - கானல் - காங்கை: கொதிப்பு. வண்டு + யாழ் = வண்டியாழ்: குற்றியலிகரம் அலகு பெறாது நின்றுளது.

தேரோன் மலைமறையத் தீங்குழல் வெய்தாக
வாரான் விடுவானே வாட்கண்ணாய்!—காரார்
குருந்தோடு முல்லை குலைத்தனகா ணும்
விருந்தோடு நிற்றல் விதி.

[பருவங்காட்டித் தோழி தலைமகளை வற்புறுத்தியது.]

(பத.) வாள்கண்ணாய் - வாளினை யொத்த கண்களையுடைய தலைவியே! தேரோன் - ஒற்றையாழித் தேரினை யுடையவனாகிய கதிரோன், மலை - மேற்குமலைத் தொடர்களில், மறைய - மறையப் பெற்று மாலைக்காலந் தோன்றியவளவிலே, தீம் குழல் - (ஆயர் கள் ஆனிரைகளுடன் மனைக்குத் திரும்புங்கால் ஊதும்) இனிய புல்லாங்குழ லோசையானது, வெய்து ஆக - கொடியதாக, கார் ஆர்- மழைபெயலாலே வளர்ந்து செழித்த, குருந்தோடு - குருந்தமரங்க ளுடனே, முல்லை - முல்லைச் செடிகளும், குலைத்தன - பூங் கொத்துக்

கள் நிரம்பப்பெற்று நின்றன, காண் - (நீ இந்நிலையினை நம் காதலன் குறித்துச் சென்ற பருவமென்று) கண்டு தெளிவாயாக, (ஆகவே,) வாரான் - இப்பருவ காலத்தின்கண்ணே நங் காதலன் வருதலைச் செய்யானாய், விடுவானோ - நம்மைக் கைவிடுவானோ? (விடமாட்டான்,) நாமும் - ஆகவின், நாமும் (அவன் வருகையை எதிர்நோக்கி,) விருந்தொடு நிற்றல் - அவனுக்கு விருந்து முதலியன செய்து காத்திருத்தல், விதி - நமது கடமையாம். (என்று தோழி தலைவியிடங் கூறினள்.)

(ப-ரை.) பகலோன் மலையின்கண் மறைய இனிய குழல் இன்னாதாய் வெய்தாக இக் காலத்தின்கண் வாராதே விடுவானோ? வாட்கண்ணாய்! பசுமையார்ந்த குருந்துடனே முல்லைகள் பூங்கொத்தை ஈன்றன காண்; இனி நாமும் அவர்க்கு விருந்து செய்து ஒழுகிநிற்றல் நெறி.

(விரி.) இச் செய்யுளில் தலைவன் அன் விகுதி பெற்று வருகின்ற செய்தி இந்நூலுக்குப்புதியதாம். பழையவுரையின் இறுதியில் தலைவனைக் குறிக்குங்கால், "அவர்க்கு," என்று கூறியமை இதனை வலியுறுத்தும். கார் - பசுமையின் மிகுதியாகிய நிறமுமாம். (கசஉ)

பறியோலை மேலொடு கீழா விடையர்
பிறியோலை பேர்த்து விளியாக் கதிப்ப
நரியுளையும் யாமத்துந் தோன்றுரா லன்னாய்!
விரியுளை மான் றேர்மேற்கொண் டார்.

[பருவங் கண்டழிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது.]

(பத.) அன்னாய் - (என்னை யீன்ற) அன்னையை யொத்த தோழியே! ஓலை - மழையைத் தடுத்தற்குரிய ஓலைப்படல், மேலொடு - மேலாக வமைந்திருப்பதுடன், பறி - படுத்துறங்கும் பறியென்னும் படுக்கை, கீழா - கீழாகக் கொண்டு, (ஆட்டுமந்தையினைக் காத்தல் செய்யும்,) இடையர் - ஆயர்கள், பிறியோலை - ஆடு

களைப் பிரித்தற்குக் கருவியாகிய பிறியோலையை, பேர்த்து - அசைத்துக் காட்டி, விளியா - அழைத்துக்கொண்டு, கதிப்ப - அதட்டுதலைச் செய்ய, நரி - ஆடுகளைக் கொல்லக் காத்திருந்த நரிகள், உளையும் - அஞ்சிக்கதறும்படியான, யாமத்தும் - நள்ளிருட்போதாகியும், விரி உளை - பரந்த பிடரிமயிரினையுடைய, மான் - குதிரைகள் பூட்டப்பட்ட, தேர்மேல் கொண்டார் - தேரிலமர்ந்து பொருள் தேடச் சென்ற தலைவர், தோன்றார் - திரும்பி வந்து சேர்ந்தாரில்லை, (என்று தலைவி தோழியிடங் கூறினாள்.)

(ப-ரை.) படுத்துத் துயிலும் பறி கீழாக ஓலைப்படன் மழைத்துளியைக் காத்தற்கு மேலாக இடையர்கள் கிடந்து யாடுகளைப் பிறித்தற்குக் கருவியாகிய பிறியோலையைப் புடை பெயர்வித்து அழைத்துரப்ப, நரிகள் அஞ்சிக் கதறும் யாமத்தின் கண்ணும் தோன்றாராற் றோழி! விரிந்த உளையையுடைய மாவாற் பூட்டப்பட்டதேரை மேற்கொண்டு போயினார்.

(விரி.) "ஓலை மேலொடு பறி கீழா," என எதிர் நிரனிறையாகக் கூட்டுக. பிறிவு=பிரிவு. ஆல் - அசைநிலை. மான் - னகரவொற்று சாரியை. (ககரு)

பாத்துப் படுகடன் மாந்திய பல்கொண்மூக்
காத்துக் கனைதுளி சிந்தாமைப்—பூத்துக்
குருந்தே! பருவங் குறித்திவளை நைந்து
வருந்தேயென் றய்நீ வரைந்து.

[பருவங் கண்டழிந்த தலைமகள் கேட்பத் தோழி குருந்த மரத்திற்குச் சொல்லுவாளாய்ப் பருவமன்றென்று வற்புறுத்தியது.]

(பத.) குருந்தே - குருந்த மரமே! படுகடல் - ஒலிக்கின்ற கடல் நீரை, பாத்து - கடலினின்றும் பகுத்தெடுத்து, மாந்திய -

குடித்த, பல் - பலவாகிய, கொண்மூ - முகில்கள், காத்து - அந் நீரைப் பாதுகாத்துக் கொண்டு வந்து, கனை - செறிவாக, துளி - மழைத்துளிகளை, சிந்தாமை - சிதறி நன்கு பெய்யாமலேயே, பூத்து - பூக்கள் நிரம்பப் பெற்று, பருவம் குறித்து - இது கார்ப் பருவமோ எனக் கருதச் செய்து, இவளை - என் தலைவியாகிய இவளை மட்டும், வரைந்து - தனியாக எடுத்துக்கொண்டு, நைந்து - உடல் மெலிந்து, வருந்தே - வருந்துவாய், என்றாய் நீ - என்று நீ பெரிதும் துன்புறுத்துகின்றனை. (என்று தோழி குருந்த மரத் தினை நோக்கிக் கூறினள்.)

(ப-ரை.) ஒலிக்கின்ற கடலைப் பருகி அந் நீரைக் காத்துக் கருமுற்றிப் பகுத்துச் செறிந்த துளிகளைச் சிதறுவ தற்கு முன்பே பூத்துக் குருந்தே! பருவத்தைக் குறித்துக் காட்டி இவளையே வரைந்து வருந்துவாய் என்றாய் நீ.

(விரி.) பாத்து - பகுத்து: மரூஉ. வருந்து - ஏவ லொருமை வினைமுற்று. ஏ - இசைநிறை. சிந்தாமை - எதிர்மறை வினை யெச்சம். (கககச)

படுந்தடங்கட் பல்பணைபோல் வான்முழங்க மேலுங்
கொடுந்தடங்கட் கூற்றுமின் னாக—நெடுந்தடங்கண்
ணீர்நின்ற நோக்கி! நெடும்பணைமென் றோளாட்குத்
தேர்நின்ற தென்னாய் திரிந்து.

[வினைமுற்றி மீண்ட தலைமகன் தலைமகட்குத்
தூதுவிடுகின்றானாய்த் தூதிற்குச் சொல்லியது.]

(பத.) படும் - ஒலிக்கின்ற, தடம் கண் - பெரிய கடிப்புறும் பாகத்தையுடைய, பல் பணை போல் - பலவாகிய முரசுகளைப் போன்று, வான் - முகில்கள், முழங்க - இடித்து ஆரவாரிக்க, மேலும் - இன்னும், மின் - மின்னலானது, கொடும் தடம் கண் - கொடிய பெரிய கண்களையுடைய, கூற்று ஆக - எமனைப் போன்று

தலைவியை வருத்த (அதனைப் பொறாது,) நெடும்-நீண்ட, தடம் - பெரிய, கண் - கண்களில், நீர் நின்ற - நீர்த்துளி ததத்ளித்துக் கொண்டு நிற்கும்படியான, நோக்கி - பார்வையினையுடைய தோழியே! நெடும் - நீண்ட, பணை - மூங்கிலை யொத்த, மெல் தோளாள் கு - மிருதுவான தோள்களையுடைய தலைவிக்கு, தேர் - எனது தேரானது, திரிந்து - திரும்பிவந்து, நின்றது - (நின்மனை வாயிலின் கண்ணே) நின்று கொண்டிருக்கின்றது, என்றாய் - என்று சொல்வாயாக. (என்று தலைவன் தோழியை நோக்கிக் கூறினான்.)

(ப-ரை.) ஒலியா நின்ற தடங்கண்ணையுடைய பலமுரசு போல் முகில்கள் முழங்குவதன் மேலும், மின்னே கொடிய தடங் கண்ணிணையுடைய கூற்றமாக, அழுகின்ற நீர் விடாது நின்ற நெடுந்தடங்கண்ணேக்கினையுடைய நெடும்பணை மென்றோளாட்கு நீ, மறித்துவந்து நின் மனைவாயிலின் கண்ணே அவன்றேர் நின்றதென்று சொல்லுவாய்; எமக்கு முன்னே சென்று தூதாக.

(விரி.) கார்காலவரவானே மயங்கிய தலைவியைக் கண்டு கலங்கிய தோழி வீட்டுவாயிலின் முன்னே நின்று தலைவன் வரவினை நோக்கினளாக, அவ்வளவில் தலைவன் தேரொடுந் திரும்பிவந்து அவளை நோக்கிக் கூறியதாகு மிச் செய்யுள். வினை-பொருள்தேடுதன் முதலியன. இங்குத் தூது தோழியாவள். நோக்கி - அண்மைவிளி. (கக௫)

குருந்தே! கொடிமுல்லாய்! கொன்றாய்! தளவே!
முருந்தே யெயிறொடுதார் பூப்பித்—திருந்தே
யரும்பீர் முலையா ளணிகுழறாழ் வேய்த்தோள்
பெரும்பீர் பசப்பித்தீர் பேர்ந்து.

[பருவங்கண்டு ஆற்றளாய தலைமகள் ஆற்றல் வேண்டித் தோழி தான் ஆற்றளாய்ச் சொல்லியது.]

(பத.) குருந்தே - குருந்த மரமே! கொடி முல்லாய் - கொடியாகப் படர்ந்துள்ள முல்லைச் செடியே! கொன்றாய் - கொன்றை மரமே! தளவே - செம்முல்லைச் செடியே! முருந்து - மயிற்பீலியினடிப்பாகத்தினை யொத்த, எயிறு ஒடு - பற்களுடனே, தார் - பூமாலையினையும், பூப்பித்து இருந்து - தன்பால் விளங்கக் கொண்டிருந்து, அரும்பு - கோங்கினது அரும்பின் தன்மையையும், ஈர் - சிதைக்கும்படியான, முலையாள் - முலைகளையுடைய என் தலைவியின், அணி - அழகிய, குழல் - கூந்தல், தாழ் - தொங்கிப் புரளும்படியான, வேய் - மூங்கிலை யொத்த, தோள் - தோள்களை, பெரும்- பெரிய, பீர் - பீர்க்கம்பூவின் நிறம் போன்று, பேர்ந்து - மீளவும், பசப்பித்தீர் - பசலை பூக்கச் செய்யலானீர். (இஃதென் கொடுமை! என்று தோழி வருத்தமிக்கவளாய்க் கூறினள்.)

(ப-ரை.) குருந்தே! கொடி முல்லாய்! கொன்றாய்! தளவே! பீலி முருந்தினையொக்கும் இவளெயிற்றுடனே பூமாலையையும் பூப்பித் திருந்து கோங்கரும்பு முதலாயின வற்றை வென்று சிதைக்கும் முலையினை யுடையாளுடைய குழறாழ்ந்த நிறைந்த வேய்த்தோள்களைப் பெரும்பீர் நிறம் போலப் பசப்பித்தீர் மீட்டும்.

(விரி.) முருந்தே, இருந்தே என்பவற்றிலுள்ள ஏகாரங்கள் இசைநிறைப்பொருளன. வேய்த்தோள் - உவமைத்தொகை. (ககக)

கதநாகம் புற்றடையக் காரேறு சீற
மதநாக மாறு முழங்கப்—புதனுகம்
பொன்பயந்த வெள்ளி புறமாகப் பூங்கோதாய்!
என்பசந்த மென்றோ ளினி.

[தலைமகளைத் தோழி பருவங் காட்டி வற்புறுத்தியது.]

(பத.) பூங்கோதாய் - அழகிய கூந்தலையுடைய தலைவியே! கதநாகம் - சினமிக்க பாம்புகள், புற்று - புற்றினை (பாதுகாப்பிட

மாகக் கொண்டு,) அடைய - சேரும்படி, கார் ஏறு - முகிலின் கண்ணேயுள்ள இடியானது, சீற - சினந்து முழங்கவும், மதநாகம்- மதத்தினையுடைய யானையானது, மாறு - அவ்விடிக்கு மாறாக, முழங்க - ஒலித்து ஆரவாரிக்கவும், புதல் நாகம் - புதர்களாற் சூழப் பட்ட சுரபுன்னை மரங்கள், வெள்ளி - வெள்ளியினைப் போன்ற விதழ்கள், புறமாக - புறத்தே சூழ்ந்திருக்க, பொன்-பொன்போன்ற பூந்தாதுக்களை, பயந்த - கொண்டனவாகப் பூக்கவும் (காதலன் கூறிய காலமாகிய கார்ப்பருவம் வந்தது; காதலனும் காலந் தவறாது வரப் போகின்றனன்; அப்படி யிருக்க,) மெல்தோள் - நின்மெல் லிய தோள்கள், இனி - இப்பொழுது, என்பசந்த - என்ன காரண மாகப் பசலை பூக்கலாயின? (என்று தோழி தலைவியை வினவி வருந்த வேண்டாமென வற்புறுத்தினள்.)

(ப-ரை.) சினத்தினையுடைய பாம்புகளும் புற்றினை யடையும்வகை உருமேறு வெகுண்டிடிப்ப, மதத்தை யுடைய யானைகள் அவ்வுரு மேற்றுக்கு எதிரே முழங்க, புதலாற் சூழப்பட்ட நாகமரங்கள் வெள்ளிபோலும் இதழ்கள் புறஞ்சுற்றப் பொன்போலுந் தாதுக்களை உள்ளே பயந்தன வாதலாற் பூங்கோதாய்! நின் மென்றோள்கள் யாது காரணத் தாற் பசந்தன இப்பருவத்து?

(விரி.) கோதை - பெண்மயிர்; கூந்தல்: மாலை. (கசஎ)

கார்தோன்றிப் பூவுற்ற காந்தண் முகைவிளக்குப்
பீர்தோன்றித் தூண்டுவாண் மெல்விரல்போ-னீர்தோன்றித்
தன்பருவஞ் செய்தது கானந் தடங்கண்ணாய்!
என்பருவ மன்றென்றி யின்று.

[பருவம் அன்றென்று வற்புறுத்துந் தோழிக்குத் தலைமகள் வன்புறை யெதிரழிந்து சொல்லியது.]

(பத.) தடம் - பரந்து செல்லும்படியான, கண்ணாய் - கண் களையுடைய தோழியே! விளக்கு - (வீட்டின்கண்ணுள்ள) விளக்

கானது, பீர்தோன்றி - (மழுங்கி எரிதலான்) பீர்க்கம்பூவின் நிறம் பெற்று நிற்றலின், தூண்டுவாள் - அதனைத் தூண்டிவிட்டு நன் கெறியச் செய்வாளின், மெல்விரல் போல் - மிருதுவான விரல் களைப் போன்று, காந்தள் முகை - காந்தள் மொட்டுக்கள், தோன்றிப்பூ - கார்த்திகைப் பூக்களின் மீதே, உற்ற - பொருந்திப் பூத்து நின்றன, கார் - மழை பெயலானே, கானம் - முல்லை நில மானது, நீர் தோன்றி - எங்கும் நீர் நிரம்பப் பெற்று, தன் பருவம் - தனக்குரிய கார்ப்பருவத்தினை, செய்தது - மேற்கொண்டு விளங்க லாயிற்று, (இங்ஙனமிருக்க,) இன்று - இப்பொழுதினை, என் - யாது கருதி, பருவம் அன்று என்றி - காதலர் திரும்புவதாகச் சொன்ன கார்ப்பருவம் அல்லவென்று சொல்ல முன் வந்தனை ? (என்று தலைவி தோழியை வினவினள்.)

(ப-ரை.) விளக்கு மழுங்கிப் பீர்நிறங் கோடலான் அவ்விளக்கினைத் தூண்டுவாள் மெல்விரலினைத் தோன்றிப் பூவின்மேற் சென்றன காந்தண் முகைகள் போலும்வகை கார் நீர் தோன்றுதலாற் காரின் பருவத்தைச் செய்தன கானங்கள் ; இத்தைக் கண்டும், தடங்கண்ணாய்! எனக்குக் காதலர் சொல்லிய பருவம் அன்றென்று நின்றி.

(விரி.) என்றி-முன்னிலை யொருமை வினைமுற்று. "காந்தண் முகை, விரல் போல், பூவுற்ற, கானம், தோன்றிப் பருவஞ் செய்தது ; அங்ஙனமிருக்க என் பருவ மன்றென்றி," என முடிக்க. (கக அ)

உகவுங்கா ரன்றென்பா ரூரா ரதனைத்
தகவு தகவன்றென் றோரேன்—றகவேகொல்
வண்டுடுப்பாய்ப் பாம்பாய் விரலாய் வளைமுறியாய்
வெண்குடையாந் தண்கோடல் வீந்து.

[இதுவு மது]

(பத.) (தோழியே !) ஊரார்-இவ்வூரிலுள்ள சிலர், உகவும் கார் அன்று - மழைத்துளிகள் மகிழ்வோடு காணப்படும் கார்ப்பருவம்

இது அல்ல, என்பார் - என்று சொல்கின்றனர், அதனை - அங்ஙனமவர் சொல்கின்ற போக்கினை, தகவு - நேர்மையானது, தகவு அன்று - (அல்லது) நேர்மையுடையதல்ல, என்று - என்பதாக, ஓரேன் - அறியேன், (ஆனால்,) தண் கோடல் - குளிர்ந்த வெண்காந்தளானது (இம்மழையினாலே,) வண் துடிப்பாய் - (முதலில்) வளவிய துடிப்புப் போன்று அரும்பி, பாம்பாய் - (பின்பு) பாம்பினைப் போன்று அவ்வரும்பு நீளப்பெற்று, விரல் ஆய் - (அதன் பின்பு) விரல்கள் போல் விரிந்து, வளைமுறியாய் - (மேலும்) வளைகின்ற தளிர்கள் போன்ற இதழ்களைக் கொண்டு, வீந்து - (இறுதியில் அவ்விதழ்கள்) கீழ் நோக்கி மடிவுற்று, வெண்குடையாம் - வெண்மையான குடையினைப் போன்று காணப்பட்டுக் கார்ப்பருவம் இது என்பதை வலியுறுத்தாநிற்கும், (அங்ஙனமிருக்க,) தகவே கொல் - (இவ்வேளையினைக் கார்ப்பருவம் அன்றென்று கூறுவது) தக்க செயலாமோ? (என்று தோழியினைத் தலைவி வினவினள்.)

(ப-ரை.) மழைத்துளிகள் உகவுங் கார்ப்பருவம் அன்றென்று சொல்லாநின்றார் இவ்வூரார்; அச் சொலவுதான் அவர்க்குக் குணமோ குற்றமோ என்ப தறியேன்; அதுதான் அவர்க்குக் குணமே கொல்லோ! வளவிய துடிப்பாய்ப் பாம்பாய் விரலாய் வளைமுறியாய் வெண்குடையாகாநின்றது தண்கோட லழிந்து.

(விரி.) இங்குத் தோழி கூறிய பருவமன்றென்ற கூற்றினைத் தலைவி பொதுவாக ஊரார் பேரிலேற்றிக் குறிப்பாக உரைத்தனள். (கககூ)

பீடிலா ரென்பார்கள் காணார்கொல் வெங்கதிராற்
கோடெலாம் பொன்னாய்க் கொழுங்கடுக்கைக்—காடெலா
மத்தங் கதிரோன் மறைவதன்முன் வண்டொடுதேன்
றுத்த மறையுந் தொடர்ந்து.

[இதுவு மது.]

(பத.) (தோழியே!) கதிரோன் - பகலோன், வெம் கதிரால் - வெப்ப மிக்க கதிரோடு கூடி, அத்தம் - அத்தமன மலையாகிய மேற்கு மலைத் தொடரில், மறைவதன் முன் - ஒளிப்பதற்கு முன்னே, கொழும் கடுக்கை - வளப்பம் பொருந்திய கொன்றை மரங்களின், கோடு எல்லாம் - கிளைகளின் கொம்புகளி லெல்லாம், பொன் ஆய் - பொன் போன்ற பூக்கள் நிரம்பப் பெற்று, காடு எல்லாம் - முல்லை நிலங்களின் எல்லாப் பாகங்களிலும், வண்டு ஒடு - வண்டுகளுடனே, தேன் - தேன் வண்டுகளும், தொடர்ந்து- சேர்ந்து, துத்தம் - துத்தம் என்னும் பண்ணினை, அறையும் - ஒலிக்காநிற்கும், (இதனை,) பீடிலார் என்பார்கள் - (நம்மைப் பருவமல்லாப் பருவத்தைக் கண்டு வருந்தும்) இழிகுணமுடையார் என்று குறை கூறும் இவ்வூரார், காணார் கொல் - (கார்ப் பருவந்தான் என்று) காணமாட்டார்களா? (என்று தலைவி தோழியை வினவினள்.)

(ப-ரை.) நம்மைப் பெருமையிலரென்று சொல்லுவார் காணாதாராகாரே! வளவிய கொன்றைகள் கொம்பெல்லாம் பொன்னாகப் பூக்க, வண்டொடு தேன்கள் துத்தம் என்னும் பண்ணினைத் தம்முட் பொருந்தி ஒலியாநின்றன காடெல் லாம்; வெய்ய கதிரோடு கூடி வெங்கதிரோன் அத்த மலையை அடைதற்கு முன்னே.

(விரி.) கொல் - ஐயப் பொருள். "வெங்கதிரால் கோடெல்லாம் பொன்னாக," எனலுமாம். கதிரால் - ஆல் உடனிகழ்ச்சிப் பொருள்.

(கஉம)

ஒருத்தியா னொன்றல பல்பகை யென்னை
விருத்தியாக் கொண்டன வேறாப்—பொருத்தின்
மடலன்றின் மாலை படுவசி யாம்பல்
கடலன்றிக் காரூர் கறுத்து.

[இதுவு மது.]

(பத.) (தோழியே!) யான் - நான், ஒருத்தி - ஒருத்தியாக இருந்தும், ஒன்று அல - ஒன்று அல்லனவாகிய, வேறு ஆ -

(துணையன்றிலை விட்டுப் பிரிந்து) வேறாய், பொருந்து இல் - (பின்பு) பொருந்துதலில்லாத, மடல் - பனைமடலின்கண்ணேயுள்ள, அன்றில் - அன்றிற் பறவையும், மாலை - சாயுங்கால வேளையும், படு வசி - பெய்யும் மழையும், ஆம்பல் - ஆம்பற் குழலோசையும், கடல் - கடலும், அன்றி - மேலும், கார் - முகில்களும் (என்று சொல்லப்பட்ட,) பல் பகை - பல பகைகளும், என்னை - என் பேரில், ஊர் - ஊர்ந்து மேற்கொண்டு, கறுத்து - சினந்து, விருத்தியா - (என்னை வருத்துதலே தமது) தொழிலாக, கொண்டன - மேற்கொண்டுள்ளன. (இதற்கு யான் என் செய்வல், எனத் தோழியிடம் தலைவி வருந்திக் கூறினள்.)

(ப-ரை.) யானொருத்தி; எனக்கு ஒன்றல்ல பல பகைகள் என்னை மலைத்தலே தமக்கு ஒழுக்கமாகக் கொண்டன: வேறாகத் துணையைப் பிரிந்து பொருந்தில் மடற்பனை மேலிருந்த அன்றில், மாலைப்பொழுது, மழைபெயல், ஆம்பற்குழல், கடல் அன்றியே முகில்கள் என்று சொல்லப்பட்ட இவையெல்லாம் மேல் வெகுண்டு.

(விரி.) என்னை - உருபுமயக்கம். "யான் ஒருத்தி ; ஒன்றலவாகிய அன்றில், மாலை, வசி, ஆம்பல், கடல், கார் என்ற பல்பகை என்னை (வருத்துதலை) விருத்தியாக் கொண்டன," எனக் கூட்டுக. அன்றி, " யான் ஒருத்தி காதலனைவிட்டு வேறாப் பொருந்தின் ஒன்றலவாகிய மடல் முதலியனவாகச் சொல்லப்பட்ட பல்பகை என்னை விருத்தியாக் கொண்டன," எனலுமாம். பொருந்து - பொருத்து ; எதுகை நோக்கி வலிந்து நின்றது. (கஉக)

கானந் தலைசெயக் காப்பார் குழற்றேன்ற
வேன மிடந்த மணியெதிரே—வான
நகுவதுபோன் மின்னுடை நாணிலென் னாவி
யுகுவது போலு முடைந்து.

[இதுவு மது.]

(பத.) (தோழியே !) கானம் - முல்லை நிலங்கள், தலை செய - தழைத்து ஓங்கவும், காப்பார் - (ஆனிரை மேய்த்துப்) பாதுகாக்கும் இடையர்கள், குழல்-(ஊதும்) புல்லாங்குழலோசையானது, தோன்ற- வெளிப்படவும், ஏனம் - பன்றிகள், இடந்த - நிலத்தைக் கிளறிய தாற் றோன்றிய, மணி - மாணிக்கங்களுக்கு, எதிரே - எதிராக, வானம் - முகில்கள், நகுவதுபோல் - சிரிப்பதுபோல, மின் - மின்னல்கள், ஆட - ஒளிவிட்டுத்தோன்றவும், நாண் இல் - (இந்நிலை கண்டும் இறந்து படாமையான்) நாணமில்லாத, என் ஆவி - என்னுயிரானது, உடைந்து - துகளாகி (வருந்தி,) உகுவதுபோலும் - உதிர்ந்து விழுவது போலவுளது. (என்று தலைவி தோழியிடங் கூறினாள்.)

(ப-ரை.) காடுகள் தழைத்துத் தலையெடுக்க, ஆயர் ஊதுங் குழலோசை தோன்ற, ஏனங்கள் இடந்த மணிகளி னெதிரே முகில்கள் சிரிப்பது போல மின்கள் ஒளிவிட இக் காலத்தும் இறந்து படாமையான் நாணில்லாத என்னுயிர் ஒழுகுவது போலவுளது.

(விரி.) "நாண வென்னாவி," எனவும் பாடம். அப்பாடத் திற்கு, செய, தோன்ற, ஆட, இவற்றைக்கண்டு என்மனம் நாணு தலைச் செய்ய, ஆவியுடைந்து உகுவது போலும் என முடிக்க. பழைய வுரையில், 'உடைந்து,' என்னும் மொழிக்குப் பொருள் காணப் பெறவில்லை. (கஉஉ)

இம்மையாற் செய்ததை யிம்மையே யாம்போலு
மும்மையே யாமென்பா ரோரார்கா—ணம்மை
யெளிய ரெனநலிந்த வீர்ங்குழலா ரேடி !
தெளியச் சுடப்பட்ட வாறு.

[குறித்த பருவத்தின்கண் வந்த தலைமகனைப் புணர்ந்திருந்த தலைமகள் முன்பு தன்னை நலிந்த குழலோசை அந்தி மாலைப் பொழுதின்கட் கேட்டதனுற் றுயருறுதாளாய்த் தோழிக்குச் சொல்லியது.]

(பத.) ஏடி - தோழியே! நம்மை - (முன்பு தலைவனைப் பிரிந்திருந்த) நம்மை, எளியர் என - வருத்துதற்கு இலகுவானவர்கள் என்று நினைத்து, நலிந்த - வருத்திய, ஈர்ம் குழலார் - குளிர்ந்த புல்லாங் குழலார், தெளிய - (உலகிற் பலரும்) அறியும்வண்ணம், சுடப்பட்டவாறு - சுட்டுத் துளை செய்யப்பட்ட முறையினை, காண் - (நன்கு) காண்பாயாக, (இதனால்,) இம்மையால் - இப்பிறப்பின்கண்ணே, செய்தது - ஒருவன் செய்த தீவினை, இம்மையே - இப்பிறப்பிலேயே, ஆம் போலும் - அவனை யடைந்து பயன் கொடுக்கும் போற் காண்கிறது, ஓரார் - (இவற்றை யெல்லாம் நன்கு) ஆராயாத அறிவிலிகளே, உம்மையே ஆம் என்பார் - மறுபிறப்பின்கண்ணே தான் அத்தீவினை பயன் கொடுக்கும் எனப் பகர்வார்கள். (என்று தலைவி தோழியிடங் கூறினள்.)

(ப-ரை.) இப்பிறப்பின்கட் செய்த தீவினை இப்பிறப்பின்கண்ணே விளையும் போலும்! மறுபிறப்பின்கண் ஆம் என்பார் அறியாதார் காண்; முன்பு நம்மை எளியரெனக் கொண்டு துயர்செய்த ஈர்ங்குழலார், தோழி! எல்லாரும் அறியச் சுடப்பட்டவாற்றைப் பாராய்.

குழல் நலிவது நெருப்பாற் சுடப்பட்டுத் துளை பட்ட பின்: சூடுண்டது பிறரை நலிந்ததாற் பயனென்று குழலைச் சொல்லுமா றென்னையெனிற் பிறரை நலியுந் தன்மை முன்பே அதற்குளதாதலாற் பட்ட தெனக்கொள்க.

(விரி.) இம்மையால் - உருபு மயக்கம். செய்ததை - ஐ சாரியை. ஈர்ங்குழலார் என்பதற்கு முன்பு காதலருடன் கூடி வாழ்ந்து நம்மை யிகழ்ந்து இப்பொழுது பிரிந்து வருந்தும் பெண்கள் எனவும் கொள்ளக் கிடக்கின்றமை காண்க. குழலார் என்றது இழிவு கருதியதாம். (கஉரு)

முல்லை முற்றும்.

---

## ஐந்தாவது—மருதம்.

செவ்வழியாழ்ப் பாண்மகனே! சீரார்தேர் கையிலு
லிவ்வகை யீர்த்துய்ப்பான் றோன்றுமு—னிவ்வழியே
யாடினு னய்வய லூரன்மற் றெங்கையர்தோள்
கூடினன் பின்பெரிது கூர்ந்து.

[பாணற்குத் தலைமகள் வாயின் மறுத்தது.]

(பத.) செவ்வழி - செவ்வழிப்பண்ணைச் சிறப்பாகப் பாடும், யாழ் - யாழினைக்கொண்ட, பாண்மகனே - பாணனே! ஆய்வயல் - (நல்ல வென்று பலரால்) ஆராய்ந்து சொல்லப்பட்ட நன்செய் நிலங்கள் மிகுந்த, ஊரன் - மருத நிலத்தூர்க்குரிய தலைவன், சீர் ஆர் - சிறப்பினையுடைய, தேர் - சிறு தேரினை, கையினல் - கைகளினலே, இவ்வகை - இம்முறையாக, ஈர்த்து - இழுத்துச் சென்று, உய்ப்பான் - (தன் விளையாட்டினை) நடத்துகின்ற என் மகன், தோன்றுமுன் - பிறப்பதற்கு முன்னே, இவ்வழியே - இம்மனை யிடத்திலே, ஆடினன் - (விருப்ப மிக்கவனய் என்னேடு) விளையாடித் தங்கினன், பின் - (என் மகன் பிறந்த) பின்பு, எங்கையர்தோள் - எனக்குப் பின் வந்தவர்களாகிய பரத்தையர்களின் தோள்களில், பெரிது கூர்ந்து - மிகவும் விரும்பியவனய், கூடினன் - புணர்ந்து மகிழலாயினன். (ஆகலான், யான் தலைவனுக்குத் தக்க தலைவி யல்லேன், என்று தலைவி பாணனிடங் கூறினள்.)

(ப-ரை.) செவ்வழி யாழையுடைய பாண்மகனே! சீரார்ந்த விளையாட்டுத் தேரினைத் தன்கையால் இம்மனை யின்கண் ஈர்த்து நடத்துகின்ற என்மகன் பிறப்பதற்குமுன் இம்மனையின்கட் பிரியாது ஆய்வயலூரன் ஒழுகினன்; பின்னை யெல்லாம் எங்கையர் தோளே மிக விரும்பி முயங்கி

னன்; ஆதலான் இப்பருவம் யாம் அவர்க்குத் தக்கேம் அல்லேம்.

(விரி.) ஆய்வயலூரான், ஈர்த்துய்ப்பான் தோன்றுமுன், இவ்வழியே ஆடினன்; பின் எங்கையர் தோள் கூர்ந்து கூடினன் என முடிக்க. வாயில் - தூது. மருதம் - ஊடலும், ஊடனிமித்தமுமாகிய வொழுக்கம். எங்கையர் - தலைவிக்குப் பின்னர்த் தலைவனாற் கொள்ளப்பட்ட காமக்கிழத்தியரும், பரத்தையரும். (கஉச)

மாக்கோல்யாழ்ப் பாண்மகனே ! மண்யானைப் பாகனூர்
தூக்கோற் றுடியோடு தோன்றுமுன்—றூக்கோற்
றொடியுடையார் சேரிக்குத் தோன்றுமோ சொல்லாய்
கடியுடையேன் வாயில் கடந்து.

[இதுவு மது.]

(பத.) மா - அழகிய, கோல் - கைக்கோலினைக் கொண்ட, யாழ் - யாழினையுடைய, பாண்மகனே - பாணனே ! மண்யானை - மண்ணாற் செய்யப்பட்ட விளையாட்டு யானைக்கு, பாகனூர் - ஓட்டுதற்கருத்தாவாகிய என்மகனூர், தூக்கோல் துடியோடு - கொட்டுகின்ற தூக்கோல் துடியுடனே, தோன்றுமுன் - பிறப்பதற்கு முன்னே, (தலைவன்,) கடி உடையேன் - அவனால் வரையப்பட்ட வாழ்க்கையுடைய வெனது, வாயில் - மனைவாயிலினை, கடந்து - தாண்டி, தூ - தூய்மை(நேர்த்தி)யான, கோல் - வளைவுகளைக் கொண்ட, தொடி உடையார் - வளையல்களையணிந்த பரத்தையரது, சேரிக்கு - இருப்பிடத்திற்குச்(சென்று,) தோன்றுமோ - காணப்படுமோ, சொல்லாய் - (யான் கூறுவதற்கு மாறுண்டாயின்,) சொல்வாயாக. (என்று தலைவி பாணனிடங் கூறினள்.)

(ப-ரை.) அழகிய காம்பையுடைய யாழ்ப்பாணனே ! மண்ணாற் செய்யப்பட்ட யானைப்பாகராகிய என்மகனூர் தாங் கொட்டுகின்ற தூக்கோற் றுடியோடு இங்குத் தோன்றி

யொழுகுவதற்கு முன்பு தூய புரிப்புச் செயல்களையுடைய தொடியுடையார் மனையின்கட் சென்று தோன்றி யொழுகுமோ சொல்லாய் இப்பொழுது ; அவனால் வரையப் பட்ட வாழ்வினையுடையேன் வாயில் கடந்து.

(விரி.) கோல் - மூங்கிலினாகிய கைக்கோல். பாணர் மூங்கிற் கைக்கோல் கைக்கோடல் பண்டை வழக்கு. தூக்கோற்றுடி - ஒருவகை யுடுக்கு. மகன் தோன்றிய பின் தலைவன் பரத்தையர் சேரி சென்றனன். ஆதலான் மகப் பெற்ற யான் தலைவனை மருவு தற்குத் தகுதி யுடையேனல்லன். தகுதியுடையார்பாலே தலை வன் தங்கியுறைவானாக எனத் தலைவி மறுத்தாள் என்பது கருத்து. (கஉரு)

விளரியாழ்ப் பாண்மகனே ! வேண்டா வழையேன்
முளரி மொழியா துளரிக்—கிளரிநீ
பூங்கண் வயலூரன் புத்தில் புகுவதன்மு
னாங்க ணறிய வுரை.

[இதுவு மது.]

(பத.) விளரி-விளரி யென்னும் பண்ணைப் பாடுகின்ற, யாழ் - யாழினைக் கைக்கொண்ட, பாண்மகனே - பாணனே ! வேண்டா - (எம்மால்) விரும்பப்படாத செய்திகளை, நீ அழையேல் - நீ கொண்டு வந்து கூறுதா தொழிவாயாக, முளரி - முட்செடிகளைப் போன்ற கொடிய மொழிகளை, மொழியாது - இங்கே கூறிக் காலத்தை நீட்டியாது, உளரி - இவ்விடத்தை விட்டுப் புறப்பட்டு, கிளரி - கிளர்ச்சியுடையவனாய், பூ கண் - தாமரை மலர்கள் மலர்ந்த இடத்தையுடைய, வயலூரன் - மருத நிலத்தூர்த்தலைவன், புது இல் - புதிய பரத்தையர் மனையின்கண், புகுவதன்முன் - இன்று போய் நுழைவதற்கு முன்னே, ஆங்கண் - அப்புது மனையின்கண் (சென்று,) அறிய - (அங்குள்ள பரத்தையர்கள் தலைவன் வருகின்

றான் என்பதை) அறிந்து மகிழும்படி, உரை - (அவர்களுக்குச்) சொல்வாயாக. (என்று தலைவி பாணனிடங் கூறினாள்.)

(ப-ரை.) விளரியென்னும் பண்ணைச் செய்கின்ற யாழையுடைய பாண்மகனே! யாங்கள் விரும்பாதன அழையா தொழிக; எங்கண்மாட்டு நினக்கு ஈரமில்லாத முளரி போன்ற மொழிகளைச் சொல்லாது இங்கு நின்றும் புடைபெயர்ந்து கிளர்ந்து நீ போய்த் தாமரைப் பூப்போன்ற கண்களையுடைய வயலூரன் இன்று புதுமனையின்கண்ணே புகுவதன்முன் அப்புதுமனைக்கண் நீ சென்று வாராநின்றான் என்று அவனாற் காதலிக்கப்பட்ட பரத்தையர்க்கு உரை.

(விரி.) உளர்தல் - அசைதல்: புடைபெயர்தல்: புறப்படல். புது + இல் = புத்தில்: புது வீடு. (கஉகூ)

மென்கட் கலிவய லூரன்றன் மெய்ம்மையை
யெங்கட் குரையா தெழுந்துபோ—யிங்கட்
குலங்கார மென்றணுகான் கூடுங்கூர்த் தென்றே
யலங்கார நல்லார்க் கறை.

[இதுவு மது.]

(பத.) மென்கண் - மெல்லிய இடத்தையுடைய, கலி - ஒலி நிறைந்த, வயல் ஊரன் தன் - மருத நிலத்தூர்த் தலைவனுடைய, மெய்ம்மையை - உண்மையுரைகளை, எங்கட்கு - எமக்கு, உரையாது - சொல்லிக் காலத்தை வறிதே கழியாது, எழுந்துபோய் - இவ்விடத்தினின்றும் புறப்பட்டுப் போய், இங்கண் - இவ்வுலகத்தின் கண், குலம் - நற்குலத்தின்கண் வந்த மனையாளைக் (கூடிக் களித்தல்,) காரம் என்று - புண்ணிற்கிடுங் காரம் போன்று வெய்யதென்று (தலைவன் கருதி,) அணுகான் - அவளை நெருங்கானாய்ப் (பரத்தையர்களைப் புணர்தல் இன்பந் தருமென்று கருதி,) கூர்த்து - விருப்பமிகப் பெற்று, கூடும் - (அவர்களோடு) சேர்ந்து வாழும்,

என்றே - என்று, அலங்காரம் நல்லார்க்கு - தம்மை யலங்கரித்தலே பணியாகவுள்ள நல்லவர்களாகிய பரத்தையர்க்கு, அறை - சொல்வாயாக. (என்று தலைவி பாணனிடங் கூறினள்.)

(ப-ரை.) மெல்லிய இடத்தையுடைய மிக்க வயலூரனுடைய மெய்யுரைகளை எங்கட்குச் சொல்லாதே இங்கு நின்று மெழுந்து போய் இவ்வுலகத்தின்கட் குலமுடைய மனையாளைப் புணர்தல் புண்ணிற்கு இடுங் காரம் போன்று வெய்யதென்று தலைவன் கருதி யவர்களை நெருங்கானாய், பரத்தையரைப் புணர்தல் பால்போன் றினிக்கும் பண்புடையதெனக் கருதி அவர்களை விரும்பிக் கூடு மென்று, தம்மை யழகுபடுத்திக் கொள்வதா நன்மை யொன்றினையே கொண்ட பரத்தையர்க்குப் பகர்வாயாக.

(விரி.) பழையவுரையின் பிற்பாகத்திற் காணப்படும் பெரிய எழுத்துக்களாலுய தொடர்கள் புதியனவாகச் சேர்க்கப்பட்டன. பழையவுரையில், 'மிக்க,' என்ற மொழிக்குமுன், 'ஒலி,' என்ற சொல் சேர்க்கப்பட்டாற் பொருள் சிறந்து பொருந்துமாறு காண்க. பரத்தையர் இல்லறத்திற்குரிய நல்லாரல்லா ரென்பார், "அலங்கார நல்லார்," என்றார். ஏ - அசைநிலை. (கஉஎ)

செந்தா மரைப்பூ வுறநிமிர்ந்த செந்நெல்லின்
பைந்தார்ப் புனல்வாய்ப்பாய்ந் தாடுவா—ளந்தார்
வயந்தகம்போற் றோன்றும் வயலூரன் கேண்மை
நயந்தகன் றூற்றுமை நன்று.

[தலைமகன் பரத்தையிற் பிரியத் தலைமகள்
புலந்து சொல்லியது.]

(பத.) செந்தாமரை பூ - செவ்விய தாமரை மலரோடு, உற - ஒன்றாக, நிமிர்ந்த - வளர்ந்து நிற்கின்ற, செந்நெல் இன் - செந்நெற் பயிரினது, பை தார் - பசிய கதிர்க்குலைகளையுடைய, புனல்வாய் -

யாற்று நீரினிடத்திலே, பாய்ந்து - குதித்து, ஆடுவாள் - விளையாடு கின்ற பரத்தையினது, அம் தார் - அழகிய மார்மீதணிந்துள்ள மலர் மாலையின், வயந்து - வயப்பட்டு, அகம்போல் - அவளது மனம் போல, தோன்றும் - வெளிப்பட்டு நடக்கும், வயல் ஊரன் - மருத நிலத்தூர்த்தலைவனது, கேண்மை - நட்பினின்றும், நயந்து - பகை யின்றியே, அகன்று - விலகி, ஆற்றுமை - துன்புற்று வாழ்தல், நன்று - நல்லதாகும். (என்று தலைவி தனக்குட்டானே கூறினள்.)

(விரி.) இச் செய்யுள்முதல் பின்வரும் இருபத்தேழு செய் யுட்கட்கும் பழைய பொழிப்புரை கிடைக்கவில்லை. தார்=தாறு - குலை. புலத்தல் - ஊடல். (கஉஅ)

வாடாத தாமரைமேற் செந்நெற் கதிர்வணக்க
மாடா வரங்கினு ளாடுவா—ளீடாய
புல்லக மேய்க்கும் புகழ்வய லூரன்ற
னல்லகஞ் சேராமை நன்று.

[இதுவு மது.]

(பத.) வாடாத - அப்பொழுது அலர்ந்த, தாமரை மேல் - தாமரைப் பூவினிடத்தே, செந்நெல் கதிர் - செவ்விய நெற்கதிர்கள், வணக்கம் - வணங்கித் தங்கும்படியாக, ஆடா அரங்கின் உள் - கூத் தியர் ஆடுதலில்லாத புனலிடமாகிய யாற்று நீரிலே, ஆடுவாள் - நீர் குடைபவளாகிய பரத்தையினது, ஈடு ஆய - சிறந்த, புல் அகம் - பல ரும் தழுவுதற்குரிய மார்பினை, ஏய்க்கும் - தழுவும், புகழ் - நலமிக்க, வயலூரன் தன் - மருத நிலத்தூர்த் தலைவனது, நல் அகம் - நல்ல மார்பினை, சேராமை - தழுவாமை, நன்று - நல்லதாகும். (என்று தலைவி தனக்குட்டானே கூறினள்.)

(விரி.) ஆடாவரங்கு - யாற்று நீர்; குறிப்பு மொழி: கூத்தியர் ஆடுதலின்றிப் புனலாடுவார்க் கிடமாகலின் ஆடாவரங் கென்றனர். பரத்தையின் மார்பினை, 'ஈடாய புல்லகம்,' என்றது இழிவு கருதி யென்க. இச் செய்யுளும் முந்தியதும் தலைமகன் தன்னைப் பிரிந்து

சென்று பரத்தையுடன் புனலாடுஞ் செய்தி கேட்ட தலைவி மிகுந்த புலவியாற் கூறியனவாம். (௧௨௩)

இசையுரைக்கு மென்செய் திரநின் றவரை
வசையுரைப்பச் சால வழுத்தீர்—பசைபொறை
மெய்ம்மருட் டொல்லா மிகுபுன லூரன்றன்
பொய்ம்மருட்டுப் பெற்ற பொழுது.

[வாயில் வேண்டிச் சென்றார்க்குத் தலைமகள் வாயின் மறுத்தது.]

(பத.) பசை - அன்பு காரணமாக, பொறை - மேற்கொள்ளப் பட்ட, மெய் மருட்டு - உண்மையான போக்கினை, ஒல்லா - கொண்டிராத, மிகு - மிக்க, புனல் ஊரன் தன் - நீர்வளமிக்க மருத நிலத்தூர்த்தலைவனது, பொய் மருட்டு - பொய்மையான மாய மொழிகளை, பெற்ற பொழுது - கேட்டபோது, என்செய் திரம் - என்பால் தலைவன் செய்யும் நிலையுடைக்காதற் செயல்களே, இசை - அவனது புகழினை, உரைக்கும் - எடுத்துக் காட்டுவனவாகும், (ஆகலின்,) நின்றவரை - கூடல் கருதி நிற்பவராகிய தலைவரை, வசை உரைப்ப- (உங்களுடைய புகழ்மொழிகளே அவர்தம்) இகழினை எடுத்துக் காட்டும்படி, சால - மிகுதியும், வழுத்தீர்-போற்றிக் கூறாது நடவுங்கள். (என்று தலைவி வாயிலாக வந்தார்க்குக் கூறினாள்.)

(விரி.) வாயில்கள் தலைவனை அளவு கடந்து புகழ்வது அவற்கு வசையாய் முடிதலின், "வசையுரைப்பச் சால வழுத்தீர்", என்றாள். திரம் - நிலையுடைய காதற்செயல்கள் : ஈண்டுக் குறிப்பால் நிலையுதலின்மையை யுணர்த்திற்று. என்கண் அவர் செய்திரமே அவரிசையினை யுணர்த்தும்; நீர்வறிதே வழுத்தீர் என்பது கருத்து. (௧௩௰)

மடங்கிறவு போலும்யாழ்ப் பண்பிலாப் பாண!
தொடங்குறவு சொற்றுணிக்க வேண்டா—முடங்கிறவு
பூட்டுற்ற வில்லேய்க்கும் பூம்பொய்கை யூரன்பொய்
கேட்டுற்ற கீழ்நாட் கிளர்ந்து.

[பாணற்கு வாயின் மறுத்தது.]

(பத.) மடங்கு - மடக்கப்பெற்ற, இறவுபோலும் - இருல் மீனினைப் போன்ற, யாழ் - யாழினையுடைய, பண்பு இலா - நற் பண்புகளை மேற்கொண் டிராத, பாண - பாணனே! முடங்கு இறவு - வளைவுற்ற இருல் மீன்கள், பூட்டு உற்ற - நாணினாலே தொடுக்கப்பட்ட, வில் - வில்லினை, ஏய்க்கும் - ஒத்திருக்கும், பூ பொய்கை - மலர்கள் நிரம்பிய பொய்கைகள் மிகுந்த, ஊரன் - மருத நிலத்தார்த்தலைவன், பொய் - பொய்மையான மொழிகளை, கேட்டு - தெரிந்து, உற்ற - பெற்ற, கீழ்நாள் - சென்ற நாட் செய்தி களை, கிளர்ந்து - கிளர்தலாக எடுத்துச் சொல்லி, தொடங்கு உறவு - எமக்குள் தொடங்கப் பெற்றுள்ள உறவின் தன்மையினை, சொல் - நின்சொற்களினாலே, துணிக்கவேண்டா - துணிந்து கொள்ளுமாறு கூறவேண்டுவதின்று. (யாம் நன்கு அறிவேம், என்று தலைவி பாணனிடங் கூறினாள்.)

(விரி.) தலைவன் பொய்ம்மொழிகளாகிய சென்றநாட் செய்தி களைப் பாணன் மெய்போல மயக்கிக் கூறுதலின், "பண்பிலாப் பாண!" என இழித்துக் கூறப்பட்டனன். கிளர்தல்-கிண்டல். (கஙக)

எங்கை யரிலுள்ளா னேபாண! நீ பிறர்
மங்கையரி லென்று மயங்கினாய்—மங்கையரி
லென்னா திறவா திவணின்னி கங்தேகல்
பின்னாரி லந்தி முடிவு.

[இதுவு மது.]

(பத.) எங்கையர் இல் - என் பின்னவர்களாகிய பரத்தையர்தம் மனையகத்தே, உள்ளானே பாண - உள்ளவனாகிய பாண்மகனே! நீ பிறர் - நீ (எனக்குப்) பிறராயுள்ள, மங்கையர் - பரத்தையரினது, இல் என்று - மனை யென்று, மயங்கினாய் - (என் மனையைப்) பிறழ வுணர்ந்து வந்துவிட்டாய், பின்னார் - என் பின்னவர்களாகிய பரத் தையரின், இல் - மனையகத்தே (இப்பொழுது,) அந்தி - மாலை

வேளையின், முடிவு - இறுதியாகிய மணவிழாத் தொடக்க வேளையாகும், (ஆகலின்,) மங்கையர் இல் என்னுது - மீண்டும் எம் மனையினை அப்பரத்தையர் மனையெனக் கருதாது, இறவாது - (வேறு எவர் மனையினையும் இம்முறையிலே) தவருகக் காணுது, இவண் இன் இகந்து - இவ்விடத்திருந்து நீங்கி, ஏகல் - (மணவிழாத் தொடக்க வேளையினையுடைய பரத்தையர் மனைக்குச்) செல்வாயாக. (என்று தலைவி பாணனிடங் கூறினுள்.)

(விரி.) எங்கையர் - எமது தங்கையர் : தலைவனுல் பின்பு வரிக்கப்பட்ட பரத்தையர். செய்யுளில் பெரிய எழுத்துக்களில் உள்ளன உய்த்துணரப்பட்டனவாம். ஏகல் - அல்லீற்று உடன்பாட்டு வியங்கோள் வினைமுற்று. (கரு௨)

பாலையாழ்ப் பாண்மகனே! பண்டுநின் ஞயகற்கு
மாலையா ழோதி வருடாயோ—காலையாழ்
செய்யு மிடமறியாய் சேந்தாநின் பொய்ம்மொழிக்கு
நைய மிடமறிந்து நாடு.

[இதுவு மது.]

(பத.) பாலையாழ் - பாலையென்னும் பண்ணினுற் சிறந்த யாழினையுடைய, பாண்மகனே - பாணனே! பண்டு - முன்பு, நின் நாயகன் கு - நின் தலைவனுக்கு, மாலை யாழ் - மாலைக் காலத்தே பாடவேண்டிய பண்ணினை, ஓதி - பாடி, வருடாயோ - ஊழியஞ் செய்ததில்லையோ; காலையாழ் - காலைவேளையிற் பாடவேண்டிய பண்ணினை, செய்யும் - பாடும்படியான, இடம் - நிலையினை, அறியாய் - தெரியாதவனுய், சேந்தா - சாம்புதலில்லாத, நின் - உன்னுடைய, பொய் மொழிக்கு - பொய்மையான சொற்களுக்கு, நையும் - உளநெகிழும்படியான, இடம் - இடத்தினை, அறிந்து - தெரிந்து, நாடு - விரும்பிச் செல்வாயாக. (என்று தலைவி பாணனிடங் கூறினுள்.)

(விரி.) சேந்தல் - சாம்புதல்; ஒடுங்கல். காலையாழ் - காலை வேளையில் வாசிக்கும் பண். மாலையாழ் - மாலைவேளையில் வாசிக்கும் பண். (கஙங)

கிழமை பெரியோர்க்குக் கேடின்மை கொல்லோ
பழமை பயனோக்கிக் கொல்லோ—கிழமை
குடிநாய்கர் தாம்பல பெற்றாரிற் கேளா
வடிநாயேன் பெற்ற வருள்.

[பல வாயில்களை மறுத்த தலைவி தனக்கு வாயில் நேர்ந்தமையினைத் தோழிக்கு விறலி கூறியது.]

(பத.) பெரியோர்க்கு - பெருந்தன்மை முதலிய நற்பண்புகள் மிகுந்த மக்கட்கு, கிழமை - யாவரையும் தமக்குரியரெனக் கொண்டாடுந் தன்மை, கேடு இன்மை கொல் ஓ - நீங்காதுறையும் போக்காலோ, (அன்றி,) பழமை - பழமையானவைகள், பயன் - மக்கட்குப் பல்லாற்றானும் பயனுறுதலை, நோக்கி கொல் ஓ - நினைந்து பார்த்தமையாலோ, கிழமை - உரிமைகள் (பல வாய்ந்த,) குடி பல - பல குடிமக்கள், நாய்கர் - தக்க தலைவர்களை, பெற்றார் இல் - பெற்றார்களைப் போல, அடி நாயேன் - மிகவும் தாழ்மையுள்ள யான், கேள் ஆ - சுற்றம் போன்று, பெற்ற - (வாயில் நேர்தற்குக் காரணமாக) அடைந்த, அருள் - (தலைவி காட்டிய) இவ்வருளானது, (எனக்கு வாய்த்தது? என்று விறலி தோழியினிடங் கூறினாள்.)

(விரி.) கொல் - அசைநிலை. ஓ - ஐயவினைப்பொருள். இல் - ஐந்தனுருபு: ஒப்புப் பொருள். தலைவன் அனுப்பிய பலதூதுகளை மறுத்து விட்ட தலைவி விறலியின் தூதினையேற்றுத் தலைவனோடு மகிழ்ந்திருந்தமை கண்ட விறலி, பக்கத்தே யிருந்த தோழியினிடத்தே தனக்கு வாய்த்த வாய்ப்புப் பெரிதெனப் புகன்றதாகுமிச் செய்யுள். விறலி - பாடினி. இவள் இசையினாலும், கூத்தினாலும் தலைவன் முதலியோரை மகிழ்விப்பவள். தாம் - அசைநிலை. (கஙச)

என்கேட்டி யேழாய்! இருநிலத்தும் வானத்து
முன்கேட்டுங் கண்டு முடிவறியேன்—பின்கேட்
டணியிகவா நிற்க வவனணங்கு மாதர்
பணியிகவான் சாலப் பணிந்து.

[காமக்கிழத்தி தலைமகளின் இல்லற வியல்பினை அறிந்து தலைமகனைத் தன் தோழியிட மிகழ்ந்து கூறியது.]

(பத.) ஏழாய் - பெண்ணே! கேட்டி - நான் சொல்வதைக் கேட்பாயாக, அவன் - (அன்று நம்மைப் பிரிந்து சென்ற) அத்தலைவன், அணங்கு மாதர் - தெய்வம்போல்பவளாகிய தலைவியின், பின் - பின்னே (சென்று,) கேட்டு - அவள் ஏவுவன செய்து, அணி இகவாநிற்க - மார்பிலணிந்துள்ள அணிகலன்கள் மார்பினை விட்டு முன் செல்லும்படியாக, சால - மிகுதியும், பணிந்து - அவளை வணங்கி, பணி - அவள் கூறுங் கட்டளைகளை, இகவான் - விலக்க விருப்பமில்லாதவனாய் நடக்கின்றான், என் - என்னே! இரு நிலத்தும் - பெரிய பூவுலகத்திலும், வானத்தும் - துறக்கத்திலும், முன் - இதற்குமுன், கேட்டும் - இம்முறையினைக் கேட்டாவது, கண்டும் - கண்டாவது, முடிவு - முடிந்த நிலையினை, அறியேன் - தெரியேன். (என்று காமக்கிழத்தி தன் தோழியிடங் கூறினாள்.)

(விரி.) ஏழை - பெண். கேட்டி - முன்னிலையேவ லொருமை வினைமுற்று. தலைவி காமக்கிழத்திக்கு முன்னவளாய்ச் சிறப்புற்றிருத்தலின், "அணங்கு மாதர்." எனப்பட்டாள். காமக்கிழத்தி-தலைவன் இன்பந்துய்த்தல் காரணமாக மேற்கொண்ட பரத்தையரிற் சிறிது சிறப்புள்ளவள். (கரு௫)

எங்கை யியல்பி னெழுவல்யாழ்ப் பாண்மகனே!
தங்கையும் வாயு மறியாம—லிங்க
ணுளர வுளர வுவனேடிச் சால
வளர வளர்ந்த வகை.

[பாணற்கு வாயின் மறுத்தது.]

(பத.) யாழ் பாண் மகனே - யாழையுடைய பாணனே! இங்கண் - இவ்விடத்தே (எனக்கு வாய்த்த,) உவன் - உவ்விடத்தே திரிபவனாகிய என் மகன், தம் கையும் - தன் சிறிய கை (சாடை) களாலும், வாயும் - செவ்வாயின் மழலை மொழிகளாலும், அறியாமல்- பொருள் புலப்படாத நிலையில், உளர உளர - பன்முறை சூழ்றிக் கொண்டு, ஓடி - விரைந்து சென்று, சால - மிகவும், வளர வளர்ந்த வகை - நாளடைவில் வளர்ந்த முறையான், (யான்,) - நான், எங்கை - எனக்குப் பின்னவளாகிய பரத்தை, இயல்பின் - (தலைவனோடு கூடிச் சிறப்புற்றிருக்குந்) தன்மையினைப் போன்று, எழுவல் - கிளர்ச்சியுற்று வாழ்கின்றனன். (ஆகலின், எனக்கொரு குறையுமின்று, என்று தலைவி பாணனிடங் கூறினள்.)

(விரி.) உளர உளர - அடுக்குத்தொடர்; மிகுதி பற்றி வந்தது. தலைவன் வருகை கூற வந்த பாணனுக்குத் தலைவி தன்மகனோடு கூடியுள்ள வாழ்க்கையே தனக்குச் சாலும் என இச் செய்யுளால் வாயில் மறுக்கலாயினள். தன்மகன் மழலை மொழிகளுடன் விளையாடித் தன்னை மகிழ்விக்கின்றனன் என்பது தோன்ற, "உவன் தங்கையும் வாயும் அறியாமல் ஓடி வளர்ந்த வகை," எனப்பட்டது. எழுவல் - தன்மை யொருமை வினைமுற்று. யான் - தோன்றா எழுவாய். (கஙக)

கருங்கோட்டுச் செங்க ணெருமை கழனி
யிருங்கோட்டு மென்கரும்பு சாடி—யருங்கோட்டா
லாம்பன் மயக்கி யணிவளை யார்ந்தழகாத்
தாம்ப லசையினவாய் தாழ்ந்து.

[தமலைகன் புறத்தொழுக்கினைத் தலைமகள்
தோழிக்குச் சொல்லியது.]

(பத.) கரும் - பெரிய, கோடு - கொம்பினையும், செம் கண் - சிவந்த கண்களையுங் கொண்ட, எருமை - எருமையானது, கழனி-

வயல்களில் (விளைந்துள்ள,) இரும் கோடு - பெரிய (கொம்பு) கழி களாகிய, மெல் கரும்பு - மெதுவான கரும்புகளை, சாடி - மோதி, அரும் - அரிய, கோடு ஆல் - கொம்புகளாலே, ஆம்பல் - குமுத மலர்களை, மயக்கி - கலக்கி, அணி - அழகிய, வளை - குவளை மலர்களை, ஆர்ந்து - தின்று, வாய் தாழ்ந்து - வாயினைத் தாழவைத்து, அழகா - அழகாக, பல் அசையின - பற்கள் அசை போடுவனவாகக் காணப்படும். (பாராய் தோழீ! என்று தலைவி கூறினள்.)

(விரி.) "கருங்கோடு, செங்கண்," என வந்தது முரண் டொடையாகும். தலைவனின் புறத்தொழுக்கினைத் தலைவி மருத நிலக் கருப்பொருள்களில் ஏற்றிக் கூறுகின்றனள். எருமையாகிய தலைவன் மென்கரும்பாகிய தன்னைச் சாடி விலக்கி, தோழிமா ராகிய ஆம்பல்களை யகற்றிப் பரத்தையாகிய குவளையினைத் தின்று வாழ்வதாகச் செப்பிய முறை தெளிக. தன்னால் வெறுக்கப்பட்ட தலைவனை எருமை யென்றதன் கருத்தும், எருமைக்கும் ஏற்ற மென் கரும்பாகத் தன்னை நிறுத்திய நிறையும், பரத்தையின் அற்ப வாழ் வினைக் குவளையெனக் கூறி விளக்கிய முறையும் கொண்டாடற் பாலனவாம். இது உள்ளுறை யுவமம் எனப்படும். "பலசை யின வாய்த் தாழ்ந்து," என்ற பாடம் பொருட் கியைபின்மையின் விலக் கப்பட்டது. குவளை - முதற்குறை விகாரம் பெற்று, 'வளை,' என வந்தது. (கஙஎ)

கன்றுள்ளிச் சோர்ந்தபால் காலொற்றித் தாமரைப்பூ
வன்றுள்ளி யன்னத்தை யார்த்துவான்-சென்றுள்ளி
வந்தையா வென்னும் வகையிற்றே மற்றிவன்
றந்தையார் தம்மூர்த் தகை.

[மணந்தவன் போயபின் வந்த பாங்கியோடு இணங்கிய மைந்தனை இனிதிற் புகழ்ந்து சொல்லியது.]

(பத.) இவன் - இம்மைந்தனின், தந்தையார் தம் - தகப்பனரா கிய தலைவரின், ஊர் - மருத நிலத்தாரின், தகை தன்மையானது,

கன்று - கன்றினை, உள்ளி - (எருமைகள்) நினைந்து, சோர்ந்த பால்- (மடிவழியாகச்) சோரவிடப்பட்ட பாலானது, தாமரை பூ - தாமரைப் பூவினிடத்தே, வல் துளி - பெரிய (வெண்மையான) துளியினைப் போன்று அமர்ந்திருக்கும், அன்னத்தை - அன்னப் பறவையினை, ஆர்த்துவான் - உண்பிக்க வேண்டி, கால் ஒற்றி - வாய்க்காலாகப் புறப்பட்டு, சென்று - (தாமரைத் தடாகத்தைச்) சேர்ந்து, உள் - உள் ளிருந்து, இவர்ந்து - மேலேறி, ஐ ஆ என்னும் - (கண்டார்இஃதென்?) அழகிய காட்சித்து என்று வியக்கும், வகையிற்று - மேன்மையினை யுடைத்து. (என்று தலைவி தோழியிடங் கூறினாள்.)

(விரி.) மற்று, ஏ - அசைநிலைகள். இங்குத் தமது ஊடல் தீர்தற்குக் காரணமாயிருந்த மகனைப் புகழுமுறையில் புணர்ச்சியின்ப மளித்த தலைவனையும் புகழுமுறை கருதற்பாலது. மேலும் மருத நிலக் கருப்பொருள்கள் தலைவனின் அருட் போக்குக்குச் சிறிது இயைந்த இறைச்சிப் பொருள்களாக அமைந்துள்ள முறையும் உன்னற் பாலதாம். (கஙஅ)

மருதோடு காஞ்சி யமர்ந்துயர்ந்த நீழ
லெருதோ டுழல்கின்ற ரோதை—குருகோடு
தாராத்தோ ராய்ந்தெடுப்புந் தண்ணங் கழனித்தே
யூராத்தே ரான்றந்தை யூர்.

[இதுவு மது.]

(பத.) ஊரா - (மேலமர்ந்து) ஊர்தற் கியலாத, தேரான் - சிறு தேரினையுடையானாகிய என் மகனின், தந்தை - தகப்பனது, ஊர் - மருத நிலத்தூரானது, மருதோடு - மருதமரங்களுடன், காஞ்சி - காஞ்சி மரங்களும், அமர்ந்து - பொருந்தி, உயர்ந்த - வானளாவிய தாலுண்டான, நீழல் - நிழலின்கண்ணே, எருதோடு - காளை களுடனே, உழல்கின்றார் - உழைப்பவர்களாகிய உழவர்களின், ஓதை - ஒலியானது, குருகோடு - நாரைகளுடன், தாராதோறு - வாத்துக்களின் ஒலிகள் தோறும், ஆய்ந்து - சென்று கலந்து, எடுப்பும் - மிகுந்து காணும்படியான, தண் - குளிர்ந்த, அம் - அழ

கிய, கழனித்து - வயல்களோடு கூடியதாம் (என்று தலைவி தோழியிடங் கூறினாள்.)

(விரி.) ஊடல் தீர்ந்து புணர்ந்து மகிழ்ந்த தலைவி அப்புணர்ச்சிக்குக் காரணமான மகனையும் மணாளனையும் இச் செய்யுளால் புகழ்கின்றனள். ஊர் கழனித்து எனமுடிக்க. ஓதை ஆய்ந்து, எடுப்புங் கழனி எனக் கூட்டுக. தலைவன்பாற் கண்ட நன்மைகள் அவனூட்டுக் கழனியைச் சிறப்பித்தலாற் பெறப்பட்டன. மகன் வாயிலாக மணாளன் புணர்ந்தமையின், "ஊராத் தோரான் தந்தை," என்றாள். ஏ - அசைநிலை. நீழல் - நீட்டல் விகாரம். (கஙக)

மண்ணார் குலைவாழை யுட்டொடுத்த தேனமதென்
றுண்ணும்பூந் தாமரைப் பூவுள்ளுங்—கண்ணார்
வயலூரன் வண்ண மறிந்து தொடுப்பாண்
மயலூ ரரவர் மகள்.

[மன்றன் மனைவரு செவிலிக்குத் தோழி
அன்புற வுணர்த்தல்.]

(பத.) மண் ஆர் - மண்ணிடத்தே படிந்த, குலை வாழை உள் - குலையினையுடைய வாழை மரத்தினிடத்தே, தொடுத்த - வைக்கப்பெற்ற, தேன் - தேனினை, நமது என்று - நம்முடைய தென்று நினைத்து, உண்ணு - உண்டு, மயல் - மயக்க (முற்ற,) ஊரர் அவர் - (மருத நிலத்தூர்த்) தலைவரின், மகள் - மகளாகிய தலைவி, பூ-அழகிய, தாமரை பூ உள் உம் - தாமரைப் பூவினிடத்திலும், கண் ஆர் - தன் கண்ணிடத்தே நிறைந்து நின்றுள்ள, வயலூரன் - மருத நிலத்தூர்த் தலைவனின், வண்ணம் - நிறவழகினை, அறிந்து - கண்டு, தொடுப்பாள் - (மாலை) தொடுத்தலைச் செய்வாள். (என்று செவிலிக்குத் தோழி கூறினாள்.)

(விரி.) தலைவனுக்குந் தலைவிக்கும், உடன்போக்கின் பின் தலைவன் மனையில் மண நிகழ்ந்தது. அதனைக் கேள்வியுற்ற செவிலி மணமக்களைக் காண வந்தபொழுது, தோழி மணமக்களின் அன்

புடன் கூடிய வாழ்க்கையினை எடுத்துச் சொல்லியதாகு மிச் செய்யுள். தலைவிக்குக் காணும் பொருள்களிலெல்லாம் தலைவனின் அழகிய வடிவத்தை யுணரும் நிறைந்த அன்புண்டென்பார், "தாமரைப் பூவுள்ளும் கண்ணுார் வயலூரன் வண்ணமறிந்து தொடுப்பாள்," என்றனர். மன்றல் மனை - மண நிகழ்ந்த வீடு. அன்பு உறவு - தலைவன் றலைவியரின் அன்பாகிய உறவு. வாழைக் குலை மிகத் தாழ்ந்துள்ளதென்பார், "மண்ணுார்குலை வாழை," என்றார். (கசஎ)

அணிக்குரன்மே னல்லாரோ டாடினே னென்ன
மணிக்குரன்மேன் மாதரா ளூடி—மணிச்சிரல்
பாட்டை யிருந்தயரும் பாய்நீர்க் கழனித்தே
யாட்டை யிருந்துறையு மூர்.

[ஊடிநின்ற தலைமகளின் நிலையினைத் தலைமகன், சிறந்த மொழியை ஒழிந்துநின்ற வாயிலாகிய பாணற்கு உரைத்தது.]

(பத.) (பாணனே !) மணிக்குரல் - மணியொலிபோன்ற பேச்சினையுடைய, மேல் - மேன்மையுள்ள, மாதராள் - தலைவி, அணி குரல் - அழகிய குரலினனே, மேல் - மேன்மைபெற்ற, நல்லார் ஓடு - பெண்களாகிய பரத்தையருடன், ஆடினேன் என்ன - (புணர்ந்து) விளையாடினேன் என்று நினைத்து, ஊடி - பிணக்கினை மேற்கொண்டு, யாட்டை - ஆண்டுக்காலம்வரை, இருந்து - மனத்தை யடக்கி, உறையும் - தங்கும், ஊர் - ஊரானது, மணி - அழகிய, சிரல் - சிச்சிலிப்பறவை, இருந்து - தங்கி, பாட்டை - பாட்டினை, அயரும் - பாடுகின்ற, பாய்நீர் - பாய்ந்து செல்லும்படியான நீர் வளப்பத்தினுடைய, கழனித்து - வயல்களோடு கூடியது. (என்று தலைவன் பாணனிடங் கூறினன்.)

(விரி.) புதல்வற் பயந்து நெய்யாடிய தலைமகண்மாட்டுத் தலைமகன் போந்து தோழிமுதலிய வாயில்களான் ஊடல் தீர்க்க முயன்று முடியாது போயினமையின், பாணனை வாயிலாக

வேண்டிய தலைவன் அவன்மாட்டுக் கூறியதாகு மிச் செய்யுள். பாணன் இன்னிசையான் மகிழ்வித்துத் தலைவியின் ஊடலைப் போக்குபவனாகலின், சிறந்த மொழியை ஒழிந்து நின்ற வாயில் எனப்பட்டனன். இவனைத் தொல்காப்பியர், "ஏனைவாயில்," என்பர். (தொல். பொருள். கற்பு. ரு.) ஏ - அசைநிலை. (கசக)

தண்கயத்துத் தாமரைநீள் சேவலைத் தாழ்பெடை
புண்கயத் துள்ளும் வயலூர !—வண்கயம்
போலுநின் மார்பு புளிவேட்கைத் தொன்றிவண்
மாலுமா றுநோய் மருந்து.

[தலைவனைப் பாங்கி புகழ்தல்.]

(பத.) தண் - குளிர்ந்த, கயத்து - குளத்தினிடத்திலே (மலர்ந்துள்ள), தாமரை - தாமரைப்பூவிலேயுள்ள, நீள் - பெரிய, சேவலை - ஆண் அன்னப் பறவையினை, தாழ் பெடை புள் - கீழ்ப் படிதலுள்ள பெண் அன்னப்பறவையானது, கயத்து உள்ளும் - நீரிலிருந்து நினைக்கும்படியான, வயல் ஊர - கழனிகள் சூழப் பெற்ற மருத நிலத்தூர்த் தலைவனே! வண் கயம் - வளப்பம் பொருந்திய குளத்தினை, போலும் - போன்ற, நின் மார்பு - உனது மார்பானது, ஒன்று இவள் - (நின்னோடு) கூடி வாழும் இவளது, மாலும் - மயக்கத்தைத் தரும், மாறு - நீங்காத, நோய் - காமநோய்க்கு, மருந்து - மருந்தாகி, புளி வேட்கைத்து - புளியம்பழத்தின்கண் மக்கள் கொள்ளும் விருப்பம்போல் மேலும், மேலும் விரும்பும் மேன்மையினைக் கொண்டதாகும். (என்று தோழி தலைவனிடங் கூறினள்.)

(விரி.) தலைவன் வரைவினை மேற்கொண்டு தலைமகளை வரைந்த பின், அதற்குக் காரணமாய் நின்றிருந்த பாங்கியைப் புகழ, அதுகண்டு மகிழ்ந்த பாங்கி தலைவனைப் புகழ்ந்ததாகு மிச் செய்யுள். "புட்கயம்," எனற்பாலது எதுகை நோக்கி, "புண்கயம்," என மெலிந்து நின்றது. (கசஉ)

நல்வய லூரா னறுஞ்சாந் தணியகலம்
புல்லிப் புடைபெயரா மாத்திரைக்கட்—புல்லியார்
கூட்டு முதலுறையுங் கோழி துயிலெடுப்பப்
பாட்டு முரலுமாம் பண்.

[மன்றன் மனைவரு செவிலிக்கு
இகுளை அன்புற வுணர்த்தல்.]

(பத.) (அன்னாய்!) நல் - வளப்பமிக்க, வயல் ஊரன் - மருத நிலத்தூர்த் தலைவனின், நறும் - மணமிக்க, சாந்து - சந்தனக் குழம்பு, அணி - அணியப் பெற்ற, அகலம் - மார்பின் கண்ணே, புல்லி - (நம் செல்வி அன்புடன்) கூடியிருந்து, புடைபெயரா - விட்டு விலகாத, மாத்திரைக்கண் - வேளையிலேயே, புல்லி - (வீட்டருகே) நெருங்கி, ஆர் - பொருந்தியுள்ள, கூட்டு முதல் - நெற் கூடுகளின் உச்சியிலே, உறையும் - தங்கியிருக்கும், கோழி - சேவலானது, துயில் எடுப்ப - (கூவித்) தூக்கத்தினின்றும் எழுப்ப, (அதனை லெழுந்த வண்டினை முதலியன) பண் - இசையோடு கூடிய, பாட்டு - பாடல்களை, முரலும் ஆம் - பாடத் தொடங்கி விடும். (என்று தோழி செவிலித் தாயினிடம் கூறினாள்.)

(விரி.) மன்றன் மனை - தலைவனுக்கும் தலைவிக்கும் மண நிகழ்ந்த வீடு. இகுளை - தோழி. அன்பு உறவு - அன்போடு கூடிய ஒற்றுமை. இருவரும் அன்பின் மிகுதியாற் பொழுது புலர்வதுவரை பிரியாது கூடி யுறைகின்றனர் என்பது கருத்து. நெற்கூடுகள் வீட்டினருகிலேயே வைக்கப்படுதல் அக் கால மரபு. இதனை மலை நாடுகளில், அல்லது வயல் சூழ்ந்த வீடுகளில், இப்பொழுதுங் காணலாம். பொருளைப் புலப்படுத்தல்வேண்டி, 'அன்னாய்,' என்ற விளி வரவழைத்துக் கொள்ளப்பட்டது. (கசுரு)

அரத்த முடீஇ யணிபழுப்பப் பூசிச்
சிரத்தையாற் செங்கழுநீர் சூடிப்—பரத்தை

நினைநோக்கிக் கூறினு நீமொழிய லென்று
மனைநோக்கி மாண விடும்.

[தோழி, தலைமகளின் சேடிகளிலொருத்திக்குச் செவ்வணி யணிந்து விட்டமையினைத் தலைவற்குப் பாங்காயினர் கூறியது.]

(பத.) (தலைவனே!) அரத்தம் - செம்பட்டினை, உடீஇ - (தலைவியின் சேடிகளிலொருத்திக்குத் தோழி) உடுத்துவித்து, அணி - (அணிந்துள்ள) செவ்வணிகளெல்லாம், பழுப்ப - நிறமாறும் படியாக, பூசி - (செஞ்சாந்து) அணிந்து, சிரத்தையால் - மிகுந்த கருத்தோடு கூடி, செங்கழுநீர் - சிவந்த குவளை மலர்களை, சூடி - சூட்டி, பரத்தை - (தலைவன் விருப்பத்தினைப் பெற்றுள்ள) பரத்தையானவள், நினை நோக்கி - உன்னைப்பார்த்து, கூறினும் - (வசை மொழிகள்) சொல்வாளாயினும், நீ மொழியல் - (அவளுக்கு எதிராக) நீ ஒன்றும் சொல்லாது திரும்புவாயாக, என்று - என்ற அறிவுரையினை அச் சேடிக்குச் சொல்லி, மனை நோக்கி, - (நீ வாழும்) (இப் பரத்தையின்) வீட்டை நோக்கி, மாண - (மகப்பேற்றால் நின் குலம் விளங்கி) மேன்மையுறும்படியாக, விடும் - அனுப்பியுளாள். (நீ இதனைக் காண்பாயாக, என்று தலைவனிடம் பாங்கர்கள் கூறினார்கள்.)

(விரி.) உடீஇ - சொல்லிசை யளபெடை. மொழியல் - வியங்கோள் வினைமுற்று. தலைவி பூப்புற்றமையினைப் பரத்தையர்ப் பிரிந்துசென்றுள்ள தலைமகன் தெரிந்துகொள்ளும்படியாக, தோழி சேடிகளிலொருத்திக்குச் செவ்வணி யணிந்து விடுதலும், அதனைக் கண்ட தலைமகன் வீடு திரும்பிவந்து தலைவியை மகிழ்வித்தலும் அக்கால மரபு. பூப்புற்ற நான்காநாள்முதல் பன்னிரண்டு நாட்கள் வரை கருவுறுங் காலமாதலின், அக் காலத்தே தலைமகனும், தலைமகளும் கூடி வாழ்தல் மிக இன்றிமையாத தொன்றாகும். (கசச)

பாட்ட ரவம்பண் ணரவம் பணியாத
கோட்டரவ மின்னிவை தாங்குழுமக்—கோட்டரவ

மந்திரங் கொண்டோங்க லென்ன மகச்சுமந்
திந்திரன்போல் வந்தா னிடத்து.

[மகற்பெற்ற தலைமகளினைச் செய்பெருஞ் சிறப்போடு
சேர்தற்கண் தலைமகன் மகற்கண்டு மகிழ்ந்த வகை
யினைத் தோழி கண்டு மகிழ்ந்து கூறியது.]

(பத.) பாட்டு - பாட்டுக்களாகிய, அரவம் - ஒலியும், பண் - இன்னிசையாகிய, அரவம் - ஒலியும், பணியாத - கோடுதலில்லாத, கோடு - கொம்பாகிய குழலினது, அரவம் - ஒலியும், இன்ன இவை - இம்முறையான பல வொலிகளும், குழும - கூடி ஒலிக்க, (செய்யும் சிறப்பின்கண்ணே தலைமகன்,) கோடு - வளைவாகிய நச்சுப்பற்களையுடைய, அரவம் - (வாசுகி யென்னும்) பாம்பினை, மந்திரம் - (பாற்கடலைக் கடைந்த) மந்திரமலையானது, கொண்டு - மேற் கொண்டு, ஓங்கல் என்ன - சிறப்புற்றதைப் போல, மக - தன் மகனை, சுமந்து - மேற்கொண்டு, இந்திரன்போல் - (மருத நிலத் தெய்வமாகிய) வேந்தனைப்போல, இடத்து - (தலைமகளின்) இடப் பக்கத்தே, வந்தான் - வந்து சேர்ந்தனன். (என்று தோழி கூறி மகிழ்ந்தாள்.)

(விரி.) இன்ன + இவை = இன்னிவை: அகரந் தொகுத்தல். என்ன - உவமவுருபு. தலைமகள் பெற்றெடுத்த மகற்கு ஐம்படை பூட்டிப் பெயரிடுதலாகிய சிறப்பின்கண் தலைமகன் புதல்வனை மேற் கொண்டு தலைமகளோடு வந்தமையினைக் கண்டு மகிழ்ந்த தோழி கூறியதாகு மிச் செய்யுள். இது, (தொல். பொருள். கற்பு. ரு) "காணத்தினமைந்து முடிந்தகாலை," என்ற சூத்திரத்தின்கண், "புதல்வற் பயந்த புனிறு சேர் பொழுதின்...........செய்பெருஞ் சிறப்பொடு சேர்தற்கண்," என்பதனாற் பெறப்படும். செய் பெருஞ் சிறப்பு - பிறந்த புதல்வன் முகங் காண்டல், ஐம்படை பூட்டல், பெயரிடுதன் முதலியன. (கசரு)

மண்கிடந்த வையகத்தோர் மற்றுப் பெரியரா
யெண்கிடந்த நாளா னிகழ்ந்தொழுகப்—பெண்கிடந்த
தன்மை யொழியத் தரள முலையினாள்
மென்மைசெய் திட்டாண் மிக.

[அகம் புகன் மரபின் வாயில் தலைமகளன்பின் சிறப்பினைத் தலைமகற்கு முகம்புகன் முறைமையிற் கூறியது.]

(பத.) (எம்பெருமானே!) மண் கிடந்த - மண்வடிவமாகக் காணப்படும், வையகத்தோர் - பூமியில் வாழும் மக்கள் (பலர்,) பெரியராய் - சான்றோராயிருந்தும், எண் கிடந்த - வறிதே எண்ணிக்கையளவிலேற்பட்ட, நாளான் - வாழ்நாளிலே, இகழ்ந்து ஒழுக - (தமது வாழ்க்கையின் சிறுமையினைத் தலைமகளின் பெருந்தன்மைப் போக்கோடு ஒப்பிட்டு நோக்கி அவளுக்குக்) கீழ்ப்படிந்து நடக்கும்வண்ணம், பெண் - பெண்ணின் மேன்மையானது, கிடந்த - தங்கியுள்ளதா லுண்டான, தன்மை - மேட்டிமை நிலையானது, ஒழிய - தன்னை விட்டு நீங்கும்படி, தரளம் - முத்துமாலைகளை யணிந்துள்ள, முலையினாள் - முலைகளையுடைய தலைமகள், மிக - மிகுதியும், மென்மை - எளிமையும் இனிமையுமாகிய அன்பினை, செய்து இட்டாள் - இல்லற வாழ்க்கையிலே கைக்கொண்டு ஒழுகுவாளாயினள். (என்று தலைமகனிடத்தே வாயிலோன் கூறினான்.)

(விரி.) பெரியாராயும் என உம்மை விரிக்க. அகம்புகல் மரபின் வாயில் - தலைமகளின் அகமாகிய இல்லின்கண்ணே புகுந்து பழகி அறியும் முறைமையினையுடைய தூது. முகம் புகல் முறைமை - குறிப்பறிந்து பேசுந்தன்மை. இது, தலைவி இல்லறத்தினை எழிலுறும் அன்பின் முறையிலே உலக மக்கள் பலரும் கொண்டாடும் வண்ணம் நடத்துஞ் செய்தியினை வாயிலோன் தலைமகற் கெடுத்தியம்பியதாகும். இதனை, “கற்புங் காமமும்.................பிறவுமன்ன கிழவோள் மாண்புகள் முகம்புகன் முறைமையிற் கிழவோற்குரைத்த லகம்புகன் மரபின் வாயில்கட்குரிய,” (தொல். பொருள்.

கற்பு. கக.) என்றதனுற் கொள்க. வாயிலோன் - தூதுவன். பெரிய எழுத்துக்களிலுள்ளன பழைய பிரதிகளிற் காணப்படாமற் புதியனவாய்க் கருதிக் கொண்டன. மற்று - அசைநிலை. (கசசு)

செங்கட் கருங்கோட் டெருமை சிறுகனையா
லங்கட் கழனிப் பழனம்பாய்ந்—தங்கட்
குவளையம் பூவொடு செங்கயன்மீன் சூடித்
தவளையுமேற் கொண்டு வரும்.

[தலைமகன் புறத்தொழுக்கினைத் தலைமகள்
தோழிக்குச் சொல்லியது.]

(பத.) (தோழியே!) செம் கண் - சிவந்த கண்களையும், கரும் கோடு - கரிய கொம்புகளையும், (கொண்ட) எருமை - எருமையானது, சிறு கனை ஆல் - சிறிய கனைப்புடனே, அம் கண் - அழகிய இடத்தையுடைய, கழனி - வயல்கள் மிகுந்த, பழனம் - மருத நிலத்தூடே, பாய்ந்து - விரைந்து சென்று, அம் கண் - அழகிய கண்களைப் போன்ற, குவளை அம் பூவோடு - நீலோற்பலமாகிய அழகிய பூக்களுடனே, செம் கயல் மீன்-சிவந்த கயல் மீன்களையும், சூடி-அணிந்து கொண்டு, தவளையும் - தவளையினையும், மேற் கொண்டு - முதுகின்பேரிலே யுட்கார்ந்திருக்கும்படியாக வைத்துக்கொண்டு, வரும் - வருதலைச் செய்யும். (இஃதென்னே! என்று தலைவி தோழியினை நோக்கிக் கூறினள்.)

(விரி.) கனை - ஒலி. புறத்து ஒழுக்கு - பரத்தையரைப் புணர்தல். இங்குத் தலைமகன் பரத்தையர்பாற் சேர்ந்து வாழுதலை மருத நிலக்கருப்பொருள்களிலேற்றித் தலைவி கூறுகின்றமையின் இஃது உள்ளுறை யுவமம் எனப்படும். எருமையாகிய தலைவன் கரும்பாகிய தலைவியை விலக்கி, குவளைப்பூ, மீன், தவளைகளாகிய பரத்தையர் பாற் சார்ந்து வாழலாயினன் என்பது கருத்து. ஆல் - உடனிகழ்ச் சிப் பொருள். (கசஎ)

இருணடந் தன்ன விருங்கோட் டெருமை
மருணடந்த மாப்பழன மாந்திப்—பொருணடந்த
கற்பெருங் கோட்டாற் கனைத்துத்தங் கன்றுள்ளி
நெற்போர்வு சூடி வரும்.

[இதுவு மது.]

(பத.) (தோழியே!) இருள் - இருளானது, நடந்தது அன்ன - நடக்கலாயிற்றுபோலும் என்று சொல்லும்படியான, இரும் கோடு - பெரிய கொம்புகளையுடைய, எருமை - எருமைகள், மருள் நடந்த - (கண்டார்க்கு வியப்பான்) மன மயக்கத்தைத் தரும்படியான, மா - சிறந்த, பழனம் - மருதநில விளைபொருள்களாகிய குவளை முதலிய வற்றை, மாந்தி - உண்டு, பொருள் நடந்த - சாரமாகிய உறுதித் தன்மை நிறைந்த, கல் - கல்லினை, பெரும் கோட்டால் - பெயர்த்தற் குரிய கொம்புகளோடுகூடி, தம் - தம்முடைய, கன்று - கன்றுகளை, உள்ளி - நினைத்து, கனைத்து - ஒலித்துக் கொண்டு, நெற் போர்வு - நெற்கதிர்ப் போர்களை, சூடி - மேற் கொண்டு, வரும் - வாராநிற் கும். (இஃதென்னே! என்று தலைவி தோழியிடங் கூறினள்.)

(விரி.) மாந்தல் - உண்ணல். ஆல் - உடனிகழ்ச்சிப் பொருள். இதுவும் உள்ளுறையுவமமாம். பழனம் - இடவாகு பெயர். (௧௨௮)

புண்கிடந்த புண்மனுநின் னீத்தொழுகி வாழினும்
பெண்கிடந்த தன்மை பிறிதரோ—பண்கிடந்து
செய்யாத மாத்திரையே செங்கயற்போற் கண்ணிணை
ணையாது தாளுணு மாறு.

[உணர்ப்புவயின் வாராது ஊடிய தலைவி மாட்டு
ஊடிய தலைமகனை அறிவர் கழறியது.]

(பத.) (தலைவனே!) புண் கிடந்த - போர்ப்புண்கள் மிகப் பெற்ற, புள் மனு - நிமித்திகன் போன்று மக்கட்கு எதிர்கால வேற் பாடாகச் செய்திகளைக் கூறிச் சென்ற மனு வென்னும் பேராசனது

அற நெறியானது, நின் - உன்னை, நீத்து - நீங்கப் பெற்று, ஒழுகி - (தீய வொழுக்கத்தை நீ) மேற்கொண்டு, வாழினும் - வாழ்தலைச் செய்தாலும், பண் கிடந்து - நின்னிசைப்பாக்கள் பொருந்தப் பெற்று, செய்யாத மாத்திரையே - பாணர்கள் பாடத் தொடங்கு தற்கு முன்னரே, (தொடங்கிய வளவிலே) செம் கயல் - செவ்விய கயல் மீனினை, போல் - போன்ற, கண்ணினுள்-கண்களையுடைய தலை மகள், நையாது - (ஊடலை மேற்கொண்டு) வருந்தாமல், நாணும் ஆறு - வெட்கமுறுகின்ற விதத்தாலே, பெண் - பெண்மையாகிய பேராசைக் குணம், கிடந்ததன்மை - அவளிடம் பொருந்திக் கிடக்கும் போக்கு, பிறிது - (இவ்வுலகெங்குங் காணவொண்ணுப்) புதிய காட்சியினைக் கொண்டதாகும். (என்று அறிவர் தலைவனை நோக்கிக் கூறினுர்.)

(விரி.) மனுவினை நீத்தொழுகி வாழ்தல் - பரத்தமை மேற் கொண்டு தலைவியை மறந்து நடத்தல். உணர்ப்புவயின் வாராது ஊடிய தலைவி - ஒரே பிடிவாதமாய் ஊடலை மேற்கொண்ட தலை மகள். தலைமகளின் பிடிவாதமான ஊடலைக் கண்ட தலைமகன் அவளை நீத்துச் சென்முனுக, அதனைக் கண்ட அறிவர் அவனை நெருங்கித் தலைமகளின் அன்புண்மையை விளக்கி அவனை அவளுடன் சேர்ந்து வாழும்படி செய்யப் புகுந்ததாகு மிச் செய்யுள். இதனை, "இடித்துவரை நிறுத்தலு மவரதாகுங் கிழவனும் கிழத்தியு மவர்வரை நிற்றலின்," (தொல். பொருள். கற்பு. கச) என்பதனுற் கொள்க. அவர் - அறிவர்: நற் பொருளைக் கற்பிக்கும் பெரியோர். கழறல் - இடித்து வற்புறுத்திக் கூறல். இங்ஙனமே அறிவர் உணர்ப்புவயின் வாராது ஊடினுளாகிய தலைமகளையும் கழறுவர். உணர்ப்பு - ஊடலினின்றுந் தெளிதல். வயின் - வசம். "பண்," என்றமொழி பழைய பிரதியிற் காணப்பெருது புதிதாய்க் கருதிக் கொண்டதாகும். அரோ, தான் - அசைநிலைகள். (கசக)

கண்ணுங்கா லென்கொல் கலவையாழ்ப் பாண்மகனே!
எண்ணுங்கான் மற்றின் றிவளொடுநே—ரெண்ணிற்

கடல்வட்டத் தில்லையாற் கற்பெயர் சேரா
ளடல்வட்டத் தாருளரே லாம்.

[தலைமகன் தலைமகளைப் புணர்ந்து மகிழ்ந்து
பாணனிடங் கூறியது.]

(பத.) கலவை - பலபண்களையுங் கலந்து பாடும், யாழ் - யாழினையுடைய, பாண்மகனே - பாணனே! கண்ணும் கால் - கருதுமிடத்து, என் - யாதாம், (ஒன்று மின்று), எண்ணும் கால் - நீள நினைந்து பார்க்குமிடத்து, இன்று - இப்பொழுது, இவளொடு - (எனக்கின்பத்தைத் தரும்) இத் தலைமகளொடு, நேர் - ஒப்பானவரை, எண்ணின் - கருதிப் பார்த்தால், கடல் வட்டத்து - கடலாற் சூழப்பட்ட மண்ணுலகத்தில், இல்லை - காண்பதற்கில்லை யாம், கல் - நடுகல்லினிடத்தே, பெயர் சேராள் - பெயர் சேரப் பெருதவளாய், அடல் வட்டத்து-வெற்றி மிக்க மேலுலகத்திடத்தே, ஆர் - (பொருந்தியுள்ள பெண்பாலருள்) யாரேனும், உளரேல் - இருப்பாராயின், ஆம் - இவட்கு நேராவர். (என்று தலைமகன் பாணனிடங் கூறினன்.)

(விரி.) கொல், மற்று, ஆல் - அசைநிலைகள். "அடல் வட்டத்து, கற் பெயர் சேராள் உளரேல் ஆம்," என முடிக்க. இது பாணனை வாயிலாகக் கொண்டு தலைமகளின் ஊடலை நீக்கிப் புணர்ந்து மகிழ்ந்த தலைமகன் கூறியதாகும். ஆர் - யார் என்பதன் மரூஉ. அறக் கற்புடையாள் என்பார், "கற்பெயர் சேராள்," என்றார்.

சேறுடுங் கிண்கிணிக்காற் செம்பொன்செய் பட்டத்து
நீறுடு மாயதிவ னின்முறை—வேறுய
மங்கையரி னுடுமோ மாக்கோல்யாழ்ப் பாண்மகனே!
எங்கையரி னுடலா மின்று.

[பாணற்கு வாயின் மறுத்தது.]

(பத.) மா - சிறந்த, கோல் - மூங்கிற் கோலையும், யாழ் - யாழினையுமுடைய, பாண்மகனே - பாணனே! எங்கையரின் -

(எனக்குப்பின்வந்த) தங்கைமாராகிய பரத்தையரோடு, ஆடலாம் இன்று - கூடி விளையாடுதற்குரிய இப்பொழுது, சேறு ஆடும் - சேறுகள் நிரம்பியிருக்கும், கிண்கிணி கால் - சிறு சதங்கையணியப் பெற்ற கால்களிலும், செம் பொன் - சிவந்த பொன்னாலே, செய் - செய்யப்பட்ட, பட்டத்து - நெற்றிச் சுட்டியிலும், நீறு ஆடும் - புழுதி படியும் (தன்மை,) ஆயது இவன் - பொருந்தியதனையுடைய இம்மகனோடு, இல் முறை - இல்லின் முகப்பிலே, வேறு ஆய - இவனினும் நயத்தால் வேறுபட்டு மேம்பட்ட, மங்கையரின் - பரத்தையரிடம் விளையாடுமாறு போல, ஆடுமோ - (தலைவன்) விளையாட விரும்புவானோ? (விரும்பான், ஆகலின், நீ வீணே வாயில் கூறி வருந்த வேண்டாம், என்று தலைவி பாணனிடங் கூறினாள்.)

(விரி.) எங்கையரின் - உருபு மயக்கம். மங்கையரின் - ஐந்தாவதனுருபு இன் ஒப்புப் பொருளது. (கருக)

முலையாலும் பூணாலு முன்கட்டாஞ் சேர்ந்த
விலையாலு மிட்ட குறியை—யுலையாது
நீர்சிதைக்கும் வாய்ப்புதல்வ னிற்கு முனைமுலைப்பா
ரூர்சிதைக்கும் வேண்டா தழூ.

[நெய்யணி நயந்த கிழவனைக் கிழத்தி
நெஞ்சு புண்ணுறீஇக் கூறியது.]

(பத.) (தலைவனே!) தாம் -பரத்தையர்கள் தம், முலையாலும் - முலைகளாலும், பூண் ஆலும் - அணிகளாலும், முன் கண் - முன்னே, சேர்ந்த - கலவிக்காலத்தே கைக்கொண்ட, இலையாலும் - இளந்தளிர்களாலும், இட்ட - (நின் மார்பிற்) பொருத்திவைத்த, குறி - குறியானது, உலையாது - கெடாதவண்ணம், நிற்கும் - (என் எதிரே வந்து) தோன்றும், உனை - உனது, தார் - மாலையினை, நீர் சிதைக்கும் - உமிழ் நீரினைச் சிந்துகின்ற, வாய் - வாயினையுடைய, புதல்வன் - என் மகன், (உண்ணும்) முலைப்பால் - எனது மார்பின் கணுள்ள பாலானது (நீ என்னைத் தழுவினால்,) சிதைக்கும் - வெளிப்

பட்டுக் கெடுத்து விடும், (ஆகலின்,) தழு - (என்னைத்) தழுவிக் கொள்ளுதல், வேண்டா - வேண்டுவதின்று. (என்று தலைமகள் தலைவனை நோக்கிக் கூறினாள்.)

(விரி.) உனை - வேற்றுமை மயக்கம். குறியை - ஐ : சாரியை. நின் மார்பின்கண்ணுள்ள மாலையினை என் முலைப்பால் சிதைக்குமாகலின் என்னைத் தழுவ வேண்டா எனத் தன்னை நெருங்கிவந்த தலைமகனை நோக்கி மகப் பெற்றெடுத்த தலைமகள் கூறினாள் என்பது கருத்து. நெய்யணி நயந்த - மகப் பெற்றெடுத்த புனிறு தீர மூழ்கி வீடு புகுந்த நிலையில் தலைவியினை விரும்பிவந்த. நெஞ்சு புண்ணுறல் - தலைமகன் பரத்தமையுடன் வந்தமை கண்டு வருந்தல். இதனை, "அவனறிவாற்ற வறியுமாகலின்" (தொல். பொருள். கற்பு க) என்ற சூத்திரத்து, "கயந்தலை தோன்றிய காமர் நெய்யணி, நயந்த கிழவனை நெஞ்சு புண்ணுறீஇ, நளியினீக்கிய விளிவரு நிலையும்," என்பதனாற் கொள்க. தழு - முதனிலைத் தொழிற் பெயர். (கஞஉ)

துனிபுலவி யூடலி னேக்கென் றொடர்ந்த
கனிகலவி காதலினுங் காணேன்—முனிவகலி
னாணு நடுக்கு நளிவய லூரனைக்
காணவெப் போதுமே கண்.

[தலைமகள் தோழியிடத்துத் தலைமகனைக் காய்ந்து கூறியது.]

(பத.) (தோழியே!) தொடர்ந்த - தொடர்புடையதான, கனி - இன்பமாகிய கனியினை, கலவி - (தலைமகனுடன்) கலத்தலோடு கூடிய, காதலினும் - அன்புமிக்க காலத்திலும், காணேன் - காணப் பெற்றேனில்லை, (ஆகலின்,) முனிவு - எனது வெறுப்பு, அகலின் - நீங்குமாயின், (அப்பொழுது,) நாணு - வெட்கமுற்று, நடுக்கும் - (அதனால்) நடுங்கச் செய்யும், நளி - குளிர்ந்த, வயல் ஊரனை - மருத நிலத்தூர்த் தலைவனை, கண் - என் கண்கள், எப்போதுமே - எப்

பொழுதும், காணு - காண விரும்பவில்லை, (அப்படியிருக்க) துனி வருத்த மிக்க, புலவி - மனப் பிணக்கினை; ஊடலின் - பொதுவான ஊடுதலினைப்போல, நோக்கு - எண்ணிப் பேசுதல், என் - எதற்காக? (என்று தலைமகள் தோழியை வினவினள்.)

(விரி.) இஃது ஊடலை யொழி யென்ற தோழியினை நோக்கித் தலைமகள் கூறியதாகும். இதனை, "அவனறிவாற்ற வறியுமாகலின்" (தொல். பொருள். கற்பு. சு) என்ற சூத்திரத்து, "வடுவறு சிறப்பிற் கற்பிற் றிரியாமைக், காய்தலு முவத்தலும்," என்பதனாற் கொள்க. (கஙிஉ)

மருதம் முற்றும்.

## பாயிரம்.

முனிந்தார் முனிவொழியச் செய்யுட்கண் முத்துக்
கனிந்தார் களவியற் கொள்கைக்—கணிந்தா
ரிணைமாலை யீடிலா வின்றமிழால் யாத்த
திணைமாலை கைவரத் தேர்ந்து.

(பத.) கணிந்தார் - கணிந்தார் என்னும் கணி மேதாவியார், களவியல் கொள்கை - அகப் பொருளாகிய களவியற் போக்கினை, முனிந்தார் - வெறுத்தவர்களின், முனிவு ஒழிய - வெறுப்பு விலகும் படியாக, கை வர - அவ்வகப் பொருட் போக்குப் பலரின் ஒழுக்க மாக மீண்டுந் தோன்றும்படி, இணைமாலை - தொடுக்கப் பெற்ற மலர் மாலையினைப் போன்ற சொன்னடை பொருணடைகளாலே, ஈடு இலா - (ஒப்புமை கூறுதற் கொரு மொழியு) மிணையாகாத, இன் தமிழால் - இனிய தமிழ் மொழியினாலே, யாத்த - இயற்றிய, முத்து - முத்துக்களைப் போன்ற, செய்யுள் கண் - வெண்பாச் செய்யுட்களில், திணைமாலை - திணைமாலை நூற்றைம்பது என்னும் நூலை, தேர்ந்து - ஆராய்ந்து, கனிந்தார் - கனிவுடன் கூறினார்.

(விரி.) முத்து என்ற உவமானங் கொண்டு வெண்பா என்பது பெறலாயிற்று. அகப் பொருளைக் காமமென விலக்குவாரை, 'முனிந்தார்,' என்றார். "கணிந்தார்," என்ற மற்றொரு பெயர் கணி மேதாவியார்க்கு அக்காலத்து உண்டு போலும். இது ஆக்கியோன் பெயர் முதலியன கூறுதலின், பாயிரம் ஆயிற்று. இதனை இறுதியிற் கூறியது புறவுரை என்ற பாயிரப் பெயர்ப்பொருள் பற்றி யென்க.

திணைமாலை நூற்றைம்பது

முற்றியது.

---

# திணைமாலை நூற்றைம்பது

## செய்யுள் முதற்குறிப்பு அகராதி.

---

# திணைமாலை நூற்றைம்பது

## துறை, சொற்றொடர் விளக்கம்.

# திணைமாலை நூற்றைம்பது

## அருஞ்சொற் பொருள் அகராதி.

---

சொல் — பொருள் — பக்கம்

எல்லை - பகற்பொழுது ககசு
எறிந்து - வெட்டி ங
ஏர் - அழகு எஉ
ஏனம் - பன்றி கஙஉ
ஏனல் - தினை க
ஐந்தம்பு - முல்லை, அசோகு, நீலம், தாமரை, மாம்பூ. ௰
ஐவனம் - மலைநெல் (கூ) உ௰
ஒருவந்தம் - உறுதி ககக
ஒல்கல் - தளர்தல் ககூ
ஒல்லா - கொண்டிராத கசு௰
ஒல்வார் - ஆற்றுவார் கூஉ
ஒக்கம் - ஓங்குதல் கOஉ
ஓமை - மாமரம் கூஅ
ஓரில் - ஆராய்ந்துபார்க்கில் ருஎ
ஓரேன் - அறியேன் கஉகூ
கங்குல் - இராக்காலம் ஙஅ
கடமா - காட்டுப்பசு கூ௰
கடாம் - மதநீர் உ
கடி - சிறந்த கஉO
கடிகை - துண்டம் சுரு
கடியும் - விரட்டும் சு
கடுக்கை - கொன்றை கOரு
கணி - சோதிடன் ருஅ
கதநாகம்-சினமிக்கபாம்பு கஉகூ
கயம் - குளம் எஅ
கரவு - குற்றம் கஉ
கவ்வை - பழிச்சொல் ஙகூ
கழங்கு -குறிபார்க்குங்கருவி கூஎ
கழி - உப்பங்கழி ஙரு
கழிபடர் - மிக்கதுன்பம் சுஉ
கறி - மிளகுக்கொடி அ
கனை - மிகுந்த அ
காந்தாரம் - ஒருபண் ககரு
கார் ஏறு - இடி கஉஎ
கால் - வெளிவிடு ருஉ
கால் சீத்த - ஒழுங்கு பண்ணப்பட்ட. ஙக
காழ் - உள்ளீடு ங௰
கானல்-கடற்கரைச்சோலை ஙரு
கான் - காடு கOஉ
கிளர்தல் - எழுதல், புறப்படல், செல்லல் ருஎ
கிளவி - சொல் சுஉ
கீழ்நாள் - சென்ற நாள் கசுக
குரவு - குராமரம்; குழந்தை போன்றுள்ள காய் காய்ப்பது எ௰
குழைத்தல் - தழைத்தல் ககங
குறி - நிமித்தம் ருஎ
குறை நயப்ப - குறையேற்று முடிக்க ஙசு
கொட்கும் - திரிதரும் கூ
கொண்மூ - மேகம் கOO
கோடல் - வெண் காந்தள் மலர் கஉக
கோடா - மாறுபடுதலில்லாத ரு
கோடு - சங்கு சுகூ
கோடு - கழி, கொம்பு கசுகூ
கோதை - பெண்மயிர்; கூந்தல், மாலை கஉஎ
கோல் - வளைவு கஙரு
கோள் வேங்கை - வலிமை மிக்க பெரும்புலி ஙங
சாந்தம் - சந்தனமரம் ங
சால - மிகவும் கசுரு
சாலிகை - மெய்புகு கருவி ருரு
சான்றோர் - பெரியோர் கஎ
சிதடி - சிள்வீடு; சிள்வண்டு, கூ௰
சிரல் - சிச்சிலிப் பறவை கசுகூ
சிலம்பன் - மலைநாட்டுத் தலைவன் ஙங

கழக வெளியீடு - ௰

கண்ணன் சேந்தனார்

இயற்றிய

# திணைமொழி யைம்பது

மூலமும், பழைய வுரையும்,



தமிழ்ப்புலவர்

திரு. அ. நடராஜ பிள்ளை யவர்கள்

எழுதிய

விளக்க வுரையும்.



திருநெல்வேலித் தென்னிந்திய

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்.,

திருநெல்வேலி & சென்னை.

தாது-ஆனி

# முகவுரை

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள், ஐந்திணை நூற்கள் நான்காம். அன்பினைந்திணையாகிய அகப்பொருளை விரிக்கும் இந்நான்கு நூல்களுள் ஐந்திணை யைம்பது, திணைமாலை நூற்றைம்பது, ஐந்திணை யெழுபது என்ற மூன்று நூல்களும், அன்பர் சிலரின் தூண்டுதலால், கிடைத்த பழைய வுரைகளுடன் எளிய பதவுரையினையும் எழுதிச் சேர்க்கப்பெற்று, சின்னாட்கட்கு முன்னர் வெளியிடப்பட்டன. அவற்றைக் கண்ட அன்பர் பலர் இம்முறை பயன்பெறுமவற்றுள் ஒன்றெனக் கூறியமையால், ஊக்குவிக்கப் பெற்று, திணைமொழி யைம்பது என்னும் இந்நூலையும் பழைய பொழிப்புரையுடன் புதிய பதவுரையும் எழுதிச் சேர்த்து வெளியிட முன்வரலாயினன்.

திணைமொழி யைம்பது என்னும் இந்நூல், ஐந்து திணைகளையும் திணையொன்றுக்குப் பத்துப் பாக்களாக ஐம்பது பாக்களால் மொழிவதாகும். இதன்கண் புணர்ச்சியாகிய குறிஞ்சியை முன்னர்க் கூறி, அதனை யடுத்து நிகழும் பிரிவாகிய பாலையினைப் புணர்ந்தார் பிரிவர் எனப் புலனுறப் பின்னர்ப் புணர்த்தி, அப்பிரிவினைப் பொறுத்தலாகிய கற்பு முல்லையை அடுத்துக் கழறி, பொறுமைக்கு ஆறுதலாம் ஊடலும் கூடலுமாகிய மருதத்தினைப் பின்பு வழக்குறுத்தி, உலக நிலையாமையில் இறுதியில் எவரு முற்றுழன்று இரங்குவர் என்பதனை இரங்கலாகிய நெய்தலான் இறுதிக்கண் நிகழ்த்திச் சென்ற இந்நூலாசிரியரின் திறம் பெரிதும் நினைந்து களிக்கற்பாலதாம்.

இன்னும், குறிஞ்சிக்கண் நெருப்பருகே நெருங்கிக் குளிர் காயும் வழக்கமும், தலைவனைத் தோழி இரவுக்குறி நயப்பிக்கும் எழிலும், இடையிடையே இறைச்சிப் பொருள்களைக் கையாளும் ஏற்றமும், குறிஞ்சிநிலப் பண்புகளைக் கூறி விளக்கும் முறை

களும் கொண்டாடற் குரியனவாம். பாலைக்கண் அந்நிலக் கொடுமையினைப் பலபடியாகப் பகர்ந்து வருங் காலத்தேயே, தோழி தலைமகளைத் தேற்று முறையிலும், தலைமகன் உடன் போக்கில், செல்லும் வழியின் சிறப்பினை எடுத்துக்காட்டும் இயல்பிலும் படிப்பார் காணவிரும்பும் காட்சிகள் பல தோன்று தல் பலரும் உணர்ந்து உவகையுற வேண்டிய தொன்றாம். மேலும் மகட்போக்கிய நற்றாய் கூற்றாகப் படிப்போர் நெஞ்சம் பதறுமாறு பாலைநிலை காணப்படுவதும் பார்த்து மகிழற் குரியதாம்.

முல்லைக்கண் முல்லைநிலக்காட்சிகளும், கார்காலத் தோற் றங்களும், மாலை வேளைகளின் மாண்புகளும் பல வழியாகச் சிறப்பிக்கப்பட்டுள்ளன. மருதத்தின்கண் எடுத்துக் கொள் ளும் அகப்பொருட் செய்திகளை இறைச்சிப் பொருள்களால் எழிலுறச் செய்யும் நேர்மை நிறைந்து காணப்படுகின்றது. தேன்வண்டுகள் வேனிற்காலத்துத் தேன் சேர்க்கும் முறையும், தோழி தலைமகற்கு வாயில் நேரும் வழக்கும், இரவுக்குறி நேரும் ஏற்றமும் எண்ணி யெண்ணி இன்புறற் பாலனவாம். தோழி தலைமகற்கு இரவுக்குறி நேருங்கால், தன்னையர் சூடுந் தாமரை யினைத் தலைமகன் சூடிவரச் சொன்ன கருத்து, கண்டு வியக்கற் பாலதாம்.

நெய்தற்கண் சிறுமியர் விளையாடுஞ் செய்தியும், தோழி தலைமகளை இரவுக்குறி நயப்பிக்குங்கால் மேற்கொள்ளும் அறிவுச்சிறப்பும், கடற்கரையிலுள்ள பரதமகளிர் வீட்டமைப் பும் மிகச் சிறப்புடன் தென்படுகின்றன.

இந்நூலின்கண் நாற்பத்தாறு இன்னிசை வெண்பாக் களும், நான்கு நேரிசை வெண்பாக்களும் காணப்படுகின்றன. அவை மற்றைய சங்கநூல்களிற் காணப்பெறும் பாக்களைப் போன்றே சுருங்கச் சொல்லிப் பெரும்பொருள் பலவற்றை

விரிக்கும் பெற்றியனவாக வுள்ளன. குறிஞ்சி முதற்செய்யுட் கண் முன்னிரண்டடிகள் ஏட்டுப் பிரதியின் சிதைவாற் காணப் பெறுவாய்ப் போயின. அவற்றைப் பின்வருந் தொடர்களின் பொருள் கொண்டும், பழைய வுரையின்கட் காணப்படும் சில சொற்களின் துணைகொண்டும் நிரப்புதல் செய்து, பெரிய எழுத் துக்களான் அவை காட்டப்பட்டுள்ளன. இதனை இயற்றிய **கண்ணன் சேந்தனார்** என்ற பெரியார் **சாத்தந்தையார்** என்ற பெரியாரின் திருமகனாராவர். இதற்குமேல் இவரைப் பற்றிய செய்தி யாதுந் தெரிந்திலது.

இந்நூல் மிக அருமையான பழைய பொழிப்புரை யொன் றனையும், பாக்களின் கருத்தினை விளக்கும் துறை விளக்கத் தொடர்களையும் கொண்டுள்ளது. இவற்றைக் கண்டார் யாரெனக் காணுமாறுங் கிட்டிலது. முதற் செய்யுட்குரிய பழைய வுரையின் முற்பகுதியும், நாலாவது செய்யுளின் பழையவுரை நாப்பண் ஒரு தொடரும், எட்டாவது செய்யுள் துறை விளக்கத் தொடரின் முற்பெரும் பகுதியும் ஏடுகளின் சிதைவாற் காணப் பெறுவாய்ப் புதியனவாகச் சேர்க்கப்பட்டன.

இதனைக் கண்ணுறும் பெரியோர்கள் அறியாமையான் மேற்கொண்ட பிழைகளை எடுத்துக்காட்டி, மன்னிக்க வேண்டு கின்றனன். தோன்றாத் துணையாக முன்னின்று இதனை முடிப் பித்த எல்லாம் வல்ல இறைவற்கு எனது வணக்கம் உரியதா குக! இதனை வெளியிட்டுதவிய **தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்க்கு** யான் என்றும் நன்றி பாராட்டுங் கடப்பாடுடையேன்.

திருச்சி,
15—6—'36

இங்ஙனம்,
அ. நடராச பிள்ளை.

ஓம்

# திணைமொழி யைம்பது



## விளக்கவுரை பழைய பொழிப்புரையுடன்.



### முதலாவது—குறிஞ்சி

புகழ்மிகு சாந்தெறிந்து புல்லெரி யூட்டிப்
புகைகொடுக்கப் பெற்ற புலவோர்—துகள்பொழியும்
வானுயர் வெற்ப! இரவின் வரல்வேண்டா
யானை யுடைய சுரம்.

[அஞ்சி யச்சுறுத்துவது.]

(பதவுரை) புகழ்மிகு - (மணமாகிய), புகழ்மிகுந்த சாந்து - சந்தனமரங்களை, எறிந்து - வெட்டி, புல் - பற்றும் படியான, எரி ஊட்டி - நெருப்பு வைத்தலானே, புகை - (மணத்தோடுகூடிய) புகையினை, கொடுக்க-(வான்வழியாகச்) செலுத்த, பெற்ற - கிடைக்கப்பெற்ற, புலவோர் - தேவர்கள், துகள் - பூந்தாது போன்ற மழைத்துளிகளை, பொழியும் - (நன்றியாகச்) சொரிதற்கிடமான, வான் - விண்வெளியிலே, உயர் - உயர்ந்து காணும்படியான, வெற்ப - மலைநாட்டிற்குரிய தலைமகனே! சுரம் - (நீ கடந்து வருகின்ற) வழிகள், யானை உடைய - யானைகளை யுடையனவாகும், (ஆதலால்) இரவின் - இராக்காலத்தே, வரல் வேண்டா - வருதலைச் செய்யாதிருப்பாயாக. (என்று தோழி தலைமகனிடங் கூறினாள்.)

(பழையவுரை) புகழ்மிகுந்த சந்தனங்களை வெட்டிப் புல்லும்படி எரியூட்டியமையானே புகையினைக் கொடுக்கப்

பேற்ற அண்டர் தூகள் பொழிகின்ற வானளவு முயர்ந்த வெற்பனே! இரவின்கண் வரல்வேண்டா; நீ வருகின்ற வழி யானை வருகின்ற சுரங்களாதலான்.

(விரிவுரை) பெரிய எழுத்துக்களிற் காணப்பெறுவன ஏட்டுப் பிரதிகளின் சிதைவாற் கிடைக்கப்பெருவாய்ப் போகக் கருதிக்கொண்டனவாம். யானை, சுரம் - பால்பகா அஃறிணைப் பெயர்கள். அஞ்சி அச்சுறுத்துவது - தலைமகற்கு வழிக்கண் உண்டாம் இடையூறுகட்குப் பயந்து, தலைமகனை இரவில் வர வேண்டா என இடையூறுகளை எடுத்துக்காட்டித் தோழி கூறுவது. குறிஞ்சி - புணர்தலும் புணர்தனிமித்தமும். இது வரைந்து புணர்தற்கு நிமித்தமாயதென்க. (க)

கணமுகை கையெனக் காந்தள் கவின
மணமுகை யென்றெண்ணி மந்திகொண் டாடும்
விறன்மலை நாட! வரவரிதாங் கொல்லோ
புனமு மடங்கின காப்பு.

[செறிப்பறிவுறீஇ வரைவு கடாயது.]

(பத.) காந்தள் - காந்தள் செடிகள், கை என - கைகளென்று (கண்டார் கூறும்படி,) கண முகை - மிகுதியான மொட்டுக்களோடு, கவின - அழகுடன் விளங்க, (அவற்றை,) மந்தி - பெண் குரங்குகள், மண முகை - மணவிழாக் காலத்தே மேற்கொள்ளும் முளைப்பாலிகைகளையுடைய மிடாக்கள், என்று எண்ணி - எனக்கருதி, கொண்டு - கைக்கொண்டு, ஆடும் - விளையாடும்படியான, விறல் - பெருமையினையுடைய, மலை நாட - மலைநாட்டிற்குரிய தலைமகனே, புனமும் - தினைப்புனமும் (கதிர்கொய்யப்பெற்று,) காப்பு - காவலும், அடங்கின - ஒழிந்தன, (அதனால் யாங்கள் இற்செறிக்கப் பெறுவேம் ஆகலின்), வரவு - (நீ இங்கு) வருதல், அரிதாம் - இல்லையாம்.

(ஆகவே நீ தலைமகளை மணந்து கொள்வாயாக, என்று தோழி தலைமகனிடங் கூறினாள்.)

(ப - ரை.) திரட்சியையுடைய மொட்டுக்களைக் கையென்று கருதும்படி காந்தள் அழகுபெற அரும்ப, அதன் மணத்தையுடைய முகைகளென்று கருதி மந்திகள் கொண்டாடுகின்ற மிகுதியையுடைய மலை நாடனே! நீ இங்கு வருதலரிதாங்கொல்லோ; புனங்களுந் தினையரியப்பட்டுக் காவலொழிந்தன.

(விரி.) முகை - அரும்பு, மிடா. செறிப்பு - வீட்டினிடங்கொண்டு சேர்த்தல். கொல், ஓ - அசை நிலைகள். (௨)

ஓங்க லிறுவரைமேற் காந்தள் கடிகவினப்
பாம்பென வோடி யுருமிடிப்பக் கண்டிரங்கும்
பூங்குன்ற நாடன் புணர்ந்தவந் நாட்போலா
வீங்கு நெகிழ்ந்த வளை.

[தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குச்
சொல்லுவாளாய்த் தோழி சொல்லியது.]

(பத.) ஓங்கல் - உயர்ந்த மலையினது, இறுவரைமேல் - நெருங்கிய பக்கமலையிடத்தே, காந்தள் - காந்தள் செடியானது, கடி - புதிதாக, கவின - அழகுடன் பூக்கவும், (மேகமானது), பாம்பு என - (கண்டார்) பாம்பு என்று (வியக்கும் வண்ணம்,) ஓடி - மின்னுக்கொடி விளங்கப்பெற்று, உரும் - இடியினாலே, இடிப்ப - ஒலிக்கவும், கண்டு-(இவற்றைப்) பார்த்து, இரங்கும் - (காதலர்ப்பிரிந்தார்) வருந்துதற்கிடமான, பூ குன்றம் - அழகிய மலைகள்(சூழ்ந்த,) நாடன் - நாட்டிற்குரிய தலைமகன், புணர்ந்த - (களவுப்புணர்ச்சியில் நம்மைக்) கலந்த, அந்நாள் - அந்த நாளினை, போலா - போன்று (நமக்கு இன்பந்) தோன்றாது, வளை - (நம் கைகளிலுள்ள) வளையல்கள், ஈங்கு - இப்பொழுது

நெகிழ்ந்த - கழன்றன. (என்று தோழி தலைமகளிடங் கூறினள்.)

(ப - ரை.) மலையினது பக்கமலைமேற் காந்தள் புதிதாக அழகுபெறுதலால், அவற்றின் முகைகளைப் பாம்பென்று கருதிச்சென்று உருமு இடித்தலான், அவற்றைப் பிறர் கண்டிரங்குகின்ற பூங்குன்ற நாடன் புணர்ந்த அந்நாள் போலாவாய், இக்காலத்து நெகிழ்ந்து கழன்ற வெள்வளைகள்.

[விரி.] தலைமகன் இரவுக்குறிக்கண் சிறைப்புறத்தானாக, காவன் மிகுதியால் தலைமகளை இரவுக் குறிக்கண் கொண்டுய்க்க வியலாது வருந்திய தோழி தலைமகன் கேட்பத் தலைமகட்குச் சொல்லியதாகுமிது. இதனை நச்சினார்க்கினியர் (தொல். கள. உ௰.) பகற்குறிக்கண் தலைவன் வருதனீட ஆற்றாது தலைவி தோழிக்குக் கூறியது என்பர். வளைநெகிழு முணர்ச்சி தலைமகட்கே புலனாமாகலின் எவ்வாற்றானு மிதனைத் தலைமகளின் கூற்றென்பது அமைவுடைத்தாமென்க. காந்தள் முகையினை உருமு பாம்பெனக் கருதி யிடித்தல் இல்லது புனையுமாறாகலின், வேறுவழியிற் கண்ணளித்தாம். போலா - ஈறுகெட்ட எதிர்மறை யொன்றன்பாற் குறிப்புவினைமுற்று. 'போலா,' என்ற பாடம் நச்சினார்க்கினியர் கையாண்டுள்ளது. (௩)

ஏன லிடத்திட்ட வீர்மணிகொண் டெல்லிடைக்
கானவர் மக்கள் கனலெனக் கைகாய்த்தும்
வானுயர் வெற்பன் வருவான்கொ லென்றோழி
மேனி பசப்புக் கெட.

[தலைமகனைத் தோழி இரவுக்குறி நயப்பித்தது.]

[பத.] கானவர் மக்கள் - குறவர்களின் புதல்வர்கள், ஏனல் - தினைப்புனத்தின், இடத்து - பக்கத்தே, இட்ட -

(புனம் உழுங்காலத்து) போகட்ட, ஈர்மணி - குளிர்ந்த மாணிக்க மாகிய மணிகளை, எல் இடை - இராக்காலத்தே, கனல் என கொண்டு - நெருப்பென நினைத்து, கை காய்த்தும் - கைகளை வாட்டிக் குளிர்காயும்படியான, வான் உயர் - விண் வெளியிலே உயர்ந்து காணும்படியான, வெற்பன் - மலைநாட்டுத்தலைவன், என்தோழி - என்னுடைய தோழியாகிய தலைமகளின், மேனி - உடலிற் (காணும்,) பசப்பு - பசலை நிறமானது, கெட - கெடும் படி, வருவான்கொல் - (இரவுக்குறிக்கண்) வந்து அருள்புரி வானோ என்னமோ அறியேன். (என்று தோழி தலைமகனுக்குக் கேட்கும்படி கூறிக்கொண்டாள்.)

(ப - ரை.) எனலிடத்திட்ட குளிர்ந்த மணிகளைக் கொண்டு இரவின்கட் குறவர்மக்கள் தங்குளிர் நீங்கக் காயும் வானின் கண்ணே யுயர்ந்த வெற்பன் ஈங்கு வரு வான் கொல்லோ? என்னுடைய தோழி மேனியிற் பசப் புக்கெட.

(விரி.) பகற்குறிக்கண்வந்து மீளும் தலைமகனை எதிர்ப் பட்ட தோழி தலைமகன் இரவுக்குறிக்கண் வருதலை வேண்டிக் கூறியதாகு மிச்செய்யுள். கருப்பொருளின்கண், "எல்லிடைக் கானவர்மக்கள் கனலெனக் கைகாய்த்தும்," என்ற போக்கால் இரவுக்குறி என்பது பெற்றாம். பழைய வுரைக்கண், "ஈங்கு", என்ற மொழிக்குமாறாக, "இரவுக்குறிக்கண்", எனக்கோடல் நன்கு பொருந்துவதாகும். "வானின்கண்ணே யுயர்ந்த" என் பன ஏட்டுப்பிரதியின் சிதைவான் மறைந்தவற்றிற்குரியன வாகக் கருதிக்கொண்டனவாம். (ச)

விரைகமழ் சாரல் விளைபுனங் காப்பார்
வரையிடை வாரன்மின் ஐய!—உரைகடியர்
வில்லினர் வேலர் விரைந்துசெல் லம்பினர்
கல்லிடை வாழ்ந ரெமர்.

[பின்னின்ற தலைமகனைக் காவன்மிகுதி
சொல்லிச் சேட்படுத்தது.]

(பத.) ஐய - ஐயனே! கல் இடை-இம்மலையின் கண்ணே, வாழ்நர் - வாழ்பவர்களாகிய, எமர் - எம்மவர்களாகிய வேடுவர்கள், விரை கமழ் - மணமிக்க, சாரல் - இம்மலைப்பக்கத்தே, வினை புனம் - தினைவிளைந்துள்ள இப்புனத்தினை, உரை கடியர் - கடுஞ்சொல்லினராயும், வில்லினர் - விற்கையினராயும், வேலர்-வேலினைக் கொண்டவராயும், விரைந்து - வேகமாக, செல் - செல்லக்கூடிய, அம்பினர் - அம்பினையுடையவர்களாயும், காப்பார் - இரவின்கண் காவல் செய்வார்கள், (ஆகலின்,) வரை இடை - இம்மலையிடத்தே, வாரன்மின் - வாராது அப்பாற் செல்வீராக. (என்று தலைமகனிடந் தோழி கூறினாள்.)

(ப - ரை.) விரை கமழாநின்ற சாரலின்கண் வினை புனங் காப்பர்கள், இம்மலையின்கண் வரவேண்டா ஐயனே! கடுஞ்சொல்லினர், வில்லினர், வேலர், விரைந்து செல்லுமம்பினர் மலையின்கண் வாழ்வாராகிய வெமர்.

(விரி.) இடை - ஏழனுருபு. எமர் - கிளைப்பெயர். கடியர், வில்லினர், வேலர், அம்பினர் - குறிப்பு முற்று வினையெச்சங்கள். பின்னிற்றல் - தோழியைக் குறை இரந்து தொடர்ந்து போதல். சேட்படுத்தல் - விலக்கல். (ரு)

யானை யுழலு மணிகிளர் நீள்வரைக்
கானக வாழ்க்கைக் குறவர் மகளிரே
மேனலு ளைய! வரவுமற் றென்னைகொல்
காணினுங் காய்வ ரெமர்.

[இதுவு மது.]

(பத.) ஐய - ஐயனே! யானை - யானைகள், உழலும், அலைந்து திரியும்படியான, அணி கிளர் - அழகுமிக்க, நீள்-உயர்ந்த

வரை - மலைகள் (சூழ்ந்த,) கானகம் - குறிஞ்சி நிலத்தே, வாழ்க்கை - வாழ்தலைச் செய்யும், குறவர் - மலைவேட்டுவரது, மகளிரேம் - மக்களாகிய எமது, ஏனல் உள் - தினைப்புனத் திடத்தே, வரவு - (மேன்மகனாகிய நீர்) வருதல், என்னைகொல்- யாதுபயன்கருதி? எமர் - எம்மவராகிய வேடுவர், காணினும் - நும்மைக் காணவும் நீர் இங்கே வந்தீரென்று கேட்கவும் நேர்ந் தாலும், காய்வர் - சினந்து நுமக்குத் தீங்கு புரிவர். (ஆகலின், நீர் இவ்விடத்தே வீணே வருதல் வேண்டா, என்று தோழி தலைமகனிடங் கூறினாள்.)

(ப - ரை.) யானைகள் உழன்று திரியும் அழகுமிக்க நீள்வரைக் கானகத்து வாழும் வாழ்க்கையினையுடைய குறவர் மகளிரேம் யாங்கள்; ஏனலின்கண் நீரே வருதல் என்ன பயனுளது? ஐய! நும்மைக் காணினும் நீர் வந்தீ ரென்று கேட்பினும் நும்மை வெகுள்வர் எமர்.

[விரி.] மற்று - அசைநிலை. காணினும் - உம்மை எச்சப் பொருளது. இதனை நச்சினார்க்கினியர், "நாற்றமுந் தோற் றமும்," என்ற (தொல். கள. உ௩) சூத்திரத்துள், "அஞ்சியச் சுறுத்தல்," என்பதன்கண், "தமரையஞ்சிக் கூறியது." என்பர். கொல் - ஐயப்பொருள் தருமிடைச்சொல். (சு)

யாழுங் குழலு முழவு மியைந்தென
வீழு மருவி விறன்மலை நன்னாட!
மாழைமா னோக்கியு மாற்று ளிரவரி
னூரறி கௌவை தரும்.

[இரவுக்குறி விலக்கி வரைவு கடாயது.]

(பத.) யாழும் - யாழின் இசையும், குழலும் - குழலோ சையும், முழவும் - முழவொலியும், இயைந்த என - ஒருங்கு

கூடின என்று (சொல்லும்படியாக,) வீழும் - விழுந்து ஒலித்துக் கொண்டிருக்கும்படியான, அருவி - நீர் வீழ்ச்சியினையுடைய, விறல் - பெருமையினைக்கொண்ட, மலை நல் நாட - மலைகள் சூழ்ந்த நல்ல நாட்டிற்குரிய தலைமகனே! இரவரின் - (இனிமேல் நீ,) இராக்காலத்தே இங்கு வருவாயாயின், மாழை - அழகிய, மான் - மான்போன்று மருண்டு நோக்குகின்ற, நோக்கியும் - பார்வையினையுடைய தலைமகளும், ஆற்றாள் - (நினக்குவழியிடை நேரும் இடையூற்றினை யெண்ணிப்) பொறுக்க வியலாது வருந்துவள், ஊர் - இவ்வூர் மக்களும், அறி - தெரிந்துகொள்ளுதற்குக் காரணமான, கௌவை - அலராகிய பழிமொழிகளும், தரும் - பரவும். (ஆகலின், நீ நினது வருகையினைத் தவிர்த்து மணவினையினைக் கைக்கொள்வாயாக, என்று தோழி தலைமகனிடங் கூறினாள்.)

(ப - ரை.) யாழுங் குழலு முழவுந் தம்முள் பொருந்தி யொலித்தாற்போல வீழாநின்ற அருவியை யுடைய மிக்க மலை நாடனே! மதர்ப்பினையுடைய மான் போன்ற நோக்கினையுடையாளும் ஆற்றமாட்டாள்; நீர் இரவின்கண் வருதிராயின், ஊரும் பிறரும் அறியும் அலரைத்தரும்.

(விரி.) இயைந்த + என = இயைந்தெனா: அகரந்தொகுத்தல் விகாரம். வரைவு கடாதல் - மணம்புரியத்தூண்டல். இரவுக்குறி - இராக்காலத்தே தலைமகனும் தலைமகளும் எதிர்ப்பட்டுக் கூடுமிடம். இது தலைமகளின் வீட்டினையடுத்த தோப்பின்கண்ணதாம். (எ)

வேங்கை மலர வெறிகமழ் தண்சிலம்பின்
வாங்கமை மென்றோட் குறவர் மகளிரேஞ்
சோர்ந்து குருதி யொழுகமற் றிப்புறம்
போந்ததி லையே! களிறு.

[இரந்து பின்னின்ற தலைமகனைத் தோழி சேட்படை.]

(பத.) ஐய - பெருமானே! வேங்கை - வேங்கைமரங்கள், மலர - பூத்து நிற்க, (அதனாலே) வெறிகமழ் - மணங்கமழும் படியான, தண் - குளிர்ந்த, சிலம்பின் - இம்மலைச்சாரலின்கண், வாங்கு - வளைந்துள்ள, அமை - மூங்கிலையொத்த, மெல்தோள் - மெல்லிய தோள்களையுடைய, குறவர் மகளிரேம் - குறப்பெண்களாகிய யாங்கள் (வாழும்,) இப்புறம் - இப்பக்கத்தே, களிறு - ஆண் யானையானது, குருதி - உதிரம், சோர்ந்து ஒழுக - சொரிந்து வழியும்படி, போந்தது இல் - வந்ததில்லை. (ஆகலின், நீர் இங்கு வீணே காலக்கழிவு செய்யாது, வேறிடஞ்சென்று தேடுவீராக, என்று தோழி தலைமகனிடங் கூறினள்.)

(ப - ரை.) வேங்கை மலர்தலான் வெறி கமழாநின்ற தண் சிலம்பின்கண்ணே வளைந்த மூங்கில் போன்ற மெல்லிய தோளையுடைய குறவர் மகளிரேம் யாங்கள்; குருதி பாய்ந்தொழுக, இவ்விடத்தின்கண் போந்ததில்லை, ஐயனே! களிறு.

(விரி.) மற்று - அசைநிலை. இரந்து பின்னற்றல் - தலைமகன் தன் குறையினைக் கூறித் தோழியினைத் தொடர்ந்து செல்லல். சேட்படை - தலைமகளைத் தலைமகன் அணுகவிடாமல் தோழி விலக்கல். சேண்மை + படை = சேட்படை; சேய்மைக்கண் படுத்தல்; விலக்கல். துறையினை விளக்குந் தொடரிற் பெரிய எழுத்துக்களிலுள்ள மொழிகள் ஏட்டுப்பிரதியின் சிதைவான் மறையப்பெறப் புதிதாகக் கருதிக் கொள்ளப்பட்டனவாம். இதனை நச்சினார்க்கினியர், (தொல். பொருள். கள. உ௩) "தலைவனைப் பேதமை யூட்டியது," என்பர். (அ)

பிணிநிறந் தீர்ந்து பெரும்பணைத்தோள் வீங்க
மணிமலை நாடன் வருவான்கொ றோழி!
கணிநிறை வேங்கை மலர்ந்துவண் டார்க்கு
மணிநிற மாலைப் பொழுது.

[தோழி தலைமகனை இரவுக்குறி நயப்பித்தது.]

(பத.) தோழி - என்னருமைத் தோழியாகிய தலைவியே! மணி - மாணிக்கங்களையுடைய, மலைநாடன் - மலை நாட்டிற்குரிய தலைமகன், பெரும் - பெரிய, பணை - மூங்கில் போன்ற, தோள் - நம் தோள்கள், பிணி - (பிரிவாலுண்டாந்) துயரத்தால் (தோன்றும்,) நிறம் - பசலை நிறமானது, தீர்ந்து - நீங்கப் பெற்று, வீங்க - பூரிக்கும்படி, கணி - (தினை கொய்ய வேண்டிய காலத்தை எடுத்துக் காட்டுஞ்) சோதிடன் போன்ற பூக்கள், நிறை - மிகுந்துள்ள, வேங்கை - வேங்கை மரமானது, மலர்ந்து - பூத்து, (அவைகளில்), வண்டு - தேன் வண்டுகள், ஆர்க்கும் - ஆரவாரிக்கும், அணி - அழகிய, நிறம் - நிறத்தினைக் (கொண்ட,) மாலை பொழுது - மாலையாகிய வேளையிலே, வருவான்கொல் - வந்து நம்மை மகிழ்விக்க மாட்டானோ? (என்று, தோழி தலைமகளிடம் வினவினள்.)

(ப. ரை.) நோயான் வந்த நிறந்தீர்ந்து, பெரும் பணைத்தோள் பெருப்ப அழகிய மலைநாடன் வருவான் கொல்லோ? தோழி! கணியைப்போல நாட்சொல்லும் நிறை வேங்கை மலர்ந்து வண்டுகள் ஒலியாநின்ற நீலமணி போன்ற நிறத்தினையுடைய மாலைப்பொழுதின்கண்.

(விரி.) கொல் - ஐயப்பொருள் தருமிடைச்சொல். இது, பகற்குறிக்கண் வந்து மீளும் தலைமகன் கேட்பத் தோழி தலைமகளுக்குக் கூறியதாகும். பகற்குறிக்கண் பல்லிடையூறு நேரிடுவது கண்ட தோழி, தலைமகற்கு இரவுக்குறிக்

கண் விருப்பமுண்டாமாறு குறிப்பாகக் கூறத் தொடங்கினாள். நயப்பித்தல் - விரும்புவித்தல். இரவுக்குறி - இராக்காலத்தே தலைமகளும் தலைமகனும் எதிர்ப்பட்டுக் கூடுமிடம். இது தலைமகளின் இல்லினையடுத்த தோட்டத்தின்கண்ணதாம். இதனை நச்சினார்க்கினியர், (தொல். பொருள். கள. உ௰.), "தலைவி இரவுக்குறி நயந்தது," என்பர். அதனைத் தோழி என்ற விளியும், மற்றைப் பொருட்போக்கும் நன்கு வலியுறுத்தாநிற்கும். (க)

பலவின் பழம்பெற்ற பைங்கட் கடுவன்
எலவென் றிணைபயிரு மேகல்சூழ் வெற்பன்
புலவுங்கொ றோழி! புணர்வறிந் தன்னை
செலவுங் கடிந்தாள் புனத்து.

[தலைமகன் சிறைப்புறத்தானாகப் படைத்து
மொழி கிளவியால் தோழி வரைவு கடாயது.]

(பத.) தோழி - என்னருமைத்தோழியாகிய தலைவியே! புணர்வு - (நங்காதலரோடு நாம் மேற்கொண்ட) புணர்ச்சியாகிய களவொழுக்கத்தினை, அன்னை - நஞ்செவிலித்தாய், அறிந்து - தெரிந்து, புனத்து - பகற்குறியாகிய புனத்தினையடுத்த சோலையிடத்தே, செலவும் - நாம் செல்லும் போக்கினையும், கடிந்தாள்! தவிர்க்கலாயினள், (அதனால், நாம் பகற்குறிக்கண் சென்று தலைமகனைக்காண வியலாதிருக்கின்றோம், அது காரணமாக), பலவின்பழம் - பலாப்பழத்தினை, பெற்ற - அடைந்த, பை கண் - பசிய கண்களையுடைய, கடுவன் - ஆண்குரங்கானது, இணை - (தன்னுடனே) இணைந்துவாழும் பெண்குரங்கினை, எல என்று-ஏடி-என்று (அழைத்து), பயிரும் - அன்புடன் பழகும்படியான, ஏகல் - உயர்ச்சியோடு, சூழ் - நாற்புறமுஞ் சூழ்ந்துள்ள, வெற்பன் - மலைநாட்டுத்தலைவன், புலவும்கொல் - நம்மோடு பிணங்கி ஊடுதலைச்செய்வானோ? (என்று தோழி தலைமகளை வினவினாள்.)

(ப - ரை.) பலாப்பழத்தினைப் பெற்ற பசுங்கண்ணினையுடைய குரங்கினுட் கடுவன், 'ஏடி!' என்று தனக்கிணையாகிய மந்தியை யழைக்கும் வெற்றிய கற்கள் சூழ்ந்த வெற்பன் நம்மை யூடுங் கொல்லோ? தோழி! நங்காதலரோடு புணர்ந்த புணர்ச்சியை யறிந்து புனத்துச் செல்லும் செலவினையுந் தவிர்த்தாள் அன்னையாதலால்.

(விரி.) கொல் - ஐயப்பொருள். எல - எலுவன் என்ற தன் பெண்பாற் பெயர். எலுவன் - தோழன். இதனை நச்சினார்க்கினியர், (தொல். பொருள். களவு. உம.) காவன் மிகுதலால் மனைப்பட்டு மனங்கலங்கிய தலைமகள் தோழிக்கு நினைத்தல் சான்ற அருமறை உயிர்த்தல் என்பர். அதனைத் தோழி! என்ற விளியும், மற்றைப் பொருட் போக்கும் நன்கு வலியுறுத்தும். செலவும் - உம்மை எச்சப்பொருள் கொண்டுள்ளது. (௰)

குறிஞ்சி முற்றும்

## இரண்டாவது—பாலை

---

கழுநீர் மலர்க்கண்ணாய்! கௌவையோ நிற்கப்
பொருணீரார் காதலர் பொய்த்தனர் நீத்தார்
அழிநீர வாகி யரித்தெழுந்து தோன்றி
வழிநீ ரறுத்த சுரம்.

[தலைமகனது செலவுணர்ந்து வேண்டாத மனத்தாளாய்த்
தலைமகள் தோழிக்குச் சொல்லியது.]

(பத.) கழுநீர்மலர் - செங்கழுநீர்ப் பூக்களைப் போன்ற, கண்ணாய் - கண்களையுடைய தோழியே! கௌவையோ - (நங் காதலர் பிரிந்தமையா லேற்பட்டுள்ள) அலர்மொழிகள், நிற்க - ஒருபுறமிருக்கட்டும், காதலர் - நந்தலைவர், பொருள் நீரார் - பொருளின் தன்மையே தமதுதன்மையாக் கொண்டவராய், பொய்த்தனர் - (களவுக்காலத்தே கூறிய உறுதி மொழிகளை) மறந்தவராய், அழி நீரவாகி - எங்கும் அழிவு பெற்ற தன்மையினைக் கொண்டு, அரித்து - புன்முதலிய தாசுகளையும் போக்கி, எழுந்து தோன்றி - (பேய்த்தேர் முதலியன) புறப்பட்டு, வழி - பாதையின்கண்ணே, நீர் - உண்ணீர் முதலியன, அறுத்த - இல்லையாய் வறண்டுபோன, சுரம் - பாலை நிலத்தின்கண்ணே, நீத்தார் - (நம்மை) நீங்கிப் போயினார். (இஃதென்னே கொடுமை! என்று தலைமகள் தோழியிடங்கூறினாள்.)

(ப - ரை.) செங்கழுநீர் மலர்போன்ற கண்ணினை யுடையாய்! அவர் பிரிந்ததால் நிகழும் அலர் நிற்க, பொருண்மேல் நீர்மையை யுடையராய் நங்காதலர் முன் சொல்லிய சொல்லைப் பொய்த்து நம்மை நீங்குவார் போனார்; அங்குள்ளார் அழியும் நீர்மையவாகிப் பசை

யறு தனக்குத் தோன்றிப் போம்வழியின்கண் நீரறுத்த சுரங்களின்கண்ணே.

(விரி.) பாலை - பிரிதலும் பிரிதனிமித்தமுமாம். கௌவையோ = ஓ - இரக்கப்பொருள். வேண்டாத - உடன் படாத. பழைய வுரையில், "பசையறுதனக்கு," என்பதை, "பசையறுதலுற்று," என மாற்றிக்கொள்வது பொருத்தமாகக் காணப்படுகிறது. (கக)

முரிபரல வாகி முரணழிந்து தோன்றி
யெரிபரந்த கான மியைபொருட்குப் போவீர்!
அரிபரந்த வுண்கண்ணாள் ஆற்றுமை நும்மின்
தெரிவார்யார் தேரு மிடத்து.

[யான்பிரியத் தலைமகளாற்றுமோ நீ அறிவாயாகென்ற தலைமகற்குத் தோழி சொல்லியது.]

[பத.] முரி - உடைந்துபோன, பரலவாகி - பருக்கைக் கற்களையுடையவாய், முரண் அழிந்து - வலிகெட்டு, தோன்றி - காணப்பட்டு, எரி - காட்டுத்தீயானது, பரந்த - பரவியிருக்கப் பட்ட, கானம் - காட்டின்கண்ணே, இயை - (எல்லாவற்றையு) முண்டாக்குவிக்கும், பொருள் கு - பொருளினைத் தேடும் பொருட்டு, போவீர் - செல்கின்ற திருவாளரே! அரி பரந்த - செவ்வரி பரந்த, உண் கண்ணாள் - மையுண்ட கண்களையுடைய தலைமகள், ஆற்றுமை - (உமது பிரிவால் ஆற்றுவதும்) ஆற்றாது வருந்தும் தன்மையும், நும்மின் - உம்மைப்போன்று, தேரும் இடத்து - நன்காராயுங்கால், தெரிவார் யார் - அறிபவர் எவர்? (யான் அதனை அறியவல்லேனல்லேன், என்று தோழி தலை மகனிடங் கூறினாள்.)

(பு - ரை.) முரிபரந்த பருக்கையினையுடையவாய் வலியழிந்து தோன்றி, எரிபரந்த கானத்தின்கண் இயற்

றும் பொருட்பொருட்டுச் செல்விர்! அரிபரந்த உண்கண்ணுள் ஆற்றுளென்னுந் திறத்தை நும்மைப்போல, பிற ரறிகிற்பார் யார் ஆராயுமிடத்து?

[விரி.] முரிபரல் - வினைத்தொகை. அறிவாயாக + என்ற = அறிவாயாகென்ற - அகரந் தொகுத்தல்விகாரம். நும்மின் - இன் - ஐந்தாவதனுருபு; ஒப்புப்பொருளது. (கஉ)

ஓங்கு குருந்தோ டரும்பீன்று பாங்கர்
மராஅ மலர்ந்தன தோன்றி விராஅய்க்
கலந்தனர் சென்றார் வலந்தசொ லெல்லாம்
பொலந்தொடீஇ பொய்த்த குயில்.

[பருவங் கண்டழிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது.]

[பத.] பொலம் தொடி - பொன்னாற் செய்த வளையல் களை யணிந்த தோழியே! மராம் - மராமரங்கள், பாங்கர் ஓங்கு - பக்கத்தேயுயர்ந்து நிற்கும்படியான, குருந்து ஓடு - குருந்த மரங்களுடனே கூடி, அரும்பு ஈன்று - மொட்டுகளை வெளி விட்டு, மலர்ந்தன - பூத்துள்ளன, தோன்றி - (நம்முன்) எதிர்ப் பட்டு, விராய் - (நம்முடன்) விரவி, கலந்தனர் - கூடினராய், சென்றார் - (நம்மைப் பிரிந்து) சென்ற தலைவர், வலந்த—சொல்லிய, சொல் எல்லாம் - உறுதி மொழிகளையெல்லாம் (வேனிற் பருவம் வருதலால்), குயில் - குயிற்பறவைகள் (கூவி,) பொய்த்த- பொய்யாக்கின. (என்று தலைமகள் தோழியிடங் கூறினாள்.)

(ப - ரை.) ஓங்கிய குருந்தோடே கூட அரும்புகளை யீன்று பாங்கராகிய மராஅமரமும் விளங்கி மலர்ந்தன; புணர்ந்து விரவிக் கலந்து சென்ற நங்காதலர் வலந்த சொல்லெல்லாம் பழுதாக்கின, குயில்கள்: பொலந்தொடீ!

(விரி.) மராஅம் விராஅய் - இசை நிறையளபெடைகள். பருவம் - வேனில். பொலந்தொடி - வேற்றுமைத் தொகை யன்மொழி. வலத்தல் - சொல்லல். பொலந்தொடீஇ - இன்னிசை யளபெடை. (கரு)

புன்னை பொறிமலரும் பூந்தண் பொழிலெல்லாஞ்
செங்கட் குயிலக வும்போழ்து கண்டும்
பொருணசை யுள்ளந் துரப்பத் துறந்தார்
வருநசை பார்க்குமென் னெஞ்சு.

[இதுவு மது.]

(பத.) என் நெஞ்சு - என் மனமானது, புன்னை - புன்னை மரங்கள், பொறி - பொலிவுடன், மலரும் - பூக்கும்படியான, பூ - அழகிய, தண் - குளிர்ந்த, பொழில் எல்லாம் - சோலைகளிலெல்லாம், செங்கண் - சிவந்தகண்களையுடைய, குயில் - குயிற்பறவைகள், அகவும் - கூவியழைக்கும்படியான, போழ்து - வேனிற் பருவத்தினை, கண்டும் - தெரிந்தும், பொருள் நசை - பொருளின்கண் கொண்டவிருப்பினாலே, உள்ளம் - ஊக்கப்பெற்ற மனம், துரப்ப - (நம்மைவிட்டுச்) செல்லும்படி செய்ய, துறந்தார் - (நம்மை முன்பு) பிரிந்து சென்றவராகிய நம் காதலர், வரும் - (நம்மை நாடி) வருகின்ற, நசை - காதலோடு கூடிய ஒழுக்கத்தை, பார்க்கும் - எதிர்பாராநின்றது. (என்று தலைமகள் தோழியிடங் கூறினாள்.)

(ப - ரை.) புன்குகள் பொறிபோல மலரப் பூந்தண் பொழில்களெல்லாஞ் செங்கட் குயில்கள் கூவுகின்ற போழ்துகண்டும், முன்பு பொருணசையையுடைய ஊக்கந் துரப்ப நம்மை நீங்கினர் வருநசையைப் பாராநின்றது என் நெஞ்சு.

(விரி.) தலைமகன் திரும்புவதாகக் குறித்துச் சென்ற வேனிற் பருவம் வந்தும் அவன் வாராமை கண்டு தலைமகள்

நெஞ்சம், அவன்பால் வெறுப்புக் கொள்ளாது, அவன் வருகையினையே மேலும் எதிர்பாராநின்றது என்பது கருத்து. (கச)

சிறுபுன் புறவொடு சிற்றெழால் சீறு
நெறியரு நீள்சுரத் தல்குவர்கொ றோழீ!
முறியெழின் மேனி பசப்ப வருளொழிந்
தார்பொருள் வேட்கை யவர்.

[ஆற்றளெனக் கவன்ற தோழிக்கு ஆற்றுவலென்பது படச்சொல்லியது.]

(பத.) தோழீ - தோழியே! முறி - இளந்தளிரினது, எழில் - அழகினைக்(கொண்ட,) மேனி - (என்) வண்ணம், பசப்ப - பசலையுறும்படி, அருள் - (நம் மேலுள்ள) மிக்க அன்பினை, ஒழிந்து - நீங்கப்பெற்று, ஆர் - (பல்விதப்பயன்களும்) நிறைந்த, பொருள் - செல்வத்தின்கண்ணே, வேட்கையவர் - விருப்ப மிக்க நங்காதலர், சிறு - சிறிய, புன் புறவு ஒடு - புல்லிய புறாக் களினோடு, சிறு எழால் - சிறிய எழால் (என்னும் ஒருவகைப் பறவை,) சீறும் - சினந்து போர்புரியும், நெறி அரு - வழி காணுதற்கரிய, நீள் - பெரிய, சுரத்து - பாலை நிலத்தின் கண்ணே, அல்குவர் கொல் - தங்கி நம்மை மறப்பாரோ? (மறக் காது விரைந்து நமக்கு அருளுவர்; ஆகலின், யான் ஆற்றுவல் என்று, தலைமகள் தோழியிடங் கூறினாள்.)

(ப - ரை.) சிறிய புல்லிய புறவினொடு சிறிய புல் லூறு வெகுளும் வழியரிய நீள்சுரத்தின்கட் டங்குவர் கொல்லோ? தோழீ! தளிரினது அழகு போன்றிருந்த என்மேனி பசப்ப, நம்மேலுள்ள அருளினை ஒழிந்து நிறைந்த பொருளினை வேட்ட வேட்கையை யுடையவர்.

(விரி.) எழால் - ஒருவகைப் பறவை. இது பழையவுரையில் புல்லூறு எனக் காணப்படுவது ஆராயவேண்டுவதாம். கொல் - ஐயப்பொருள் தருமிடைச் சொல். (கரு)

கருங்கான் மராஅ நுணவோ டலர
விருஞ்சிறை வண்டினம் பாலை முரல
வரும்பிய முள்ளெயிற் றஞ்சொன் மடவாய்!
விரும்புநாம் செல்லு மிடம்.

[புணர்ந்துடன் போகிய தலைமகன் தலைமகளை
ஆற்றுவித்துக் கொண்டு சொல்லியது.]

(பத.) அரும்பிய - சிறிதே தோன்றிய, முள் - கூர்த்த, எயிறு - பற்களையும், அம் - அழகிய, சொல் - சொற்களையு முடைய, மடவாய் - இளமையான பெண்ணே! நாம் செல்லும் - நாமிருவருங் கூடிக்கலந்து கொண்டாடிச் செல்லும்படியான, இடம் - இவ்விடமாகிய இவ்வழியானது, கரும் கால் - கரிய அடிப்பாகத்தையுடைய, மராம் - மராமரம், நுண ஓடு - நுண மரத்தினேடு (சேர்ந்து,) அலர - மலரப்பெற்றும், இரும் சிறை - பெரிய சிறகுகளையுடைய, வண்டு இனம் - வண்டுக் கூட்டங்கள், பாலை - பாலைப்பண்ணினை, முரல - பாடப்பெற்றும், விரும்பும் - (நம்மை) அன்புடன் வரவேற்பதைக் காண்பாய். (என்று தலைமகன் தலைமகளிடங் கூறினன்.)

(ப - ரை.) கருங்காலினையுடைய மராமரங்கள் நுணவொடு மலர, இருஞ்சிறை வண்டினங்கள் பாலையென்னும் பண்ணினை முரல, அரும்பிய முள்ளெயிற்றினையும், அழகிய சொல்லினையுமுடைய மடவாய்! நாம் செல்லும் வழியை விரும்புவாய்.

(விரி.) மராஅம் - செய்யு ளிசைநிறையளபெடை. நுண - ஒருவகைமரம்: தணக்கமரமெனவும் படும். இது, மலைநாட்டில் மஞ்சணத்தி மரத்திற்குரிய பெயராக வழங்குகின்றது. (கரு)

கல்லதர் வாயிற் கடுந்துடிகள் பம்பும்
வில்லுழுது வாழ்நர் குறும்புள்ளும் போவர்கொ
லெல்வளை மென்றோ ளணிகிழப் பொருணசை இ
நல்கா துறந்த நமர்.

[ஆற்றளெனக் கவன்ற தோழிக்கு ஆற்றுவலென்பது படச் சொல்லியது.]

(பத.) எல் - இலங்கும்படியான, வளை - வளையல்களை யணிந்த, மெல் தோள் - மெல்லிய நந்தோள்கள், நெகிழ - மெலியும்படி, பொருள் - செல்வத்தினை, நசைஇ - விரும்பி, நல்கா - (நமக்கு) நன்மையினைச் செய்யாது, துறந்த - பிரிந்த, நமர் - நங் காதலர், கல் - கற்களையுடைய, அதர் - வழிகளினருகேயுள்ள, வாயில் - (பாலை நிலத்தூர்களின்) வாயில்கடோறும், கடும் துடிகள் - அச்சத்தை யுண்டாக்கும் உடுக்கைகள், பம்பும் - ஒலிக்கும் படியான, வில் - விற்போரினுலே, உழுது - முயன்று, வாழ்நர் - வாழ்க்கையை நடத்தும் மறவர்களின், குறும்பு உள் உம்-ஊர்களினிடையேயும், போவர் கொல் - செல்வாரோ? (செல்லாது மீள்வர், என்று தலைமகள் தோழியிடங் கூறினள்.)

(ப - ரை.) கல்லையுடைய வழிமருங்கினுள்ள குறும்புகளின் வாயிறோறும் அச்சத்தைச் செய்யுந் துடிகள் நின்று இயம்பும் வில்லுழுது வாழ்வார் குறும்பின்கண்ணுஞ் செல்வர் கொல்லோ? இலங்கும் வளை மென்றோள் மெலியும்படி பொருட்காதலால் நம்மை நல்காது நீங்கிய நமர்.

[விரி.] கொல்-ஐயப்பொருள் தருமிடைச்சொல். நசைஇ- சொல்லிசை யளபெடை. நல்கா - ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சம். காதலர் செல்லாது மீள்வதான் தலைமகள் ஆற்றுவாளாயினள் என்பது கருத்தாம். கவலுதல்-வருந்துதல். ஆற்றுவல்- தன்மையொருமை வினைமுற்று. (கஎ)

கதிர்சுடக் கண்ணுடைந்து முத்தஞ் சொரியும்
வெதிர்பிணங்குஞ் சோலை வியன்கானஞ் செல்வார்க்
கெதிர்வன போலிலவே யெல்வளையோ கொன்னே
யுதிர்வன போல வுள.

[செலவுக் குறிப்பறிந்த தலைமகள் உடன்படாது சொல்லியது.]

[பத.] எல் வளையோ - (என் கைகளிலுள்ள) இலங்குகின்ற வளையல்களோ, கதிர் சுட - வெயில் மிகுந்து எரித்தலால், கண் - கணுக்கள், உடைந்து - தெரியப்பெற்று, முத்தம் - முத்துக்களை, சொரியும் - கொட்டுகின்ற, வெதிர் - மூங்கிற் புதர்கள், பிணங்கும் - கலந்து காணும்படியான, சோலை - சோலைகளையுடைய, வியன் - பெரிய, கானம் - காட்டுவழியே, செல்வார்க்கு - செல்ல விரும்பிய நங்காதலர்க்கு, எதிர்வன போல் - உடன்படுவனபோல, இல - இல்லாமல், கொன்னே - வீணே, உதிர்வனபோல - நிலத்தின்கண்ணே சிந்துவன போலாக, உள - கைகளினின்று கழலாநின்றன. (என்று தலைமகள் தோழியிடங் கூறினாள்.

(ப - ரை.) வெயில் சுடுதலாற் கண்பிளந்து முத்தங்களைச் சொரியாநின்ற வேய்பிணங்குஞ் சோலையையுடைய அகன்ற கானத்துஞ் செல்லக் கருதினார்க் குடன்படுவன போன்றிருந்தனவில்லை; என்னிலங்கு வளையோ கொன்னே நிலத்தின்கட் சிந்துவன போன்றன.

[விரி.] ஓ - சிறப்புப்பொருள் கொண்டுள்ளது. இல - முற்றெச்சம். ஏ - அசைநிலை. "எதிர்வன போலிதே," எனவும் பாடம். இதற்கு, எல்வளை செல்வார்க்கு எதிர்வன போலிது (- போன்று), உதிர்வனபோல உள (- கைகளினின்றுங் கழல்கின்றன) எனக்கொள்க. (௧அ)

கலையொடு மானிரங்கு கல்லத ரத்த
நிலையஞ்சி நீள்சுரந் தல்குவர்கொ றோழி!
முலையொடு சோர்கின்ற பொன்வண்ண மன்றோ
வளையொடு சோருமென் றோள்.

[ஆற்றுளெனக் கவன்ற தோழிக்கு ஆற்றுவல் என்பது படச் சொல்லியது.]

(பத.) தோழி - தோழியே! பொன் வண்ணம் - பொன் போன்ற என்மேனி, அன்றோ - அந்தோ! முலை ஒடு - முலைகளுடனே, சோர்கின்ற - அழிகின்றன, என் தோள் - என்னுடைய தோள்கள், வளை ஒடு - வளையல்களுடனே, சோரும் - வாடாநின்றன, (அங்ஙனமிருக்க,) கலை ஒடு - ஆண்மான்களோடு, மான் - பெண்மான்கள், இரங்கும் - நீரின்மையாற் றுன்புற்று வருந்தாநிற்கும், கல் அதர் - கற்கள் நிரம்பிய வழிகளின், நிலை - தன்மையினை (நங்காதலர் கண்டு,) அஞ்சி - அச்சமுற்று, நீள் சுரத்து - அப்பெரிய பாலை நிலத்தின்கண்ணே, அல்குவர் கொல் - தங்குவாரோ, (தங்குதலின்றி விரைந்து மீள்வர், என்று தலைமகள் தோழியிடங்கூறினாள்.)

(ப - ரை.) கலையொடு மான்கள் துன்புற்றிரங்காநிற்கும் மலைவழிகளையுடைய கடறுகளின் இப்பெற்றிப் பட்டுள்ள நிலையஞ்சிச் சுரத்தின்கட் டங்குவர்கொல்லோ? தோழி! முலையோடு சோர்கின்றன போன்ற வண்ணங்கள்; அந்தோ! வளையுடனே தளர்ந்து சோர்கின்ற என்றோள்கள்.

(விரி.) கொல் - ஐயப்பொருள் தருமிடைச் சொல். கல் - மலையெனலுமாம். தலைவர் விரைந்து மீள்வராகலின், ஆற்றுவலென்பது தலைமகள் கருத்து. பழையவுரையில், 'உள்ள,' என்றமொழி ஏட்டுப்பிரதியின் சிதைவால் மறையப் பின்னர்க் கொண்டதாம். (கக)

ஏற்றிய வில்லி னெயினர் கடுஞ்சுரம்
பாற்றினஞ் சேரப் படுநிழற் கண்டஞ்சிக்
கூற்றன வல்வில் விடலையோ டென்மக
ளாற்றுங்கொ லைய நடந்து.

[மகட் போக்கிய நற்றாய் சொல்லியது.]

(பத.) என்மகள் - (தலைமகனுடன் போய தலைமகளாகிய) என்னுடைய மகள், ஏற்றிய-(நாண்பூட்டி அம்பினைப் பொருத்தி) வளைத்த, வில்லின் - விற்களையுடைய, எயினர் - வேட்டுவர் (வாழும்,) கடும் சுரம் - கொடிய பாலைவனத்தின்கண்ணே, பாற்று இனம் - பருந்துக் கூட்டம், சேர - ஒருங்கு கூடிப் பறக்க, படு நிழல் - அதனாலுண்டாகின்ற நிழலினை, கண்டு - பார்த்து, அஞ்சி - (யாதோ என) அச்ச முறுதலால், கூற்று அன - கூற்று வினை யொத்த, வல் வில் - வலிய வில்லையுடைய, விடலை ஒடு - காளையாகிய தலைமகனுடனே, ஐய நடந்து - மெதுவாக நடந்து (சென்று,) ஆற்றும் கொல் - பொறுக்க மாட்டுவளோ? (என்று நற்றாய் வினவிப் புலம்பினாள்.)

(ப - ரை.) நாணேற்றிய வில்லினையுடைய வேடர் வாழும் கடுஞ்சுரத்தின்கட் பாற்றினஞ் சேரப்படுகின்ற நிழலைக் கண்டஞ்சி, என்மகள் கூற்றன்ன வல்வில்லை யுடைய விடலையுடனே சென்றுற்ற வல்லள்கொல்லோ மெல்லிதாக நடந்து.

[விரி.] அஞ்சி - காரணப்பொருளின்கண் வந்த வினை யெச்சம். கொல் - ஐயப்பொருள் தருமிடைச் சொல். விடலை - பாலை நிலத் தலைவன். நற்றாய் - பெற்றதாய். (உ௰)

பாலை முற்றும்

# மூன்றாவது - முல்லை

அஞ்சனக் காயா மலரக் குருகிலை
யொண்டொடி நல்லார் முறுவல் கவின்கொளத்
தண்கமழ் கோட றுடுப்பீனக் காதலர்
வந்தார் திகழ்கநின் றோள்.

[தலைமகன் வரைவுமலிந்தது தோழி தலைமகட்குச் சொல்லியது.]

(பத.) காயா - காசாஞ்செடிகள், அஞ்சனம் - மையினைப் போன்று, மலர - பூக்கவும், குருகு - குருக்கத்திச் செடிகளின், இலை - இலைகள், ஒள் தொடி - ஒளியினையுடைய வளையல்களை (யணிந்த), நல்லார் - பெண்மணிகளின், முறுவல் - பற்களைப் போன்று, கவின் கொள - அழகுடன் கூடிக் காணப்பெறவும், தண் - குளிர்ந்த, கமழ் - மணமிக்க, கோடல் - வெண்காந்தட் செடிகள், துடுப்பு - துடுப்பினைப் போன்று, ஈன - (மலர்க்குலைகளை) வெளிவிடவும், காதலர் - (வரைவிடை வைத்துப்பிரிந்த) நந் தலைமகனார், வந்தார் - (மூலைவிலைக்குரிய பொருளொடு) வந்து விட்டார், நின் - உன்னுடைய, தோள் - (பிரிவான் மெலிந்த) தோள்கள், திகழ்க - (முன்போற் பூரித்து) விளங்குவனவாக. (என்று தோழி தலைமகளிடங் கூறினாள்.)

(ப - ரை.) அஞ்சனம் போலக் காயாக்கள் மலர, குருகிலைகள் ஒண்டொடியுடைய நல்லார் முறுவல்போல அழகு கொள்ள, குளிர்ந்த கோடல்கள் துடுப்புப்போலப் பூங்குலையை யீனுகிற்ப, நங்காதலர் வந்தார்; நின்னுடையதோள்கள் விளங்குவனவாக.

(விரி.) முல்லையாவது கற்பாற்றியிருத்தலும் அதற்குரிய நிமித்தங்களுமாம். குருகு - குருக்கத்தி; மாதவி. மாதவி

யிலைகள் பெண்களின் பற்கள் போன்று உருவமைப்பிற் பொருந்தியுள்ளமை ஈண்டுக் கொள்ளப்பட்டுள்ளது போலும். காந்தளின் மலராத அரும்புகள் உருவமைப்பில் துடுப்பினை யொத்துக் காணுமாறு கண்டுதெளிக. துடுப்பு - ஒரு வகைத் துழாவுகருவி; கூழ் முதலியன அடுங்காலத்துக் கையாளப் பெறுவது. திகழ்க - வியங்கோள் வினைமுற்று. வரைவுமலி தல் - மணவினையை மேற்கொண்டு தலைமகன் முதலோர் தலை மகளின் பெற்றோர்மாட்டு மணம் பேசிவரல். (உக)

மென்முலைமே லூர்ந்த பசலைமற் றென்னுங்கொ
னன்னுதன் மாதராய்! ஈதோ நமர்வருவர்
பன்னிற முல்லை யரும்பப் பருவஞ்செய்
தின்னிறங் கொண்டதிக் கார்.

[தோழி பருவங்காட்டித் தலைமகளை வற்புறுத்தியது.]

(பத.) நல் நுதல் - நல்ல நெற்றியினையுடைய, மாதராய் - அழகிய பெருமாட்டியே! இ கார் - இக்கார் காலத்தே தோன்றிய இம்முகிலானது, பல் நிறம் - நம்பற்களின் வெண்ணிறத்தினையுடைய, முல்லை - முல்லை மொட்டுக்களை, அரும்ப - (முல்லைச் செடிகள்) தோற்றுவிக்கும்படி, பருவம் செய்து - கார்ப் பருவத்தினைத் தோற்றுவித்து, இன் நிறம் - கண்டார்க்கினிய காட்சியாகிய நீல நிறத்தினை, கொண்டது - மேற்கொண்டு விளங்காநின்றது, (ஆகலின்,) நமர் - நம்மவராகிய தலைமகனர், ஈதோ - இப்பொழுதே, வருவர் - வந்துசேர்வர், (அங்ஙனமவர் வரின்,) மெல் முலை மேல் - மெல்லிய முலைகளிடத்தே, ஊர்ந்த - (அவர்பிரிவாலுண்டாகி) யமர்ந்த, பசலை - பசப்பு நிறமானது, என் ஆம் கொல் - (இனி நம்மை) யாதுசெய்யவல்லது? (எதுவும் செய்யவியலாது; துன்புறு திருப்பாயாக, என்று தோழி தலைமகளிடங்கூறினள்.)

(ப - ரை.) நின்னுடைய மெல்லிய முலைமேலேறிய பசலை நிறம் என்னுங் கொல்லோ? நன்னுதலையுடைய மாதராய்! நமர் ஈதோ வருவர்; பற்போன்றிருந்த நிறத்தையுடைய முல்லைகள்தாம் முகையரும்பப் பருவத்தைச்செய்து கண்டார்க்கினிய நிறத்தைக் கொண்டது: இக்கார்.

(விரி.) கார் தோன்றியமையின், அக்கார் காலத்தே வருவதாக உறுதிமொழியுரைத்துச் சென்ற தலைமகனும் அத்தோற்றத்தினை யொப்பத் தோன்றுவர் என்பது தோழியின் கருத்து. மற்று - அசைநிலை. வற்புறுத்தல் - தலைமகன் வரவுக்குரிய வேதுக்களை எடுத்துக்காட்டி, வருத்தமுறாதிருக்கும் படி கட்டாயப் படுத்திக்கூறல். (உஉ)

சென்றார் வருவர் செறிதொடீஇ! காரிஃதோ
வெஞ்சின வேந்தர் முரசி னிடித்துரறித்
தண்கட னீத்தம் பருகித் தலைசிறந்
தின்றையி னாளை மிகும்.

[இதுவு மது.]

(பத.) செறி - வரிசையாக நிறைக்கப்பெற்ற, தொடீஇ - வளையல்களை யணிந்த மங்கையர்க்கரசி! இஃதோ - இதோ பார், கார் - முகிலானது, வெம் சினம் - கொடிய சினத்தை யுடைய. வேந்தர்—(போர்க்குப் புறப்பட்ட) பேரரசரின், முரசின்-முரசவாத்தியத்தினைப் போன்று, இடித்து-இடியோடு கூடி, உரறி - முழங்கி, தண் - குளிர்ந்த, கடல் - கடலினது, நீத்தம் - வெள்ளத்தை, பருகி - குடித்து, தலைசிறந்து - மேலும் மேலும் சிறப்புற்று, மிகும் - பெருகாநின்றது, (ஆகலின்,) சென்றார் - (பொருள்வேண்டி நம்மைப்பிரிந்து) சென்ற தலைமகனார், இன்றையில் - இற்றை நாளிலாவது, நாளை-நாளைக்காவது, வருவர் -

வந்து சேர்வர். (ஆதலின் நின் மயலை யொழிப்பாயாக, என்று தோழி தலைமகளிடங்கூறினள்.)

(ப - ரை.) நம்மைப் பிரிந்து போயினர் வருவர்; செறிதொடீஇ! இக்காலம் கார் காலமாயிருந்தது; வெஞ்சின வேந்தர் முரசுபோலிடித்து முழங்கித் தண்கடல் வெள்ளத்தைப் பருகி மேன்மேற் சிறந்து இன்றையின் நாளை மிகுங்காண்.

(விரி.) செறி தொடீஇ - இன்னிசையளபெடை. நீத்தம் - நீந்துதற்குரிய நீர்நிலை; வெள்ளம்; பெருக்கு. (உரு)

செஞ்சுணங்கின் மென்முலையாய்! சேர்பசலை தீரிஃ
வஞ்சினஞ் சொல்லி வலித்தார் வருகுறியால் [தோ
வெஞ்சினம் பொங்கி யிடித்துரறிக் கார்வானந்
தண்பெயல் கான்ற புறவு.

[இதுவு மது.]

(பத.) செம் சுணங்கின் - செவ்விய தேமலையுடைய, மெல் முலையாய் - மெல்லிய முலைகளையுடைய தலைவியே! கார் வானம் - முகிலோடு இவ்விண்வெளி, வெம் சினம் - கொடிய சினத்தினாலே, பொங்கி - (பொங்கியது என்று சொல்லும்படி) நாற்புறமும் மிகுந்து நிறைந்து, இடி - இடியோடு கூடி, உரறி - முழங்கி, தண் - குளிர்ந்த, பெயல் - மழையினை, புறவு - முல்லை நிலத்தின்கண்ணே, கான்ற - பெய்தன. இஃதோ - இக்கார் காலமே, வஞ்சினம் - (நம்மிடத்துப் பல வகையான) உறுதி மொழிகளை, சொல்லி - (பிரியுங்காலத்து) கூறி, வலித்தார் - (நம்மைக் கற்பாற்றியிருக்கும்படி) வற்புறுத்திச் சென்ற தலைமகனார், வரு குறி - வருகின்ற அடையாளமாகும். ஆல் - ஆகலின், சேர் - (பிரிவினாலே) உண்டாகிய, பசலை - பசப்பு நிறத்தி

னின்றும், தீர் - நீங்கி மகிழ்வாயாக. (என்று தோழி தலைமகளிடங் கூறினாள்.)

(ப - ரை.) செஞ்சுணங்கினையுடைய மெல்லிய முலையாய்! நின்னைச் சேர்ந்த பசலை நீங்குவதாக; சூளுறவாகிய சொற்களைச் சொல்லி நம்மை வற்புறுத்தினார் தாம் வருதற்குச் சொல்லிய குறியால், வெஞ்சினத்தாற் பொங்கியதுபோல இடித்து முழங்கிக் கறுத்த முகில்கள் தண்பெயலைப் புறவின்கண்ணே யுகுத்தனவாதலால், காரிது.

(விரி.) வானம் - பால்பகா அஃறிணைப் பெயர். தலைமகனார் திரும்புவதாகக் கூறிய கார் காலம் வந்தமையின், அவர் திரும்புவது ஒருதலை என்பது தோழி கருத்து. புறவு - மருத நிலத்தின் புறத்தே அடுத்திருப்பது; முல்லை. (உச)

கருவியல் கார்மழை கால்கலந் தேந்த
வுருகு மடமான் பிணையோ டுகளு
முருவ முலையாய்! நங் காதல ரின்னே
வருவர் வலிக்கும் பொழுது.

[இதுவு மது.]

(பத.) உருவம் - அழகிய, முலையாய் - முலைகளையுடைய தலைவியே! கரு - நீராகிய கருவினோடு, இயல் - புறப்பட்டு வந்த, கார் மழை - கரிய மழையானது, கால் கலந்து - காற்றோடு கூடி, ஏந்த - (விண்வெளியிலே) உயர்ந்து காணப்பெறுதலால், உருகும் - (முன்பு மழையின்மையின் வெம்மையாலே) புழுக்கத் தினை யுற்றிருந்த, மடமான் - இளமையான ஆண் மான்கள், பிணையோடு - தம் பெட்டை மான்களோடு, உகளும் - துள்ளி விளையாடாநின்றன. (ஆகலின்.) இன்னே - இப்பொழுதே, (நம்

காதலர் - நம் தலைமகனார், வருவர் - (நம்பால்) வந்து சேர்வர், பொழுது - இக்கார்காலமே, வலிக்கும் - (அவர் வரவினை நமக்கு) வற்புறுத்தித் தெரிவிக்காநின்றது. (என்று தோழி தலைமகளிடங் கூறினாள்.)

(ப - ரை.) கருவியன்ற கரியமழை காற்றோடு கலந்தயர்தலால், முன் வெம்மையால் உருகும் மடமான்கள் தம்பிணையோடு உகளாநின்றன; நிறத்தையுடைய முலையாய்! நங்காதலர் இப்பொழுதே வருவர்: இக்காலம் நம்மைத் தேற்றுவியாநின்றது.

(விரி.) முன்பு - கார்காலத்திற்கு முன்னதாகிய முதுவேனிலின்கண். பிரியுங்காலத்துத் தலைமகனார் திரும்புவதாகக் கூறிய கார்காலத்தோற்றம் அப்பொழுது நன்கு காணப்பெறுவதால், "பொழுது வலிக்கும்" என்று சொல்லப்பட்டது. (உ௯)

இருங்கடன் மாந்திய வேர்கொ ளெழிலி
கருங்கொடி முல்லை கவின முழங்கிப்
பெரும்பெய றூழப் பெயர்குறி செய்தார்
பொருந்த நமக்குரைத்த போழ்து.

[இதுவு மது.]

(பத.) (தலைவியே! நங்காதலர்,) இரும் கடல் - பெரிய கடலினை, மாந்திய-பருகிய, ஏர் கொள் - அழகினைக்கொண்ட, எழிலி - முகில்கள், கரும் கொடி - கரிய கொடிகளையுடைய, முல்லை - முல்லைச் செடிகள், கவின - மொட்டுக்களோடு அழகுற்றுக்காணும் வண்ணம், முழங்கி - ஒலித்துக்கொண்டு, பெரும் பெயல் - பெருமழையினை, தூழ - பெய்யும்படியாக, பெயர் - (தாம் திரும்பி) வருவதற்குரிய, குறி-அடையாளத்தினை, செய்தார் - செய்து காட்டியுள்ளார், (மேலும்,) நமக்கு - (பிரிவால்

வாடிய) நம்மனத்தே, பொருந்த - பதியும்படியாக, உரைத்த - திரும்புவதாகச் செப்பிச்சென்ற, போழ்து - காலமுமிதுவே. (ஆகலின், மயக்கினை யொழிப்பாயாக, என்று தோழி தலைமகளிடங் கூறினள்.)

(ப - ரை.) பெருங்கடலைப் பருகிய அழகுகொண்ட முகில், கருங்கொடி முல்லைகள் அழகு பெறும்படி முழங்கிப் பெரும்பெயல் தாழாநிற்க, பெயர்ந்து வருவேமென்று காதலர் குறி செய்தாராகலால், நமக்குப் பொருந்த அவருரைத்த காலமிது.

(வி ரி.) முகில்கள் இடித்துப் பெயலால் முல்லை தளிர்த்துப் பூக்குமாகலின், "எழிலி கருங்கொடி முல்லை கவின முழங்கிப் பெரும்பெயல் தாழ", எனலாயினர். பெயர்குறி - வினைத்தொகை. போழ்து - பொழுது என்பதன் மரூஉ. (உசு).

ஆய ரினம்பெயர்த் தாம்ப லடைதரப்
பாய முழங்கிப் படுகடலு ணீர்முகந்து
மாயிரு ஞால மிருள்கூர் மருண்மாலை
சேயவர் செய்த குறி.

[இதுவு மது.]

(பத.) (தலைவியே!) ஆயர் - இடையர்கள், இனம் - பசுக் கூட்டங்களை, பெயர்த்து - வீடுகட்குத் திருப்பியோட்டி, ஆம்பல் - ஆம்பல் என்னும் பெயரிய புல்லாங்குழலை, அடைதர - (வாயின்கண் வைத்து) ஒலித்துக் கொண்டு செல்ல, (முகில்கள்), படு கடல் உள்-ஒலிக்கின்ற கடலினிடத்தே, நீர் முகந்து - நீரினை வாரிக்கொண்டு, பாய-(பல பக்கங்களிலும்) பரவும்படி, முழங்கி - ஆரவாரித்தலானே, மா இரு - மிகவும் பெரிய, ஞாலம் - பூமியின்கண்ணே, இருள் கூர் - ஒளியின்மை மிகும்படியான, மருள் -

மயக்கத்தைத் தரும், மாலை - இம் மாலைவேளையே, சேயவர் - (நம்மைப் பிரிந்து) சேய்மைக்கண் சென்றவராகிய நங்காதலர், செய்த - (தாம் திரும்புவதாகக்) கூறிச்சென்ற, குறி - அடையாளமாகும். (ஆகலின் மயங்கேல், என்று தோழி தலைமகளிடங் கூறினாள்.)

(ப - ரை.) ஆயர்கள் இனத்தை ஊரின்கண்ணே பெயர்வித்து ஆம்பற்குழலை மருவ, ஒலிக்குங் கடலுள் நீரை முகந்து பரக்க முழங்குதலான், மாயிரு ஞால மெல்லாம் இருள்மிக்கு மயங்கும் மாலைப்பொழுது நம்மைப் பிரிந்து சேயராயினார் வருவதற்குச் சொல்லிய குறி.

(விரி.) இனம் - ஆனிரை; பசுக்கூட்டம். ஆம்பல் - ஆம்பற் பூவடிவில் அணைசுபண்ணி யமைக்கப்பட்ட குழல். கூர் - உரிச்சொல். முழங்கி - காரணப்பொருளில் வந்த வினையெச்சம். (உஎ)

அதிர்குர லேறொ டலைகடன் மாந்தி
முதிர்மணி நாக மனுங்க முழங்கிக்
கதிர்மறை மாலை கனைபெய லூழப்
பிதிரு முலைமேற் சுணங்கு.

[பருவங்காட்டிய தோழி வற்புறுத்தியது.]

(பத.) கதிர்மறை - (ஞாயிற்றினது) கதிர்கள் மறையப் பெற்ற, மாலை - மாலை வேளையின்கண்ணே, கனை பெயல் - செறிந்த மழையானது, அலை கடல் - அலைகின்ற கடனீரை, மாந்தி - குடித்து, அதிர் - அதிரச் செய்கின்ற, குரல் - ஒலியினையுடைய, ஏறு ஓடு - உருமேற்றோடே, முதிர் - விளைந்த, மணி - மாணிக்கத்தினையுடைய, நாகம் - நாகப்பாம்புகள், அனுங்க -

வருந்தும்படி, முழங்கி - ஆரவாரித்து, தாழ - பெய்தலானே, (இனி), முலைமேல் - தலைமகளின் முலைகளிடத்தே, சுணங்கு - தேமல்கள், பிதிரும் - சிதறவிட்டாற்போல பரந்து காணப் பெறும். (என்று தோழி தலைமகட்குக் கார்ப்பருவத்தைத் தெரி விப்பான் வேண்டிக் கருதிக் கூறிக்கொண்டாள்.)

(ப - ரை.) அலைகடலைப் பருகி அதிராநின்ற குர லினையுடைய உருமேற்றோடு முதிர்ந்த மணிநாகங்கள் வருந்தும் வகை முழங்கி, வெயில்மறைந்த மாலைப் பொழுது மிக்க பெயல் தாழ்தலான், இவள் முலைமேற் சுணங்குகள் பிதிர்ந்தாற்போல இனிப்பரக்கும்.

(விரி.) காட்டிய - காண்பிக்கும்பொருட்டு: செய்யிய என்னும் வாய்பாட்டு வினையெச்சம். வற்புறுத்தல் - வலிந்து கூறல். ஈண்டு, தானே கூறிக்கொள்ளலாம். ஏற்றோடு - ஓடு: மூன்றன் உருபு; கருவிப்பொருளது. கார்காலமாலை கண்ட தோழி தலைமகட்கு அதனாலுண்டாம் துயரினை எண்ணி இரங்கிக் கூறியதாகுமிது. (உ௮)

கோடலங் கூர்முகை கோளரா நேர்கருதக்
காடெலாங் கார்செய்து முல்லை யரும்பீன
வாறெலா நுண்ணறல் வார வணியிழாய் !
போதராய் காண்பாம் புறவு.

[இதுவு மது.]

(பத.) அணி இழாய் - அழகிய அணிகலங்களைப் பூண் டுள்ள அம்மையே ! காடு எலாம் - முல்லை நிலங்களின் எல்லாப் பாகங்களிலும், கார் செய்து - முகில்கள் முழங்கிப் பெய்தலான், கோடல் - காந்தளினது, அம் - அழகிய, கூர்முகை - கூர்த்த மொட்டுக்கள், கோள் - வலிமை மிக்க, அரா - பாம்பினுக்கு,

நேர் - ஒப்பாக, கருத - எண்ணும்படி (அரும்பவும்,) முல்லை - முல்லைச்செடிகள், அரும்பு - மொட்டுக்களை, ஈன - தோற்று விக்கவும், ஆறு எலாம் - (நடக்கும்) வழிகளிலெல்லாம், (மழை நீரோட்டத்தால்,) நுண் - நுண்ணிய, அறல் - கருமணல், வார - வழிந்துகிடக்கவும், (அமைந்த,) புறவு - முல்லை நிலக் காட்சியை, காண்பாம் - நாம் கண்டு களிப்பம், போதராய் - (வெளியே) புறப்பட்டுவருவாயாக. (என்று தோழி தலைமகளிடங் கூறினாள்.)

(ப - ரை.) காந்தளின் மிக்க அரும்புகள் கோளரா விற்கு மாறாகக் கருதிக் காரெடல்லாங் கார்ப்பருவத்தைச் செய்து முல்லை யரும்புகளை யீன, வழிகளெல்லாம் நுண் ணிய அறல் மணல் மேலொழுகுதலால், அணியிழையை யுடையாய்! புறவினைக் காண்பாம் போதராய்.

(விரி.) செய்து - காரணப் பொருளில் வந்த வினையெச் சம். காண்பாம் - முன்னிலையுளப்பாட்டுத் தன்மைப் பன்மை வினைமுற்று. இங்கு, தோழி தலைமகட்குக் கார்காலக்காட்சியை காணுமாறு அழைத்து வற்புறுத்துமாறு காண்க. இதன் பயன் யாதெனின், அக்காட்சியின்கண் ஈடுபாட்டால் தலைமகன் பிரி வைச் சிறிது மறந்து தலைமகள் மகிழும் என்பதாம். (உ௯).

அருவி யதிரக் குருகிலை பூப்பத்
தெரியா வினநிறை தீம்பால் பிலிற்ற
வரிவளைத் தோளி! வருவார் நமர்கொல்
பெரிய மலர்ந்ததிக் கார்.

[இதுவு மது.]

(பத.) வரி - (அழகிய) கோடுகள் (நிறைந்த,) வளை-வளை யல்களை (யணிந்த,) தோளி - தோள்களையுடைய தலைவியே!

இ கார் - இம்முகிலானது, அருவி - நீர்வீழ்ச்சிகள், அதிர - (பெருக்கெடுத்து வந்து) முழங்கவும், குருகிலை - குருக்கத்திச் செடியின் இலைகள், பூப்ப - பொலிவுடன் விளங்கவும், தெரி - (சுரத்தலின் நன்மை) ஆராய்ந்து அறியப்பட்ட, ஆ இனம்-பசுக் கூட்டங்கள், நிறை - குறைவின்றி. தீ பால் - இனிய பாலை, பிலிற்ற - பொழியவும், பெரிய - மிகுதியும், மலர்ந்தது - பரந்து பெய்யாநின்றது, (ஆகலான்,) நமர் - நம்மவராகிய காதலர், வருவார்கொல் - (இப்பொழுது நம்மாட்டு) வந்து சேருவார் போலும். (என்று தோழி தலைமகளிடங் கூறினாள்.)

(ப - ரை.) மலையருவிகள் வந்து முழங்க, குருகிலைகள் பூப்ப, தெரிந்த ஆனினங்கள் இனிய பாலைப்பொழிய, வரிவளைத் தோளிணையுடையாய்! நமர் வருவார் கொல்லோ? பெரியவாயுள்ள அழகுகளை மலர்ந்தது இக்கார் ஆதலான்.

(விரி.) தோளி - அண்மை விளி கொண்டுள்ளது. கொல் - ஐயப்பொருள் கொண்டுள்ளது. இங்கு, கார்ப்பருவத்தினைத் தலைமகட்குத் தெரிவித்த தோழி, தலைமகனூர் வருதல் கூடும் எனக் கூறலாயினள். காட்டிய - இறந்த காலப்பெயரெச்சம். (௩௰)

முல்லை முற்றும்

## நான்காவது மருதம்

பழனம் படிந்த படுகோட் டெருமை
கழனி வினைஞர்க் கெறிந்த பறைகேட்
டுரனழிந் தோடு மொலிபுன லூரன்
கிழமை யுடையனென் றோட்கு.

[தலைமகள் வாயின் மறுத்தது.]

(பத.) பழனம் - மருத நிலத்தின்கண்ணே, படிந்த - தவழ்ந்து மேய்ந்து கொண்டிருந்த, படு -(பின் புறமாகப்) படிந்து கிடக்கும், கோடு - கொம்புகளையுடைய, எருமை - எருமையானது, கழனி - வயல்களினிடத்தே, வினைஞர்க்கு - தொழில் செய்யும் மள்ளர்கள் ஊக்கங்கொள்வதற்காக, எறிந்த - ஒலிப்பித்த, பறை - மருத நிலப்பறையினது ஒலியினை, கேட்டு - கேட்கப்பெற்று, உரன் அழிந்து - (மருண்டு) அறிவின்றி, ஓடும் - (மனையை நோக்கி) விரைந்து செல்லுதற்கிடமாகிய, ஒலி - ஒலிக்கின்ற, புனல் ஊரன் - நீர்வளமிக்க மருதநிலத்தூர்த்தலைவன், என் தோள் கு - என்னுடைய தோள்கட்கு, (முன்னேற்பட்ட மணவினை காரணமாக,) கிழமை - (மணாளன் என்ற) உரிமையினை, உடையன் - (அவன் எங்குச் செல்லினும் நீக்கவியலாது) கொண்டுளான். (ஆகலின், அவ்வுரிமை யொன்றே எனக்குச் சாலும்; அவனருள் யாதும் வேண்டுவதின்று, என்று தலைமகள் தலைமகனின் வாயிலாக வந்தவனிடங் கூறினாள்.)

(ப - ரை.) பழனத்தின்கட் படிந்த படுகோட்டினையுடைய எருமை கழனியின்கட் டொழில் செய்வார்க்கு எறிந்த பறை யொலியைக் கேட்டு வெருவி, அறிவழிந்தோடும் ஒலிபுனலையுடைய வூரன் என்றோட் குரிமையுடையன் என்னும் இத்துணையே யமையும்; அவன் எனக்கு நல்குதல் வேண்டுவதில்லை.

(விரி.) வயல்களில் வினைஞர் நெல்லரியுங் காலத்து அவர்களை ஊக்குதல் வேண்டி, 'கிணை', என்னும் மருதநிலப் பறையினை முழக்குதல் அக்கால மரபு. படுகோடு, ஒலிபுனல் - வினைத்தொகைகள். கிழமை - உரிமை, சம்பந்தம். (௩௧)

கணைக்கா னெடுமருது கான்ற நறுந்தா
திணைக்கால நீலத் திதழ்மேற் சொரியும்
பணைத்தாட் கதிர்ச்செந்நெற் பாய்வய லூர
னிணைத்தா னெமக்குமோர் நோய்.

[இதுவு மது.]

(பத.) கணை - திரண்ட, கால் - அடிப்பாகத்தினை யுடைய, நெடு மருது - நீண்டுவளர்ந்த மருத மரங்கள், கான்ற - வெளிவிட்ட, நறும் தாது - மணமிக்க பூந்துகளை, பணை - பருத்த, தாள் - தாறுகளையுடைய, கதிர் - கதிர்களோடு கூடிய, செந்நெல் - செவ்விய நெற்பயிரிடத்தே (சொரியாமல்,) இணை - ஒத்த, கால - அடிப்பாகங்களையுடைய, நீலத்து இதழ் மேல் - நீலோற்பல மலரிதழ்களின்மீதே, சொரியும் - சொரிந்து கொண்டிருக்கும்படியான, பாய் - பரந்த, வயலூரன் - மருத நிலத்தூர்த்தலைவன், எமக்கும் - (பரத்தையர்க்கின்பம் பாலித்தலே யன்றி, அவனால் வெறுக்கப்பட்ட) எமக்கும், ஓர் - இணையில்லாத, நோய் - (பசலை) நோயினை, இணைத்தான் - பொருந்தும்படி செய்து போற்றினான். (ஆகலின், அவனருள் இப்பொழுது எமக்கு வேண்டாவொன்றே யாகும், என்று தலைமகள் தலைமகனின் வாயிலாக வந்தவனிடங் கூறினாள்.)

(ப - ரை.) திரண்ட காலையுடைய மருதுகள் உகுத்த நறுந்தாதுகள் ஒத்த தாளினையுடைய நீலங்களின் இதழ்மேலே சொரியும் பெருந்தாட் கதிரையுடைய செந்நெற் பரந்த வயலூரன் பரத்தையர்க் கின்பத்தை இணைத்தலே யன்றி, எமக்குமோர் பசலை நோயினை யிணைத்தான்.

(விரி.) "மருது கான்ற நறுந்தாது, செந்நெல்லிற் சொரிதலின்றி, நீலத்திதழ்மேற் சொரியும்," என்றது இறைச்சிப் பொருள். மருதினைத் தலைமகனாகவும், செந்நெல்லினைத் தலைமகளாகவும், நீலத்தினைப் பரத்தையாகவும், சொரிதலினை யருளுதலாகவும் கொள்க. அருளுதல் - இன்பமளித்தல். (௩௨)

கடையாயார் நட்பேபோற் காஞ்சிநல் லூர!
உடைய விளநல முண்டாய்—கடையக்
கதிர்முலை யாகத்துக் கண்ணன்னார் சேரி
யெதிர்நல மேன்றுநின் றாய்.

[தோழி வாயின் மறுத்தது.]

(பத.) காஞ்சி நல் ஊர - காஞ்சிமரங்கள் மிகுந்த நல்ல மருத நிலத்தூர்த் தலைவனே! கடையாயார் - கடைப்பட்டவர்களாகிய கீழ்மக்களின், நட்பேபோல் - நலமோடு கூடிய காலத்து நெருங்கி நட்புற்று, அஃதில்லாக் காலத்து விலகிச் செல்லும் மேன்மையினைப் போன்று, உடைய - (தலைமகள் அக்காலத்துக்) கொண்டிருந்த, இள நலம்-இளமை நலத்தாலேற்பட்ட இன்பத்தினை, உண்டாய் - (நன்கு) கைக்கொண்டனை, கடை - பின்பாகிய இப்பொழுது, (இளநலமில்லா அவளைக் கைவிட்டு,) அ - அந்த, கதிர் - ஒளியினையுடைய, முலை - முலைகளையும், ஆகத்து - மேனியினையும், (கொண்ட,) கண் அன்னார் - நினக்குக் கண்போன்றவர்களாகிய பரத்தையர், சேரி - சேர்ந்து வாழுஞ் சிற்றூர்க்கண்ணே (சேர்ந்து,) எதிர்நலம் - (அவர்களின் இளமையாலே கண்களுக்கு இனிமையாக) எதிர்ப்படும் இன்பத்தினை, என்று - எதிர்கொண்டு, நின்றாய் - நிற்றலைச்செய்தனை. (அங்ஙனமுள்ள நீ என்னை வாயிலாக வேண்டுவது பெரிதும் மறுக்கற்பாலதாம், என்று தோழி தலைமகனிடங் கூறினாள்.)

(ப - ரை.) கீழாயினார் நட்பே போலக் காஞ்சி மரங்களையுடைய நல்லூரனே! என்றோழியுடைய இள

நலமெல்லாம் முன்பு நுகர்ந்தாய்; பின்னை அக்கதிர் முலை யாகத்துக் கண்ணனையார் சேரிக்கட்சென்று மற்றவர் இளமை எதிர் நலத்தை எதிரேற்று நின்றாய்.

(விரி.) காஞ்சி - மருத நிலக் கருப்பொருள். "கடையாயார் நட்பிற், கமுகனையர்," என்ற நாலடியாரின் தொடர் ஈண்டு ஆராயத்தக்கதாம். சேரி - பலர் சேர்ந்து வாழுமிடம். "கதிர்த்த முலை," எனினுமாம். அ - பண்டறிசுட்டு. (௩௩)



செந்நெல் விளைவய லூரன் சிலபகற்
றன்னல மென்னலார்க் கீயா னெழுபாண!
பாரித்த வல்குற் பணைத்தோளார் சேரியுள்
வாரிக்குப் புக்குநின் றாய்.

[தலைமகள் பாணற்கு வாயின் மறுத்தது.]

(பத.) பாண - பாணனே! செந்நெல் - செவ்விய நெல்லானது, விளை - விளையும்படியான, வயல் ஊரன் - கழனிகள் சூழப்பெற்ற மருத நிலத்தூர்த்தலைவன், சில பகல் - (முன்பு) சிலகாலம், தன் நலம் - தன்னுடைய இன்பத்தை, என் அலார்க்கு - என்னையல்லாத மற்றைய பெண்களுக்கு, ஈயான் - கொடாதவனாய் நிறை கொண்டிருந்தனன். (இப்பொழுது,) பாரித்த - பரந்த, அல்குல் - நிதம்பத்தினையும், பணை - பருத்த, தோளார் - தோள்களையுமுடைய பரத்தையரது, சேரியுள் - சேரியினிடத்தே, வாரிக்கு - (தன்னலமாகிய இன்பவாரியினை தலைமகன்) வாரி இறைத்தற்குரிய (காரணத்தினை,) புக்கு - (அச்சேரிக்குப்) போய், நின்று - (ஒருபுறமாக) நின்றிருந்து, ஆய் - ஆராய்வாயாக, (ஆகலின்.) எழு - (இவ்விடத்தை விட்டுப்) புறப்படுவாயாக. (என்று தலைமகள் பாணனிடங் கூறினாள்.)

(ப - ரை.) செந்நெல் விளைகின்ற வயலினையுடைய ஊரன் முன்பு சில நாள் தன்னலத்தை யானல்லா

தார்க் கியான்; இப்பொழுது பாரித்த அல்குற் பணைத் தோளையுடைய பரத்தையர் சேரியின்கண் மற்றவர் தலை மகற்கே நல்கும் வாரிக்குப் புக்கு நின்று ஆராய்வாயாக: ஆகையால், பாண! இங்கு நின்றும் எழுவாயாக.

(விரி.) வாரி - பெருக்கு; வெள்ளம். பாணன் - தலை மகனுக்கும் தலைமகளுக்கும் யாழிசையுடன் பாட்டுப்பாடி அவர் களை மகிழ்விக்கும் ஏவலன். (௩௪)

வேனிற் பருவத் தெதிர்மலரேற் றூதுங்
கூனிவண் டன்ன குளிர்வய னல்லூரன்
மாணிழை நல்லா ரிளநல முண்டவர்
மேனி யொழிய விடும்.

[இதுவு மது.]

(பத.) வேனில் பருவத்து - வேனிற் காலத்தே, எதிர் எதிரிலே அகப்பட்ட, மலர் - பூக்களை, ஏற்று - (விரும்பி) மேற்கொண்டு, ஊதும் - தேனினைக் கைக்கொள்ளும், கூனி - (வளைந்த சிறகாகிய) கூனினையுடைய, வண்டு அன்ன - வண் டினை யொத்து வாழ்க்கையை நடத்தும், குளிர் - குளிர்ந்த, வயல் நல் ஊரன் - கழனிகள் சூழ்ந்த நல்ல மருதநிலத்தூர்த் தலைவன், மாண் - மாட்சிமையுற்ற, இழை - அணிகலங்களை யணிந்த, நல்லார் - பெண்மக்களிடத்தேயுள்ள, இள நலம் - இளமையாலுண்டாம் நன்மையாகிய இன்பத்தினை, உண்டு - கைக்கொண்டு, அவர் - அப்பெண்மக்களது, மேனி - அழகு, ஒழிய - நீங்கியவுடன், விடும் - விட்டு நீங்குவன். (அங்ஙன முள்ள தலைமகன் உறவு எமக்கு வேண்டுவதின்று, என்று தலைமகள் பாணனிடங் கூறினாள்.)

(ப - ரை.) வேனிற்காலத் தெதிர்ந்த மலர்களை ஏற்றுக்கொண்டூதும் கூனிவண்டு போலுங் குளிர்வயல்

நல்லூரன்; ஆகலான், மாட்சிமைப்பட்ட இழையை யுடைய நல்லாரின் நலத்தை நுகர்ந்து மற்றவர் உடம் பினை ஒழியவிடும்.

(விரி.) வேனிற் காலத்தே மலர்கள் மலரும் அருமை கண்டு வண்டுகள் கிடைத்த பூக்களிலுள்ள தேனைச்சேர்க்க முயல்வது பற்றி, "வேனிற் பருவத் தெதிர்மலரேற்றூதுங் கூனிவண்டு," எனலாயினர். மேனி - உடம்பு எனலுமாம். (௩௫)

செந்தா மரைமலருஞ் செய்வய னல்லூர!
நொந்தான்மற் றுன்னைச் செயப்படுவ தென்னுண்
தந்தாயு நீயே தரவந்த நன்னலங் [டாந்
கொண்டாயு நீயாயக் கால்.

[தோழி வாயில் நேர்வாள் கூறியது.]

(பத.) செந்தாமரை - செவ்விய தாமரைப்பூக்கள், மல ரும் - பூத்துக்கிடக்கும்படியான, செய் - பண்படுத்தப்பட்ட, வயல் - கழனிகள் (சூழ்ந்த,) நல் ஊர - நல்ல மருதநிலத்தூர்த் தலைவனே! உன்னை - (பரத்தையிற்பிரிந்த) நின்னை, நொந்தால்- வருத்தமுற்றுச் சினத்தலால், செயப்படுவது - (பெண்பாலராகிய எங்களால் செய்யக்கிடந்தது,) என் உண்டாம் - என் உள்ள தாம் (ஒன்றுமின்று,) (மேலும்), தந்தாயும் - (களவுக்காலத்துத் தலைமகட்குப் புணர்ச்சி யின்பத்தால் பேரழகினைத்) தந்தவ னும், நீயே - நீயே ஆவாய், தர - நீ கொடுக்க, வந்த - (தலை மகட்குக்) கிடைத்த, நல் நலம் - நல்ல அழகினை, கொண்டா யும்—(பிரிவால் எடுத்துக்) கொண்டவனும், நீ ஆயக்கால் - நீயே ஆயினால், (நின்பால் யாம் எவ்வகைக் குறை கூறக்கூடும்? யாதுங்கூடாது, என்று தலைமகனிடந் தோழி கூறினாள்.)

(ப - ரை.) செந்தாமரைகள் மலராநின்ற செய்யப் பட்ட வயல்களையுடைய நல்லூர! நீ செய்த பிழைகட்கு

நொந்தால் நின்னைச் செய்யப்படுவ தென்னுள்ளதாம்! என்றோழி நலத்தைத் தந்தாயு நீயே; தரவந்த நன்னலத்தைக் கொண்டாயும் நீயே யாயினால்.

(விரி.) மற்று அசைநிலை. "கொடுத்தவன் எடுத்தாற் கூறுவதென்?" என்ற கொள்கைப்படி பொருள் விரிக்கப்பட்டது. வாயில் நேர்தல் - தலைமகள்பால் தூதுசென்று கூட்டுவிக்க இணங்குதல். நேர்வாள் - முற்றெச்சம். (௩௬)

பல்காலும் வந்து பயின்றுரையல் பாண! கே
ணெல்சேர் வளவய லூரன் புணர்ந்தநா
ளெல்வளைய மென்றோளே மெங்கையர் தம்போல
நல்லவரு ணாட்டமி லேம்.

[பாணற்குத் தலைமகள் வாயின் மறுத்தது.]

(பத.) பாண - பாணனே! கேள் - (நான் சொல்வதைக்) கேட்பாயாக, நெல் சேர் - நெற்பயிர்கள் நிறைந்திருக்கும்படியான, வளம் - வளத்தினையுடைய, வயல் - கழனிகள் (சூழ்ந்த,) ஊரன் - மருதநிலத்தலைவன், புணர்ந்த நாள் - (எம் மோடு) கலந்து வாழ்ந்த அக்காலத்திலும், எல் வளையம் - ஒளியினையுடைய வளையல்களை யணிந்துள்ள யாங்கள், (அவனுக்கு) மெல் தோளேம் - எளிமையான தோள்களையுடையவர்களாய் இருந்தோமேயன்றி, எங்கையர் - எமக்குப் பின் வந்தவர்களாகிய பரத்தையரை, போல - போன்று, நல்ல - சிறந்த (அருள்மிகுந்த அன்போடுகூடிய,) நாட்டம் - (தலைமகனின்) பார்வையினை, இலேம் - பெற்றேமில்லை, (அங்ஙனமிருக்க,) பல்காலும் - பல தடவைகளிலும், வந்து - இங்குத் தோன்றி, பயின்று - (தலைமகனின் பேரன்பினை) எடுத்து, உரையல் - (வீணே) சொல்லிக்கொண்டிருக்க வேண்டாம். (என்று தலைமகள் பாணனிடங் கூறினாள்.)

(ப - ரை.) பல பொழுதும் வந்து பயின்று சொல் லற்க; பாணனே! கேட்பாயாக; நெற் செறிந்த வளவய லூரன் எம்மைப்புணர்ந்த முன்னாளின்கண்ணும் எல் லேயம் மென்றேளேம்; எங்கையர் தம்மைப்போல நல்ல மடந்தையருள் வைத்து அவனை லெண்ணப்பட்டி லேம்.

(விரி.) உரையல் - அல்லீற்று எதிர்மறை வியங்கோள் வினைமுற்று. எங்கையர் - தங்கைமார்கள்; பரத்தையர். தலை மகட்குப் பின்னர்த் தோன்றித் தன்னைப்போல் தலைமக ளோடு வாழ்தலின், அவர்களைத் தலைமகள், 'எங்கையர்', என லாயினள். தாம் - அசைநிலை. (௩௭)

நல்வய லூர னலமுரைத்து நீ பாண!
சொல்லிற் பயின்றுரைக்க வேண்டா வொழிதிநீ
யெல்லுநன் முல்லைத்தார் சேர்ந்த விருங்கூந்தல்
சொல்லுமவர் வண்ணஞ் சோர்வு.

[இதுவு மது.]

(பத.) பாண - பாணனே! நல் வயல் - நல்ல கழனிகள் (சூழ்ந்த,) ஊரன்-மருதநிலத்தூர்த் தலைவனின், நலம் - நன்மை களை யெல்லாம், நீ சொல்லில் - நீ உன்னுடைய வெறுஞ்சொற் களினாலே, பயின்று - எடுத்து, உரைக்கவேண்டா - சொல்ல வேண்டுவதின்று, எல்லும் - வெள்ளிய நிறமிக்க, நல் முல்லை தார்- நல்ல முல்லை மாலைகள், சேர்ந்த - நிறைந்த, இரும் கூந்தல் - நீண்ட கூந்தலையுடைய பரத்தையே, அவர் வண்ணம் - அத்தலை வர் (தம்மாட்டுக்கொண்ட காதலின்) நேர்த்தியையும், (அவர்) சோர்வு - (எம்மாட்டுள்ள) அவரது இகழ்ச்சியும், சொல்லும் - தன்னடக்கையால் தெரிவியாநின்றுள், உரைத்தும் - (வேண்டு மேல் யாமே தலைமகனின் நேர்மைகளை உனக்கு விளக்கமாகச்)

சொல்வேம், நீ ஒழிதி - (ஆகலின், ஒன்றுங்கூறுது) நீ இவ்விடத்தை விட்டொழிவாயாக (என்று தலைமகள் பாணனிடங் கூறினள்.)

(ப - ரை.) நல்ல வயலூரனுடைய நன்மை யெல்லாம் நாங்களே அறிந்து உரைக்க வல்லேம்; பாணனே! நீ சொல்லாற் பயின்றுரைக்க வேண்டா; இனி ஒழிவாயாக; நிறமிக்க நன்முல்லைமாலை சேர்ந்த இருங்கூந்தலையுடைய பரத்தையே சொல்லாநின்றாள்; தன் மாட்டவர் காதலித்த வண்ணத்தையும், எம்மாட்டுள்ள அவரது இகழ்ச்சியையும்.

(விசே.) இருங்கூந்தல் - அடையடுத்த சினையாகு பெயர்; அன்றி, பண்புத்தொகை யன்மொழி. தலைமகன் பரத்தையினைப் பிரிந்து தலைமகண்மாட்டுப் பாணனைத் தூதாக அனுப்பியுளானாகலின், பரத்தையினை, "முல்லைத்தார் சேர்ந்த விருங்கூந்தல்," என அவள் கற்பாற்றி யிருத்தல் குறிப்பிடப்பட்டது. (௩௮)

கருங்கயத் தாங்கட் கழுமிய நீலம்
பெரும்புற வாளைப் பெடைகதூஉ மூரன்
விரும்புநாட் போலான் வியனல முண்டான்
கரும்பின்கோ தாயினேம் யாம்.

[வாயில் வேண்டிச் சென்றார்க்குத் தலைமகள் வாயின் மறுத்தது.]

(பத.) கரும் - பெரிய, கயத்து - குளத்தினிடமாகிய, ஆங்கண் - அவ்விடத்தே, கழுமிய - மூளைத்துள்ள, நீலம் - நீலோற்பலமலரை, பெரும் - பெரிய, புறம் - முதுகினையுடைய, வாளை பெடை - பெட்டை வாளை மீனனது, கதூஉம் - பற்றி மேயின்ற, ஊரன் - மருத நிலத்தூர்த் தலைவன், வியன் நலம் - (முன்பு எம்மாட்டிருந்த) மிகுந்த நன்மையாகிய இன்பத்தை

உண்டான் - கைக்கொண்டான், யாம் - (அதனால்) நாம், (அவனுக்கு,) கரும்பின் - (சாறு பிழிந்தெடுத்த) கரும்பின்கண்ணே காணப்படும், கோது ஆயினேம் - சக்கையாக மாறி விட்டோம், விரும்புநாள் - (அக்காலத்து எம்மை) விரும்பிய நாட்களில் (நடந்து கொண்டது,) போலான்-போன்றவனாய் (இப்பொழுது) இருக்கின்றானில்லை. (ஆகலின், நீவிர் யாதுஞ் சொல்லாது செல்வீர்களாக. என்று தலைமகள் வாயிலாக வந்தார்மாட்டுக் கூறினாள்.)

(ப - ரை.) பெருங்கயத்த இடத்தின்கட் செறிந்த நீலங்களைப் பெரும்புறத்தினையுடைய வாளைப்பெடைகள் கதுவுகின்ற ஊரன் எம்மை விரும்பின நாட்போலான்; எம்முடைய வியனலத்தை முன்னேயுண்டான்; ஆதலான் இப்பொழுது கரும்பின் கோதுபோல வாயினேம்.

(விரி.) கதூஉம் - சொல்லிசையளபெடை. போலான் - எதிர்மறை ஆண்பால் வினைமுற்று, "ஊரன் உண்டான். அதனால், கோதாயினேம். ஆகவே, போலான்," என முடிக்க. வாளை - ஒருவகை மீன். (௯௧)

ஆம்ப லணித்தழை யாரந் துயல்வருந்
தீம்புன லூரன் மகளிவ ளாய்ந்தநறுந்
தேமலர் நீலம் பிணையல் செறிமலர்த்
தாமரை தன்னையர் பூ.

[இந்நிலத்தின்கண் இன்ன பெற்றியால் வருவாயாகவெனச் சொல்லியது.]

(பத.) (தலைமகனே!) ஆம்பல் - ஆம்பற் பூக்களால், அணி - அழகு செய்யப்பட்ட, ஆரம் தழை - சந்தனத்தழைகள், துயல் வரும் - அணியப் பெற்று அசைந்து வருகின்ற, தீம்புனல் ஊரன் - நல்ல நீர் சூழ்ந்த மருதநிலத்தூர்த் தலைவனின், மகள்

இவள் - மகளாகிய இத்தலைமகள், ஆய்ந்த - நல்லவென்று ஆராய்ந்து கண்டுபிடித்த, நறும் தேம் மலர் - நல்ல மணமிக்க மலர். நீலம் - நீலோற்பலமாகும், தாமரை மலர் - தாமரைப் பூக்கள், செறி - நிரைத்துக்கட்டப்பட்ட, பிணையல் - மாலையே, தன் ஐயர் - இவள்தன் ஐயன் மார்களாகிய தந்தையும் தமையன் மார்களும் சூடுகின்ற, பூ - மலராகும். (ஆதலால், நீலத்தைக் கைக்கொண்டு, தாமரை மாலையைச் சூடி இரவுக்குறிக்கண் வருவாயாக, என்று தோழி தலைமகனிடங் கூறினாள்.)

(ப - ரை.) ஆம்பலாற் செய்யப்பட்ட அணித் தழையும் ஆரமும் அல்குலின்கண்ணும், முலையின் கண்ணும் அசைந்து வருகின்ற தீம்புனலூரன் மகள் இவள் இவ்வூரின்கண் ஆய்ந்த நறுமலர் நீலம்; பெண் பால் சூட்டிச் சூடும் பூமாலை செறிந்த மலர்த்தாமரை மாலை அவள் ஐயன்மார்க்குச் சூடும் பூவாதலால், நீயும் தாமரை மாலையைச் சூடி வருவாயாக.

(விரி.) இரவுக்குறி வேண்டிய தலைமகற்கு இரவுக்குறி நேர்ந்த தோழி குறிப்பாக அவனும் அவனைச் சார்ந்தோரும் அணியுந் தலைமாலையும் பூவும் யாவென வினவ, தலைமகன் குறிப் பறிந்து அவளுந் தலைமகளும் அவர்களைச் சார்ந்தோரும் அணி யும் தழையும் பூவும் யாவென வினவ, தோழி குறிப்பாகக் கூறிய விடையாகுமிது. இங்குக் குறிப்பென்றது இரவுக் குறிக் கண் யாமறியுமாறு இன்ன பூச்சூடி இன்ன பெற்றியாக வர வேண்டுமென்பது. இதனை நச்சினார்க்கினியர் (தொல். களா. உக.) "இரவுக்குறி நேர்ந்த தோழி இந்நிலத்தின்கண் நீ வருங் கால் இன்ன பெற்றியான் வருவாயாக," என்றது என்பர். தன்னையர் சூடு மாலையினைக் கூறியது இரவிற் காணும் பிறர் ஐயுறாதிருக்க வேண்டிப்போலும். (சய)

மருதம் முற்றும்

## ஐந்தாவது—நெய்தல்

நெய்தற் படப்பை நிறைகழித் தண்சேர்ப்பன்
கைதைசூழ் கானலுட் கண்டநாட் போலானுன்
செய்த குறியும்பொய் யாயின வாயிழையாய்!
ஐயகொ லான்றார் தொடர்பு.

[அல்ல குறிப்பட்டுப் பெயர்ந்த தோழி தலைமகன் சிறைப்புறத்
தானுகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது.]

(பத.) ஆய் இழையாய் - ஆராய்ந்து செய்யப்பட்ட அணி கலன்களை யணிந்த தலைவியே! நெய்தல் - நெய்தற்பூக்கள் நிறைந்த, படப்பை - கொல்லைகள், நிறை - மிகுந்துள்ள, கழி - கடற்கால்வாய்களையுடைய, தண் - குளிர்ந்த, சேர்ப்பன் - கடற் கரைத்தலைவன், கைதை சூழ் - தாழை மரங்கள் சூழ்ந்துள்ள, கானலுள் - கடற்கரைச் சோலையினிடத்தே, கண்ட நாள் - (முன்பு அவன் நம்மைக்) கண்ட நாளில் (நாம் அவற்கு எவ் வகை அருமையாகக் காணப்பட்டோமோ அவ்வகையினை,) போல் ஆனுன் - போன்று அவன் நமக்கு அருமையாகக் காணப்படலாயினுன், செய்த-(அவனுற்) செய்யப்பட்ட, குறியும்- இரவுக்குறிகளும், பொய்யாயின - பொய்த்து நம்மை ஏமாற்றி விட்டன, ஆன்று - மிகுதியும் அமைந்து, ஆர் - பொருந்திய, தொடர்பு - நட்பானது, ஐயகொல் - இங்ஙனம் ஐயத்திற்கிட மாய் நிலையாது போகும்போலும். (என்று தோழி தலைமக ளிடங் கூறினுள்.)

(ப - ரை.) நெய்தற்படப்பை நிறைகழித்தண் சேர்ப்பன் தாழை சூழ்ந்த கானலின்கண் நம்மைக்கண்ட முதனுள் போலானுன்; அவனுற் செய்யப்பட்ட குறிகளும் பிழைத்தன; ஆயிழையாய்! அமைந்த நட்புச் செறிந் தன்றுகாதே யிருப்பது.

(விரி.) களவுப்புணர்ச்சியின் தொடக்கத்தில் தலைமகள் குறிப்பிட்ட வேளையில் குறிப்பிட்டவிடத்திற் காணப்படுவது ஆயமுதலியோரை அகற்றி வருதலான் அருமையாமாதலின், "கானலுட் கண்டநாட் போலானான்," எனலாயினள். குறி - தலைமகன் தன் வருகையை அறிவிக்கும் வண்ணஞ் செய்யுஞ் சில குறிப்புக்கள். அவை பறவைகளை எழுப்பல், நீர் நிலையிற் காய்கள் முதலியவற்றை விழச்செய்து ஒலி யெழுப்பல் முதலியனவாம். அவை பொய்த்தலாவது, தலைவனால் அவை நிகழாமல் மற்றொரு நிமித்தத்தால் நேர்வதாம். இதனை நச்சினார்க்கினியர், (தொல். கா. உ௰.) "அருமை செய்து அயர்ப்பினும்," என்றதற்கு எடுத்துக்காட்டி, "தீங்கு செய்தாரையும் பொறுக்கிற்பார் (தலைவர்) நம்மைத் துறத்தலின், நாம் அரியேமாகியது பற்றித் தாமும் அரியராயினார் போலுமென அவ்விரண்டும் (தான் அருமையானதும், தலைமகன் அருமையானதும்) கூறினாள் (தலைமகள்.) என்பர். நெய்தல் - இரங்கலும் இரங்கனிமித்தமும். இச்செய்யுள் இரங்கலின் பாற்படும். (சுக)

முத்த மரும்பு முடத்தாண் முதுபுன்னை
தத்துந் திரைதயங்குந் தண்ணங் கடற்சேர்ப்ப!
சித்திரப் பூங்கொடி யன்னாட் கருளியாய்
வித்தகப் பைம்பூணின் மார்பு.

[தோழி வரைவு கடாயது.]

(பத.) முத்தம் - முத்துக்களைப் போன்று, அரும்பும் - மொட்டுக்களை வெளிவிடாநின்ற, முடம் - வளைந்த, தாள் - அடிப்பாகத்தினையுடைய, முது புன்னை - முதிர்ந்த புன்னை மரத்திடத்தே, தத்தும் - தாவிக்குதித்துச் செல்லும்படியான, திரை - அலைகள், தயங்கும் - அசைந்தாடிக்கொண்டிருக்கும் படியான, தண் - குளிர்ந்த, அம் - அழகிய, கடல் சேர்ப்ப - கடற்றுறைமுகத்திற்குரிய தலைவனே! சித்திரம் - அழகிய, பூ

கொடி - பூத்தமலர்ந்துள்ள கொடியினை, அன்னாட்கு - ஒத்த எந்தலைமகட்கு, வித்தகம் - வியப்புமிக்க, பை பூண் - பசிய பொன்னாலாகிய அணியினைப் பூண்டுள்ள, நின்மார்பு - உனது மார்பின் கண்ணதாகிய இன்பத்தினை, அருள் - (மனைவினையாகிய) பேரன்புச் செயலானே, ஈயாய் - நல்குவாயாக. (என்று தோழி தலைமகனிடங் கூறினாள்.)

(ப - ரை.) முத்தம்போல வரும்பாநின்ற முடத் தாண் முதுபுன்னையின்கண் வந்து குத்தாநின்ற திரைகள் துளங்காநின்ற தண்ணங் கடற் சேர்ப்பனே! எழுதிய சித்திரப்பூங்கொடி யன்னாட்கு நின்னருளினாலே நல்காய்; வித்தகப் பைம்பூணையுடைய நின்மார்பினை.

(விரி.) சித்திரப் பூங்கொடி - ஓவியத்தேயமைத்த பூக்கள் நிறைந்த கொடியெனலுமாம். இதனை நச்சினார்க்கினியர், (தொல். சுள. உ௩) "வேண்டாப்பிரிவினும்," என்பதற்கு எடுத்துக்காட்டித் தலைவன்றான் புணர்ச்சியை விரும்பாது பிரிவைவிரும்பிய விடத்து தோழி தலைவன்மாட்டுக் கூறியது என்பர். (சஉ)

எறிசுறா நீள்கட லோத முலாவ
நெறியிறாக் கொட்கு நிமிர்கழிச் சேர்ப்ப
னறிவறா வின்சொ லணியிழையாய்! நின்னிற்
செறிவறா செய்த குறி.

[அல்ல குறிப்பட்டுப் பெயர்ந்த தோழி தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது.]

(பத.) அறிவு - எனது அறிவின்கண், அறா - நீங்காது நிலைத்திருக்கும்படியான, இன்சொல் - இன்பத்தை விளைக்குஞ் சொற்களையுடைய, அணி இழையாய் - அழகிய அணிகலங்களை

யணிந்த தலைவியே! சுறு - சுறுமீன்கள், எறி - துள்ளிவிளையாடும்படியான, நீள் - பெரிய, கடல் ஓதம் - கடலலைகள், உலாவ - முன்னும் பின்னுமாகத்திரிய, (அவற்றின்கண்,) நெறி- (வரிவரியான) நெறிவுகளையுடைய, இறு - இறால் மீன்கள், கொட்கும் - சுழன்று திரிதற்கிடமாய, நிமிர் - நீண்டு செல்லும் படியான. கழி - கடற்கால்வாய்களையுடைய, சேர்ப்பன் - கடற் கரைத் தலைவன், நின் இல் - உனது மனையின் (புறத்தேயுள்ள தோப்பின் கண்ணே,) செய்த குறி - செய்த இரவுக்குறிகளாகிய வருகையைத் தெரிவிக்கும் அடையாளங்கள், செறிவு - நிறை தலை. அறு - நீங்கா. (ஆயினும் பயனிலவாகப் போயின, என்று தோழி தலைமகளிடங் கூறினள்.)

(ப - ரை.) எறிசுறுவையுடைய நீள்கடலின்கண்ணுள்ள வோதம் வந்துலாவ வரிவரியாயிருந்துள்ள மேனியையுடைய இறுக்கள் சுழன்று திரிதருஞ் சேர்ப்பன் நின்னறிவின்கண் நீங்காதிருந்த இன்சொல்அணியிழையை யுடையாய்! நின்மனையின் புறத்து அச்சேர்ப்பன் செய்த குறிகள் பலகாலுமுளவாகாநின்றன.

(விரி.) தலைமகளின் இன்சொல் எக்காலும் தோழியின் நினைவகத்தே நிற்பது சிறப்பாமாகலின், 'அறிவு,' என்பதற்கு, 'எனது அறிவின்கண்,' எனக் கண்ணழிக்கப்பட்டது. அல்லகுறி அடிக்கடி மிகுதியாக ஏற்பட்டுத் தோழியினைப் பன்முறை ஏமாற்றியதாகலின், "செறிவறு செய்தகுறி," எனலாயினள். நிமிர்தல் - உயர்தல்; நீண்டு போதல். (சங)

இனமீ னிருங்கழி யோத முலாவ
மணிநீர் பரக்குந் துறைவ! தகுமோ
குணநீர்மை குன்றுக் கொடியன்னாள் பக்க
நினைநீர்மை யில்லா வொழிவு.

[தலைமகனைக் கண்ணுற்று நின்ற தோழி வரைவு கடாயது.]

(பத.) இனம் மீன் - மீன் கூட்டங்களையுடைய, இரும் - பெரிய, கழி - கடற்கால்வாயினிடத்தே, ஓதம் - அலைகள், உலாவ - வந்து திரிய, மணி - நீலமணிபோன்ற, நீர் - கடனீரானது, பரக்கும் - பரவிச் செல்லும்படியான, துறைவ - துறைமுகத்திற்குரிய தலைவனே! குணம் - நற்குணங்களாகிய, நீர்மை - தன்மை, குன்று - குறைவு படாத, கொடி அன்னாள் - பூங்கொடி போன்ற தலைமகளின், பக்கம் - இடத்தே, நினை - (மணவினையினை) எண்ணிப்பார்க்கும்படியான, நீர்மை - தன்மையானது, இல்லா - ஏற்படாது, ஒழிவு - நீங்கியிருத்தல், தகுமோ - நினக்குத் தக்கதாமோ? (என்று தோழி தலைமகனிடம் வினவினாள்.)

(ப - ரை.) இனமீன்களையுடைய இருங்கழியின் கண்ணே வந்து ஓதங்களுலாவ நீலமணிபோன்ற நீர் பரக்குந் துறைவனே! தகுவதொன்றோ குணத்தன்மை குன்றாக் கொடியன்னாள் திறத்து நினையு நீர்மையின்றி யொழிதல் நினக்கு?

(விரி.) நினைநீர்மை - வினைத்தொகை. இல்லா - ஈறு கெட்ட எதிர்மறை வினையெச்சம். அருமை செய்து அயர்த்த தலைமகனைக் கண்ணுற்ற தோழி அவன் வரைதலை வேண்டிக் கூறியதாகுமிது. இதனை நச்சினார்க்கினியர், "காதன் மிகுதி உளப்படக்களனும் பொழுதும் வரைநிலை விலக்கி வரைந்தருள வேண்டுமெனத் தோழி வரைவுகடாயது" என்பர். (தொல்.கள. உ௩.) (௪௪)

கடல்கொழித் திட்ட கதிர்மணி முத்தம்
படமணி யல்குற் பரதர் மகளிர்
தொடலைசேர்த் தாடுந் துறைவ! என்றோழி
யுடலு முறுநோ யுரைத்து.

[இதுவு மது.]

(பத.) படம் - (பாம்பின்) படத்தினையொத்த, மணி - அழகிய, அல்குல் - நிதம்பத்தினையுடைய, பரதர் மகளிர் - நெய்தனிலப்பெண்கள், கடல் - கடலின்கண்ணுள்ள அலையானது, கொழித்திட்ட - அலசிக் கரையிலிட்ட, கதிர் - ஒளியினையுடைய, மணி முத்தம் - முத்துகளாகிய மணிகளை, தொடலை சேர்த்து - மாலையாகக் கட்டி, ஆடும் - விளையாடும், துறைவ - கடற்றுறைமுகத்திற்குரிய தலைவனே! என்தோழி - என்னுடைய தோழியாகிய தலைமகள், உறுநோய் - (நீ விரைந்து வரைந்து கொள்ளாமையால்) உறுகின்ற துன்பங்களை, உரைத்து- (வெளிப்படையாக என்பாற்) சொல்லி, உடலும் - (மிகுதியும்)- வருந்தாநிற்கின்றாள். (ஆகலின், அவளை விரைந்து வரைந்து மகிழ்விப்பாயாக, என்று தோழி தலைமகனிடங் கூறினாள்.)

(ப - ரை.) கடல் கொழித்துச் சிந்திய கதிர்மணி முத்தத்தைப் படம்போன்ற அழகிய அல்குற் பரதர் மகளிர் மாலையாகச் சேர்த்து விளையாடும் துறைவனே! என் தோழி மறுகாநிற்கும் தன்னுறு நோயை எனக்குரைத்து.

(விரி.) கொழித்தல் - அலசி யெடுத்தல்: கரையிற் சிதறல். உறுநோய் - மிக்க துன்பமெனினுமாம். ஆயின், உரிச்சொற்றொடராகக் கொள்க. (சரு)

முருகியல் கான லகன்கரை யாங்கட்
குருகின மார்க்குங் கொடுங்கழிச் சேர்ப்ப!
மருவி வரலுற வேண்டுமென் றோழி
யுருவழி வுண்டாய் கெட.

[இதுவு மது.]

(பத.) முருகு - நன்மணமானது, இயல் - பொருந்தியுள்ள, கானல் - கடற்கரைச் சோலையாகிய, ஆங்கண் - அவ்

விடத்தே, குருகு இனம் - பறவைக் கூட்டம், ஆர்க்கும் - ஆரவாரிக்கும், கொடும் - வளைந்து செல்லும்படியான, கழி - கடற்கால்வாய்களையுடைய, சேர்ப்ப - துறைமுகத் தலைவனே, என் தோழி - என்னுடைய தோழியாகிய தலைமகள், உருவு அழிவு - அழகு அழிதற்குக் காரணமான, உள் நோய்-(நின்னை மணக்கக்கூடவில்லையே என்று கருதும்) மனநோயானது! கெட - ஒழியும்படியாக, மருவி - (வரைதலை) மேற்கொண்டு, வரல் - நீ வருதலானது, உற - பொருந்தும்படியாக, வேண்டும் - (மிகுதியும்) விரும்புகின்றனள். (என்று தோழி தலைமகனிடங் கூறினள்.)

(ப - ரை.) நறுவிரை யுளதாகிய கானலையுடைய அகன்ற கரையின்கட் குருகினம் ஆராநின்ற கொடுங் கழிச் சேர்ப்பனே! பயின்று வருதலைச் செய்ய வேண்டும்; என்றோழி மாமை நிறம் அழியாநின்ற உள்ளத்தின்கண் நோயொழிய.

(விரி.) பழைய வுரைக்கண், "ஆராநின்ற," எனக்காணப் படுவது, "ஆரவாரியாநின்ற", என மாற்றப்படின், பொருட்குப் பொருந்துமாறு காணலாம். (சுசு)

அணிபூங் கழிக்கான லற்றைநாட் போலான்
மணியெழின் மேனி மலர்பசப் பூரத்
துணிகடற் சேர்ப்பன் றுறந்தான்கொ றோழி!
தணியுமென் மென்றோள் வளை.

[தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழியாற் சொல் லெடுப்பப்பட்டுத் தலைமகள் சொல்லியது.]

(பத.) தோழி - தோழியே! துணி - தெளிவோடுகூடிய, கடல் சேர்ப்பன் - கடற்றுறைமுகத் தலைவன், அணி - அழகிய, பூ - பூக்கள் நிறைந்த, கழி - கடற்கால்வாய்களையடுத்த, கானல் -

கடற்கரைச் சோலையினிடத்தே, அற்றைநாள் - (களவுப்புணர்ச்சி நிகழ்ந்த) அந்த நாளில் (நம்மிடத்து அன்போடுகூட நடந்து கொண்டதனை) போலான் - போன்றிராதவனாய், மணி எழில் - செம்மணிபோன்ற செவ்வியினையுடைய, மேனி - உடலின்கண்ணே, மலர் - பீர்க்கம் பூவினையொத்த, பசப்பு - பசலை நிறமானது, ஊர - மேற்கொள்ள, துறந்தான் - பிரிந்து சென்றான். (அதனால் என்னுடல் மெலிய,) என் - என்னுடைய, மெல் தோள் - மெல்லிய தோள்களிலுள்ள, வளை - வளையல்கள், தணியும் - (கழன்று) கீழே விழாநின்றன. (என்று தலைமகள் தோழியிடங் கூறினாள்.)

(ப - ரை.) அணிந்த பூக்களையுடைய கழிக்கானலின்கட் கண்ட அற்றைநாட் போலான்; மணியெழின் மேனியின்கண் மிக்க பசப்பேறும் வகை துணிகடற் சேர்ப்பன் எம்மை மிகவே துறந்தான் கொல்லோ! என் மென்தோள்வளைகள் நீங்காநின்றன.

(விரி.) கொல் - அசைநிலை. தணிதல் - கீழ் நோக்கிச் செல்லுதல்: கழலுதல். வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிந்த தலைமகன் வந்து சிறைப்புறமாகத் தலைவியைக்காண வந்து நின்றானாக, அப்பொழுது தோழி தலைமகட்கு நின் குறையினைத் தலைமகற்கு எடுத்தியம்புவாயாக எனக்கூற, அக்காலத்துத் தலைமகள் கூறியதாகுமிது. இதனைத் தொல்காப்பியர், "உரையெனத்தோழிக் குரைத்தல்," (தொல். களா. உக.) என்பர்.

(சஎ)

கறங்கு மணிநெடுந்தேர் கண்வா ளறுப்பப்
பிறங்கு மணன்மே லலவன் பரப்ப
வறங்கூர் கடுங்கதிர் வல்விரைந்து நீங்க
நிறங்கூரு மாலை வரும்.

[தோழி தலைமகளை இரவுக்குறி நயப்பித்தது.]

(பத.) கறங்கு - ஒலிக்கின்ற, மணி - மணிகளையுடைய, நெடும் - நீண்டுயர்ந்த, தேர் - (நங்காதலரின்) தேரானது, (இனிமேல்,) நிறம் கூரும் - (செக்கர்) நிறமிக்க, மாலை - மாலை (வேளையிலே,) பிறங்கு - விளங்காநின்ற, மணல்மேல் - மணல் நிறைந்த கடற்கரை வழியாக, அலவன் - (அங்குக் கூடியுள்ள) நண்டுகள், பரப்ப-(நாற்புறமும்) பரவியோடும்படியாகவும், வறம் கூர் - வெம்மை மிகுதற்குக் காரணமான, கடும் கதிர் - கொடிய வெயில், வல்விரைந்து - மிகுதியும் விரைவாக, நீங்க - விலகும்படியாகவும், கண் - (கண்டாரின்) கண்களின், வாள் - ஒளியாகிய பார்வையினை, அறுப்ப - வருத்தும்படியாகவும், வரும் - வாரா நிற்கும். (என்று தோழி தலைமகளிடங் கூறினாள்.)

(ப - ரை.) ஒலிக்கு மணியையுடைய நெடுந்தேர் கண்டார் கண்ணினொளியை யறுப்ப, உயர்ந்த மணன் மேல் அலவன் பரப்ப, வெம்மை மிக்க கடிய வெயில் கடிதாக நீங்க, செக்கர் நிறமாக நிறமிக்க மாலைப்பொழுதின் கண் நங்காதலன் வரும்.

(விரி.) தலைமகற்கு இரவுக்குறிநேர்ந்த தோழி தலைமகளை அதற்கு இணங்குவிப்பான்வேண்டி அவண்மாட்டுக் கூறிக்கொண்டதாகுமிது. ஒருவர்க்கு ஒரு நன்மையைச் செய்ய விரும்புவார், அவர் மறுத்தலை விரும்பாராய் முன்னரேயே அவர் அறிவின்றி அதனைச் செய்து முடித்துப் பின்னர்க் கூறும் மரபுபற்றித் தோழி தலைமகட்கு தலைமகன் மாலை வருவன் எனக்கூறி நயப்பிக்கலாயினள். (அச)

மயில்கொன் மடவாள்கொன் மாநீர்த் திரையுட்
பயில்வதோர் தெய்வங்கொல் கேளீர்! குயில்பயிருங்
கன்னி யிளஞாழற் பூம்பொழி னோக்கிய
கண்ணின் வருந்துமென் னெஞ்சு.

[தலைமகன் பாங்கற்குச் சொல்லியது.]

(பத.) கேளீர் - கேண்மையிற் சிறந்த பாங்கீர்! குயில் பயிரும் - குயில் கூவி விளையாடும்படியான, கன்னி - முதன் முதலாகப் பூத்த, இளஞாழல் - இளமையான கோங்கமரங் களின், பூம்பொழில் - பூக்கள் நிறைந்த அச்சோலையினிடத்தே, (நிற்கின்ற தலைமகள்,) மயில் கொல் - (தோகையுடன் கூடிய) மயில்தானோ, (அன்றி,) மடவாள்கொல் - இளமையான இவ்வு லகப்பெண் தானோ, (அன்றி,) மா - பெரிய, நீர் - நீர்நிறைந்த கடலின்கண், திரையுள் - அலைகளிடத்தே, பயில்வதோர் - வாழ் கின்ற ஒப்பற்ற, தெய்வம் கொல் - நீரரமகள் தானோ, நோக்கிய - (அவளை ஆராய்ந்து) பார்த்த, கண் இன்-என் கண்களைக் காட்டி லும் மிகுதியாக, என் நெஞ்சு - எனது மனம், வருந்தும் - துன் புறுகின்றது. (என்று தலைமகன் தன்னுடைய பாங்கனிடங் கூறினான்.)

(ப - ரை.) மயிலோ? மடவாளோ? மாநீர்த் திரையின்கட் பயின்றுறைவதோர் தெய்வங் கொல்லோ? கேளீரே! குயில்கள் கூவாநின்ற கன்னியிளஞாழற் பூம் பொழிலின்கண் அவரை நோக்கிய என் கண்ணினு மிக வருந்தாநின்றதென் னெஞ்சு.

(விரி.) கொல் - ஐயப்பொருளின்கண் வந்துள்ளன. பாங்கன் - தோழன்: ஆண்டினும் அறிவினும் பெரியோனாக லின், "கேளீர்," எனப்பட்டான். இடந்தலைப்பாட்டிற்குப் பின்னர், தலைமகன் பாங்கனோடு கூடித் தன்னை வருத்திய தலை மகளை மற்றை நாளில் பாங்கற்குக் காட்டுவான்வந்து குறி யிடைப்பட்ட தலைமகளைக் கண்டு கூறியதாகுமிது. இதனை, நச்சினார்க்கினியர், (தொல். கள. கஉ.) இரவுக்குறிக்கண் வரு கின்றான் தலைவியை ஐயுற்றுப் பாங்கற்குக் கூறியதென்பர். இரவுக் குறிக்கண் தலைமகனோடு பாங்கன் செல்வதும் மரபு போலும்.

(சக)

பவளமு முத்தும் பளிங்கும் விரைஇப்
புகழக் கொணர்ந்து புறவடுக்கு முன்றிற்
றவழ்திரைச் சேர்ப்பன் வருவான்கொ றேழி!
திகழுந் திருவமர் மார்பு.

[பகற்குறிக்கட் தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தோழி வரைவு கடாயது.]

(பத.) தோழி - என்னுடைய (தோழியாகிய) தலைவியே! பவளமும் - பவழத்தினையும், முத்தும் - முத்தினையும், பளிங்கும் - படிகத்தினையும், விரைஇ - கலந்து, கொணர்ந்து - கொண்டுவந்து, புகழ - கண்டார் வியக்கும் வண்ணம், புறவு - (மனையின் சுற்றுப்புறமாகிய) கொல்லையிடத்தே, அடுக்கும் - சேர்க்கும்படியான, முன்றில் - இல்லின் முன்பாகத்தே, தவழ் - படிந்து செல்லும்படியான, திரை - அலைகளையுடைய, சேர்ப்பன் - கடற்கரைத் தலைவன், திகழும் - விளங்காநின்ற, திரு - மங்கலமாகிய மணவினையானது, அமர் - பொருந்தும்படி, மார்பு - மார்பாற் றழுவுதலாகிய இன்பத்தை, (தருதற்குரியனாய்,) வருவான் கொல் - வருதலைச் செய்ய மாட்டானோ? (என்று தோழி தலைமகளை வினவினள்.)

(ப - ரை.) பவளத்தினையும் முத்தினையும் பளிங்கினையும் கலந்து, பிறர்புகழக் கொண்டுவந்து, மனைசூழ்ந்த படப்பையையணைந்த முற்றத்தின்கண் வந்து வழங்குகின்ற திரையையுடைய சேர்ப்பன் விரைந்து வருவான் கொல்லோ? தோழி! முன்பு போலப் பொலிவழிந்திரா நின்ற அழகமைந்த மார்பும் பொலிவுடைத்தாய் இருந்த தாதலான், எம்பெருமான் விரைந்து வருமென்று முற் கொண்டு நமக்கு அறிவிக்கின்றது போலும்.

(விரி.) கொல் - ஐயவினாப் பொருள் கொண்டது. விரை இ - சொல்லிசையளபெடை. பழையவுரையானது வரை விடைப்பிரிந்த தலைமகன் வருகையை எதிர்பார்த்த தோழியின் கூற்றுக்கு இசைந்த வண்ணம் கண்ணழிக்கின்றது. துறை விளக்கத்தொடரின் கருத்தினை யொட்டிப் பதவுரை எழுதப் பட்டுள்ளது. இவ்விரண்டிற் பொருந்துமாற்றினை யாய்க. (௫௰)

நெய்தல் முற்றும்.

திணைமொழி யைம்பது
முற்றியது.



# திணைமொழி யைம்பது

## செய்யுள் முதற்குறிப்பு அகராதி

[எண்—பக்கம்]

# திணைமொழி யைம்பது

## திணை, துறை, தொடர்விளக்க அகராதி

[எண்—பக்கம்]

அஞ்சி அச்சுறுத்துவது—தலைமகற்கு வழிக்கண் உண்டாம் இடையூறுகட்குப் பயந்து, தலைமகனை இரவில் வர வேண்டா என இடையூறுகளை எடுத்துக்காட்டித் தோழி கூறுவது. க

இரந்துபின் நிற்றல்—தலைமகன் தன் குறையினைக் கூறித் தோழியினைத் தொடர்ந்து செல்லல். க

இரவுக்குறி—இராக் காலத்தே தலைமகனும், தலைமகளும் எதிர்ப் பட்டுக் கூடுமிடம். இது தலைமகளின் வீட்டினையடுத்த தோப்பின் கண்ணதாம். அ, கக

எங்கையர்—தங்கைமார்கள்; பரத்தையர்; தலைமகட்குப் பின்னர்த் தோன்றித் தன்னைப்போல் தலைமகனோடு வாழ்தலின், அவர்களைத் தலைமகள், "எங்கையர்" எனலாயினள். சக

காஞ்சி—ஒருவகை மரம்; மருதநிலக் கருப்பொருள். கஎ

குரலேறு—ஆண் இடி. கடு

குறி—தலைமகன் தன் வருகையை அறிவிக்கும்வண்ணம் செய்யும் சில குறிப்புக்கள். சக

குறிஞ்சி—புணர்தலும், புணர்தனிமித்தமும். உ

செறிப்பு—வீட்டினிடங் கொண்டு சேர்த்தல் ௬

சேட்படுத்தல்—விலக்கல் கூ

# திணைமொழி யைம்பது

## அருஞ்சொற் பொருள் அகராதி

[எண்—பக்கம்]

அகவல் - அழைத்தல், ௧௬
அஞ்சனம் - மை, ௨௩
அடங்கல் - ஒழிதல், ௨
அணி - அழகு, ௬, ௰
அண்டர் - தேவர், ௨
அதர் - வழி, கடறு, ௨௧
அமை - மூங்கில், ௯
அரா - பாம்பு, ௩௧
அரித்தல் - போக்கல், ௧௩
அருமை - இன்மை, ௨
அரும்பல் - தோன்றல், ௧௮
அரும்பு - மொட்டு, ௩௨
அருவி - நீர்வீழ்ச்சி, ௮, ௩௩
அருளுதல் - இன்ப மளித்தல், ௩௬
அருள் - மிகுந்த அன்பு, ௧௭
அலர் - மலர்தல், ௧௮
அலவன் - நண்டு, ௫௩
அல்குதல் - தங்குதல், ௧௭, ௨௧
அறல் - கருமணல், ௩௨
அறுதல் - வருந்தல், ௫௩
அறுத்தல் - வறளல், ௧௩
அற்றைநாள் - அந்தநாள், ௫௨
அனுங்கல் - வருந்தல், ௩௰
அன்னோ - அந்தோ, ௨௧
ஆ - பசு, ௩௩
ஆகம் - மேனி, ௩௬
ஆம்பல் - ஆம்பற் பூ வடிவில் அணிசுபண்ணி அமைக்கப்பட்ட குழல், ௩௰
ஆயர் - இடையர், ௨௯
ஆரம் - சந்தனம், ௪௩
ஆர்தல் - நிறைதல், ௧௭
ஆர்த்தல் - ஆரவாரித்தல், ௰
ஆற்றுதல் - பொறுத்தல், ௨௨
இடம் - பக்கம், ௪
இடித்தல் - ஒலித்தல், ௩
இணைதல் - ஒன்றுதல், ௩௫
இணைத்தல் - பொறுத்தல், ௩௫
இயலுதல் - நடத்தல், ௨௭
இரங்கல் - வருந்தல், ௩, ௨௧
இரு - பெரிய, ௨௯
இல் - மனை, ௪௮
இழை - அணிகலன், ௪௫
இறா - இறால்மீன், ௪௮
இறுதல் - நெருங்கல், ௩
இனம் - பசுக்கூட்டம், ௨௯
இன்றை - இற்றைநாள், ௨௫
இன்னே - இப்பொழுதே, ௨௭
ஈதல் - கொடுத்தல், ௩௭
ஈர் - குளிர்ச்சி, ௫
ஈனல் - வெளிவிடல், ௨௩
உகளல் - துள்ளல், ௨௭
உதிர்தல் - சிந்துதல், ௨௰
உரன் - அறிவு, ௩௪
உரறல் - முழங்கல், ௨௫
உரும் - இடி, ௩
உருவம் - அழகு, ௨௭
உருவு - மாமைநிறம், அழகு, ௫௧

உழலல் - திரிதல், ௬
உழுதல் - முயல்தல், ௧௯
உள்ளம் - மனம், ௧௬
உறு - மிகுதி, ௫௰
ஊர்தல் - அமர்தல், ௨௪
எதிர்தல் - உடன்படல், ௨௰
எமர் - எம்மவர். ௬
எயிறு - பற்கள், ௧௮
எயினர் - வேட்டுவர், ௨௨
எரி - நெருப்பு, ௧; காட்டுத்தீ, ௧௪
எல - ஏடி, ௧௧
எலுவன் - தோழன், ௧௨
எல் - இரவு, ௫; விளக்கம், ௧௧ ஒளி, ௪௰
எழால் - புல்லூறு, ஒரு வகைப் பறவை. ௧௭
எழிலி - முகில், ௨௮
எழில் - அழகு, ௧௭
எறிதல் - வெட்டல், ௧; ஒலிப்பித்தல், ௩௪; துள்ளல், ௪௮
ஏகல் - உயர்ச்சி, கற்கள், ௧௧
ஏந்துதல் - உயர்தல், ௨௭
ஏர் - அழகு, ௨௮
ஏலல் - எதிர்கொளல், ௩௬
ஏற்றுதல் - வளைத்தல், ௨௨
ஏனல் - தினை, ௭
ஐய - மெதுவாக, ௨௨
ஒழிதல் - நீங்கல், ௧௯
ஓங்கல் - உயர்தல், ௩, ௧௫
ஓதம் - அலை, ௪௮
ஓர் - ஒப்பற்ற, ௫௯
கடிதல் - தவிர்த்தல், ௧௧
கடுவன் - ஆண்குரங்கு, ௧௧
கடையாயார் - கீழ்மக்கள், ௩௬
கணம் - மிகுதி, ௨; திரட்சி, ௩
கணி - சோதிடன், வேங்கைப் பூ, ௰
கணை - திரட்சி, ௩௫
கண் - கணுக்கள், ௨௰
கதிர் - வெயில், ௨௰, ௫௩
கதுவுதல் - பற்றுதல், ௪௨
கமழுதல் - மணத்தல், ௨௩
கயம் - குளம், ௪௨
கருதல் - எண்ணல், ௩௨
கருமை - பெருமை, ௪௨
கலை - ஆண்மான், ௨௧
கல் - மலை, ௬
கவலுதல் - வருந்தல், ௧௯
கவின் - அழகு, ௨, ௨௩
கழனி - வயல், ௩௯
கழி - கடற்கால்வாய், ௪௫
கழுமுதல் - மூளைத்தல், ௪௨ செறிதல். ௪௩
களிறு - ஆண்யானை. ௯
கறங்கல் - ஒலித்தல், ௫௩
கனல் - நெருப்பு, ௫
கனை - செறிவு, ௩௰
கன்னி - முதன்முதலாகப் பூத்த, ௫௯
காடு - முல்லைநிலம், ௩௧
காப்பு - காவல், ௨
காயா - காசாஞ்செடி, ௨௩
காய்தல் - சினத்தல், ௭
கார் - முகில், ௨௬, ௩௧
காலுதல் - பெய்தல், ௨௬
கால் - காற்று, ௨௭ அடிப்பாகம், ௧௮, ௩௫
கானகம் - குறிஞ்சி நிலம், ௭
கானம் - காடு, ௧௯
கானல் - கடற்கரைச் சோலை, ௪௫

கானவர் - குறவர், ௪
கிழமை - உரிமை, சம்பந்தம், ௩௫
குரல் - ஒலி, ௩௰
குருகு - குருக்கத்திச் செடி, மாதவி, ௨௩
குருதி - உதிரம், ௯
குறும்பு - பாலைநிலத்தூர், ௧௧
கூர்தல் - மிகுதல், ௧௧, ௫௩
கூற்று - இயமன், ௨௨
கைதை - தாழைமரம், ௪௫
கோட்குதல் - சுழலல், ௪௮
கொழித்தல் - அலைசியெடுத்தல், கரையிற் சிதறல், ௫௰
கொன்னே - வீணே, ௨௰
கோடல் - வெண்காந்தள், ௨௩ காந்தள், ௩௧
கோடு - கொம்பு, ௩௪
கோது - சக்கை, ௪௩
கோள் - வலிமை, ௩௧
கௌவை - அலர், பழிமொழிகள், ௮, ௧௩
சாந்து - சந்தனம், ௧
சாரல் - மலைப்பக்கம், ௬
சிலம்பு - மலை, ௯
சிறை - சிறகு, ௧௮
சீறுதல் - சினத்தல், வெகுளல், ௧௭
சுணங்கு - தேமல், ௨௬, ௩௧
சுரம் - வழி, ௧; பாலை, ௧௩
செலவு - போக்கு, ௧௧
செறிதல் - நிறைதல், ௨௫, ௪௮
சேரி - பலர் சேர்ந்து வாழுமிடம், ௩௬, ௩௭
சேர்ப்பன் - கடற்கரைத் தலைவன், ௪௫
சோர்தல் - அழிதல், வாடுதல் ௨௧
சோர்வு - இகழ்ச்சி, ௪௧
ஞாலம் - பூமி, ௨௧
துணிதல் - கீழ்நோக்கிச் செல்லல், கழலுதல், ௫௨
தண்மை - குளிர்ச்சி, ௯
தயங்கல் - அசைந்தாடல், ௪௬
தவழ்தல் - படிந்துசெலல், ௫௫
தாது - பூந்துகள், ௩௫
தாழ்தல் - பெய்தல், ௩௧
தாள் - ஆறு, ௩௫
திகழ்தல் - விளங்கல், ௨௩
திரு - மணவினை, ௫௫
திரை - அலை, ௫௫
தீம் - இனிய, ௩௩
தீர்தல் - நீங்கல், ௨௭
துகள் - துளி, ௧
துடி - உடுக்கை, ௧௧
துடுப்பு - துழாவுகருவி, ௨௪
துணி - தெளிவு, ௫௧
துயல்வரல் - அசைதல், ௪௩
துரத்தல் - விரட்டல், ௧௬
துறத்தல் - பிரிதல், ௧௬, ௧௧
தேம் - மணம், ௪௪
தொடலை - மாலை, ௫௰
தொடி - வளையல், ௧௫, ௨௩
நசை - விருப்பம், ௧௬
நலம் - இன்பம், ௩௬
நன்மை, ௪௧
நல்குதல் - நன்மை செய்தல், ௧௧
நல்லார் - பெண்மக்கள், ௨௩
நறும் - நல்ல, ௪௪
நற்றாய் - பெற்றதாய், ௨௨
நாட்டம் - பார்வை, ௰௪

மாண்பு - மாட்சிமை, ௩௮
மாதர் - அழகியபெண், ௨௪
மாந்தல் - பருகல், ௨௮. ௩௰
மாமை - அழகு. மதர்ப்பு, ௮
முகை - மொட்டு, பிடா. ௨
முடம் - வளைவு; ௪௯
முதிர்தல் - விளைதல், ௩௰
முத்தம் - முத்துக்கள், ௧௪
முரண் - வலி, ௧௪
முரலுதல் - ஒலித்தல், ௧௮
முரிதல் - உடைந்துபோதல், ௧௪
முள் - கூர்மை, ௧௮
முறி - இளந்தளிர், ௧௭
முறுவல் - பல், ௨௩
முன்றில் - இல்லின்முன் பாகம். ௫௫
மென்மை - எளிமை, ௪௰
மேனி - உடல், ௫. ௫௨,
வண்ணம், ௧௭
உடம்பு, ௩௯
வஞ்சினம் - உறுதிமொழி, சூள், ௨௯
வண்ணம் - மேனி ௨௧
வரி - கோடு, ௩௨
வரை - பக்கமலை, ௩
வலத்தல் - சொல்லல், ௧௫
வலித்தல் - வற்புறுத்தல், ௨௯
வளை - வளையல், ௩
வறம் - வெம்மை, ௫௩.
வாங்கல் - வளைதல், ௯
வாரி - பெருக்கு. ௩௮
வார்தல் - வழிதல், ௩௨
வாள் - ஒளி, ௫௩
வான் - விண்வெளி, ௧
விடலை - காளை, பாலை நிலத்தலைவன், ௨௨
வித்தகம் - வியப்பு, ௪௭
விரை - மணம், ௯
விறல் - பெருமை, ௨, ௮
வினைஞர் - தொழிலாளிகள், ௩௪
வீங்கல் - பூரித்தல், ௰
வெதிர் - மூங்கில், வேய், ௨௰
வெறி - மணம், ௯
வெற்பு - மலை, ௧௧
வேட்கை - விருப்பம், ௧௭
வேந்தர் - பேரரசர், ௨௫

---